காவ்யா



# மானங்காத்த மருதுபாண்டியர்

பேராசிரியர் ந. சஞ்சீவி

# மானங்காத்த மருதுபாண்டியர்

வரலாறு


| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | பேராசிரியர். ந.சஞ்சீவி |
| | | © பேராசிரியர் ச. எழிலரசி |
| முதல் பதிப்பு (திருத்தியது) | : | ஆகஸ்ட் 2004 (பேரா. ந.சஞ்சீவியின் 16வது நினைவு நாள் வெளியீடு) |
| வெளியீடு | : | காவ்யா<br>14, முதல் குறுக்குத்தெரு,<br>டிரஸ்ட்புரம்,<br>கோடம்பாக்கம்,<br>சென்னை - 600 024.<br>☎ : 2480 1603. |
| E-Mail | : | kaavyabooks@yahoo.co.in<br>www.kaavyabooks.com |
| கணினி அச்சு | : | சுந்தரம் கிராபிக்ஸ், சென்னை - 24. |
| அச்சாக்கம் | : | மணி ஆப்செட், சென்னை - 5. |
| அட்டை வடிவமைப்பு | : | முத்து |
| பக்கங்கள் | : | xiv + 231 = 245 |
| விலை | : | ரூ. 125.00 |

# பதிப்புரை

பேராசிரியர் ந.சஞ்சீவி ஒரு பெருந்தகை. அவரை நான் 1973-ஆம் ஆண்டில் ஜூலை மாதத்தில் சந்திக்கப் போனேன். ஏற்கனவே இரண்டு ஆண்டுகள் பல்கலைக்கழக வகுப்பில் மாணவனாக இருந்திருக்கிறேன். அக்காலங்களில் அவருக்கு என்னையோ எனக்கு அவரையோ தனிப்பட்டமுறையில் பழக்கமில்லை. அவரது அறையின் வெளியே 'உத்திரவின்றி உள்ளே வரவும்' என்று எழுதியிருந்த தொடர்கள் எனக்கு அவர்மேல் மரியாதையை ஏற்படுத்திற்று. பார்த்தேன், பேசினேன், எழுந்து வந்தேன். அது ஒரு நல்லநேரம். அதற்குப் பிறகு அவரிடம் 5 ஆண்டுகள் ஆய்வு மாணவனாக இருக்கும் வரம் பெற்றேன். ஒரு குருவாக - ஒரு தந்தையாக - ஒரு நண்பராக என்னுடன் பழகினார். அவரது முதல் ஆய்வு மாணவன் என்பதில் எனக்கும் எனது கடைசி குரு அவர் என்பதில் அவருக்கும் மிகுந்த பெருமிதம் இருந்தது.

அவரது பல்வேறு ஆர்வங்களில் ஒன்று வரலாற்றுத்துறை. அதுவும் வீர மறவர்களின் வரலாற்றையும் விடுதலை இயக்கத்தின் வரலாற்றையும் பெரிதும் நேசித்தார். பல்வேறு சந்தர்ப்பங்களில் 1956 முதல் எழுதிவந்திருக்கிறார். தன் வாழ்க்கை வரலாற்றை கூட எழுதி வைக்க வேண்டும் என்று விரும்பினார். முடியவில்லை.

இந்தத் தொகுப்பை மாணவர் என்ற முறையில் நான் செலுத்தும் நன்றியாகவும் வைத்துக் கொள்ளலாம். தமிழரின் பெருமைக்கும் பீடுக்கும் இது ஒரு பதிப்புப் பட்டயம் என்றும் எடுத்துக் கொள்ளலாம். சிவகங்கைச் சிங்கங்கள், முதலில் முழங்கிய முரசு, வீரத்தமிழகத்தில் விடுதலை வேள்வி, வெள்ளையர் கண்ட தமிழ் வீரம், விடுதலை இயக்க வரலாறு, வெள்ளை ஆதிக்க வரலாறு, போரும் வேரும் என்று இவரால் எழுதப்பட்ட வரலாற்றுக் கட்டுரைகள் கிடைக்காமல்

போய்விட்டன.

இவரது நடை இந்நூலுக்கு மேலும் மெருகேற்றி வரலாற்று இலக்கியம் என்று சொல்லத்தக்க வகையில் செழுமையாக உள்ளது. உணர்ச்சியும் எழுச்சியும் மிக்க நடையிலேயே ஒரு வீர வரலாற்றினை எழுதுவது சாலச் சிறந்ததுதான்.

இது மருது சகோதரர்களின் விடுதலைப் போராட்டத்தைப் பற்றி விரிவான நூலாகும். இதில் பேராசிரியரால் எழுதப்பட்ட மானங்காத்த மருதுபாண்டியர் (1954) மற்றும் மருதிருவர் (1956) எனும் இரு நூல்களும் பிழைகள் திருத்தப்பட்டு உள்ளன. இரண்டும் சிவகங்கைச் சீமையின் வெள்ளையருக்கு எதிரான போர்களையே விவரிக்கின்றன.

இந்நூல் வெளிவர பெரிதும் உதவியவர் எனது பேராசிரியரின் மகளும் எனது சகோதரியுமான முனைவர் எழிலரசி அவர்களே. அவரது ஒப்புதலும் ஒத்துழைப்பும் என்னை நெகிழவும் மகிழவும் செய்தன. அவரது குடும்பத்திற்குக் 'காவ்யா' மட்டுமல்ல தமிழ் உலகமும் கடமைப்பட்டுள்ளது.

- காவ்யா சண்முகசுந்தரம்.

# அணிந்துரை

ஆகஸ்டு மாதம் பேராசிரியரால் பெரிதும் மதிக்கப்பட்ட மாதம். காந்தி அடிகள் வெள்ளையனை வெளியேறச் சொல்லியதும், அதை இந்திய மக்கள் தாரக மந்திரமாய் ஏற்றதும் (9.8.1942) அதன் பயனாக ஐந்து ஆண்டுகளுக்குப் பின் பாரதநாடு விடுதலை பெற்றதும் (15.8.1947), வீரத் தலைவர் பூலித்தேவர் வரலாற்றை முதன் முதலாக நூல்வடிவில் வெளியிட்டுப் பெருமை கொண்டதும் (15.8.1958) இந்த ஆகஸ்டு மாதத்தில் தான். இதே மாதம் பேராசிரியரின் நினைவுநாள் மாதமாயும் அமைந்தது (22.8.1988) இறைவன் நடத்தும் விந்தைகளுள் ஒன்றே. பதினேழு ஆண்டுகளுக்குப் பிறகு பேராசிரியரின் பதினாறாம் நினைவு நாளில் அவர் மனதில் தனியிடம் பெற்றிருந்த அவரது முதல் ஆய்வு மாணவர் திரு. சண்முகசுந்தரம் அவர்களின் 'காவ்யா' மூலமாக அவரது வரலாற்று நூல்கள் மறுபதிப்பாய் மலர்வது பேராசிரியரின் நீண்ட கால ஆசிரியப் பணிக்குக் கிடைத்த இணையில்லாப் பரிசு.

சற்றேறக் குறைய இருபது ஆண்டுகளாகப் பேராசிரியர் அவர்களின் நூல்கள் சுழற்சியில் இல்லாதது என்னுள் பெரும் ஏக்கமாகவே நிலை கொண்டிருந்தது. அதைச் செயல்படுத்தும் எண்ணமிருந்த போதும், நடைமுறைச் சிக்கல்களால் அதற்கு வாய்ப்பின்றியே போனது. திரு. சண்முகசுந்தரம் அவர்கள் பேராசிரியரின் நூல்கள் அனைத்தையும் வெளியிடும் விருப்பை வெளிப்படுத்திய விதம் எனது தயக்கங்களை முழுவதுமாய் வென்றது. இதற்கே இந்த இடைவெளி அமைந்தது போலும்!. பேராசிரியரின் நூல்களும், கையெழுத்துப் படிகளும் இனி 'காவ்யா'வின் துணையுடன் தமிழகம் முழுவதும் வலம்வரும் எனின், அதற்கு திரு.சண்முக சுந்தரம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரியது.

✦ பேராசிரியரின் முதல் நூலாக 1954ல் வெளிவந்த மானங்காத்த மருது பாண்டியரும், அதை அடுத்து 1956ல் வெளிவந்த மருதிருவரும் இவர்களுக்குள் இருந்த தொடர்பு கருதி ஒருசேர ஒரே நூலாய் வெளியிடப் படுகிறது. மானங்காத்த மருது பாண்டியரைத் தமிழ்ப் பாடத்தின் துணை நூலாய்ப் பயின்ற பலர் இன்றும் அதுபற்றி நினைவு கூர்வது, இந்நூல் மாணவர்களிடையே தோற்றுவித்திருந்த தாக்கத்தின் சாட்சியாகும். விடுதலை உணர்வையும், அந்த விடுதலைக்காகப் போராடிய தமிழர் பரம்பரையின் நினைவுகளையும் இந்நூல் வரும் தலைமுறையினரின் மனதிலும் பதிக்குமானால் அதுவே பேராசிரியரின் நோக்கம்; எங்களின் விருப்பம்.

எழிலரசி பாலசுப்பிரமணியன்

ஆகஸ்டு 2004.

# அணிந்துரை

வட இந்தியத் தலைவர் வான்புகழ் பெறுகின்றனர்; இந்தியா முழுவதும் அறிந்து போற்றும் பெருமை அவர்களுக்கு எளிதில் வாய்க்கின்றது; உலகம் அறியும் சிறப்பும் வாய்க்கின்றது. தமிழ் நாட்டுத் தலைவர்கள் ஏற்ற அறிவும் ஆற்றலும் பெற்றிருந்தும், அவ்வாறு உயர்ந்து விளங்குதல் அரிதாய் உள்ளது. காரணம், தமிழர் தம்மவரின் சிறப்புகளை உணராமையும், உணர்ந்தாலும் போற்றாமையுமாகும். தமிழ் நாட்டுச் செய்தித் தாள்களும் பிறர்க்குத் தரும் பெருமையிலும் விளம்பரத்திலும் காற்பங்கும் தமிழர்க்குத் தருவதில்லை. அதனால், வடநாடு புகழ்மிக்க தலைவர்கள் நிறைந்த நாடு ஆகின்றது; தமிழ் நாடு திக்கற்றுத் திகைக்க நேர்கின்றது.

நெடுங்காலமாகவே இத்தகைய புறக்கணிப்பு இருந்து வருதலை வரலாற்றுப் புத்தகங்கள் உணர்த்துகின்றன. வரலாற்றில் புகழ் பெற்ற வடநாட்டு வீரமாந்தர் பலர் காணப்படுகின்றனர்; தமிழ் நாட்டின் வீரப் பெருமக்களான கட்டபொம்மன், மருது பாண்டியர் முதலானோர்க்கும் உரிய சிறப்பு அளிக்கப்படவில்லை.

இந்த நிலை நீடிக்குமானால், தமிழகத்திற்கு உய்வு இல்லை என்பதை இன்று பலரும் உணர்ந்து வருகின்றனர். தம்மவரை மறவாமல் போற்றிப் பிறரையும் போற்றுதலே நல்ல நெறியாகும்.

இந்தப் புத்துணர்ச்சியின் பயனாக இன்று சில நல்ல நூல்கள் வெளி வரத் தொடங்கியுள்ளன. 'மானங்காத்த மருது பாண்டியர்' என்னும் இந்நூல் இத்தகையதாகும். அந்நியரின் ஆட்சியை அஞ்சாமல் எதிர்த்துத் தமிழகத்தின் பெருமையைக் காத்துத் தம் உயிரைப் பலியாக்கிய வீரப்பெருந்தகையினர் மருது பாண்டியர்.

உணர்ச்சி மிக்க இவர்தம் வரலாற்றைத் திருவாளர் ந. சஞ்சீவி எழுதியுதவியது காலத்திற்கு ஏற்ற நல்ல தமிழ்த் தொண்டாகும். துடிதுடிப்பான தமிழுள்ளம் இவர்தம் நடையில் புலப்படுகின்றது. இந்த நன்முயற்சியைத் தமிழகம் வரவேற்று மகிழும் என நம்புகிறேன்.

மு. வரதராசன்.

# அணிந்துரை

'மருதிருவர்' என்ற இவ்விழுமிய வரலாற்று நூலை ந. சஞ்சீவி அவர்கள் மிகச் சிறந்த முறையிலே ஆக்கித் தமிழுலகிற்கு ஈந்துள்ளார்கள். தமிழ் நாட்டின் வரலாறு சிறந்த முறையில் எழுதப்பட வேண்டும் என்பதற்கு இந்நூல் ஒரு சாலச் சிறந்த் எடுத்துக்காட்டாகும். வரலாற்று நூல்களிலே நாம் காண வேண்டிய வேகம், நிகழ் காலத்தையும் கடந்த காலத்தையும் இணைத்துக் காட்டும் பண்பு, வருங்காலத்திற்கு வழி வகுக்கும் தன்மை என்ற இவ்வுயரிய நோக்கங்கள் எல்லாம் இந்த வரலாற்று நூலைச் சிறப்பிக்கின்றன.

தமிழிலே வரலாறு எழுதுவது என்பது பெரும்பாலும் மொழி பெயர்ப்பாகவே அமைகின்றது. இது தமிழுக்கே இழுக்குத் தேடுவதாகும். வரலாற்றின் ஆதாரங்கள் எந்த மொழியிலிருந்தாலும் அவற்றைக் கோவை செய்து அவற்றின் கருத்துகளை மட்டும் நல்ல தமிழிலே எழுதுவது இன்றும் நமக்குப் புதியதோர் கலையாகவே இருந்து வருகின்றது. இக்குறையைப் பூர்த்தி செய்யும் முறையில் ஆசிரியர் இந்நூலின்கண் தெளித்தெடுத்த வரலாற்றை இனிய தமிழிலே எழுதிக் காட்டியுள்ளார்.

தமிழ் நாட்டின் வரலாற்றில் இந்நூல் ஒரு முக்கியப் பகுதியை விவரிப்பதாகும். கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் தமிழ் நாட்டை இன்னல் சூழ்ந்தது; வணிகராய் வந்த ஆங்கிலேயர் நாட்டையே கைப்பற்ற எண்ணிய காலம் அது. அந்த நாள்களில் இந்த ஆங்கிலேய எண்ணத்திற்குத் தென்னிந்தியாவில் பெரியதோர் எதிர்ப்பு இருந்தது. இதன் வரலாறு இன்றும் எழுதப்படாததொன்று என்றே நாம் சொல்ல வேண்டும். கட்டபொம்மு, ஊமைத்துரை, அபூர்வ சகோதரர்களாய் அமைந்த மருது பாண்டியர், இன்னும் இவர்களைப் போன்ற பலரும் வெள்ளையரைக் கொஞ்சக் காலமேனும் விரட்டியடித்தார்கள். ஆனால் இவர்களைப் பற்றி நமக்குத் தெரிவதை விட, ஆங்கிலேயரே அதிகம் தெரிந்திருந்தார்கள்; இப்பொழுதும் தெரிந்திருக்கிறார்கள். ஆயினும், இவர்களைப் பற்றிப் பேசாத தென்னாட்டு வரலாறு வரலாறாகாது.

பிற்காலத்தில் வந்த விடுதலை உணர்ச்சிக்கு வித்திட்ட விடுதலை வீரர்கள் இவர்கள். அப்படிப்பட்டவர்களுள் சாலச்சிறந்த இருவரைப் புற்றி 'மருதிருவர்' என்ற இந்நூல் பேசுகின்றதென்றால் இந்நூலின் தகைமையும் பெருமையும் தானே விளங்குமன்றோ! இந்நூல் வெற்று வரலாற்று நூல்மட்டுமன்று; சிறந்த ஆராய்ச்சி நூலும் ஆகும், இது போன்ற நூல்கள்

தமிழிலே இன்னும் அதிகமாகத் தழைத்து நம் மக்களிடத்தே துரிதமாய்ப் பரவிவரும் தமிழ்ப்பற்றைத் தாங்க வேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வெகு காலமாய்த் தோன்றிக் கொண்டேயிருக்கிறது. இவ்வெண்ணம் செயலில் அமையப் பல எழுத்தாளர்கள் முன் வரவேண்டும். இவர்களுக்கு எல்லாம் சிறந்த முன்னோடியாய் அன்பர் ந. சஞ்சீவி திகழ்வதைப் பற்றி நான் தமிழ்த்தாயை வாழ்த்துகின்றேன்.

சென்னைப் பல்கலைக்கழகம்,
11-1-1956

மு. ஆரோக்கியசாமி

# முதற்பதிப்பின் முன்னுரை

மருது பாண்டியர் புகழை வையகம் முழுதும் பரப்ப வேண்டும் என்ற பேராவல் ஆறாண்டுகட்கு முன் என் உள்ளத்தில் கிளர்ந்தெழுந்தது. அவ்வேட்கையின் பயனாகப் பதினாறு மாதங்கட்கு முன் பிறந்ததே யான் எழுதிய 'மானங்காத்த மருது பாண்டியர்' என்ற சிறு நூல். முதன் முதலாக மருது சகோதரர்களைப் பற்றி வெளிவந்த இந்நூலைக் கண்ணுற்ற தமிழ் அன்பர்களும், அறிஞர்களும், பத்திரிகை ஆசிரியர்களும் என் முயற்சியைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர். அவர்கள் மகிழ்ச்சி எனக்குப் பேரூக்கம் அளித்தது. இந்நிலையில் என் நூலைப் பாராட்டித் தமிழகத்திலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் கடிதங்கள் வரைந்த நண்பர் பலர், நான் மேலும் முயன்று மருது பாண்டியர் வரலாற்றை விரிவாக எழுத வேண்டும் என்று விரும்பினர். அவர்கள் விருப்பத்தைக் கட்டளையாக ஏற்றுக் கொண்டு மருது சகோதரர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைத் திரட்டும் பணியில் ஈடுபட்டிருந்தேன். அவ்வமயம் யான் மருது சகோதரர்களைப் பற்றி எழுதிய நூலைக் கண்ணுற்றுப் பெருமகிழ்வுற்ற சிவகங்கை நண்பர் திரு.எஸ். காளேஸ்வரன் அவர்கள் மருது பாண்டியர் பற்றித்தாம் அறிந்திருந்த குறிப்புகளை எனக்குத் தெரிவிக்க மனமுவந்து முன் வந்தார்கள். அவர்கள் நட்பையும் அழைப்பையும் பயன்படுத்திக் கொண்டு சிவகங்கைச் சீமையில் பதினைந்து நாள்களுக்கு மேல் சுற்றுப் பயணம் செய்தேன்; உரிய இடங்கள் பலவற்றிற்கும் சென்று புகைப்படங்கள் எடுத்தேன்; செவி வழிச் செய்திகள் பலவற்றையும் தொகுத்தேன்; இன்றும் மருது பாண்டியர் புகழ் பாண்டி நாட்டு மக்கள் மனத்தில் மங்காமல் இருக்கும் மாட்சியை நேரில் கண்டு வியந்து இன்புற்றேன். என்னுடைய இம்முயற்சிகளில் எல்லாம் பெருந்துணை புரிந்த நண்பர் திரு.எஸ். காளேஸ்வரன் அவர்களையும், அவர் மைத்துனர் திரு. முத்துக்கறுப்பன் சேர்வை அவர்களையும், மற்ற அன்பர்களையும் நான் என்றும் மறவாது போற்றக் கடமைப்பட்டுள்ளேன். இவ்வன்பர்கள் துணையால் யான் பெற்ற செய்திச் செல்வங்களையும் துணையாகக் கொண்டு 'மருதிருவர்' என்னும் நூல் எழுதும் பணியில் முனைந்தேன்.

மருது பாண்டியர் புகழை விளக்கவல்ல கல்வெட்டு பட்டயச் சான்றுகள், யான் ஆவலுடன் எதிர்பார்த்த அளவு கிடைக்கவில்லை என்பது உண்மையே. இதற்குக் காரணம், மருது பாண்டியரால் தரப்பட்ட சாசனங்கள் அனைத்தையும் மருதிருவருக்குப்பின் சீமை உரிமையைக் கைப்பற்றியவர்கள் வாங்கித் தங்கள் பெயரில் புதுப்பித்து விட்டனர் எனக் கூறப்படுகிறது. சாசனங்கள் பற்றிய நிலையும் கருத்தும் இதுவாக, யான்

சிவகங்கைச் சீமையில் திரட்டி வந்த செய்திகள் பலவற்றிற்கும் அரண் புரியவல்ல வரலாற்று ஆதாரங்களை நாடினேன்; தேடினேன். சென்னைப் பல்கலைக் கழக நூல் நிலையமும் எழும்பூரில் உள்ள ஆவணக்களஞ்சியமும் (Records Office) எனக்குப் பேருதவி புரிந்தன.

ஏற்கெனவே யான் கர்னல் வெல்ஷ், பிஷப் கால்டு வெல் முதலியோர் நூல்களைக் கற்றிருந்தது வாயிலாக அறிந்திருந்த உண்மைகளையும் மேற்குறிப்பிட்டவாறு பல்வகையாலும் முயன்று சேர்த்த சான்றுகளையும் ஒன்றுபடுத்தி இந்நூலைத் தக்கவாறு உருவாக்கியுள்ளேன். விடுதலை வீரர்களின் வரலாற்றை உருவாக்குவதில் அடியேன் பேரார்வம் கொண்டு உழைத்த உழைப்பின் பயனாக வெளிவரும் இவ்வாராய்ச்சி நூலைத் தமிழ் அன்னையின் திருவடிகளில், தமிழ் மக்களின் தேசியத் திருநாளாகிய இப்பொங்கற் பெருநாள் காணிக்கையாக உரிமையாக்குவதில் வரம்பில்லா மகிழ்வு அடைகிறேன்!

தமிழகத்தின் வரலாற்றை முதன் முதலாகத் தமிழில் வரைந்து வெளியிட்டது வாயிலாகத் தமிழ் கூறும் நல்லுகத்தின் வாழ்த்திற்கும் வணக்கத்திற்கும் உரியவராய் விளங்கும் அறிஞரும் சென்னைப் பல்கலைக்கழக இந்திய வரலாற்றுத் துறையின் சிறப்பு விரிவுரையாளருமாகிய பேராசிரியர் டாக்டர், மு. ஆரோக்கியசாமி அவர்கள், யான் எழுதிய இந்நூலுக்கு அழகியதோர் அணிந்துரை அளித்து வாழ்த்தியுள்ளார்கள். அவர்கள் பேரன்பிற்கு என் உளங்கனிந்த நன்றி உரியது.

'மருதிருவர்' நூலின் கையெழுத்துப் படியைப் பார்த்துத் தக்க திருத்தங்கள் செய்துதவிய மகாவித்துவான் உயர்திரு. மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கு என் பணிவார்ந்த வணக்கங்களை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும், இந்நூல் உருவாவதற்கு வேண்டும் உதவிகள் புரிந்த பெருமக்களைப் பற்றிய குறிப்புகளை நூலினுள் உரிய இடங்களில் பொறித்துள்ளேன்.

வீரத் தமிழ் நாட்டின் மறைந்த வரலாறுகளை வெளிப்படுத்த யான் பணிவுடன் மேற்கொண்டுள்ள முயற்சிகளில் வெற்றி பெறப் பல்வகையானும் என்னை ஆதரித்து வரும் தமிழ் மக்கட்கும், அவர்கட்கும் எனக்கும் உள்ள இதயங்கலந்த உறவை நாளும் வளர்த்துவரும் பாரி நிலையத்தார்க்கும் என் நன்றி கலந்த வணக்கங்கள் உரியனவாகுக!

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!
வாழிய பாரத மணித்திருநாடு!

மன்மத: தைஃக                                                    ந. சஞ்சீவி
(1956)

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

ஆங்கில ஆதிக்கத்தையும் ஆட்சியையும் ஒரு சேர எதிர்த்துப் போரிட்டு உயிர் துறந்த வீரப்பெருமக்கள் மருது பாண்டியர்கள். அதிலும் ஆங்கில ஆட்சி கருநாடகத்தில் சட்டப்படி வேரூன்றிய வேளையில் அக்கொடுங்கோலை முறித்தெறியும் முயற்சியில் முன்னின்று தங்கள் மூச்சை முடித்துக் கொண்ட பெருமை மருது பாண்டியர் தனியுரிமை. அச்சான்றோர்களின் வரலாற்றைக் கூறும் 'மருதிருவர்' என்னும் இவ்வாராய்ச்சி நூல், இந்த ஆண்டு விடுதலை நாளை ஒட்டி இரண்டாம் பதிப்பாக வெளிவருவது தமிழ் மக்கட்கு மகிழ்ச்சி தருவதாகும். இப்பதிப்பில் பல புதிய செய்திகளும் படங்களும் இடம் பெற்றுள்ளன.

'மருதிருவர்' இரண்டாம் பதிப்பும் பிழையின்றி அச்சேறப் பெருந்துணை புரிந்த மகாவித்துவான் மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் திருவடிகள் என் தலை மேலன.

என் பிற நூல்களைப் போலவே இந்நூலையும் அழகுற அச்சிட்டு உதவிய முத்தமிழ் அச்சகத்தார்க்கு என் மனங்கனிந்த நன்றி உரியது.

வாழ்க இந்திய விடுதலை!

வாழ்க மருது பாண்டியர் புகழ்!!

ந. சஞ்சீவி

ஆசிரியரின் நூல்கள்

வீரத்தலைவர் பூலித்தேவர்
மானங்காத்த மருதுபாண்டியர்
வேலூர்ப் புரட்சி
திருநெல்வேலி சரித்திரம்

# 1. புரட்சியின் தாயகம்

'செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே; - எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே - ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே.'

ஆம். தொல்காப்பியம் தோன்றிய காலந்தொட்டுப் பாரதியார் கவிதை பிறந்த தலைமுறை வரை ஒவ்வொரு நூற்றாண்டிலும் வாழையடி வாழையாகக் கணக்கற்ற புரட்சிப் பெருவீரர்கள் தமிழ் மண்ணில் தோன்றினார்கள். அவர்கள் ஏட்டிலும், நாட்டிலும், கவிதையிலும், கற்பனையிலும், சமயத்திலும், சாத்திரங்களிலும், ஆலயங்களிலும், அறப்பணிகளிலும், சிந்தனைக் கோட்டையிலும், செயல் உலகிலும் செய்த இணையில்லாப் பெரும்புரட்சிகள் யாவற்றையும் சொல்லால் அளவிட்டு உரைத்தல் யாரால் ஆகும்! வாழப் பிறந்த தமிழினம், எங்கெல்லாம் மனித அறிவும் உணர்வும் செல்லுமோ, அங்கெல்லாம் மாறுதல்களைக் கண்டு, புரட்சிகளைச் செய்து முன்னேறுவதையே தன் வாழ்வின் மூச்சாகக் கொண்டு விளங்கியது.

'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே; மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்,' என்று இருந்த முடியாட்சியிலும், 'கொடியன் எம் இறை எனக் கண்ணீர் பரப்பிக் குடி பழி தூற்றும்' கொடுங்கோலன் ஆகும் கொடுமைக்கு அஞ்சிய காவலரை - போர் போர் என்று தினவெடுத்துத் திரிந்த தமிழ் மறவர் வாழ்ந்த மண்ணிலே பிறந்தும், போர் முரசின் ஒலியன்றி வேறு ஒலி கேளாத காலத்தில் வாழ்ந்தும், 'யாதும் ஊரே; யாவரும் கேளிர் என்று ஒற்றுமைச் சங்கு ஊதி, 'உலகம் ஒன்றே; அதில் உறையும் மாந்தர் அனைவரும் ஒரு குடியே,' என்று அனைத்துலக முரசு கொட்டிய செந்தமிழ்ச் சான்றோரை சங்ககாலத் தமிழகத்திலன்றி வேறு எங்கே சந்திக்க இயலும்? 'கள்ளும் கற்பில் மங்கையர் உறவும் நாகரிகம்' எனக் கருதி மக்கள் மயங்கிய நாளில், பிறப்பு வழிப்பெருமை பேசும் பேதைமை புகுந்த காலத்தில் அவற்றை எதிர்த்து, ஏடும் எழுத்தாணியுமே கொண்டு, கருத்துலகில் புரட்சி செய்து, சாதி சமய பேதம் கடந்த நீதி நூலை, உலகப் பொது மறையை, காலத்தை வென்ற கவிதையைப் பாடித் தந்த திருவள்ளுவரைத் தமிழ் மண்ணில் அன்றி வேறு எங்கே காண இயலும்? பழியறியாப் பாண்டி

மன்னன் குடியில் பிறந்தும், தேரா மன்னன் ஆராயாது செய்த அநீதி ஒன்றே ஆயினும், 'பட்டாங்கில் யானுமோர் பத்தினியாகில், அல்வழிப்பட்ட ஆட்சியை அழித்தே தீருவேன்!' என்று அமைதியே வடிவமாயிருந்த கற்பின் செல்வி, வீரக் கண்ணகியாய் வீறு கொண்டு, சிந்திய கண்ணீரோடும், விரித்த கூந்தலோடும், ஏந்திய சிலம்போடும் மன்னவன் நகரில், மாட மாளிகைகளில், புரட்சித் தீப்பற்றி எரியப் புறப்பட்டது மதுரை வீதிகளிலே அன்றி வேறு எந்நாட்டு எந்நகர வீதிகளில் நிகழ்ந்தது?

அல்லற்பட்ட மக்களுக்காக அழுது இரங்கி, 'ஆருயிர் மருந்து' அளித்து அன்பு செய்த குற்றத்திற்காகத் தன் நாட்டு அரசனாலேயே கொடுஞ்சிறையில் தள்ளப்பட்ட உலக வரலாற்றிலேயே முதற்பெண்ணரசி - சிறைக் கோட்டத்தையே சிதைத்து அறக்கோட்டமாக்கிய புரட்சி அன்னை - அறச்செல்வி - பிறந்தது தமிழ் மண்ணிலேயன்றி வேறு எங்கே? பிறந்த பொன்னாட்டில் வாழ இடமிருந்தும், வகையற்றுக் கண்ணற்ற குருடர் போலக் கடல் கடந்து சென்று, கூலிகளாய் ஆப்பிரிக்கக் காடுகளில் அடைக்கலம் புகுந்த நேரத்திலும் தன் இனத்தின் மானங்காக்கப் புரட்சித் தீப்பொங்கி எழுந்த நேரத்தில் அக்கொடுந்தீக்குத் தன் ஆருயிரையே காணிக்கை ஆக்கிய வீர வள்ளியைப் போன்ற மங்கையரைப் பெற்றெடுத்த இனம் தமிழ் இனமன்றி வேறு எந்த இனம்? அது மட்டுமோ!

சிப்பாய் கலகம் என்ற சிந்தனையே எழாத நாளில், அறப்போர் என்ற சொல்லே பிறவாத காலத்தில், பாரத நாட்டின் சொத்தையன்றிச் சுதந்தரத்தை, சுயமரியாதையையே சூறையாடச் சூழ்ச்சி வலை விரித்த வெள்ளை வஞ்சகரை எதிர்த்துத் தென்பாண்டித் திருநாட்டில் விடுதலை முரசொலி இடியென முழங்கியது. அப்போர் முரசின் இந்திய சுதந்தரப் போரின் முதல் முழக்கம் தமிழ் நாட்டுக் கோட்டைகளிலும், கொத்தளங்களிலும், மலைகளிலும், காடுகளிலும் அல்லவோ எதிரொலித்தது!'

இருநூறு ஆண்டுகளுக்கு முன் வீரத் தமிழகத்தில் தொடங்கிய விடுதலைப் போர், மன்னர் பலியான பின்னும் மானம் படைத்த அவர் மரபினர் நடத்திய போர், தளபதிகள் கொல்லப்பட்ட பின்னும் தளராமல் மக்கள் நடத்திய போர், அவர் வழிவழி வந்த வீரத் தமிழ் மக்களால் கடந்த இரு நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நடத்தப்பட்டது. அப்போரில் அல்லலுற்று அயர்வுற்ற நேரத்திலெல்லாம் அடிமைப்பட்ட மக்களுக்கு ஆத்திரம் ஊட்ட, ஆண்மை மிக்க அரசியல் தளபதிகள் எத்தனையோ பேர் ஒருவர் பின் ஒருவராகத் தமிழகத்தில் தோன்றிய வண்ணம் இருந்தனர்.

வில்லும் வாளும் ஏந்தும் உரிமையிழந்த தமிழ் மக்களை, ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, இடியென முழங்கிப் போர் புரியத் தம் சொல்லாற் கவி புனைந்து ஆவேச வெறியூட்டினார் அமரகவி பாரதியார். தித்திக்கும் தமிழால் தேசபத்தி என்னும் தீயை நாட்டு மக்கள்

நெஞ்சிலெல்லாம் மூட்டும் திருப்பணியைத் தடையின்றிச் செய்யும் பொருட்டு, வெள்ளைக் கொடுங்கோலர்களின் பருந்து விழிகளில் படாதவாறு எத்தனையோ காலம் அவர் அஞ்ஞாத வாசம் புரிந்தார். 'வந்தே மாதரம்!' என்று வாய்விட்டு முழங்கிய பாவத்திற்காக, 'பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை போகவோ? நாங்கள் மட்டும் அழுது கொண்டிருப்போமோ? ஆண் பிள்ளைகள் அல்லோமோ?' என்று வீர நெஞ்சம் விம்மித் துடிக்க, தமிழ் அகத்தின் கடல்களில் கப்பலோட்டிய குற்றத்திற்காக இரு ஜன்மச் சிறைத் தண்டனை பெற்றார் தேச பக்தர் சிதம்பரனார்: கண்ணற்ற கண்ணனூர் இருட்சிறையில் தள்ளப்பட்டார்: அங்கே ஏகாதிபத்தியத்தின் கொடுமைகள் எத்தனையுண்டோ அத்தனைக்கும் இலக்கானார். மனைவியாரையும் மக்களையும் பிரிந்த வீர சிதம்பரனார், சிறையில் மாடு போலச் செக்கிழுத்தார்: அங்குக் கையெரிய மனமொடியக் கல்லுடைத்தார்; இவ்வாறு சிதம்பரனார் மூட்டிவைத்த தியாகத் தீயில் எத்தனையோ தமிழ் வீரர்கள் தங்கள் குருதியையே நெய்யாகக் கொட்டினார்கள்; எலும்பையே ஆகுதியாக இட்டார்கள். 'உயர்த்திப் பிடித்த கொடியை ஒரு நாளும் தாழ்த்த மாட்டேன்!' என்று அரிமா என முழங்கித் தடியடிபட்டு, மண்டை பிளக்கப் பெற்று, தன் குருதி வெள்ளத்தால் தமிழ் மண்ணைத் தூய்மையுறச் செய்த திருப்பூர்க் குமரனை எவரே மறப்பர்?

பாரதியாரை, சிதம்பரனாரை, குமரனைப் போல நாட்டின் விடுதலைக்காகப் பாடு பட்டுச் சாவையும் மகிழ்வோடு தழுவிய எத்தனையோ வீரர்களைத் தமிழகம் ஈன்றது. எண்ணிலடங்கா - பெயரறியா - வீரர்களடங்கிய கூட்டம் அது. ஆனால், அவருள் சிலரையே அறிவோம் நாம்.

இந்தியாவின்-இன்பத் தமிழகத்தின் விடுதலைக்காகத் தங்கள் நாட்டை, மனைவியை, மக்களை, நல்லுறவை எல்லாம் இழந்து, தம் உயிரையும் துறந்த அம்மேலோர்களது குழுவினைச் சார்ந்த தலைமை சான்ற இரு பெருவீரர்களைப் பற்றியே சிறப்பாக இந்நூலில் படிக்கப் போகிறோம். தமிழகத்தின் மானத்தைக் காக்கத் தங்கள் இன்னுயிரையே காணிக்கையாகக் கொடுத்த அவ்வினையற்ற வீரர்களது வரலாறு என்றென்றும் நம் இதயங்களில் வைத்துப் போற்றிப் பயனடையத் தக்க தகுதி படைத்ததாகும். பண்பும் பயனும் நிறைந்த அத்தமிழ் மறவர்தம் தீர வாழ்வை, தியாகப் பாதையை அறியுந்தொறும் நம் அகக்கண்களுக்கு நம்மை ஈன்றெடுத்த இன்பத் தமிழகம் எவ்வாறு புரட்சியின் தாயகமாய்ப் பொலிவுற்று விளங்கியது என்னும் வாய்மை புலனாகும்.

# 2. அடிமை அரசியலும் ஆர்க்காட்டுப் பொம்மையும்

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி தென்னாடெங்கும் பொலிவற்றுக் கிடந்தது. நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் இல்லாதார் ஆட்சிக்கு அருமைத் தமிழகம் இரையாகியது! நாடெங்கும் ஆர்க்காட்டு நவாபுவின் தர்பார்தான் தழைத்தோங்கியது.

'விண்ணை யிடிக்கும் தலையிமயம் - எனும்
வெற்பை யிடிக்கும் திறனுடையார்'

என்று பாரதியார் போற்றிய 'தமிழ்ப் பார்த்திபர்' மன்பதை முழுதும் வாழ்த்தி வணங்கச் செங்கோல் செலுத்திய செந்தமிழ் நாட்டின் ஆட்சி உரிமை, யார் யார் கைக்கோ எவ்வெவ்வாறோ போய்ச் சேர்ந்தது, விசயநகர நாயக்கர்கள் ஆட்சியில் தமிழ் நாடு பற்பல பிரிவுகளாகிச் சிதைந்தது. பாண்டி நாடுமட்டும் எழுபத்திரண்டு பாளையப்பட்டு களாகப் பிரிவுபட்டது. இவ்வாறு பிளவு பட்டுக் கிடந்த தமிழகத்தின் நிலை ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சியில் தாறுமாறாயிற்று. அரசியல் அறிவும், விடுதலை வேட்கையும், ஆண்மைத் திறமும் அற்றவனாய் இருந்தான் ஆர்க்காட்டு நவாபு. இந்த உண்மையை உணர்ந்த கணக்கற்ற பாளையப்பட்டுகளில் குறு நிலத் தலைவருள் ஒவ்வொருவரும் சுதந்தர ஆட்சி நடத்தத் தொடங்கினர்; தமக்குள் ஒற்றுமைப் பண்பின்றிப் பூசலையும் பொறாமையையும் பெருக்கிக் கொண்டு, பிரிந்தும் பிணங்கியும் நிற்கலாயினர். ஊர் இரண்டுபட்டுக் கிடந்தால், கூத்தாடிக்குக் கும்மாளந்தானே? இத்தகைய சூழ்நிலையில் வெள்ளைக் கம்பெனியார் வஞ்சகச் செயல்புரிய வலை விரிக்கலாயினர். பரதேசி வெள்ளையர் விரித்த பாழான சூழ்ச்சி வலையில் அறிவும் ஆண்மையும் கெட்டுக் கிடந்த ஆர்க்காட்டு நவாபுவும் சிக்கினான். அதன் விளைவாக ஆங்கில ஆதிக்கம் சிறுகச்சிறுகப் பெருகி இறுகிய நிலையில் 1792-ஆம் ஆண்டில் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் ஆர்க்காட்டு நவாபுவிற்கும் இடையே ஓர் ஒப்பந்தம் எழுந்தது. ஆம். ஒப்பந்தம் என்ற பெயரால் ஆங்கிலக் கம்பெனிக்குத் தமிழகத்தை அடகு வைத்தான் ஆர்க்காட்டு நவாபு. 'ஆர்க்காட்டு நவாபு தான் பெற்ற கடனுக்காகத் தமிழகக் குறுநில மன்னர்களிடமிருந்து தன் பெயரால் கப்பப்பணத்தை வசூலித்துக் கொள்ளும் உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கே வழங்குவது,'

என்பதே அந்த அடிமை ஒப்பந்தத்தின் முடிவு. இத்தகைய ஒப்பந்தத்தின் மூலம் மன்னர் மன்னர்களை எல்லாம் அடி பணிய வைத்த தமிழகத்தின் அரசியல், முன்னிலும் பன்மடங்கு அடிமை அரசியலாயிற்று! ஆர்க்காட்டு நவாபுவும் வெற்று அலங்காரப் பொம்மையானான்! அண்டி வயிறு வளர்க்க வந்த கிழக்கிந்தியக் கம்பெனியின் வெள்ளையர், வரி வாங்கும் அதிகாரிகளாய் மாறினர்.

'நாட்டு மாந்தரெல்லாம் - நம்போல் நரர்க ளென்றுகருதார்,
ஆட்டு மந்தையாமென்று - உலகை அரசர் எண்ணிவிட்டார்!'

என்று நெஞ்சம் கொதித்துப் பாரதியார் பாடியது ஆர்க்காட்டு நவாபுவின் அவமானச் செயலுக்கு எவ்வளவு பொருத்தம்!

ஆர்க்காட்டு நவாபுவின் ஆண்மையற்ற செயலால் தமிழகம் வெள்ளைப் பறங்கியர்க்கு அடிமையாயிற்று. வரி வாங்கும் அதிகாரிகள் என்ற பெயரால் அவ்வாங்கில நாடோடிகள் செய்யத்தகாத அநீதியெல்லாம் செய்தனர்: மக்களைக் கசக்கி, அவர்களிடமிருந்து பணத்தையும் கண்ணீரையும் கப்பமாகக் கொண்டனர்: தமிழகத்தின் செல்வத்தையெல்லாம் சூறையாடுவதையே அன்றாடத் தொழிலாகக் கருதினர். வாணிபம் செய்ய வந்த ஆங்கில நாடோடிகள் தங்கள் ஆணையைக் குறையின்றிச் செலுத்தக் கிழக்கு இந்தியக் கம்பெனியின் பெயரால் படையையும் பயன்படுத்தினார்கள். அலைகடலையும் வென்று, அப்பாலுள்ள நாடுகளை எல்லாம் தன்னடிப்படுத்திய தமிழகத்தின் கரைகளில் வெள்ளையர் படை இங்கிலாந்திலிருந்து வந்து இறங்கியது. பண்டங்களை விற்க வந்த கம்பெனியின் கிடங்குகளில் பேய் வாய்ப்பீரங்கிகளும், நச்சுக் குண்டுகளும், நானாவிதத் துப்பாக்கிகளும் நிரம்பின.

அழுக்காறு கொண்டு, ஆண்மை குன்றி வாழ்ந்த குறுநில மன்னர்கள் - பாளையக்காரர்கள் - இந்நிலை கண்டார்கள். அவர்கள் தொடை நடுங்கியது. நெல்லிக்காய்கள் போலச் சிதறிக் கிடந்த அப்பாளையக்காரர்களைப் பகடைக்காய்களாகப் பயன்படுத்திப் பறங்கித் துரைமார்கள் அரசியற்சூது ஆடத் தொடங்கினார்கள்; தங்கள் நாட்டிலிருந்து வரவழைத்த வெள்ளைப்படைக்கு உறுதுணையாகக் கூலிப்படையையும் ஏராளமாகச் சேர்க்கத் தலைப்பட்டார்கள்; பாளையக்காரர்கட்கு இடையே ஏற்கெனவே எரிந்து கொண்டிருந்த பொறாமைத் தீக்குப் புதுநெய் வார்க்கும் திருப்பணியில் இறங்கினார்கள்: ஒருவருக்கு எதிராக மற்றவரைத் தூண்டி விட்டுப் பாளையக்காரர்களிடையே தீராப்பகையை வளர்த்தார்கள். இவ்வளவு சூழ்ச்சிகட்கும் பெரும்பாலாரான பாளையக்காரர் இரையாயினர். கண்ணிருந்தும் குருடர்களாய், வாயிருந்தும் ஊமையர்களாய் இருக்கும்படி அவர்கள் வாழ்க்கை மாறியது. அடிமை இருள் தமிழகத்தைக் கவிந்து கவ்விக் கொண்டது.

இத்தகைய சூழ்நிலையிலேதான், திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த பாஞ்சாலங்குறிச்சி வீரபாண்டியக் கட்டபொம்மன் தோன்றினான். அடிமை வாழ்வும் வஞ்சனைப் பேயும் கொடுங்கூத்தாடிய இக்காலத்திலேதான் அவனது அரசியல் வாழ்வும் தொடங்கியது. தொன்றுதொட்டு எவர்க்கும் தலை வணங்காது வாழ்ந்த தமிழ் மன்னர் மரபு ஆங்கில நாடோடிகளது நயவஞ்சகத்திற்கு இரையாகிக்கிடக்கும் கொடுமையைக் கண்டு அவன் உள்ளம் குமுறியது! தங்கள் வாழ்விற்காகத் தமிழகத்தின் மானத்தையே குழி தோண்டிப் புதைக்கும் பாளையக்காரர்களின் சிறுமையை, கோழை நெஞ்சைக் கண்டு அவன் கண்கள் சிவந்தன! துப்பாக்கிக்கும் பீரங்கிக்கும் அஞ்சித் தமிழ் மக்களை அடிமைச் சிறையில் தள்ளும் குறுநில மன்னர்களின் துரோகச் செயல் கண்டு, அவன் வீர இரத்தம் தமிழ்க் குருதி - கொதித்தது! அதன் விளைவுதான்...

# 3. வீரபாண்டியன் மூட்டிய தீ

பாளையக்காரர்கள் எல்லாம் பயங்கொள்ளிகள் என நினைத்த வெள்ளையர், எல்லாரையும் போல வீரபாண்டியனையும் எண்ணினர்; ஆனால், சாம்பலென்று கருதித்தாம் தொட்ட இடம், கை விரலைச் சுட்டுப் பொசுக்கும் வெந்தணலாயிருந்ததை அனுபவத்தால் அறிந்து கொண்டனர்.

1760 ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், மூன்றாம் நாள் ஜகவீரக் கட்டபொம்மன் என்பானுக்கு மகனாய்த் தோன்றினான் நம் சுதந்தர வீரன் கட்டபொம்மன். இவனுடன் பிறந்த தம்பியர் இருவர். இவர்களே குமாரசாமியும் துரைச்சிங்கமும். இவருள் குமாரசாமி என்பான், நிகரற்ற வாள் வல்லமை படைத்தவன்: ஆனால், திருத்தமுறப் பேசும் வாய் வல்லமை இல்லாதவன். எனவே, இவனை 'ஊமைத்துரை' என மக்கள் உள்ளன்போடு வழங்குவார்கள்.

வீரபாண்டியன், 1790 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 2 ஆம் நாள் பாஞ்சாலங்குறிச்சியின் வேந்தனானான். முப்பதே ஆண்டினனான வீரபாண்டியன் பாஞ்சாலங்குறிச்சியின் ஆட்சி உரிமை ஏற்ற நாளில் தமிழகத்தின் நிலை எவ்வாறு இருந்தது என்பதை நாம் முன்பே கண்டோம். நவாபுவின் தர்பாரில் சீமைத் துரைமார் இட்டதே நாடெங்கும் சட்டமாய் இருந்தது. செந்தமிழ் நாடு தன் விடுதலை ஒளி இழந்து அவர்கள் கையில் சிக்கித் தவித்தது. ஏழை எளிய மக்களை எல்லாம் 'வரி வரி' என்று வாட்டி வதைத்தார்கள் கம்பெனி அதிகாரிகள். உழவர்கள் வடித்த துயரக் கண்ணீரோ, அளப்பரியது. இந்நிலையில் பாளையக்காரர்களின் நிலையும் செக்கிலகப்பட்ட எள்ளாயிற்று. 'கப்பம் கப்பம்' என்று அவர்களைக் கசக்கிப் பிழிந்தார்கள் வெள்ளை அதிகாரிகள். மானத்தோடு வாழ்வதிலும் மண்ணாளும் பதவியே பெரிதென நினைத்த பாளையக்காரர் பலர், துரைமார் சொல்லுக்குத் தலைவணங்கிக் கைகட்டி வாழும் ஈன வாழ்க்கையையே இனிது என மேற்கொண்டனர். ஆனால், வீரபாண்டியனோ, இதற்கு விலக்கானான்; அடிமை என வாழ்வதிலும் அரசுரிமைக்காகப் போரிட்டு மடிவதே மேல் என உறுதி கொண்டான்.

கம்பெனி அதிகாரிகள் கட்டபொம்மனைப் பயமுறுத்திப் பணம் வசூலிக்க முயன்றார்கள்: 'எங்கே கப்பம்? எடு!' என்றார்கள். வீரபாண்டியன் கண்கள் சிவந்தன. 'கப்பமா! எதற்குக் கப்பம்? வானம் பொழியுது; பூமி விளையுது; மன்னவன் காணிக்குக் கிஸ்தி ஏது?' என்று அவ்வீரன் சிங்கம்

போலச் சீறி எழுந்தான். வீரபாண்டியனது கோபக்கனல் கண்டான் ஆலன் என்னும் ஆங்கில அதிகாரி: 'ஆறாயிரம் பொன் கொடுத்தால் போதுமப்பா! இந்தத் திக்கிற்கே திரும்போம்', என்று நயவுரை பகர்ந்தான். உள்ளத்தில் நஞ்சும் உதட்டில் தேனுமாய் ஆலன் பேசியது கேட்டான் வீரபாண்டியன்; நகைத்தான். நயம், பயம் இரண்டிற்கும் வீரபாண்டியன் பணியாதது கண்ட அதிகாரிகளுக்கு ஆத்திரம் பொங்கியது. 'உன்னையும் உன் அரசையும் அழிப்பதே எங்கள் வேலை!' என்று வெம்பியது அவர்கள் உள்ளம். ஆனால், வீரபாண்டியனோ, எதற்கும் அஞ்சினானில்லை.

'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.'

என்ற குறள் நெறி நிற்க அவ்வீரன் உறுதி கொண்டான்.

நேருக்கு நேர் நின்று போர் புரிய மாட்டாத கோழை முதுகில் குத்த வருவது போல, வெள்ளை அதிகாரிகள் வீரபாண்டியனை எவ்வாற்றானும் வெல்ல எண்ணற்ற வஞ்சகச் சூழ்ச்சிகள் செய்யலானார்கள்; பாளையக்காரர்கட்கு இடையே பிரித்தாளும் சூழ்ச்சியை வெற்றியாகக் கையாண்டு, அவனுக்கெதிராகப் பழியையும் பகையையும் பெருக்கினார்கள். அதோடு அவர்கள் வீரபாண்டியனைத் துன்புறுத்தித் தங்கள் காரியத்தைச் சாதிக்கவும் திட்டமிட்டார்கள்.

கம்பெனியின் வரி வசூலிக்கும் கலெக்டரான ஜாக்ஸன், ஒரு வாரத்திற்குள் தன்னை நேரில் கண்டு பேசவேண்டுமென்று வீரபாண்டியனுக்குச் செய்தி அனுப்பினான். வீரபாண்டியன் அதை விரும்பவில்லை. என்றாலும், சுற்றுச் சூழ்நிலை காரணமாக, 'நேரிலேயே தனியாகவே கலெக்டரைக் காண்போம்; நம் உறுதியைக் காட்டுவோம்; அவன் பகையைத் தொலைப்போம்,' என்று கருதினான்; ஆயினும், அவன் தம்பியரது வற்புறுத்தலால், தக்க படைகள் சூழப் பல்லக்கில் ஏறித் திருநெல்வேலி சென்றான். வீரபாண்டியன் தன்னைக் காணப் படைகள் சூழ வருவது அறிந்தான் ஜாக்ஸன். அவன் பலத்தில் அவனுக்கே நம்பிக்கை இல்லை. அவன் வீரபாண்டியனை நெடுந்தொலைவு இழுத்தடித்து அவமானப்படுத்தத் திட்டமிட்டான்; திருநெல்வேலி, குற்றாலம், திருவில்லிபுத்தூர், சங்கர நயினார் கோவில், திருச்சுழி, அலங்கா நல்லூர், கமுதி என்று இவ்வாறு 400 மைல் தூரம் அவனை இழுத்தடித்தான். இக்கொடுமை 23 நாள்கள் நடந்தது. நாடாளும் மன்னனுக்கு நாடோடிகள் செய்த அவமானம் என்னே! நினைத்தாலும் நெஞ்சம் குமுறுகிறது! இறுதியாகக் கலெக்டர் ஜாக்ஸன் இராமநாதபுரத்தில் வீரபாண்டியனைக் கண்டு பேச இணங்கினான். இந்த வெள்ளையன் எங்கேதான் போவான்! போகட்டுமே! இலங்கை போனாலும் தொடருவேன்! இவன் நெஞ்சாழத்தைக் காணாமல் திரும்பேன்!' என்று உறுதி கொண்டிருந்த

வீரபாண்டியனும் இராமநாதபுரத்தில் ஆபத்து எதுவும் நேர்ந்தால் உதவும் பொருட்டுச் சுற்றிலும்தன் படைகளை நிறுத்தி வைத்துவிட்டுக் கலெக்டர் ஜாக்ஸன் தங்கியிருந்த 'இராமலிங்க விலாசம்' என்னும் மாளிகையினுள் நுழைந்து மேல் மாடிக்குச் சென்றான். கட்டபொம்முவின் வீரத் தோற்றத்தைக் கண்ட ஜாக்ஸன் வெகுண்டான்; கோபக்கனல் தெறிக்கப் பொய் மலிந்த குற்றச் சாட்டுகளை எல்லாம் வீரபாண்டியன் மீது வீசினான். அவற்றையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த கட்டபொம்மனும் தன்மீது சாட்டப்பட்ட ஒவ்வொரு குற்றச்சாட்டிற்கும் கணீர் கணீர் என்று பதிலுரைத்து, மமதை கொண்ட ஜாக்ஸன் வாயை அடக்கினான். வெல்லுஞ்சொல் வேறொன்றும் இல்லாதவாறு வீரபாண்டியன் கூறிய தீர மொழிகளைக் கேட்ட வெள்ளைக் கலெக்டர், அறிவும் அமைதியும் இழந்து, ஏற்கெனவே திட்டமிட்டு மறைந்திருக்கச் செய்த கூலிப்படைகளை வெளியே வருமாறு கூவினான். 'பிடி கட்டபொம்மனை! பூட்டு விலங்கை!' எனக் கதறினான். வஞ்சகனது கள்ளத்தை அறிந்த கட்டபொம்மன் கை, உடை வாளைப் பற்றியது. அவன் உடல் துடித்தது; இரத்தம் கொதித்தது. அக்குரிசில் சரேலென எழுந்தான்; கலெக்டர் ஜாக்ஸனை ஒரு முறை உற்றுப் பார்த்துப் புன்னகை புரிந்தான். 'நீயும் ஒரு மனிதனா!' என்று கூறுவன போலிருந்தன அவன் பார்வையும் சிரிப்பும். 'நரியின் புதரில் கால் வைத்தது நம் தவறு,' என நினைத்துக் கொண்டே மாடியை விட்டுக் கீழே இறங்கினான் கட்டபொம்மன். அச்சமயம் ஆணவமே வடிவெடுத்த ஜாக்ஸன், 'நில்!' எனக் கூறி வீரபாண்டியன் மடியைப் பிடித்து இழுத்தான். வீரபாண்டியன் உடலும் உள்ளமும் நெருப்பாயின. அவன் உந்தித் தள்ளினான். அலறிய வண்ணம் உருண்டான் ஜாக்ஸன். எசமானனது அலறலைக் கேட்ட கம்பெனி வீரர்கள் கட்டபொம்மன் மீது பாய்ந்தார்கள். எசமானனைப் போலவே சிறுமதி படைத்த தளபதி கிளார்க்கு என்பவன் வீரபாண்டியன் மீது வாளும் கையுமாகப் பாய்ந்தான். பரதேசிக் கூட்டத்தின் வெறிச் செயலைக் கண்ட கட்டபொம்மன் தோள்கள் துடித்தன. அவன் உருவினான் வீரவாளை; சிங்கம் போலக் கர்ச்சித்தான்; எதிர்த்தோருடன் தனியனாய் நின்று போராடினான். அதில் பாஞ்சைப்பதியான் வாளுக்குப் பலர் இரையாயினர். இந்நிலை கண்ட தளபதி கிளார்க்கு வீரபாண்டியனை எதிர்த்துச் சினம் கொண்ட பாம்பு போலச் சீறினான். இருவருக்குமிடையே கடும்போர் - வாட்போர் மூண்டது. முடிவில் வீரபாண்டியன் தமிழ் மண்ணின் உரிமையைத் தட்டிப்பறிக்க நினைத்த வெள்ளைத் தளபதியைத் தன் கூர்வாளால் வெட்டி வீழ்த்தினான். மண் வெறி கொண்ட தளபதி மண்ணில் உருண்டான். இதற்கும் இராமலிங்க விலாச மாளிகையின் புறத்தே இருந்து வீரபாண்டியனது சிங்கக் கர்ச்சனை கேட்டு ஓடி வந்த மறவர் படைக்கும் கம்பெனிப் படைக்குமிடையே பெரும்போர் எழுந்தது. அப்போரில்

வீரபாண்டியன் தம்பி ஊமைத்துரையே தமிழர் படைக்குத் தலைமை தாங்கினான். அந்த வீரத் தலைவன் வாளுக்கு அன்று கிடைத்த விருந்து பெருவிருந்தே!

'இராமலிங்க விலாச' நிகழ்ச்சி கம்பெனி அதிகாரிகட்குத் குலை நடுக்கம் தந்தது. பிற நாட்டு மக்களைச் சூறையாட வந்தவர்கள் எனினும், தங்கள் நாட்டவர் இரத்தம் சிறிதும் சிந்தச் சகியாத பண்பு படைத்தவர்களன்றோ வெள்ளைத் துரைமார்கள்! எனவே, வீரபாண்டியன் ஜாக்ஸன் சச்சரவு பற்றித் தீர விசாரித்தார்கள். இந்த விசாரணையில் வீரபாண்டியன் தூத்துக்குடியிலிருந்து தன் வெள்ளை நண்பன் டேவிட்சனை, நிகழ்ந்த நிகழ்ச்சி பற்றிய உண்மைகளை எல்லாம் நடுவு நிலைமையோடு விளக்கி எழுதச் செய்திருந்த கடிதம் பெரிதும் பயன்பட்டது. அதன் விளைவாகக் கம்பெனி அதிகாரிகள், 'ஜாக்ஸன் வீரபாண்டியனிடம் நடந்து கொண்ட முறை அநியாயமானது; தேவையற்றது; நம் நோக்கத்திற்கே தீமை பயப்பது, என்று தீர்ப்பளித்தார்கள். அதோடு அவனைக் கலெக்டர் பதவியினின்றும் உடனே நீக்கி, அப்பதவிக்கு லூஷிங்டன் என்பவனை நியமித்தார்கள். அதோடு இராமலிங்க விலாச நிகழ்ச்சியில் கைது செய்யப்பட்ட பாஞ்சைப்பதியின் தலைமை நிருவாகி தானாபதிப் பிள்ளையையும் விடுதலை செய்தார்கள். கம்பெனி நிருவாகம் கலெக்டரை மாற்றியது; ஆனால், தன் கருத்தை ஒரு சிறிதும் மாற்றிக் கொள்ளவில்லை. புதிய கலெக்டர் லூஷிங்டன் தன் அறிவிற்கும் கற்பனைக்கும் எட்டிய எல்லா வழிகளையும் ஒன்று விடாமல் பயன்படுத்திக் கட்டபொம்மனைத் தன் கருத்திற்கு இணங்க வைக்கப் பார்த்தான். ஆனால், தான் செய்த முயற்சிகள் அனைத்தும் வீரபாண்டியனது நெஞ்சுறுதியால் பாழாய்ப் போனதை அறிந்து பகைத்தான்; கம்பெனி மேலதிகாரிகளுக்குக் கடுமையான கடிதம் எழுதினான்; அதில் வீரபாண்டியனைப் படைப்பலத்தால் அழிப்பது ஒன்றே அமைதிக்கு வழி என்பதையும் குறிப்பிட்டிருந்தான். அப்போது சென்னையில் கவர்னராய் இருந்தவன், இந்தியாவை அடிமைப்படுத்திய லார்டு கிளைவின் மகன் எட்டுவர்டு கிளைவ் என்பான். அவன் தன் அதிகாரிகளை அழைத்து, ஆழ்ந்த ஆலோசனை நடத்தினான். அதன் பயனாகப் பாஞ்சைப் பதியானைத் தாக்க மேஜர் பானர்மன் என்பவன் போர் நிகழ்த்துவது உட்பட எல்லா அதிகாரங்களும் படைத்தவனாக, திருநெல்வேலிச் சீமையின் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டான். அவ்வாறு அவன் சர்வாதிகாரம் பெற்றுப் படையெடுக்கப் போகும் செய்தி திருநெல்வேலிச் சீமை முழுதும் பறையறைவிக்கப்பட்டது. ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வயிறு வளர்க்க வந்த கூட்டம், தமிழகத்தின் மீது படையெடுக்கத் தமிழகத்திலேயே தண்டோரப் போட்டது. என்ன கொடுமை!

மேஜர் பானர்மன் போருக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தான்; எனினும், இரத்தம் சிந்தாமலே வீரபாண்டியனைப் பாஞ்சாலங்குறிச்சியினின்றும் வெளியேற்றிக் கைது செய்யச் சதி புரிந்தான்; தூதுவர் வாயிலாகச் சமரசம் பேசும் பொருட்டுக் கட்டபொம்மனைப் பாளையங்கோட்டைக்கு வரும்படி அழைத்தான். ஆனால், வெள்ளையரது கள்ளமெல்லாம் ஆதி முதல் நன்கறிந்திருந்த கட்டபொம்மனோ, பஞ்சாங்கத்தில் நாள் நன்றாக இல்லை எனப் பதிலுரைத்து ஏய்க்கலானான். வீரபாண்டியனை நம்பிப் பயனில்லை என்பதை அறிந்தான் மேஜர் பானர்மன்: 'இனியும் காலநீட்டிப்புச் செய்வது தற்கொலைக்கு ஒப்பாகும்,' எனக் கருதினான்: எனவே, உடனே படையெடுக்கத் துணிந்தான். அப்பொழுது பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரர்களுக்குக் குலதெய்வமான தேவி ஜக்கம்மாளுக்குத் திருவிழா நடந்து கொண்டிருந்தது. அதற்காகப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலிருந்து பாதிக்கு மேற்பட்ட வீரர்கள் சென்றிருந்தார்கள். அவர்களுடன் வீரபாண்டியனுடைய இரு தம்பியரும் மற்றும் பலரும் போயிருந்தனர். இந்த உண்மையை எவ்வாறோ ஒற்றி அறிந்த மேஜர் பானர்மன், பகலவன் ஒளி மறையப் பேரிருள் எங்கும் பரந்த நேரத்தில் தன் படைகளைக் காற்று வேகத்தில் நடத்திச் சென்று, பாஞ்சாலங்குறிச்சியின் எல்லையை நள்ளிரவிற்குள் எட்டிப்பிடித்தான்.

ஏற்கெனவே பாளையங்கோட்டையில் நடப்பதை எல்லாம் அறிந்து தெரிவிக்குமாறு வீரபாண்டியன் அமைத்திருந்த ஒற்றர்கள், பானர்மன் படை திரட்டி வரும் செய்தியை மின்னல் வேகத்தில் கட்டபொம்மன் காதுகளுக்கு எட்டுமாறு செய்தார்கள். நள்ளிரவில் வீரபாண்டியனுக்குச் செய்தி கிடைத்தது. 'என்ன ஆணவம் இந்த வாணிபக் கூட்டத்திற்கு!' என்று அவன் வெகுண்டான்; 'விடியுமுன் பாஞ்சை வீரர் யாவரும் கோட்டைக்குள் திரள வேண்டும்!' என்று ஆணை பிறப்பித்தான். அவனிட்ட கட்டளை திக்கெட்டிலும் முரசறைந்து தெரிவிக்கப்பட்டது. தமிழ் மறவர் நாற்றிசையிலிருந்தும் வெள்ளமென விரைந்து வந்தனர்; ஆனால், அதற்குள் கம்பெனிப்படை கோட்டையைச் சுற்றி அணி வகுத்து முற்றுகையிட்டிருப்பதைக் கண்டனர். எனினும், அஞ்சாது அணி வகுப்பைக் கிழித்துக் கொண்டு உட்புகுந்தனர் ஊமைத்துரையும் அவன் இளவலும். மற்றவர்களும் தங்கள் உயிரனைய கோட்டைக்கு உற்ற தீங்கைக் கேட்டுத் தீயென உள்ளம் கனன்று ஓடி வந்து அரணுக்குள் நுழைந்தார்கள்.

கடும்போர் மூண்டது. கம்பெனிப்படையின் வசமிருந்த பேய் வாய்ப் பீரங்கிகள் அலறின. நெருப்பு மழை போலப் பாஞ்சைக் கோட்டையின் மீது தீக்குண்டுகள் பொழியப்பட்டன. ஆயினும், பாஞ்சை வீரர்கள் கலங்கவில்லை; ஈட்டிகளை எறிந்தும், கவண் கற்களை வீசியும், எதிர்த்து வந்த பகைவரைக் கண்டதுண்டமாக வெட்டியும் கடும்போர் புரிந்தனர்.

இடிபோல முழங்கி, எதிரிகள் அணி வகுப்பைச் சிதைத்து, உள்ளே புகுந்து, தம் வஞ்சம் தீர, பானர்மன் நெஞ்சம் பதைபதைக்க, வெள்ளைப் படைகளை வெட்டித் தள்ளினர். பாஞ்சை வீரரது அடக்கலாகாச் சினத்தைக் கண்ட பானர்மன், மேலும் மேலும் தன் பீரங்கிப் படைகளை முடுக்கி விட்டான். இதையறிந்த வீரபாண்டியன் படை வீரர் வெறி கொண்டு கம்பெனிப் படையைத் தாக்கினர். இந்நிலையில் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையின் ஒரு புறத்தில் பிளவு கண்டது. மகிழ்ச்சியால் ஆர்த்தது கம்பெனிப்படை. ஆனால், வீர மறவர் நெஞ்சமோ, துடிதுடித்தது.

கோட்டை பிளவு கண்டது அறிந்த காலன் என்னும் ஆங்கிலத் தளகர்த்தன், பரிமீதேறி அவ்வழிப் பாய்ந்தான். அவ்வாறு அவன் அம்பு போல விரைந்து வருவதைக் கூர்ந்து கவனித்தான் வெள்ளைத் தேவன் என்னும் மறக்குல மாவீரன். கோட்டையின் பிளவைக் காலன் நெருங்கியதும் வெள்ளைத்தேவன் தன் கைவேலைக் குறிபார்த்து ஏகாதிபத்திய வெறியனது இதயத்தில் பாய்ச்சினான். தமிழ் வீரன் பாய்ச்சிய வேல், காலன் உடலில் ஊடுருவிப் பாய்ந்து, வெளி வந்து வெற்றிச் சிரிப்புச் சிரித்தது. அங்கேயே அக்கணமே பலியானன் காலன். அவனைத் தொடர்ந்து வந்த தளகர்த்தர் எழுவரும் கல்லாலும், வில்லாலும், வேலாலும், வாளாலும் தாக்குண்டு, காலன் சென்ற உலகிற்கே கடுகிச் சென்றனர். தளகர்த்தர்கள் தலைகளெல்லாம் தரையில் உருளுவது கண்ட கம்பெனிப் பட்டாளம் கதி கலங்கிச் சிதறி ஓடியது. படைகளெல்லாம் சிதறி ஓடும் நிலை கண்ட பானர்மன், தன் கடுஞ்சினத்தாலும் கட்டளையாலும் கம்பெனிப் படைகளைத் திரட்டி, மீண்டும் போரிடச் செய்தான். இருதிறப் படைகளும் கடும்போர் புரிந்தன. இரத்தவெள்ளம் ஆறாய்ப் பெருகியது. கட்டபொம்மனும் ஊமைத்துரையும் வீர கர்ச்சனை புரிந்தனர். அது கேட்ட தமிழ் வீரர், உயிரைத் துரும்பென மதித்துக் கம்பெனிப் படைகளைச் சின்னபின்னமாகும்படி வேல், கம்பு, விளரித்தண்டு, குத்தீட்டி, சுருள்வாள் ஆகியன கொண்டு தாக்கிப் புடைத்தனர். பானர்மன் படைகள் இருக்குமிடம் தெரியாமல் மறைந்தன. ‘ஒழிந்தது வெள்ளைப்படை!’ என்று தோள் கொட்டித் துள்ளினர் வீர மறவர். ஆனால், வீரபாண்டியன் மனத்திலோ, மகிழ்ச்சி இல்லை. ‘பானர்மன் திட்டப்படி புதிய படைகள் வந்து சேரின் நிலைமை என்னவாகும்!’ என அவன் கலங்கினான். ‘குறைந்த படையுடன் கோட்டைக்குள்ளேயே இருந்து கனல் வாய்ப் பீரங்கிகட்கு இரையாகிச் சாவதைவிடப் பாஞ்சைப் பதியை விட்டு வெளியேறிக் கிழக்கிந்தியக் கம்பெனியை வேரும் வேரடி மண்ணும் இல்லாமல் ஒழிக்கத் தமிழகம் முழுவதையும் தட்டி எழுப்பிப் படை திரட்ட வேண்டும்’, என்று கருதினான்; உடனே தன் அருமைத் தம்பியரும் அமைச்சர் முதலியோரும் சூழ, நள்ளிரவில் கோட்டையை விட்டு வெளியேறினான்.

வீரபாண்டியனுக்கு நாகலாபுரம், சிவகிரி, இராமநாதபுரம் ஆகிய இடங்களிலிருந்த பாளையக்காரர்கள் துணை புரிய முன் வந்தார்கள். அது கண்டு மகிழ்ச்சி கொண்ட கட்டபொம்மன், கோலார்பட்டியைச் சேர்ந்து, அங்கு ஒரு நாள் இரவு தங்கினான். பொழுது புலர்ந்தது. எட்டையபுரத்தான் செய்த துரோகத்தால் உளவறிந்த கம்பெனிப் படைகள் வீர பாண்டியன் தங்கியுள்ள இடத்தை வளைத்துக் கொண்டதை அவ்வீரன் அறிந்தான்; உருவிய வாளுடன் வெளி வந்தான்; எதிர்த்து வந்த எட்டப்பன் வீரர்களை வெட்டிச் சாய்த்தான். அண்ணன் ஆத்திரத்தைக் கண்ட தம்பி ஊமைத்துரையும் ஏனைய மறவரும் வீரப்போர் புரிந்தனர். அப்பயங்கரப் போரின் விளைவாகப் பலர் மாண்டனர். இதற்கிடையில் வீர பாண்டியனும் அவன் தம்பி ஊமைத்துரை உள்ளிட்ட பலரும் தப்பிச் சென்றனர். ஆனால், அமைச்சர் தானாபதிப்பிள்ளையும் அவர் துணைவர் பலரும் கைதாயினர். வீர பாண்டியன் மீண்டும் தப்பிவிட்ட செய்தி பானர்மன் நெஞ்சில் வேதனைத் தீயை மூட்டியது. ஆத்திரங் கொண்ட பானர்மன், வீர பாண்டியனுக்குத் துணை புரிந்த குற்றத்திற்காக நாகலாபுரம் பாளையக்காரரின் இளவலான சௌந்தரபாண்டியனையும் கைது செய்தான். கைது செய்யப்பட்ட தானாபதிப் பிள்ளையையும் சௌந்தரபாண்டியனையும் விசாரிக்க நீதி மன்றம் ஏற்படுத்தினான் பானர்மன். இருவரும் விசாரிக்கப்பட்டனர். விசாரணையின் முடிவு பயங்கரம். இருவருக்கும் தூக்குத் தண்டனை! அவர்கள் சொத்தெல்லாம் பறிமுதல்! ஆம். பேயரசின் காட்டாட்சி!

பானர்மன் ஆத்திரம் இதோடு அடங்கவில்லை. அவன் பாஞ்சாலங்குறிச்சி மக்களை வாட்டி வதைத்தான்; வீரபாண்டியனது குடும்பம் முழுவதையும் கைது செய்தான்; ஆயுதம் தாங்கும் உரிமை யாருக்கும் இல்லையென்று அறிவித்தான். அந்தோ! அடிமை வாழ்வின் கொடுமைதான் என்னே! எங்கிருந்தோ வந்த பரதேசி வெள்ளையரிட்ட ஆணையால், வீர மறவர் அனைவரும் மணியிழந்த நாகம் போலாயினர். இத்தனையும் போதாதென்று வீரபாண்டியன் தலைக்கும் விலை வைத்தான் பானர்மன்: நாற்றிசையும் ஆள்களை அனுப்பித் தேடினான்; இறுதியில் 'புதுக்கோட்டை மன்னன், வீர பாண்டியனைப் பக்குவமாய்ச் சிக்க வைத்துவிட்டான்,' என்ற செய்தி அறிந்தான்; மகிழ்ந்தான். 1799 ஆம் ஆண்டு, அக்டோபர் திங்கள், 1 ஆம் நாள் வீரபாண்டியன். ஊமைத்துரை கைகளில் விலங்குகள் பூட்டப்பட்டன. புதுக்கோட்டை மண்ணில் அரசனாய் நுழைந்த கட்டபொம்மன் பகைவர் சூழ்ச்சியால் கைவிலங்கோடு கைதியாய் வெளி வந்தான்.

வீரபாண்டியன் சிறைப்பட்டான். தென்பாண்டி நாட்டில் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆதிக்கம் தலை விரித்தாடியது. பாளையக்காரர்களுடைய

கோட்டை கொத்தளங்களெல்லாம் இடித்துத் தூளாக்கப்பட்டன. ஆயுதங்கள் யாவும் பறிமுதலாயின. எது நேர்ந்தாலும் ஏதும் செய்ய முடியாத பயங்கரச் சூழ்நிலையை மக்கள் மனத்தில் உண்டாக்கினான் பானர்மன். இதில் வெற்றி கண்ட அவன் கட்டபொம்மனை விசாரணைக்காகக் கயத்தாற்றுக்குக் கொண்டு போனான்; வீரபாண்டியனைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தினான். நீதியின் பெயரால் விசாரணை நாடகம் நடந்தது. முடிவு என்ன? தூக்குத் தண்டனை! ஆம். நாடாளும் மன்னனுக்கு நாடோடி அளித்த தீர்ப்பு அது. வீரபாண்டியன் தனக்கு விதித்த தண்டனையைக் கண்டு நடுங்கினானில்லை. ஆனால் பானர்மன் கண்கள் வீரபாண்டியனைக் காண அஞ்சின. முன்கூட்டியே ஆணை அனுப்பி வீர பாண்டியனைத் தூக்கிலிடும் கொடிய காட்சியைக் காண்பதற்காகவே அழைக்கப்பட்டு வரிசையாக அமர்த்தப்பட்டிருந்த பாளையக்காரர் அனைவரும் பொம்மைகள் போல அசையாதிருந்தனர். அசைவதற்குக் கூட அவர்களுக்கு உரிமை ஏது?

வீரபாண்டியன் உள்ளம் குமுறியது. அவன் கண்கள் தீப்பிழம்பாய் விளங்கின. அவன் சுற்றிச் சுற்றிப் பார்த்தான்; எங்கும் துரோகிகள் கூட்டமே இருக்கக் கண்டான். 'பேடிகளே, நீங்களும் தமிழர்களோ!' என்று அவர்களை நோக்கி அவன் இரு விழிகளும் பேசின. அவன் தன் அருமைத் தம்பியின் திருமுகங் காணத் துடிதுடித்தான்; இயலவில்லை; அந்த வாய்ப்பும் இல்லையே!' என்று உள்ளம் வெந்தான்; எனினும், தன் நெஞ்சுறுதியைக் கைவிட்டானில்லை; தன்னைக் கொல்லக் காத்திருந்த கட்டைப் புளியமரத்தின் அடியில் சென்று நின்றான். அவனை அறியாமல் அவன் உதடுகள் பேசின. 'இப்படி அந்நியனால் கைது செய்யப்பட்டுச் சாவதைவிட, என் அருமைப் பாஞ்சைக் கோட்டையை விட்டு வெளியேறாது அங்கேயே பகைவனால் வெட்டப்பட்டு வீர மரணம் அடையாது போனேனே!' என்று அவ்வீரன் கூறினான்: இச்சொற்களைக் கூறிச் சில வினாடிகள் கண்மூடிப் பேசாமல் நின்றான்: பிரார்த்தித்தான்: 'இறைவனே, இந்திய விடுதலைப் போரில் ஈடுபடும் பேற்றைத்தான் எனக்குக் கொடுத்தாய். ஆனால், அதை முடித்துவைக்க என்னால் இயலவில்லை. ஆயினும், என் வீர மரபினரேனும் அதைத் தொடர்ந்து நடத்தி, துச்சமென அடிமை வாழ்வை உதறித்தள்ளி, சுதந்தர மக்களாய் வாழ அருள் புரிவாயாக!' என்றுதான் அவன் ஊனும் உள்ளமும் உயிரும் பிரார்த்தித்திருக்கும்.

பிரார்த்தனை முடிந்தது. கட்டைப் புளியமரத்தில் வீரபாண்டியனைக் கொல்வதற்கென்றே அரவு போலச் சுருண்டிருந்த கயிற்றை அவ்வீர மகன் எடுத்தான்; தன் கழுத்தில் மாட்டிக் கொண்டான்; காலடியிலிருந்த நாற்காலியை உதைத்துத் தள்ளினான்; இந்த உலக வாழ்வையும் உதறி எறிந்தான்!

வெள்ளையரால் வீரபாண்டியனைத்தான் கொல்ல முடிந்தது; ஆனால், அவன் குறிக்கோளைக் கொல்ல முடியவில்லை. அவன் சிந்திய குருதியும், செய்த தியாகமும் மிகப்பெரிய விடுதலைப் போராய்ப் பின்னாளில் உருக் கொண்டன. அதன் விளைவாக, பிரிட்டிஷ் பேரரசு அழிந்தது; ஆனால், அவன் புகழ் அழியவில்லை; அழியவும் இயலாது.

வீரபாண்டியக் கட்டபொம்மனைத் தூக்கிலிட்டுக் கொன்றது வாயிலாக அவன் மூட்டிய தீ - பெருந்தீ - அணையாத்தீ - அணைந்துவிட்டதாகவே எண்ணினார்கள் வெள்ளை அதிகாரிகள். ஆனால்..........?

# 4. ஊமைத்துரையின் உரிமைப்போர்!

1799 ஆம் ஆண்டு, அக்டோபர் திங்கள் 16 ஆம் நாள் வீரபாண்டியன் தூக்கிலிடப்பட்டான். 'கிழக்கிந்தியக் கம்பெனிக்கு எமன் போன்றிருந்த கட்டபொம்மனைத் தூக்கிலிட்டுக் கொன்றுவிட்டோம்!' என்ற மகிழ்ச்சி வெள்ளை அதிகார வர்க்கத்திற்கு இல்லாமலில்லை. ஆயினும், அவர்கள் எச்சரிக்கையாகவே இருக்க விரும்பினார்கள். அதற்கான ஏற்பாடுகளையும் செய்தார்கள். வீரபாண்டியனைக் கொன்ற ஏழே நாள்களில் திருநெல்வேலிச் சீமையில் பாஞ்சாலங்குறிச்சி உட்பட 42 கோட்டைகளை இடித்துத் தள்ளினார்கள்; பாஞ்சாலங்குறிச்சியையும் அதற்குத் துணையாய் நின்ற பிற பாளையங்களையும் கம்பெனியின் நேரடி நிருவாகத்திற்கு இரையாக்கினார்கள்; எஞ்சியிருந்த பிற பாளையங்களையும் வெறுஞ்சமீன்களாகத் தாழ்த்தினார்கள்: எக்காரணத்தை முன்னிட்டும் எவரும் ஆயுதம் தயாரித்தாலோ, அல்லது வைத்திருந்தாலோ, மரண தண்டனை கிட்டுமெனப் பறையறைந்து அறிவித்தார்கள். இந்த அநீதிகளை எல்லாம் கண்ட தமிழ் மக்கள் மனம், எரிமலை போலக் கொதித்தது.

வீரபாண்டியன் கொல்லப்பட்டதையும், ஊமைத்துரை முதலான தம் அருமைத் தலைவர்கள் சிறையில் அடைபட்டுக் கிடப்பதையும் நினைந்து நினைந்து, உள்ளங் குமுறிய ஆயிரக்கணக்கான இளமறவர் ஓட்டநத்தம் என்னும் சிற்றூரில் நள்ளிரவு நேரங்களில் கூடிப் பலாத்காரப் புரட்சிக்கான திட்டங்களைத் திறம்பட வகுத்தார்கள்; அதன் வழிச் செயலாற்றவும் துணிந்தார்கள்.

1801 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், 2 ஆம் நாள் பாளையங்கோட்டைச் சிறைச்சாலையைச் சுற்றிலும் ஆயிரத்திற்கு மேற்பட்ட 'மர்ம மனிதர்கள்' நடமாடிய வண்ணமிருந்தார்கள். அவர்கள் அனைவரும் அந்திப் பொழுதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்.

கதிரவன் மறைந்தான். காரிருள் சூழ்ந்தது. அந்நேரத்தில் அத்தனை பேரும் ஒருங்கே திரண்டனர்; வேறு வேறு பூண்டிருந்த வேடங்களைத் துறந்து வீரராய்க் காட்சியளித்தனர். புற்கட்டு, விறகுக் கட்டு, காவடி,

கமண்டலம் ஆகிய இவற்றிற்குள் ஒளித்து வைத்திருந்த கொலை வாளும், சுருள் வாளும், குத்தீட்டியும், கைத்துப்பாக்கியும், இன்ன பிற கொலைக் கருவிகளும் இருள் கிழித்து எங்கும் மின்னின. எல்லோரும் ஒருங்கு சேர்ந்தனர்; ஒரே நேரத்தில் பாளையங்கோட்டைச் சிறை காவலர்களைத் தாக்கினர்; வழிமறித்து எதிர்த்த காவலரை சிப்பாய்களை வெட்டி வீழ்த்தினார்கள்; அவர்களிடமிருந்த ஆயுதங்களை எல்லாம் கைப்பற்றினார்கள். சிறையில் இருந்த ஊமைத்துரையும் மற்றத் தோழர்களும் சிறைக்கு வெளியே வீரர் பட்டாளம் வீரிட்டு எழுந்து தலை வாயிற்கதவுகளைப் புறத்தேயிருந்து தாக்குவது அறிந்து, உள்ளேயிருந்து மோதினார்கள். சிறைக்கதவுகள் தகர்ந்து வீழ்ந்தன. வெள்ளம் போலத் திரண்டிருந்த வீரர் படை, ஊமைத்துரையையும் அவன் தோழர்களையும் தோள்மீதும் தலைமீதும் தூக்கிக் கொண்டு, 'வீரபாண்டியர் வாழ்க! வெள்ளையர் ஆதிக்கம் வீழ்க!' என்று முழங்கிய வண்ணம் தன் அருமைப் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கிக் காற்றாய்ப் பறந்தது.

புரட்சி வீரர்கள் அவ்வாறு ஓடி வரும் வழியில் திடீரெனத் தங்கட்கு எதிர்ப்பட்ட நூறு பேர் கம்பெனிச் சிப்பாய்களைத் தாக்கி, அவர்களிடமிருந்த ஆயுதங்களை ஒன்று விடாமல் கைப்பற்றினார்கள்: பின்னர் ஓட்டமும் நடையுமாய் முப்பது மைல் தொலைவையும் கடந்து சென்று, பாஞ்சைப்பதிக்குப் பக்கத்திலுள்ளதும், பின்னாளில் கப்பலோட்டிய வீரத்தமிழர் வ.உ.சி. பிறந்த இடமுமான ஒட்டப்பிடாரத்தில் தங்கி இளைப்பாறினார்கள். அவ்வீரர்கள் உள்ளம் கொல்லன் உலை போலக் கொதித்துக் கொண்டிருந்தது. அருமைப் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை தரை மட்டமாக்கப்பட்ட அவமானத்தை அவர்கள் எண்ணினார்கள்; தங்கள் தந்தையாய்த் தாயாய்த் தெய்வமாய் விளங்கிய வீரபாண்டியன் தூக்கிலிடப்பட்டுக் கொல்லப்பட்ட கொடுமையை நினைத்தார்கள். அவர்கள் நெஞ்சம், வெடிக்க இருக்கும் எரிமலை வீரிட்டுக் குமுறுவது போன்றிருந்தது. அவர்கள் உதடுகளைக் கடித்துக் கொண்டார்கள். உயிரை விட்டேனும் கம்பெனிப் படைகளை ஊமைத்துரையின் தலைமையில் போரிட்டு நாசமாக்குவது என்று உறுதி கொண்டார்கள்.

பொழுது புலர்ந்தது. புரட்சி வீரர்கள் இரவு தாங்கள் வகுத்த திட்டங்களை எல்லாம் உருவாக்கத் தீவிரமாக முனைந்தார்கள். அதற்குள் பாளையங்கோட்டைச் சிறை தகர்ந்ததையும், புரட்சி வீரர்கள் தப்பியதையும் அறிந்த மக்காலே துரை, சங்கரநயினார் கோவிலிலிருந்த சிப்பாய்களைக் கயத்தாற்றிற்குச் சென்று அங்கிருந்து ஆர்க்காட்டு நவாபுவின் குதிரைப்படையோடு சேர்ந்து குலையநல்லூர் போகுமாறு கட்டளையிட்டான்.

1801 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் 8 ஆம் நாள் குலையநல்லூரில் முகாம் அடித்திருந்த கம்பெனித் துருப்புகளில் துப்பாக்கி தாங்கிய 900 வீரர்கள் காட்சியளித்தார்கள். வங்காளப் பீரங்கிப் படையும் இருந்தது. கூடாரமடித்த சிறிது நேரத்திற்கெல்லாம் செய்தி அறிந்த 1200 வீர மறவர்களடங்கிய கூட்டம், இருள் சூழ்ந்ததும் திடீரென்று துப்பாக்கி, ஈட்டி, கத்தி ஆகிய கொலைக் கருவிகள் கொண்டு கம்பெனி முகாமைத் தாக்கி நொறுக்கியது. எனவே, மீண்டும் தொடங்கியது போர். பாஞ்சாலங்குறிச்சியைச் - செந்தமிழ் நாட்டு உரிமையைக் காப்பதற்கான விடுதலைப் போர், ஊமைத்துரை தலைமை தாங்கி நடத்தும் உரிமைப் போராயிற்று.

கம்பெனிப்படைகளும் அதிகாரிகளும் நடுக்கம் கொண்டார்கள். மறவர் சேனையைத் திருப்பித்தாக்கும் துணிச்சல் அவர்கட்கு இல்லை. அதோடு பிப்ரவரித் திங்கள் 9 ஆம் நாள் கம்பெனிப் பட்டாளத்திற்கு இருந்த மனநிலையை அப்பட்டாளத்தின் தளபதியாய் இருந்த வெள்ளை மேஜர் ஒருவன் கூறுவதைப் பாருங்கள்: ''இங்கே எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. முதலாவதாக ஆறே நாள்களில் மந்திரத்தாலேற்பட்டது போன்ற ஒரு கோட்டையால் எதிர்க்கப்பட்டோம். இரண்டாவதாக, அதன் காவலாளர்கள் தொகை, எண்ணிலடங்காத வண்ணம் பெருகி இருந்ததுடன், எங்களைத் தாக்கவும் தயாராய் இருந்தது. ஆகவே, எங்களுக்கு அங்கு இருக்க வேண்டிய வேலையே இல்லை என்று ஒரு மனதாகத் தீர்மானித்தோம்.''

இதிலிருந்து பாஞ்சை வீரர்களைக் கண்டு பலம் பொருந்திய பீரங்கிப்படை - கம்பெனிப் பட்டாளம் எவ்வளவு நடுங்கியது என்பது புலனாகும். ஆம், நீறுபூத்த நெருப்பாயிருந்த தமிழ் மக்கள் நெஞ்சம் - வேதனையால் குமுறிக் கொண்டிருந்த வீரர்கள் நெஞ்சம் எரிமலை போல வெடித்தது. அந்த எரிமலை கக்கும் கனலை வாரி வீசும் தீக்குழம்பைக் கண்டு கதி கலங்கிய கம்பெனிப் படை இரவோடு இரவாகப் புறங்காட்டி ஓடியது. ஓடும் வழியிலும் அதற்கு அனுமதி உண்டா? அதுதான் இல்லை. கம்பெனிப் பட்டாளம் பாளையங்கோட்டைக்கு மூன்றிலொரு பாகத் தூரத்தில் சென்று கொண்டிருந்த நேரத்தில் - நள்ளிரவில் - ஊமைத்துரை படை காலனும் கண்டு அஞ்சும் வண்ணம் ஆரவாரித்துக் கொண்டு சென்று அவர்களைத் தாக்கியது. 'செத்தோம்! பிழைத்தோம்!' என்று கம்பெனிப் பட்டாளம் பாளையங்கோட்டைக்குப் போய்ச் சேர்ந்தது. இந்த நிகழ்ச்சிக்குப்பின் வீர மறவர்கட்கும் வெள்ளைச் சிப்பாய்கட்கும் நடந்த போரில் பல இடங்களில் கம்பெனிப்படை முறியடிக்கப்பட்டது. அதோடு ஊமைத்துரை தென்பாண்டி நாடெங்கும் வெற்றிக்கொடி உயர்த்தினான். பதினைந்து நாள்களில் கணக்கற்ற பாளையங்களில் விடுதலை எழுச்சியும் வீரத் தீயும் கொழுந்து

விட்டு எரிந்தன. தூத்துக்குடி நகரம் புரட்சிப் படையின் கையில் சிக்கியது. அங்கிருந்த கம்பெனிச் சிப்பாய்கள் அனைவரும் கைதாயினர்; ஆயுதங்களும் பறிமுதலாயின. சுருங்கச் சொன்னால், திருவை குண்டம் கோவில் தவிர, தென்பாண்டி நாட்டில் எல்லா இடங்களும் விடுதலை வீரர்கள் வயமாயின எனலாம். ஆயிரக்கணக்கான துப்பாக்கிகளும் அளவு கடந்த வெடி மருந்தும் மறவர் படையின் உடைமைகள் ஆயின.

இந்நிலையில் புதிதாக எழுப்பப்பட்ட பாஞ்சைக் கோட்டையைத் தாக்குவதற்கான ஏற்பாடுகளைக் கம்பெனிப் படைகள் செய்தன. பாளையங்கோட்டைக்குப் புறங்காட்டி ஓடிய கம்பெனிப் பட்டாளம், மீண்டும் விடுதலை வீரர்களது கோட்டையை அணுகும் வழியில் பட்ட துன்பம் சொல்லி முடியாது. அங்குலம் அங்குலமாக அவர்கள் மறவர் சேனையை எதிர்த்து முன்னேறிக் கொண்டிருந்தார்கள். பாய்ந்து வரும் கம்பெனிப் பட்டாளத்தின் குதிரைகளை வீர மறவர்கள் தங்கள் ஈட்டிகளாலேயே குத்திக் கொன்றார்கள்; இரவில் காடுகளின் இரு புறங்களிலும் உள்ள புதர்களில் பதுங்கியிருந்து கம்பெனிச் சிப்பாய்களை வெட்டிக் குவித்தார்கள். தமிழ் மறவரது வீர வாளுக்கு அந்நாளில் கிடைத்த இரை ஏராளம்! ஆறே நாள்களில் புதிதாகக் கட்டப்பட்ட பாஞ்சைக் கோட்டை, முன் நிலையினும் உறுதி மிக்கதாய் விளங்கிற்று. பல்லாயிர வீரர்கள், கிழவர்கள், குழந்தைகள், ஆண்கள், பெண்கள் அனைவரும் சேர்ந்து செந்தமிழ் நாட்டின் உரிமையையே காக்கக் கட்டிய கோட்டையல்லவா அது? இரு பக்கங்கள் 500 அடி நீளமும் மற்ற இரு பக்கங்கள் 300 அடி நீளமும் கொண்டதாய்ப் பாஞ்சைக் கோட்டை ஓர் ஒழுங்கற்ற இணைக்கரம் போன்றிருந்தது. பனஞ்சாற்றில் மண்ணைப் பிசைந்து கட்டப்பட்ட வன்மை வாய்ந்த இக்கோட்டையின் சுவர்கள் 12 அடி உயரமுடையனவாய் இருந்தன. முள் வேலிகளால் சூழப்பட்டிருந்த இக்கோட்டையின் கொத்தளங்கள் சதுர வடிவினவாய் விளங்கின. ஏராளமான பீரங்கிகள் வைக்க ஏற்ற வசதிகளும் இருந்தன.

வலிமை சான்ற இக்கோட்டையைப் பிடிப்பதற்கான இறுதிப் போரைக் கம்பெனிப்படையினர் 1801 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31 ஆம் நாள் தொடங்கினர். கோட்டைக்கு மேற்கே 600 கெசத் தொலைவில் பெரியதொரு மேட்டை எழுப்பினர். அதன் நீளம் 40 அடி; அகலம் 15 அடி; உயரம் 16 அடி. அதன்மேல் பீரங்கிகளை நிறுத்திக் கோட்டைச் சுவர் மீது குண்டுகளைப் பொழிந்தனர். ஓரிடத்தில் சிறிது கீறல் தென்பட்டதும் பறங்கியர் படை அதை நோக்கிப் பாய்ந்தது; கோட்டை மீதேறிக் குதிக்கலாம் என வெறி கொண்டு தாவியது. ஆனால், அந்தோ! அவ்வீரர்களுள் ஒவ்வொருவரும் வீர மறவர் வேல்களால் குத்தப்பட்டும், வாள்களால் வெட்டப்பட்டும், இருபது அடி நீளமுள்ள ஈட்டிகளால் எறியப்பட்டும் இறந்தொழிந்தனர். இம்முயற்சியில்

கம்பெனியைச் சார்ந்த 4 அதிகாரிகளும், 44 சிப்பாய்களும் கொல்லப்பட்டார்கள்; 13 அதிகாரிகளும் 254 சிப்பாய்களும் படுகாயமுற்றார்கள். ஆங்கிலேயரது தோல்வியும் பாளையக்காரரின் பாதுகாப்புத் திறனும் விளக்க முடியாத பெரிய அற்புதமாகவே தோன்றின: பாஞ்சைக் கோட்டையின் உச்சியில்.ஓர் ஆளும் தென்படவில்லை. ஆனால், ஈட்டிகளின் காடாய் அந்த இடம் விளங்கியது! கோட்டையைத் தாக்க வந்த 120 ஐரோப்பியருள் 46 பேரே காயமின்றித் தப்பினர். கம்பெனிக்குத் துணையாக 1000 எட்டையபுரப் பாளையக்கார வீரர்களடங்கிய படையும் சேர்ந்து கொண்டு கோட்டையைப் பிளக்க முயன்றது. அதன் பலனாகக் கூலிப்படையின் வீரர்களுள் நூற்றுக்கணக்கானவர் தலைகள் தரைமீது உருண்டன. இவ்வாறு போரின் முதற்கட்டம் கம்பெனிப் படைக்குப் படுதோல்வியாய் முடிந்தது. கம்பெனி அதிகாரிகள் வெள்ளைக் கொடி வீசி ஒரு நாள் முழுதும் உயிர்ப்பிச்சை கொடுக்கும் படி ஊமைத்துரையின் சேனை வீரர்களிடம் கெஞ்சினார்கள். அடுபோரிலும் அறம் பிறழாத் தமிழ்ப் பண்பினன் அன்றோ ஊமைத்துரை! ஒரு நாள் முழுதும் அவர்கட்கு அவன் ஓய்வு தந்தான்; ஒரு சிறு குழப்பமும் விளைவிக்கவில்லை. வீர மறவரிடம் விளங்கிய இந்தப் பெருந்தகைமையை வெள்ளை அதிகாரிகளே புகழ்ந்துள்ளார்கள்.

இந்நிகழ்ச்சி நடைபெற்ற ஒரு மாதம் இருபது நாள்களுக்குப் பின்னே கம்பெனிப்படை, கர்னல் அக்நியூ என்பவன் தலைமையில் பாஞ்சைக் கோட்டையைத் தாக்கத் துணிவு கொண்டது.

பாஞ்சைப் பகுதியைப் பிடிப்பதற்கான இறுதிப் போரின் இறுதிக்கட்டம் கர்னல் அக்நியூ தலைமையில் 1801 ஆம் ஆண்டு, மே மாதம் 21 ஆம் நாளில் தொடங்கப்பட்டது. புதியனவாகக் கொண்டுவரப்பட்ட பெரிய பெரிய பீரங்கிகளின் துணையால் கோட்டை கடுமையாகத் தாக்கப்பட்டது. கோட்டையை எதிரிகள் தகர்ப்பதைத் தடுக்கும் பொருட்டுப் பாஞ்சை மறவர்கள் கம்பெனிப்படையை நோக்கித் திருப்பிச் சுட்டவண்ணம் இருந்தார்கள். இரு புறமும் சுடப்பட்ட பீரங்கிகளின் அலறல் எண்டிசையையும் அதிர வைத்தது. எங்கும் புகை மண்டலம் ஆயிற்று. கடைசியாக மே மாதம் 24 ஆம் தேதி வீரர்கள் நிறுவிய வெற்பனைய கோட்டை பிளவு கண்டு விழும்படி செய்வதில் கம்பெனிப் படைகள் வெற்றி கண்டன. கம்பெனிப் படைக்கு வெற்றிப் போதை தலைக்கேறியது. அப்போதைய வெறியில் அவர்கள் விரைந்து சென்று பாளையக்காரர்களைத் தாக்கினார்கள். கடும் போர் மூண்டது. கோட்டை இடிந்தாலும் கொள்கை இடியவில்லை வீர மறவர் படைகட்கு.

நாற்புறமும் சுற்றி நின்று வெடிகுண்டுகளை வீசிக்கொன்ற கம்பெனிப் பட்டாளத்தைப் பாஞ்சை மறவர் எதிர்த்துத் தாக்கி, எமனும் அஞ்சப்

போராடினர்: பெரிய பெரிய மரங்களை எல்லாம் வெட்டிச் சாய்த்தனர்: ஆழமான அகழிகளை எல்லாம் தமது பாதுகாப்பிற்காக வெட்டினர்; முன்னேறும் கம்பெனிப் படைகளை முறியடிக்கப் பாடு பட்டனர். அம்முயற்சியில், விடுதலை வீரர்கட்கும் பேரரசு வெறியர்கட்கும் இடையே நடந்த போரில் ஒவ்வொரு தமிழ் வீரனும் காட்டிய தீரமும் தியாக உணர்ச்சியும் ஒவ்வொரு தனி நூலாக எழுதத்தக்கன. ஆம். அப்போது நடந்த அப்போர் யாரோ சிலருக்கு இடையே நடந்த அரசுரிமைப் போர் அன்று; பேரரசுப் பேயர்கட்கும் பெற்ற தாய் நாட்டின் விடுதலையைக் காக்கத் துணிந்த வீரமக்கட்கும் இடையே நடந்த உரிமைப்போர் அறப்போர்.

புரட்சி வீரர்கள் தாங்கள் வெட்டிய குழிகட்கு உள்ளிருந்து, விரைந்து வரும் கம்பெனிப் படைகளைச் சுட்டும், பொசுக்கியும், கொன்றும், சிதைத்தும் நாசமாக்கினார்கள். பாஞ்சைக் கோட்டை, பேரரசு வெறியர்கட்கு ஏற்ற கொலைக்களம் - கல்லறை - ஆயிற்று. ஆயினும், புரட்சி வீரர்கட்குப் போதிய ஆயுதம் இல்லை. ஆனால், கம்பெனிப்படையிடமோ, கணக்கற்ற பீரங்கிகளும், கொலைக் கருவிகளும், எட்டையபுரத்தானைப் போன்றோர் தந்துதவிய ஏராளமான கூலிப்படைகளும் இருந்ததனால் நிலைமை இவ்வளவு மோசமாய் இருந்தும், வீர மறவர்பால் கொழுந்து விட்டு எரிந்த சினத்தீயை, அவர்கள் காட்டிய வீர உணர்ச்சியை வரலாற்றிலேயே வேறெங்கும் காண இயலாது. அவ்வாறிருந்தும், இறுதியில் விலங்கு பலத்திற்கே அப்போதைய வெற்றி கிடைத்தது. எதற்கும் கலங்காத மறவர்கள் தங்கள் உயிரனைய புரட்சித் தோழர்கள் சில நாள்களில் பிணமான கொடுங்காட்சி கண்டு கலங்கினார்கள். கடந்த மூன்று மாதங்களில் பாஞ்சைக் கோட்டையின் மண்ணுக்குக் கீழே பாதாளத்தில் நிலவறையிலே மிகக் கொடிய குண்டு மாரி பொழியும் நேரத்திலும் விடுதலை வேட்கையால் தமிழகத்தின் விடுதலைக்காகப் போரிடும் வீர மறவர்கட்குத் துணையாய் வாழ்ந்து வந்த மாதர் நல்லாரும், அவர்தம் மழலைச் செல்வங்களும் நச்சுக் குண்டுகளின் வெம்மை தாங்காமல் புழுவாய்த் துடித்தனர். சேர்த்து வைத்திருந்த உணவெல்லாம் தீர்ந்து தொலைந்தன. பசியாலும் நோயாலும் குடும்பம் குடும்பமாக மண் மகளின் மடிக்குள் மறைந்திருந்த தாய்மாரும், தள்ளாத கிழவரும், தவழும் குழந்தைகளும் தவித்தார்கள். 'ஐயோ! ஐயோ!' என்னும் ஒலி வினாடிக்கு வினாடி அதிகமாயிற்று.

நிலைமை சமாளிக்க முடியாமற்போனதை அறிந்தான் ஊமைத்துரை. அவன்முன் இருந்த வழிகள் இரண்டே. ஒன்று, மாற்றானுக்கு அடி பணிவது; மற்றொன்று மானத்தைக் காக்க வெளியேறுவது. ஊமைத்துரை ஆழ்ந்து சிந்தித்தான்; 'மானத்தை விடுவதினும் சாவிற்குத் துணிந்து வெளியேறுவதே நலம். தமிழகத்தின் பிற பகுதிகட்குச் செல்வோம். நம்மை ஒத்த விடுதலை வீரர்களைத் திரட்டுவோம். வெறி கொண்ட வெள்ளையர் கும்பலை

வேரறுப்போம்!' என்று உறுதி கொண்டான். இதற்குள், தென்பாண்டிச் சீமையிலே இரு பெருஞ்சிங்கங்கள் கம்பெனி வெறியர்களைக் கருவறுக்கக் கங்கணம் கட்டியுள்ளன என்ற செய்தி வீரன் ஊமைத்துரைக்கு எட்டியது. அவன் மேனி சிலிர்த்தது; தோள்கள் விம்மின; மார்பு விரிந்தது. ''விடுதலை வீரர்களே, புறங்காட்டாது போரிட்டுக் கொண்டே கோட்டையை விட்டு வெளியேறுங்கள். படுகாயம் உற்றோர், பெண்டிர், முதியோர், குழந்தைகள் அனைவரையும் கோட்டைக்கு வெளியே பாதுகாப்பான இடத்திற்கு கொண்டு செல்லுங்கள்'', என அவன் வீரத்திருவாய் புரட்சி வீரர்கட்குக் கட்டளையிட்டது.

ஊமைத்துரையின் இக்கட்டளையைக் கேட்ட பாஞ்சை வீரர்கள், அணி அணியாக வெளியேறினார்கள்; வாள் வீரர் சுற்றிலும் நடக்க, இடையே பெண்களையும் குழந்தைகளையும் பாதுகாத்துச் சென்றார்கள். ஆனால், இந்த நேரத்தில் வீர மறவர்கட்கும் வெள்ளை வெறியர்கட்கும் இடையே நடந்த போரை நினைத்தாலும் நெஞ்சம் நடுங்குகிறது! கம்பெனிப்படை வீரர்கள் வெறிகொண்டு வீர மறவர்களை வெட்டிக் குவித்தார்கள். குழந்தை என்றும் பெண் என்றும் பாராமல், கணக்கற்ற உயிர்களைக் கொன்று குவித்தார்கள் அக்கொலைகாரர்கள். அறுநூற்றவருக்கு மேற்பட்ட விடுதலை வீரர் பலியாயினர். அவர்களுள் பலர் பெண்டிர். பாஞ்சைக் கோட்டையைச் சுற்றிலும் பிணக்காடு, குருதி வெள்ளம், சாவொலி. ஆம்! பின்னாளில் நடந்த பாஞ்சாலப் படுகொலையினும் பல்லாயிரம் மடங்கு கொடுமையான படுகொலையைப் பாஞ்சைக் கோட்டை நிழலிலே நடத்தினார்கள் நாடோடி வெறியர்கள். இத்தனைக்கும் தப்பி இரண்டாயிரவருக்கு மேற்பட்ட வீரர் வெளியேறினர். அவர்களுள் ஊமைத்துரையும் ஒருவன்.

கோட்டையிலிருந்து வெளியேறி வடக்கு நோக்கிச் சென்றனர் புரட்சி வீரர். அவர்களைக் கர்னல் அக்நியூ தன் படை வீரருடன் விரட்டிச் சென்றான். சிறிது தூரம் சென்றதும், மறவர் படை சிங்கம் போலச் சினங்கொண்டு திரும்பியது. கர்னல் அக்நியூவின் படைக்கும் ஊமைத்துரை படைக்கும் இடையே கடும்போர் மூண்டது. வெள்ளை வெறியர்களை வேண்டுமட்டும் வெட்டிச் சாய்த்தான் வீரன் ஊமைத்துரை. அவன் நிகழ்த்திய போர் மனித சக்திக்கும் மீறியதாகவே விளங்கியது. இறுதியில் அவன் உடல் எல்லாம் வெட்டுண்டு, தரையில் உணர்ச்சியற்றுச் சாய்ந்தான்.

அந்நிலையில் பிணக்குவியலின் நடுவில் தன் வீரமகனைத் தேடி வந்தாள் ஒரு மறக்குல மங்கை! இறுதியாகத் தன் வீர வயிறு ஈன்ற தீரனையும் கண்டாள்; உயிர் போகும் நிலையில் உள்ள அவனை மார்புறத் தழுவினாள். ஆவி பிரியும் நிலையில் இருந்த அவ்வீர மைந்தன், ''தாயே, நான் போகிறேன்; அதோ! என் சாமி! அவரைக் காப்பாற்று. போ! போ!'' என்று கூறித் தலை சாய்த்தான். மைந்தன் இட்ட கட்டளையை மனத்தில் வைத்து,

அழுத கண்ணீரோடு ஐயனை - ஊமைத்துரையை - இரு கைகளால் அணைத்து எடுத்துச் சென்று, தன் இல்லத்தில் வைத்துக் காப்பாற்றினாள் அத்தமிழ்த்தாய். அவள் திருவடிகளை வணங்குவோமாக!

சாவின் வாயிலிருந்து தன்னை காத்த தொண்டு கிழவியின் அன்பாலும் அறிவாலும் எல்லா விபத்துகளிலிருந்தும் தப்பி, உடலும் உள்ளமும் தேறிய ஊமைத்துரை, அவ்வீரத்தாயின் திருவடிகளைத் தொட்டு வணங்கி, விடை பெற்றுக் கொண்டு, வாளும் கையுமாய்ப் புறப்பட்டான். அவன் கால்கள் மிக விரைவாய் நடந்தன; கை உடை வாளைப் பற்றிய வண்ணம் இருந்தது; அவன் இரு கண்களும் யாரோ இருவரை அக்கணமே காண விழைவன போலத் துடித்துக் கொண்டிருந்தன. யார் அவர்கள்?

# 5. பெரிய மருதுவும் சின்ன மருதுவும்

சுமார் இரு நூறு ஆண்டுகட்கு முன் பாஞ்சைப் பதியைப் போலவே வீரத்திலும் தியாகத்திலும் இணையற்று விளங்கிய பெருமை சிவகங்கைச் சீமைக்கு உண்டு. கி.பி.17 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இதை ஆண்டு வந்த கிழவன் சேதுபதியின் காலத்தில் புதுக்கோட்டை, இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய ஜமீன்களைக் கொண்ட மறவர் நாடு சீரும் சிறப்பும் அடைந்து திகழ்ந்தது. 36 ஆண்டுகள் மறவர் நாட்டை ஆண்ட பின் கிழவன் சேதுபதி 1710 ஆம் ஆண்டில் இறந்து போனான். அதற்குப் பின் மறவர் சீமையில் அரசுரிமை குறித்துப் பெருத்த உள்நாட்டுப் போர் கிளம்பியது. 'எரிகிற வீட்டில் பிடுங்கியது ஆதாயம்,' என்று கருதிய புதுக்கோட்டை அரசர், தஞ்சை மராத்திய மன்னர், மதுரை நாயக்க மன்னர் ஆகியவர்களும் இந்தப் போரில் கலந்து கொண்டு, தத்தமக்கு வேண்டிய கட்சியை ஆதரித்தனர். கட்சியில் அவர்கள் கைக் கொண்ட பகுதிகள் போக, மீதியிருந்த மறவர் நாடு ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மூன்று பங்கு கட்டையத் தேவன் என்பானுக்கும் மீதி இரண்டு பங்கு சசிவர்ணத் தேவனுக்கும் வழங்கப்பட்டன. சுமார் 1730 ஆம் ஆண்டு நடைபெற்ற இந்நிகழ்ச்சியின் பயனாகச் சசிவர்ணன் பெற்றதே சிவகங்கை இராச்சியம். இந்தச் சசிவர்ண தேவன் சிவகங்கைச் சீமையைச் சுமார் 25 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். இவனுக்குப் பின் இவன் மகனான முத்துப் பெரிய வடுகநாத உடையணத்தேவன் பட்டம் எய்தினான்.

முத்து வடுகநாதன் அரசியலை ஏற்றுக் கொள்வதற்கு முன்பே தென்னாட்டில் அரசியலில் இருள் கவிய ஆரம்பித்துவிட்டது. தமிழகத்தின் அரசியல் பல்வகையாலும் பாழ்படல் ஆயிற்று. ஆர்க்காட்டு நவாபுவும், ஐதர் அலியும், ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும், டச்சுக்காரரும் தத்தம் ஆற்றலின் நிலை கண்டுணரத் தமிழகத்தைப் பயன்படுத்தலாயினர். தமிழ் நாடு கொலைக்கும், கொள்ளைக்கும், சூதுக்கும், சூழ்ச்சிக்கும் இரையாயிற்று. ஆர்க்காட்டு நவாபு ஆங்கிலக் கம்பெனியின் படைப்பலம் கொண்டு பிடித்த தென்பாண்டிச் சீமைகளில் 'தடி எடுத்தவனை எல்லாம் தண்டற்காரன்' ஆக்கித் தர்பார் நடத்தினான்; தமிழகத்தில் சுதந்தரமாக ஆட்சி புரிந்து வந்த

சிற்றரசர்களுடைய நாடுகளை எல்லாம் வெள்ளை வெறியர்களது துணை கொண்டு தாக்கினான். இக்கொடுமைகளைக் கண்ட வீர மறவர் நெஞ்சம் கொதித்தது. அவர்கள் நவாபுவையும் அவனைக் கைப்பாவையாக்கிக் கொள்ளையடிக்கத் துடித்த கம்பெனிக் கூட்டத்தையும் முறியடிக்கத் திட்டமிட்டார்கள். இதை அறிந்த ஆர்க்காட்டு நவாபு ஆங்கிலக் கம்பெனியிடம் அடைக்கலம் புகுந்தான். அதன் பயனாக, 1772 ஆம் ஆண்டில் ஜெனரல் ஸ்மித்து என்பவன் மறவர் நாட்டின் மீது படையெடுத்தான்; இராமநாதபுரத்தைத் தாக்கினான். அப்போது அச்சீமையை ஆண்டுவந்த ஒன்பது வயது சிறுவனான சேதுபதியையும் அவன் சார்பாளாய் நாட்டை ஆண்டு வந்த தாயையும் அவன் சகோதரியையும் சிறைப்படுத்தித் திருச்சிக்கு அனுப்பிக் காவலில் வைத்தான். இவ்வாறு இராமநாதபுரத்தில் வெற்றிக் கொடி உயர்த்திய வெள்ளைப் படையால் சிவகங்கையைத் தொடக் கூட இயலவில்லை. அங்கே அரசனாய் இருந்த முத்துவடுகநாதன் வயதானவனாயினும், சிவகங்கைச் சீமை என்றால் கம்பெனிப் பட்டாளத்திற்குச் சிம்ம சொப்பனமாய் இருந்தது. காரணம் விடுதலை வெறி கொண்ட வீர மறவர்கள் நிறைந்த சிவகங்கைச் சீமையின் இரு கண்களாகவும் இரு கைகளாகவும் விளங்கினார்கள் இரு சகோதரர்கள். அந்த இரும்பு மனிதர்கள் பெயரைக் கேட்டதும் பறங்கிப் படை நடுங்கியது; ஆர்க்காட்டு நவாபுவின் தலை ஆட்டம் கண்டது. யார் அவர்கள்? அவர்களே பெரிய மருது, சின்ன மருது என்ற இரு உடன் பிறப்பாளர்கள்; நம் நூலின் மாண்பு மிக்க தலைவர்கள்.

கட்டபொம்மு சகோதரர்களைப் போலவே பாரத நாட்டையும் அருமைத் தமிழகத்தையும் பரதேசியரான வெள்ளையரிடமிருந்து காப்பாற்ற, உயிரையும் துச்சமாய் மதித்து விடுதலைப் போர் நடத்திய மருது சகோதரர்களுள் மூத்தவன் பெயர் வெள்ளை மருது; இளையவன் பெயர் சின்ன மருது.

வெள்ளை மருது மாவீரன்; வீரர்களை எல்லாம் தலை வணங்கச் செய்த பெருவீரன். அவனைச் சந்தித்த ஐரோப்பியர் அனைவரும், 'குஷ்வமிசத்தின் வழி வந்தவன், மாபெரும் வேட்டை நிபுணன், பாபிலோனியப் பேரரசின் தந்தை எனப் போற்றப்படும் 'நிம்ராடு' போன்ற பெருவீரன் இவனே தமிழகத்திற்கு!' என்று எண்ணி, வியந்து, மதிப்புக் காட்டினர். அத்தகைய வீரத்தலைவனாய் விளங்கிய வெள்ளை மருதுவுக்கு வேட்டை என்றால் பெரு விருப்பம். அவ்வீரப் பெருமகன் அடர்ந்த காடுகளில் நுழைந்து, கொடிய விலங்குகளை வேட்டையாடும் வீர விளையாட்டிலே தன் காலத்தையெல்லாம் கழித்தான். அவன் வாழ்க்கையே ஒரு வீர விளையாட்டுதான்! கணையமரம் போன்ற கைகளையும், ஓங்கி உயர்ந்த கற்சிலை போன்ற தோற்றத்தையும், முறுக்கி விட்ட இரும்புக் கம்பிகள்

போன்ற தசை நார்களையும், பருத்த முண்டாக்களையும், மலை போல உயர்ந்த தோள்களையும், கூர்வாள் போலத் திருகி விட்ட மீசையையும், பரந்து விரிந்த மார்பையும், சிங்கம் போன்ற பார்வையையும் படைத்திருந்த வெள்ளை மருதைப் பார்த்தாலே ஒரு வகையான அச்சம் கலந்த வியப்புணர்ச்சி எவர் மனத்திலும் ஊடுருவிப்பாயும். அக்காலத்தில் புழக்கத்தில் இருந்த உறுதியான ஆர்க்காட்டு ரூபாயை ஒரு நொடியில் வளைத்துக் காட்டக் கூடிய ஆற்றல் அவன் கைவிரல்கட்கே இருந்தது என்றால், அவன் உடல் ஆற்றலை யாரால் அளவிட்டுரைக்க இயலும்? எவ்விதமான நாடாளும் பொறுப்பும் கவலையும் இன்றிக் காலும் மனமும் கண்ணும் விரும்பிய இடமெல்லாம் ஓயாது திரிந்து, தன் வீர விளையாடல்களைத் தொடர்ந்து நடத்தி வந்த அவனைக் 'காட்டு ராசா' என்று கூறுவதே எவ்வகையிலும் பொருத்தம்.

எப்போதாவது வெள்ளை மருது தன்பால் மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிற ஐரோப்பிய நண்பர்களைச் சந்திக்கத் தஞ்சைக்கும் திருச்சிக்கும் வருவது வழக்கம். வெள்ளை மருதுவின் நண்பர்களில் யாருக்கேனும் பெரிய வேட்டை ஒன்றுக்குப் போகத் தோன்றினால், இவனுக்கு ஒரு செய்தி அனுப்பிவிடுவது போதும்! ஆஜானுபாகுவான தோற்றமுடைய மருதுவை அங்கே காணலாம். அவ்வாறே எவ்வித வீர விளையாட்டிலும் யார் கலந்து கொள்ள நினைத்தாலும் சரி, அவர்களை முன்னின்று அழைத்துச் சென்று, வெற்றியும் புகழும் தேடிக் கொடுத்து, அவர்கள் உடம்புக்கும் உயிருக்கும் தீங்கில்லாமல் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பு நம் பெரிய மருதுவையே சார்ந்தது. வேட்டைக்குச் செல்லும் போது பேழ்வாய்ப் புலி ஒன்று எதிர்ப்பட்டால் பெரிய மருது அடையக் கூடிய மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. தன் நண்பனாய் இருந்த ஐரோப்பிய துரை, வில்லும் வேலும் வாளும் ஏந்திய பலம் நிறைந்த வீரர் படை சூழ, உடலும் உள்ளமும் நடுங்கி நிற்கும் நேரத்தில் பெரிய மருது பாய்ந்து சென்று சீறி வரும் புலியின் வாலை இரு கைகளாலும் பிடித்து, இருபதடித்தூரம் பரபர என்று இழுத்துச் சென்று, இரு பின்னங்கால்களையும் இறுகப்பற்றிக் கவண் போலச் சுழற்றி, ஓங்கித் தரைமீது அடிப்பான். ஆத்திரத்தோடு அவனைக் கடித்தெறிய அப்புலி தன் பேழ்வாயைத் திறக்கும். அப்போது பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டே தன் கால் தினவு தீர, புலி சாவ, அதைத் தன் காலின் கீழே போட்டுத் துவைப்பான், பின்பு அதன் வாயை இரு பிளவாகக் கிழித்துப் பற்களை ஆட்டிப் பிடுங்கி, அவற்றைக் கொண்டு வந்து நண்பர்கட்கு எல்லாம் காட்டி, நாற்றிசையும் அதிர வெற்றி நகை புரிவான். இத்தகைய வீர வாழ்க்கை வாழ்ந்த காட்டு ராசாவைப் பற்றி நமக்கு எழக் கூடிய ஓர் ஐயத்தைப் போக்கும் வகையில் பெரிய மருதுவை நன்றாக அறிந்தவனும், பின்னாளில் நண்பர்கள் என்ற நன்றி உணர்ச்சியும் அற்று

ஏகாதிபத்திய வெறி கொண்டு மருது சகோதரர்களைக் கொல்லக் காரணமாயிருந்தவனுமாகிய வெள்ளை மேஜர் வெல்ஷ் தன் புத்தகத்தில் எழுதிவைத்துவிட்டுப் போயிருப்பதைக் கீழே காணலாம்.

'பெரிய மருதுவின் இத்தகைய வாழ்க்கை பாதுகாப்பு நிறைந்த நகர வாழ்க்கை வாழ்கிறவர்க்குப் பொருளற்றதாகவும் சோம்பேறித்தனம் நிறைந்ததாகவும் தோன்றும்; ஆனால், உண்மையில் அடர்ந்த காடுகள் செறிந்ததும், மக்களைக் கொன்று குவிக்கும் கொடிய விலங்குகள் நிறைந்ததுமான ஒரு நிலப்பகுதியில் பெரிய மருதுவின் இத்தகைய வீர வாழ்க்கை பெரும்பயன் நிறைந்து விளங்கியது.'

இவ்வாறு பெரிய மருதுவின் வீரஞ்செறிந்த வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டும் வெள்ளைக் கர்னல், தன் உள்ளத்தை ஒளிக்க முடியாமல், அவ்வீரனது பண்பார்ந்த உயரிய உள்ளம் பற்றிக் கூறும் உண்மையைப் பின் வரும் வரிகளால் அறியலாம்:

'பெரிய மருது என்னும் இக்கீழ்த்திசை நிம்ராடுவிடமிருந்து நான் 1795 ஆம் ஆண்டில் மதுரையில் மிக இளைய சுபேதார்களுள் ஒருவனாய் இருந்த போதே அன்பிற்கும் கவனிப்பிற்கும் சான்றாக எத்தனையோ அடையாளங்களைப் பெற்றிருக்கிறேன். ஆம். அது அவனது பெருந்தன்மையை நிறுவ நல்லதொரு சான்றாகும்.

இவ்வாறு தன் பகைவனாலும் போற்றப்படும் வீரமும் விழுமிய பண்பும் படைத்து வாழ்ந்த பெரிய மருது, இயற்கையாகவே இரக்கமும் கருணையும் நிறைந்தவனாய் விளங்கினான். அந்நாளில் தன் சீமையில் ராஜபாட்டைகளையும், கொடி வழிகளையும், நாடு நகரங்களையும் பயமுறுத்திக் கொள்ளை அடித்து வந்த கள்ளர் கூட்டத்திற்கு அவன் எமனாய் விளங்கினான்; அதே நேரத்தில் ஏழை குடிமக்களின் இன்னுயிர்த் தோழனாகவும் திகழ்ந்தான். மறவர் சீமை முழுவதிலும் தமிழ் மக்கள் உள்ளத்திலும் கோயில் கொண்ட நிகரற்ற வீரனாகவும் தலைவனாகவும் பெரிய மருது காட்சியளித்தான்.

'மூத்தது மோழை; இளையது காளை,' என்பது பழந்தமிழ்ப் பழமொழி. ஆனால், மூத்தது காளையானால், இளையதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? சின்ன மருது கார் வண்ணன்; ஆனாலும், கட்டழகன்; அண்ணனைப் போல அவ்வளவு பெரிய உருவமுடையவன் அல்லன். ஆயினும், எவர்க்கும் இளைக்காத தோற்றப் பொலிவு படைத்தவன். கம்பீரமான தோற்றம், சிரித்த முகம், எளிய கோலம், எவருடனும் கர்வம் இன்றிப் பழகும் கள்ளமற்ற சுபாவம் - இத்தகைய சிறப்புகள் யாவும் அமைந்தவன் சின்ன மருது.

அண்ணனைக் காட்டிலும் உலகியல் அறிவிலும் ராசதந்திரத்திலும் வல்லவனாய் விளங்கினான் சின்ன மருது. காட்சிக்கு எளியனாய்,

கடுஞ்சொல் அற்றவனாய் இருந்த அவன் நா அசைந்தால் நாடு அசையும் அவன் இட்டது சட்டம் மறவர் சீமையில். அவ்வாறு செல்வாக்கின் உச்சியில் இருந்த போதிலும், அவன் வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றியும், அவனிடமிருந்த நற்பண்புகளைப் பற்றியும் பின்னாளில் தன் கையாலேயேதன் 'நண்பன்' என்றும் பாராமல் சின்ன மருதுவை - செந்தமிழ் நாட்டு விடுதலை வீரனை - தொடையிலே சுட்டுப் புண்ணாக்கிய ஏகாதிபத்தியத்தின் சரியான பேராளான வெள்ளை மேஜர் ஒருவன் ஏட்டில் எழுதி வைத்துள்ளதைப் பாருங்கள்:

'சின்னமருது கம்பீரமும் கட்டழகும் வணக்கமும் நிறைந்த வியத்தகு மனிதன்; நல்ல நடத்தையும் எளிதில் எவர்க்கும் காட்சி தரக் கூடிய இயல்பும் படைத்தவன். தன் தலையின் அசைப்பே நாட்டின் சட்டமெனக் கருதும் மக்களின் தலைவனாய் அவன் விளங்கிய போதிலும், தனி ஒரு காவலாளியும் பாதுகாப்புக்கு இல்லாமல் திறந்த வெளியில் வாழ்ந்து வந்தான். 1795 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், நான் அவனைக் காணச் சென்ற போது அவன் இல்லத்தின் உள்ளே நுழைய விரும்பிய எவர்க்கும் சுதந்தரமாக உள்ளே புகவும் வெளியே போகவும் எவ்விதமான தடையும் இல்லை என்பதை நேரில் கண்டறிந்தேன். அச்சமயத்தில் குடிமக்களின் தந்தையாய் விளங்கிய அந்த மாவீரனுக்குக் கடவுள் கருணை புரிய வேண்டும் என்பதே அவன் நாட்டு மக்கள் ஒவ்வொருவருடைய வேண்டுகோளுமாய் இருந்தது. அவன் நாட்டு வழியாகச் செல்லும் போது ஏற்பட்ட சாதாரணமான ஒரு சந்திப்புக் காரணமாகவே அவன் எனக்கு நண்பனாகிவிட்டான். அதிலிருந்து நான் மதுரையில் இருந்த காலமெல்லாம் அவன் எனக்கு உயர்ந்த வகை அரிசியையும் சுவை மிக்க பழங்களையும் அனுப்பத் தவறியதில்லை. சிறப்பாகக் கெட்டியான தோலோடு கூடிய சுவைமிக்க பெரிய ஆரஞ்சுப் பழங்களை அவன் எனக்கு அன்போடு அனுப்பி வந்தான். அத்தகைய அருமையான பழங்களை நான் இந்தியாவின் வேறு எப்பகுதியிலும் கண்டதில்லை.'

பெருந்தன்மையும் வள்ளன்மையும் நிறைந்த சின்ன மருது, பின்னாளில் தன்னையே கொல்லத் துணிந்த வெள்ளைத் துரைக்குப் பழமும் அரிசியும் மட்டுமா கொடுத்து உபசரித்தான்? அந்தோ! தமிழகத்திற்கே உரிய போர்க் கருவிகளை எல்லாம் பயன்படுத்தும் கலையெல்லாம் அன்றோ கற்றுக் கொடுத்தான்? ஆம். வெள்ளைத்துரை மகனுக்கு வீரமும் படைப்பயிற்சியும் கற்றுத் தந்த ஆசிரியனாய்ச் சின்ன மருது விளங்கிய உண்மையை அந்த வெள்ளைத்துரையே தன் புத்தகத்தில் வரைந்துள்ளான். அது மட்டுமா! ஏகாதிபத்திய வெறியால் மனிதப் பண்பு இழந்து, உண்ண அரிசியும் சுவைக்குப் பழமும் தந்து அன்பு காட்டிய தன் நண்பனைக் கொல்லக் காரணமாயிருந்த தன்னை தன் நெஞ்சே சுட்ட சூடு பொறாமல்

அவன் கல் நெஞ்சம் கலங்கி எழுதும் எழுத்தைப் பாருங்கள்:

'சின்ன மருதுதான் எனக்கு முதன் முதலாக ஈட்டி எறியவும், வளரி வீசவும் கற்றுக் கொடுத்தவன். வளரி என்னும் இவ்வாயுதம் இந்தியாவிலேயே தமிழ் நாட்டுப் பகுதியிலேதான் பயன்படுத்தப்படுகின்றது. ஆயினும், ஆற்றலும் திறமையும் படைத்த ஒருவர் முந்நூறு அடித் தொலைவில் உள்ள ஒரு பொருள் மீது கூட, வளரியை வியக்கத்தக்க வகையில் குறிபார்த்து எறிந்து வெற்றி பெறலாம். இத்தகைய வீர மனிதனையே நான் பிற்காலத்தில் போர் காரணமாகக் காட்டு விலங்கைப் போல விரட்டிப் படுகாயப்படுத்திச் சாதாரண வேலையாள்களால் பிடிக்க நேர்ந்தது! அதன் பின் முரிந்து போன தொடையோடு சிறையில் அவன் நொந்து கிடந்ததையும், இறுதியாக வீரம்மிக்க தன் அண்ணனோடும், அவன் வீரத்திற்குச் சிறிதும் குறையாத அவன் மகனோடும், உயிர்த்தோழர் பலரோடும் சாதாரணத் தூக்குமரம் ஒன்றில் தொங்கிக் கொண்டிருந்ததையும் காண நேர்ந்தது!'

ஆம் வாழ்ந்த நாளிலும் மாண்டு மறைந்த பின்னும் எதிரிகள் இதயத்தையும் உருக்கக் கூடிய அன்பும் பண்பும் வீரமும் கருணையும் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்த தமிழ் வீரர்களே சுதந்தரப் போரின் பெருமை மிக்க தளபதிகளான நம் மருது சகோதரர்கள். சின்ன மருது பெரிய மருது பெயர் கேட்டால் அந்நாளில் அழுத பிள்ளையும் வாய்மூடும்; தொண்டு கிழவரும் தம் இரு கைகளையும் குவித்து, நடுங்கும் குரலோடு, நன்றியுணர்ச்சியால் கலங்கும் கண்களோடு, 'இறைவனே, அந்த மாவீரர்கள் நன்றாக வாழ அருள் புரிய வேண்டும்!' என்று வாழ்த்துவார்கள். இவ்வாறு பச்சைக் குழந்தை முதல் பல்லிழந்த கிழவர் வரை, ஆடவர், பெண்டிர் அனைவர் உள்ளத்தையும் கொள்ளை கொண்டு வாழ்ந்த தேசபத்தியின் வடிவாய் விளங்கிய அத்தமிழ் வீரர் இருவரும் தெய்வபத்தியிலும் எவர்க்கும் குறையாது வாழ்ந்த உண்மையை நினைக்கும் போது பத்தி படைத்தார் நெஞ்சம் உருகும்!

முருகன் கோயில் கொண்டிருக்கும் குன்றக்குடியில் ஆண்டவனுக்குத் தக்க கோவில் இல்லாது இருப்பது கண்டு, மலைமேல் திருக்கோவில் கட்டி, அங்கிருந்து கண்டால் தெரியும் வண்ணம் தெற்கில் மருதாபுரி என்ற அழகிய குளத்தையும், அதன் கரையில் ஆயிரம் தென்னை மரங்களையும் உண்டாக்கினார்கள் மருது பாண்டியர்கள். இவ்வாறு அவர்கள் குன்றக்குடியான்பால் கொண்ட ஆராத காதலுக்கு அடையாளமாய் இன்றும் அங்குக் கோவில் கொண்டுள்ள ஆறுமுகப் பெருமானது திருமேனிக்குச் சாத்தப்படும் பொற்கவசம் காட்சி அளித்து வருகிறது. அப்பொற்கவசத்தில் 'சின்ன மருது உபயம்' என்ற சீரிய எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. ஆம்!

பொன்னில் பொறிக்கப்பட வேண்டிய அப்பெருவீரன் திருப்பெயர், 'சுற்றி நில்லாதே போ, பகையே!' என்று துள்ளி வரும் வேல் தாங்கி நிற்கும் குமரவேல் பூணும் பொற்கவசத்திலேயே அழகுறப் பொறித்திருத்தல் மிக்க பொருத்தம் உடையதன்றோ? அதோடு, 'தொழும்பர் உளக்கோயிற்கேற்றும் விளக்கம்,' என்று குமரகுருபரர் உள்ளங்கனிந்து போற்றிப் பரவிய மதுரை மீனாட்சி அம்மை திருமுன்பில் அணையா விளக்குகளாய் ஒளிரும் அழகு மிக்க இரு திருவாட்சி விளக்குகள் இவர்கள் காணிக்கையே ஆகும். அச்சுடர் விளக்குகட்கு நெய்க்காக அவியூர் என்னும் கிராமமும் அளிக்கப்பட்டது. இப்படியே திருக்கானப்பேர் என்னும் பாடல் பெற்ற ஊராகிய காளையார் கோவிலில் மூன்று சந்நிதிகள் கொண்ட திருக்கோவிலைக் கட்டி, திருவாரூர்த் தேருக்கு அடுத்தபடி பெரிதாக மதிக்கப்படும் தேர் ஒன்றையும் செய்து தந்து, ஆனை மடு என்னும் அழகான நீராழியையும் புதுப்பித்தார்களாம். இக்கோவில் திருப்பணிக்குப் பல கல் தொலைவில் உள்ள மானா மதுரையிலிருந்து கை வழியாகவே செங்கல் வந்தன என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். அங்ஙனமாயின், இவர்கட்கு இருந்த மக்கள் ஆதரவையும், மக்கள் இவர்கள்பால் கொண்டிருந்த மாறா அன்பையும் என்னென்று சொல்வது!

தெய்வங்களுக்கெல்லாம் கோவில் கட்டியும், கட்டிய கோவில்களைப் புதுப்பித்தும் வந்த மருது பாண்டியர்களுக்கு மக்கள் தங்கள் மனத்தையே கோவிலாகக் கட்டிக் கொடுத்தார்கள். ஆம்! மக்களது உள்ளமே மருது பாண்டியர்க்கான கோவில். அவர்கள் நாட்டு ஆடவரும் பெண்டிரும் மகிழ்ச்சியோடு பாடும் பாடல்களே அம்மருது பாண்டியர்களது புகழ் பரப்பும் காவியம். சான்றாக இதோ ஒரு பாடலைப் பாருங்கள்:

'சாந்து பொட்டுத் தளதளக்க நல்ல
சந்தனப் பொட்டுக் கமகமக்க
மருதைக் கோபுரம் தெரியக் கட்டின
மருது வாரதைப் பாருங்கடி!'

இப்படி எத்தனையே தெம்மாங்கு, கும்மி உள்ளிட்ட பாடல்கள் இன்றும் தென்பாண்டி நாட்டிலே கிராம மக்கள் நாவில் நடமாடுவதைக் காணலாம், கேட்கலாம்.

மருதப்பன், மருதீசன், மருதேசுவரன் என்றெல்லாம் தம் குடியினரால் வழிபடப்பட்டு வந்த குலதெய்வத்தின் பெயரையே தம் பெயராகக் கொண்டு வீரமும் கருணையும் நிறைந்த வாழ்வு வாழ்ந்து வந்த இம்மருது சகோதரர், தம் காலத்தில் ஏழைகளுக்குக் கண் கண்ட தெய்வங்களாய் விளங்கினர் என்பதற்கு எத்தனையோ சான்றுகள் உள்ளன. அவற்றுள் சுவை பொதிந்த ஒன்றனை மட்டும் இங்குக் காண்போம்:

ஒரு நாள் காட்டு வழியே சென்று கொண்டிருந்த சின்ன மருது, பசியாலும் களைப்பாலும் மயக்கமுற்றுக் கீழே சாயநேர்ந்தது. அந்நிலை கண்டு அக்காட்டினைக் காவல் காத்துக் கொண்டிருந்த ஒரு கிழவி சின்ன மருதுவின் பால் விரைந்தோடினாள். பசியாலும், அயர்வாலும் சாய்ந்து கிடந்த அவன் நிலை கண்டு, ஈன்ற குழவி முகம் கண்டு இரங்கும் தாய் போல அவன் களைப்பை மெல்ல நீக்கிய அந்தக் கிழவி, 'ஐயா, ஏழை நான்; என்னிடம் உங்கள் பசியாற்ற ஒரு பொருளும் இல்லை. ஆயினும், காலையில் நான் குடித்தது போக மிஞ்சியிருக்கும் இனிய கூழ் சிறிதிருக்கிறது. குடிக்கிறீர்களா?' என்றாள். கிழவியின் கருணை மொழிகளைக் கேட்ட சின்ன மருது, 'அம்மா, உங்கள் பெயரென்ன?' என்றான். 'தாயம்மாள்' என்றாள் கிழவி. 'ஆ! நீ தாய் அம்மாளேதான்! நீ தரும் கூழும் அமிழ்தந்தான்! கொண்டு வா,' என்று கூறிக் கிழவி தந்த கூழைக் குடித்துக் களைப்பு நீங்கினான் சின்ன மருது. அவன் உள்ளம் நன்றி உணர்ச்சியால் பொங்கியது. உடனே அவன் ஓலை ஒன்றெடுத்து அதில் முள்ளால் ஏதோ எழுதிக் கையெழுத்தும் இட்டு, அதைக் கிழவி கையில் கொடுத்தான். அது வெற்று நற்சான்றன்று; 'இக்கிராமம் தாயம்மாள் என்னும் இக்கிழவிக்கே உரியது,' என்ற சாசனம். என்னே சின்ன மருதுவின் பெரிய உள்ளம்! அக்கிராமம் இன்றும் 'கூழுர்' என்ற பெயர் படைத்துச் சின்ன மருதுவின் சீரிய புகழை விளக்கி நிற்கிறது!

ஏழைகளது துயர் தீர்க்கும் இறைவனாய் விளங்கிய சின்ன மருது, புலவர் நாவில் பொருந்திய புகழ் படைத்த தலைசிறந்த கொடையாளியாயும் திகழ்ந்தான். அவனது அப்பெருமையினை இக்காலத்தும் வழங்கி வரும் அழகிய தனிப்பாடல்கள் நமக்கு நினைவூட்டுகின்றன. மருது சகோதரர்கள் காலத்தில் வெள்ளைக் கம்பெனியின் தூண்டுதலாலும், பிற அரசியல் காரணங்களாலும் நாடெங்கும் கள்ளர் பயம் மிகுந்திருந்தது. ஆனால், அக்கள்ளர் கூட்டத்திற்குப் பொல்லாப் பகையாய் விளங்கினார்கள் மருது பாண்டியர்கள். ஒரு சமயம் கமுதியைச் சேர்ந்த புலவர் ஒருவர் தம் மனைவியாருடன் வேற்றூர் சென்று கொண்டிருந்த வேளையில் - இரவு நேரத்தில் கள்ளர்கள் அவரை வழி மறித்து, அவர் மனைவியாரது தாலியையும் பறித்துக் கொண்டு ஓடி விட்டார்கள். புலவர் உள்ளம் மிக நொந்தது! நேரே மருது பாண்டியனிடம் போய் அவர் முறையிட்டார்: 'கணவன் உயிரோடு இருக்கும் போதே மனைவி தாலி அறுபடுகிறதே! உன் நாட்டில் செங்கோல் இல்லையா?' என்ற கருத்தமைய,

'மருவிருக்கும் கூந்தல் மனையாள் கணவன்
அருகிருக்கத் தாலி அறுமா?- இரவுனக்குச்
செங்கோல் இலையா? இத் தேசமெங்கும் கள்ளருக்குப்
பங்கோ மருதுபூ பா!'

என்ற கவிதையைக் கூறினார். செவி கைப்பச் சொற் பொறுக்கும் பண்பமைந்த மருது பாண்டியன், தன் நாட்டின் நிலையெண்ணி மனம் நைந்ததோடு, புலவர்க்கு வேண்டுவன எல்லாம் தந்து, ஆறு பவுன் தங்கத்தில் தாலியும் செய்வித்து, அதைப் புலவர் கையில் கொடுத்து, அவர் மனைவியார் கழுத்தில் அதைக் கட்டி மகிழச் செய்தான். நொந்து வந்த புலவர் உள்ளம் குளிர்ந்தது! அவர் இதயம் இன்பக் கடலாயிற்று.

'தாலிக்கு வேலி தமிழுக் குதவிய தார்மன்னனே!'

என்று அவர் வாயார அவ்வள்ளலை வாழ்த்திச் சென்றார்.

இவ்வாறே கள்ளர் வகுப்பைச் சேர்ந்த புதுக்கோட்டை மன்னன் தந்த பொருளைப் பெற்று வரும் வழியில் கள்ளர்களிடம் அப்பொருளைப் பறிகொடுத்த பைந்தமிழ்ப் புலவர் ஒருவர், அதையறிந்து வருந்திய தம் மனைவியாரது மனக்கலக்கம் தீரும் வகையில்,

'கள்ளன் கொடுத்ததைக் கள்ளன் எடுத்தகன்றான்!
உள்ளம் கடுத்தால் உறலாமோ? - வள்ளல்
மருதரசன் உள்ளான் மடவாய்! வறுமை
ஒருவ அருள்வான் உடன்.'

எனச் சொற்பொருள் அழகமையப் பாடிய தமிழ்ப் பாடலில் புலவரையெல்லாம் போற்றிய மருது பாண்டியரது புகழ் விளங்குகிறதன்றோ!

இவ்வாறு அலந்தோர்க்கும் அருந்தமிழ்ப் புலவோர்க்கும் புகலிடமாய்த் திகழ்ந்த மருதுபாண்டியர் உண்மையான தேச பத்தியையும் தெய்வ பத்தியையுமே தம் இரு கண்களாகப் போற்றி வாழ்ந்தனர். இத்தகைய பண்பாடு நிறைந்த உள்ளம் படைத்த அவ்விரு பெருந்தமிழ் வீரர்களும் தமிழகத்தின் மானத்தைக் காக்க நிகழ்த்திய விடுதலைப் போர், வீரச்சுவை நிறைந்த விழுமிய போராகும். அப்போரில் அவ்வீரர்களும் அவர்களைப் பின்பற்றிய பல்லாயிரக்கணக்கான மறவர்களும் குடும்பம் குடும்பமாகச் செய்த தியாக வரலாறு கற்பார் கண்கட்கு வீர ஒளியையும் உள்ளத்திற்கு விடுதலை உணர்ச்சியையும் ஊட்ட வல்லதாகும். இத்தகைய தமிழ் மறவராகிய மானங்காத்த மருது பாண்டியரது தீரமும் தியாகமும் நிறைந்து விளங்கும் விடுதலைப் போராட்டத்தின் வீரச் சுவை மலிந்த வரலாற்றை இனிக் காண்போம்.

# 6. சிவகங்கைச் சீமையிலே!

சிவகங்கைச் சீமையிலே மருது பாண்டியருக்கு அளவில்லாத செல்வாக்கு இருந்தது. அவர்கள் கிழித்த கோட்டை எந்த மறவனும் தாண்டான். அவர்கள் ஆணைக்கு ஆயிரக்கணக்கான மறவர் ஆர்வத்தோடு காத்திருப்பர். 'விழு நெருப்பில்!' என்றால், மகிழ்ச்சியோடு விழுந்து சாவர் பலர். அத்தகைய அன்பு படைத்த மக்களையும் மறவர் சேனையையும் அவ்வீரர்கள் பெற்றிருந்தார்கள்.

ஆரம்பத்தில் சிவகங்கை மன்னரது படையைச் சார்ந்த போர் வீரர்களாகவே பெரிய மருதுவும் சின்ன மருதுவும் நமக்குக் காட்சி அளிக்கிறார்கள். ஆயினும், தங்கள் நெஞ்சுரத்தாலும், நேர்மைப் பண்பாலும், நுட்ப மதியாலும், நன்றி உணர்ச்சியாலும் இவ்வுடன் பிறப்பாளர் இருவரும் நாளடைவில் இணையில்லா அரசியல் செல்வாக்குப் பெற்று விட்டனர்; நாடாளும் மன்னனோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பை நாளுக்கு நாள் மிகுதியாக்கிக் கொண்டு, அரசனையும் விஞ்சிய புகழ்ச் செல்வர்களாய் விளங்கினார்கள். இறுதியில் தள்ளாத வயதினனாய் இருந்த முத்து வடுகநாதன் எதற்கும் மருது பாண்டியர்களையே நம்பி வாழும் நிலை ஏற்பட்டது. மருது பாண்டியரும் இந்த நம்பிக்கைக்கு அணுவளவும் மாறின்றி அரசரும் குடிமக்களும் ஒருங்கே புகழும்படி நாட்டாட்சியில் அறிவுரை கூறும் அமைச்சர்களாயும், நாட்டு மக்களைப் போர்ப்பயிற்சியில் தலை சிறந்தவர்களாக்கப் பாடுபடும் சிறந்த தளபதிகளாயும் விளங்கினர். தங்கள் நாட்டில் இருந்த மறவர், அகம்படையர், சேர்வைகள், முதலிமார், பிள்ளைமார், இராசாக்கள், நாயுடுகள் அனைவரையும் கூட்டிப் போர்ப்பயிற்சி தந்தார்கள் மருது பாண்டியர்கள். அவர்களுடன் எப்போதும் இருபதாயிரம் வீரர் எதற்கும் தயாராய் இருந்தனர்.

இந்நிலையிலேதான் சிவகங்கைச் சீமைக்குச் சோதனை நிறைந்த காலம் தொடங்கிற்று. நாம் சிவகங்கைச் சீமையைப் பற்றியும், அதை ஆண்ட முத்து வடுகநாதப் பெரிய உடையணத் தேவனைப் பற்றியும், 'யூனியன் ஜாக்கி'ன் நிழலில் நின்று கொண்டு ஆர்க்காட்டு நவாபு செய்து வந்த தர்பாரையும் அவன் புரிந்த அநீதிகளையும் பொறுக்க முடியாமல் வீர மறவர்கள் நெஞ்சம்

குமுறிக் கொண்டிருந்த செய்தியைப் பற்றியும் முன்பே படித்திருக்கிறோம். 'கப்பம்' என்று கேட்ட தனக்குக் கத்தியை உருவிக் காட்டிய மறவர்கள், தன்னையும் தனக்குத் துணையாய் நிற்கும் கம்பெனிக் கூட்டத்தையும் நாசமாக்கச் செய்யும் முயற்சிகளை அறிந்து சீற்றம் கொண்ட நவாபு சேனை ஜோசப்பு ஸ்மித்து என்பான் தலைமையில் இராமநாதபுரத்தைக் கைப்பற்றிய செய்தியையும் அறிந்திருக்கிறோம் அல்லவா? அதற்குமேல் நடந்தவற்றைப் பார்ப்போம்.

ஜோசப்பு ஸ்மித்து வெற்றித் திமிரோடும், நவாபு சேனையோடும், பிற கூலிப் படைகளோடும் சிவகங்கைச் சீமையை நோக்கிச் சீறி வருவதை அறிந்தான் முத்து வடுகநாதன். அவன் மீசை துடித்தது; கண்கள் சிவந்தன; அவன் தன் இரு கண்கள் போன்ற மருது பாண்டியரைப் பார்த்தான். 'அரசே! அஞ்ச வேண்டா! அந்நியப் படையின் அடிச்சுவடும் காணாத வகையில் அவர்களைக் கண்ட துண்டமாக வெட்டிப் புதைப்போம்!' என்று அண்ணனும் தம்பியும் ஒரே குரலில் உரைத்தனர்.

மருது பாண்டியரின் நெஞ்சுறுதியைக் கண்டு முத்து வடுகநாதன் மகிழ்ச்சி கொண்டான். அவனது மகிழ்ச்சியை இரு மடங்காக்கினாள் அவனுடைய் வீரபத்தினியான வேலு நாச்சி என்பாள். ஆம்; முத்து வடுகநாதனுக்கு வாழ்க்கைத் துணைவியாய் அமைந்த வேலு நாச்சி, வீர நெஞ்சம் படைத்தவள்; சின்ன மருதுவிடம் போர்க் கருவிகளைப் பயன்படுத்தும் கலையைக் கசடறக் கற்றவள். அத்தகைய பெண் மணியின் நெஞ்சில் ஆண்மை பொங்காது இருக்குமோ? 'தலைவரே, தொடுங்கள் போரை! தமிழகத்தின் மானத்தைக் காக்க இந்தப் பெண் இரத்தமும் பயன்படட்டும்!' என்று அவள் உள்ளம் கருதியதைத் தன் கணவனிடம் வீரமொழிகளால் உணர்த்தினாள். வீரிட்டு எழுந்தான் முத்து வடுகநாதன். தன் தலைநகரை விட்டுக் காளையார் கோயில் காட்டில் புகுந்து கொண்டான். காரணம், அது கட்டுக்காவலும் வலிமையும் பொருந்தியதோர் அரணாய் விளங்கியதே ஆகும். எளிதில் எவரும் அதனுள் புகுந்து வெற்றி பெறல் அரிது. இதை நன்குணர்ந்த நவாபு புதுக்கோட்டை மன்னனுக்கும் ஆசை மொழி சொல்லி, அவனையும் தன் உதவிக்கு வரும்படி அழைத்தான். கம்பெனிப் படையைக் கர்னல் பான்ஷோர் என்பவன் நடத்தி வந்தான். காசாசை பிடித்த ஒரு கயவன் காளையார் கோவில் அரண் பற்றிய உளவுகளையெல்லாம் பகைவர்க்குத் தெள்ளத்தெளிய எடுத்துரைத்து விட்டான். அவனைக் காசால் அடித்து மயக்கி வைத்திருந்த நவாபுவின் சேனையும் கம்பெனிப் படையும் புயலெனச் சீறி அரணுக்குள் பாய்ந்தன. துரோகியின் செயலையும் பகைவர்களது வெற்றியையும் கண்ட முத்து வடுகநாதன் உள்ளம் எரிந்தது. 'பகைவரை வெட்டி வீழ்த்துங்கள்! குண்டுக்குக் குண்டு! குத்துக்குக் குத்து! வெட்டுக்கு வெட்டு! ..............

நடக்கட்டும்!' என்றான் முத்து வடுகநாதன். அரசி வேலு நாச்சியும் கொடி பிடித்துக் குதிரைமீதேறி முன்னின்று, 'உம்ம்.......... சாடுங்கள்! சிதையுங்கள் பகைவரை!' என்றாள். அவ்வீர மங்கை பற்றிய கைவாள் கணக்கற்ற ஏகாதிபத்திய வெறியர்களுடைய தலைகளை வெட்டிக் குவித்தது. கண்டனர் இக்காட்சியை வீரமறவர்! அவர்கள் குருதி கொப்பளித்தது. அவர்கள் மாற்றார் படையைச் சின்னபின்ன மாக்கினார்கள். இந்நிலையில் மருது சகோதரர்கள் தங்கள் கை வாளாலும், வளரித் தடியாலும், கதையாலும் மாற்றார் படை வீரர்களைப் பிண மலைகளாக்கிக் குவித்தார்கள். ஆயினும், துரோகிகள் சதி, புதுக்கோட்டையான் படை, நவாபுவின் சேனை, ஆயுத பலம் நிறைந்த கம்பெனிப் பட்டாளம் - இவை அனைத்தும் சேர்ந்து தாக்கும்போது கோட்டையின் கதி என்னாகும்! மதில்கள் இடிந்தன. கோட்டை வாயில் பகைவர் வயமாயிற்று. நிலைமையறிந்த சின்னமருது, முத்து வடுகநாதன் காதோடு காது வைத்துப் பேசினான்; 'அரசரே! கிளம்புங்கள்! ஏற்பாடுகள் தயார்! தப்பிச் செல்வோம்! படை திரட்டிப் பின்னர்த் தாக்குவோம்!' என்றான். முத்துவடுகநாதன், 'முடியாது! ஒரு நாளும் முடியாது! நீங்களும் அரசியும் எப்படியாவது தப்பிச் செல்லுங்கள். நான் என் நாட்டை விட்டு வெளியேறேன்! கடைசிச் சொட்டுக் குருதி உள்ளவரை மாற்றானது மார்பை, மண்டையைப் பிளந்து போராடுவேன்! வெற்றி அல்லது வீரச்சாவு அடைவேன்! என் உடல் சிந்தும் ஒவ்வொரு துளிக் குருதியிலிருந்தும் ஒரு விடுதலை வீரன் கிளம்புவான். எனவே, கவலை வேண்டா. புறப்படுங்கள்! அரசியைக் காப்பாற்றுங்கள்!' என்றான்.

இதற்குள் தலை சிறந்த அத்தமிழ் வீரனை நாற்புறமும் பகைவர் படைவளைத்துக் கொண்டது. 'என்னைக் கைது செய்ய எமனாலும் இயலாது!' என்று எட்டிப் பிடிக்க வந்த பகைவரை வெட்டி வீழ்த்தினான் முத்து வடுகநாதன்; கையில் கிடைத்த ஆயுதங்களை எல்லாம் பயன் படுத்திப் பகைவர் படையைக் கூறு கூறாக்கினான்; கருவிகள் யாவும் தீர்ந்த பின்னரும் கடுகி வந்த பகைவரைக் கையாலேயே குத்தினான்: வாளாலும் ஈட்டியாலும் வீரம் மிக்க கைகளாலும் வந்தவரை எல்லாம் எதிர்த்து, விண்ணுக்கு அனுப்பிய அவ்வீரமகனுடைய திருக்கரங்களை வெட்டித் தள்ளினார்கள் ஏகாதிபத்திய வெறியர்கள். 'கை போனால் என்ன!' என்று பாய்ந்து வந்த பகைவரைக் கால்களால் எட்டி உதைத்தான் முத்து வடுகநாதன். கால்களும் துண்டிக்கப்பட்டன. அவன் களைத்தானில்லை. அடக்க வந்தவர்களைப் பற்களாற்கடித்து அலற வைத்தான். அவன் திருமுகத்தைத் தாக்கினர் கயவர். அப்போதும் அவ்வீரன் காறி உமிழ்ந்தான் வெறியர் கூட்டத்தைப் பார்த்து. இறுதியில் ஒரு குண்டுக்குத் தமிழகத்தின் விடுதலைக்காக இறுதி வரையிற் போராடிய வீர முத்து வடுகநாதன் பலியானான்! வீரருள் வீரனாய் வாழ்ந்த அத்தமிழ் மகனை நாம் என்றென்றும் நினைவில் வைத்துப் போற்றுவோமாக!

முத்து வடுகநாதன் மாண்டான். அவன் வீரபத்தினி வேலு நாச்சியும் மருது பாண்டியரும் திண்டுக்கல்லுக்குக் காற்றாய்ப் பறந்து சென்றனர். அப்போது திண்டுக்கல் மைசூர் ஆதிக்கத்தில் இருந்தது. பிரிட்டிஷ் அதிகாரத்தைத் தொலைக்க உறுதி பூண்டிருந்த ஐதர் அலி, அப்போது அங்கிருந்தான். அவன் மருது பாண்டியரையும் அரசி வேலு நாச்சியையும் வரவேற்றான்; அவர்கள் விடுதலை வேட்கையையும் வீர உணர்ச்சியையும் கண்டு வியந்து வாழ்த்தினான்.

இதற்குள் நவாபுவின் ஆளுகைக்கு இராமநாதபுரமும் சிவகங்கையும் இரையாயின. அப்பகுதியை அவன் எட்டு ஆண்டுகட்குக் குத்தகைக்கு விட்டான். கி.பி. 1780 ஆம் ஆண்டு வரை நவாபுவின் தர்பார் அந்த வகையில் நடந்தது மறவர் நாட்டிலே. ஆனால், நாட்டு மக்கள் மனம் குமுறிக் கொண்டிருந்தது. கனவிலும் நனவிலும் குடி மக்கள் தங்கள் அரச குடும்பத்தைப் பற்றியே நினைத்துக் கண்ணீர் சிந்தினார்கள். வீரமங்கை வேலு நாச்சி நாட்டை விட்டு வெளியேறியதையும், மருது பாண்டியர்கள் தங்கள் சீமையைப் பிரிந்து வாழ்வதையும் உணர்ந்த போதெல்லாம் அவர்கள் நெஞ்சம் காட்டு நெருப்பாய்க் கனன்று எரியத் தொடங்கியது.

இந்நிலையில் மருது பாண்டியர்களும் கை கட்டி வாளா இருக்கவில்லை. மறைமுகமாக அவர்கள் மறவர் நாட்டில் உள்ள மக்களோடு மறைவாகத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார்கள். குடிகளும் தங்கள் அரசிக்கு மறைவாகத் திறைப்பணம் அனுப்பி வந்தார்கள். அதனால், நவாபுவின் குதிரைக்காரனால் தம்படி கூட வசூலிக்க இயலவில்லை. நாட்டிலே வறுமையும் பஞ்சமும் தாண்டவம் ஆடின. கள்ளர்களடித்த கொள்ளை ஊரைக் கலகலக்க வைத்தது. அவர்களை அடக்குவது நவாபுவின் தர்பாரால் ஆகிற செயலா? சிவகங்கைச் சீமையில் நிலவிய இந்த நிலைமையே இராமநாதபுரத்திலும் நிலவியது. இறுதியில் வேறு வழியில்லாமல் நவாபு மறவர் நாடுகளைத் திரும்பவும் பழைய அரச குடும்பத்தினருக்கே திருப்பிக் கொடுத்துவிட நேர்ந்தது.

மீண்டும் வேலு நாச்சியே சிவகங்கைக்கு அரசியானாள். மருது சகோதரர்கள் அவர்களுக்கு அறிவொளி காட்டும் அமைச்சர்கள் ஆனார்கள். வெள்ளை மருது, நாட்டு அரசியல் பற்றி அதிகக் கவலை ஏதும் இன்றிப் பழையபடி 'காட்டு ராஜா' ஆனான். அதனால், சின்ன மருதுவே நாட்டின் ஆட்சிக்கான முழுப்பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள நேர்ந்தது. இந்நிகழ்ச்சிக்குப் பின் சிவகங்கைச் சீமையின் அரசியலில் பல முறை நவாபுவும் கம்பெனி அதிகாரிகளும் தலையிடுவதும், அதைத் தகர்க்க மருது பாண்டியர் எதிர்த்துப் போராடுவதுமான பல நிகழ்ச்சிகள் நடந்தன. அரசியல் நிருவாகம் வேலு நாச்சியின் கைக்கும் மருது பாண்டியர் கைக்குமாகப் பந்து போல மாறி மாறிச் சென்றது. காரணம், விதவையான அப்பெண்ணரசியால்

நெருக்கடியான சூழ்நிலையில் நாட்டின் நிருவாகப் பொறுப்பு முழுவதையும் தன்னந்தனியாக மேற்கொள்ள இயலாமையே ஆகும். மேலும், மருது பாண்டியர் வீரத்திலும் தியாகத்திலும் மக்களுக்கு அசைக்க இயலாத நம்பிக்கை இருந்தது. முத்து வடுகநாதன் மாண்ட பின்னும் தங்கள் அரசியைக் காப்பாற்றி மறைமுகமான புரட்சி வேலைகள் மூலம் நாட்டின் அரசுரிமையை வேலு நாச்சிக்கே உரிமையாக்கிய வீர சகோதரர்கள் மீது மறவர் மக்களுக்கு இருந்த பற்று எல்லையற்ற நிலைக்கு வளர்ந்து கொண்டே போயிற்று. சிவகங்கைச் சீமையின் அரசுரிமையைப் பற்றி இடை இடையே நிகழ்ந்த சிறு சிறு மாறுதல்கள் எல்லாம் ஒரு வகையாகத் தீர்ந்த பின் மருது சகோதரர்களே அச்சீமையின் அரசுரிமையை ஏற்றுக் கொண்டார்கள். சிறப்பாக, சின்ன மருதுவே சிவகங்கைச் சீமையின் நிருவாகப் பொறுப்பை மேற்கொண்டான். இதில் எவ்விதமான ஒளிவும் மறைவும் இல்லை. நாட்டு மக்களும் கம்பெனி அதிகாரிகளும் இவ்வுண்மையை நன்று அறிவார்கள். இன்னும் தெளிவாகச் சொன்னால், நாட்டின் திறைப்பணம், வரவு செலவுக் கணக்குகளெல்லாம் வேலு நாச்சி உயிரோடு இருந்த போதே மருது பாண்டியர் பெயராலேயே அரசாங்கக் கணக்குகளில் வரவு வைக்கப்பட்டனவாம். இவ்வாறு சிறுகச் சிறுகச் சிவகங்கைச் சீமையின் ஆதிக்கத்தைக் கைப்பற்றி வந்த மருது பாண்டியர்கள், 1800 ஆம் ஆண்டில் வேலு நாச்சி இறந்து போனதும் எவ்விதமான தடையும் இன்றிச் சிவகங்கைச் சீமையின் நேரடி நிருவாகத்தைத் தாங்களே ஏற்று நடத்தலானார்கள்.

இந்நிலையிலேதான் வீரபாண்டியன் ஈடுபட்டு நடத்திய விடுதலைப் போரைத் தொடர்ந்து நடத்திய மாவீரன் ஊமைத்துரை மீண்டும் பாஞ்சைப் பதியைத் துறந்து வாளும் கையுமாய்த் தன் உயிர் நண்பர்கள் புடை சூழச் சிவகங்கைச் சீமைக்கு வந்து சேர்ந்தான்.

வீரபாண்டியக் கட்டபொம்மன் மீது தலை நாள் தொட்டே மருது பாண்டியர்க்கு மிக்க அன்பும் மதிப்பும் இருந்து வந்தன. சற்றேறக்குறைய ஒன்றரை ஆண்டுகளும் எண்பது நாள்களும் நடந்த பாஞ்சைப் பதியின் விடுதலைப் போரில் தம்மால் இயன்ற வரை எல்லா உதவிகளையும் எப்போதும் செய்து வந்தனர் மருது பாண்டியர். இடுக்கண் வந்த போது இவ்வாறு மருது பாண்டியர் செய்த உதவிகளை ஊமைத்துரையின் நன்றி உணர்ச்சி நிறைந்த உள்ளம் மறக்க இயலுமோ? எனவே, தம் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரிய மருது பாண்டியர்களின் துணை கொண்டு பிறநாட்டு வெள்ளையரின் ஆதிக்கத்தை நாசமாக்க உறுதி கொண்டனர் ஊமைத்துரையும் அவன் உயிர்த் தோழரும். இந்நிலையில் சிவகங்கைச் சீமையை ஆண்ட மருது பாண்டியர் மனத்தை நெருப்பாக்கிற்று ஆணவம் பிடித்த ஆங்கிலக் கம்பெனிப் படையின் வெறி பிடித்த நெறியற்ற போக்கு.

சிவகங்கைச் சீமையின் அரசுரிமையை மருது பாண்டியரிடமிருந்து பிடுங்க, நவாபுவும் கம்பெனி அதிகாரிகளும் சேர்ந்து, 'ஒழுங்காகக் கப்பம் கட்டுவதில்லை' என்ற காரணம் காட்டிச் சதி செய்தார்கள்; மிரட்டினார்கள்; 'வீரன் ஊமைத்துரை உயிரோடு தப்பிவிட்டான்; அவன் உள்ள வரை நமக்கு அமைதி ஏது? காற்றோடு தீயும் கலந்தாற்போல மருது பாண்டியரோடு சேர்ந்து கொண்டு, அவன் மாபெரும் போரைத் தொடங்குவதற்கு முன்பே நாம் சிவகங்கையைத் தாக்க வேண்டும்', என்று சிந்தித்துத் திட்டமிட்டார்கள். இதை அறிந்த மருது பாண்டியரும் ஊமைத்துரை மீது பேரன்பு படைத்த வீர மறவர்களும் திரண்டு எழுந்தார்கள்; 'பரதேசிக் கூட்டத்திற்கு இவ்வளவு மமதையா! எங்கள் அருமை அரசன் முத்து வடுகனைக் கொன்ற வெள்ளைக் கூட்டத்தை இன்னும் உயிரோடு உலாவ விடுவதா!' என்று ஆத்திரம் கொண்டார்கள். வீர வெறியால், 'அருமைச் சிவகங்கைச் சீமையின் உரிமையை இனி எக்காரணத்தாலும் பறி கொடுக்க இயலாது!' என்று எழுச்சி கொண்டனர் மருது பாண்டியர். இந்நிலையில் எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றியது போலக் கம்பெனி அதிகாரிகள், 'கப்பம் கப்பம்' என்று மருது பாண்டியரை வற்புறுத்தலானார்கள். ஆனால், சிவகங்கைச் சீமையின் விடுதலை வீரர்களோ, 'தலை போனாலும் சல்லிக்காசும் கப்பமாகத் தாரோம்!' என்று கண்டிப்பாக கூறிவிட்டார்கள். மூண்டது போர். ஆம்! பேரரசு வெறிக்கும் விடுதலை வேட்கைக்கும் இடையே மூண்டது போர்!

சிவகங்கைச் சீமைக்கான விடுதலைப்போர் மூளும் நேரம் பார்த்து ஊமைத்துரையும் அவன் தோழர்களும் மருது பாண்டியர் நாட்டிற்கே வந்து சேர்ந்தார்கள். அவர்கள் உள்ளம் கொல்லன் உலை போலக் கொதித்துக் கொண்டிருந்தது. 'பாஞ்சைப்பதிக் கோட்டையைத் தகர்த்ததோடு, அந்நிலப் பரப்பு முழுவதையும் உப்பையும் வரகையும் வாரி இறைத்து உழவும், ஆமணக்குச் செடிகளை நடவும் இந்தப் பறங்கிக் கூட்டத்திற்கு எவ்வளவு திமிர்!' என்று எண்ணி ஊமைத்துரை உள்ளம் குமுறியது. 'நான் நாடிழந்தாலும் நம்பிக்கையை இழக்கவில்லை. வீரபாண்டியன் தம்பிதான் நான் என்பதை உலகறியச் செய்வேன்!' என்று அவ்வீரன் உறுதி பூண்டான்.

வெள்ளை வெறியர்களின் நெறி கெட்ட செயலைச் சுட்டுப் பொசுக்க உறுதி கொண்ட முப்பெருவீரரும் சிவகங்கைச் சீமையிலே சந்தித்தனர். சிங்கங்கள் ஒன்று கூடின. அவ்வீரச் சிங்கங்களின் கர்ச்சனையைக் கேட்டுக் கம்பெனிப் பட்டாளத்தின் குலை நடுங்கியது.

# 7. போர்! போர்! காட்டில் கடும் போர்!

காட்டரசாகிய சிங்கத்தின் தலைமையில் கடும்புலிகள் ஆயிரம் ஆயிரமாகத் திரண்டாற்போல, வாளும் வேலும் தாங்கிய வீரர் கூட்டம் பல்லாயிரக் கணக்கில் பெரிய மருது, சின்ன மருது, ஊமைத்துரை ஆகிய முப்பெரு வீரர்களின் தலைமையில் அலைகடல் போல அணி வகுத்து நின்றது. உருவிய வாளுடன் நின்ற அவ்வீரர் உள்ளம், 'ஒழிக கம்பெனியான் ஆணவம்!' என்று முழங்கியது.

சிவகங்கைப் பாளையத்தாரிடம் சுமார் இருபதாயிரம் வீரர்கள் கொண்ட மறவர் படை இருந்தது. ஈட்டி, வாள், வேல், வளரித் தடி, கதை போன்ற பழைய போர்க் கருவிகளோடு புதிய போர்க் கருவிகளான துப்பாக்கிகளும் வெடி மருந்தும் ஓரளவு இருந்தன. ஆனால், கம்பெனிப் பட்டாளத்திடமோ, பயங்கரப் பீரங்கிகள் மிகுந்திருந்தன. இந்நிலையிலும் துரோகச்சக்திகள் மட்டும் கம்பெனிப் பட்டாளத்திற்குத் துணை புரியாமல் இருந்திருந்தால், பிரிட்டிஷ் படைகளைக் கொன்று குழியிலிட்டிருப்பார்கள் மருது பாண்டியரும் ஊமைத்துரையும். ஆனால், இந்த நெருக்கடியிலும் துரோகம் செய்வதற்கே தன் உள்ளத்தைப் பண்படுத்தி வைத்திருந்த புதுக்கோட்டைத் தொண்டைமான் தன்னை, தன் நாட்டை, தன் படையைக் கம்பெனி அதிகாரிகட்கு அடகு வைத்தான். வீர பாண்டியனைக் காட்டிக் கொடுத்து எத்தனையோ சன்மானங்களைப் பெற்றுச் சுவை கண்டவன் அல்லவா அவன்? தொண்டைமானது துரோகச் சிந்தனையை அறிந்த மருது பாண்டியர், தமிழகத்தின் மானத்தைக் காக்கும் பொருட்டு, தாய் நாட்டின் உரிமைக்காகத் தங்களோடு சேர்ந்து போரிடாவிடினும், பகைவர்க்குப் பயன்படாமல் நடுவு நிலைமையாவது ஏற்கும்படி அவனை மன்றாடி வேண்டினர். தொண்டைமானா, அவ்வேண்டுகோளுக்குச் செவி சாய்ப்பவன்? தொண்டைமானது பிடிவாதத்தைக் கண்ட மருது பாண்டியர் அன்பால் முடியாததை அச்சத்தால் ஈடேற்ற முயன்றனர்: தொண்டைமான் துரோகம் புரிந்தால், அவன் நாட்டிற்கும் நகர்க்கும் கோட்டைக்கும் களஞ்சியத்திற்கும் தீ வைப்பதாகப் பயமுறுத்தினர். ஆனால், புதுக்கோட்டை மன்னனோ, நயத்திற்கு இசையாதது போலவே பயத்திற்கும்

பணியாதிருந்தான். ஆபத்து வரின் தன்னினும் பலம் பொருந்திய கம்பெனிப் படைகள் தன்னைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கை அவனுக்கிருந்தது. எல்லாவற்றிலும் விந்தையானது, வெள்ளை நாடோடிகள் பாளையக்காரர்களை முற்றிலும் முறியடித்து வெற்றி பெறும் வரை தன் திருமணத்தைக் கூடத் தள்ளி வைக்க அவன் உறுதி கொண்டதே. என்னே அவன் ஆண்மை! அதோடு புதுக்கோட்டையின் ஒரே படைத்தளமாயும் பலம் பொருந்திய கோட்டையாயும் இருந்த திருமயத்தையும் பிரிட்டிஷ் துருப்புகட்கே ஒப்படைத்தான் தொண்டைமான். அதோடு அமைந்தானா? நாலே நாள்களில் மூவாயிரம் படை வீரர்களுடன் இன்ஸ் என்பவனுக்குத் துணை புரிய நத்தம் என்னும் இடத்திற்குப் பேரரசு வெறியர்கட்குப் பக்கபலமாகப் படை திரட்டிப் போனான்.

இங்ஙனம் தமிழகத்தின் விடுதலை வீரர்கட்கு எதிராகத் தமிழகத்திலேயே துரோகிகள் முகாமை உருவாக்குவதில் வெற்றி கண்டவன் கிழக்கிந்தியக் கம்பெனியின் சார்பாகத் தஞ்சாவூர் தளபதியாய் இருந்த கர்னல் பிளாக்பர்ன் என்ற வெள்ளையன்.

இவ்வாறு தமிழகத்தைப் பிரித்தாளும் சூழ்ச்சியில் பெரிய அளவுக்கு வெற்றி கண்ட கம்பெனி அதிகாரிகள், மருது பாண்டியர்களுக்கு எதிராக முதன் முதல் மீண்டும் 1801 ஆம் ஆண்டு, மே மாதம் 29 ஆம் நாள் போர் தொடங்கினார்கள். பாஞ்சைக் கோட்டையைத் தகர்த்தெறிந்த வெற்றி வெறி கம்பெனிப்படையின் தலைக்கேற, ஐந்தே நாள்களில் மீண்டும் போர் தொடங்கப்பட்டது. அப்போர் அவர்கள் உயிரையும் உடைமையையும் வாட்டி வதைக்கும் கொடிய போர் ஆயிற்று.

பாஞ்சைப் பதியைப் பிடிக்கப் போரிட்ட கம்பெனிப் படைகளில் ஒரு பகுதியை மட்டும் அங்கேயே நிறுத்தி வைத்து, அக்கோட்டையைத் தரை மட்டமாக்கி, அந்நிலப் பகுதி முழுதும் உப்பும் வரகும் வாரி இறைத்து உழும்படி கட்டளை பிறப்பித்த கம்பெனித் தளபதிகள், 'எஞ்சிய படையுடன் ஊமைத்துரை தப்பிவிட்டானே! இனி மீண்டும் எந்தக் கோட்டையுள் இருந்து கொண்டு நம்மைக் கூவி அழைப்பானோ! இன்னும் நம்முள் எத்தனை பேர் எமனுலகம் சேர்வோமோ!' என்று எண்ணியவர்களாய், மேஜர் ஷெப்பர்டு என்பவன் தலைமையில் 26 மைல் தொலைவில் உள்ள நாகலாபுரத்திற்கு இராணுவ நடை போட்டனர். அங்கே சென்றதும், மே மாதம் 28 ஆம் நாள் புதுப்படைப் பலத்தைச் சேர்த்துக் கொண்டு, மீண்டும் சோதனை நிறைந்ததொரு நிலைக்குத் தன்னைத் தயாராக்கிக் கொண்டு, கமுதியை நோக்கி விரைந்தது கம்பெனிப் பட்டாளம். இப்படையின் வருகையைச் சிவகங்கைச் சீமையில் ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டு, 'வரட்டும் வெள்ளைப்படை! நாய்க்கும், நரிக்கும், பேய்க்கும், எமனுக்கும் வயிறார விருந்து வைப்போம்!' என்று கூர்வாளைத் தீட்டிய வண்ணம் தமிழர் படை திரண்டிருந்தது.

இவ்வாறு தமிழகத்தின் விடுதலை வீரர்கள் பொதுவாகச் சிவகங்கைச் சீமை முழுவதிலும் சிறப்பாகக் கமுதியிலும் நிறைந்துள்ளதை அறிந்த கம்பெனிப்பட்டாளம், 1801 ஆம் ஆண்டு மே மாதம் 29 ஆம் நாள் கமுதிக்குள் நுழைந்தது. எதிர் பார்த்த வண்ணம் வீர மறவர்கள் கம்பெனிப் பட்டாளத்தை வாள்கொண்டு வரவேற்றார்கள். மூண்டது போர்! இரு தரப்பிலும் நல்ல சண்டை! வெட்டு, குத்து, நாசம்! கமுதியில் தொடங்கிய போர் 46 மைல் தொலைவில் உள்ள நாகலச் சேரியிலிருந்து திருப்பூவனத்திற்கு மாறியது. இங்கு நடந்த போரில் கம்பெனி வீரர் பலர் பலியிடப்பட்டனர். இதற்குப் பின் எட்டரை மைல் தொலைவில் உள்ள திருப்பாச்சேத்தி என்ற இடத்தில் நடந்த போரில் விடுதலைவீரர்கள் தங்கள் வஞ்சம் தீரக் கம்பெனிப் பட்டாளத்தைக் கொன்று குவித்தார்கள். அன்றைக்கு நடந்த போரில் மட்டும் மேஜர் கிரே என்ற தளபதியும், 16 பேரும் எமனுலகம் சென்றனர் என்றும், லெப்டினன்டுகளான பிளாக்கர், கோல், பர்மின்டர், ஸ்டுவர்ட்டு என்ற நான்கு படைத் தளபதிகளும் முப்பத்தைந்து பேரும் படுகாயப்படுத்தப்பட்டனர் என்றும் வெள்ளைத் தளபதி வெல்ஷ் எழுதி வைத்துள்ள நாட்குறிப்புக் கூறுகிறது. இதை அடுத்து ஜூன் மாதம் 10 ஆம் நாள் நடந்த வீரப்போரில் 3000 க்கு மேற்பட்ட விடுதலை வீரர் கலந்து கொண்டனர். அன்றைய போரில் முதலில் பத்து ஐரோப்பியர்களும் எண்பத்தாறு சுதேசிக் கூலிப்படை வீரர்களும் சிவகங்கை மறவர்களின் குருதி தோய்ந்த வாளுக்கு இரையானார்கள். இந்தப் பரிசுகளை மறவர் சேனையிடமிருந்து வேதனையுடன் பெற்றுக் கொண்ட கம்பெனிப் பட்டாளம், அடுத்துப் பார்த்திபனூரில் ஓரிரவு முகாம் அடித்தது. அன்று முழுதும் அவர்கள் உறங்கவில்லையாம். அன்றைய தினம் நள்ளிரவு கழிய, விடியற்காலம் மணி நான்கானதும் பெற்ற மன அமைதியை அம்முகாமில் இருந்த கர்னல் வெல்ஷ் அதற்கு முன் எப்போதுமே கண்டது இல்லை என்று எழுதி வைத்துள்ளான். என்னே கம்பெனிப் பட்டாளத்திற்கு இருந்த குலை நடுக்கம்!

பொழுது புலர்ந்தது. கம்பெனிப் பட்டாளம் 'தலை தப்பியது போதும்!' என நினைத்து, பரமக்குடி வழியாக இராமநாதபுரம் ஓடோடியும் போய்ச் சேர்ந்தது. இடை வழியில் ஊமைத்துரை வீரர்களும் மருது பாண்டியருடைய மறவர்களும் கம்பெனிப் பட்டாளத்திற்குத் தர வேண்டிய காணிக்கைகளைத் தரத் தவறவில்லை. 'எப்படியோ, அடிபட்டாலும் உதைபட்டாலும், உயிரோடு பிழைத்தோம்!' என்று இராமநாதபுரம் சேர்ந்த கம்பெனிப் பட்டாளம் ஆறு நாள்கள் நிம்மதியாய்த் தங்கி, ஓய்வு கொண்டு, தின்றும் குடித்தும் திரிந்ததாம். இந்த ஆறு நாள் ஓய்விற்குப் பின் மீண்டும் கம்பெனிப் பட்டாளத்திற்குக் கடுமையான வேலை தரக் காத்திருந்தது மருது பாண்டியர் படை.

ஜூன் 22 ஆம் நாள் மீண்டும் கம்பெனிப் பட்டாளம் தமிழ் மறவர் படையை அடக்க மார் தட்டிப் புறப்பட்டது. பழமனேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள பலம் பொருந்திய கமுதிக் கோட்டையில் ஆரம்பித்த கம்பெனிப் படைகளின் முகாம் சிறுவயல் வரை நீண்டு கொண்டே சென்றது. இந்த இடைக்காலத்தில்-எட்டு நாள்களில் கம்பெனிப் படைகள் கண்ட இழப்புப் பெரிது; 6 'வெள்ளையர்களும் 6 சுதேசிகளும் கொல்லப்பட்டார்கள். மூன்று வெள்ளை அதிகாரிகளும், 16 ஐரோப்பியர்களும், 36 சுதேசிகளும் படுகாயம் அடைந்தார்கள். இந்த எட்டு நாள் போரில் நாலாயிரம் பேர் வீர மறவர் தாக்கியும் தற்காத்தும் போர் புரிந்தனராம். கம்பெனிப் பட்டாளம், இவர்கள் படுத்தும் கொடுமை பொறாமல், நள்ளிரவில் ஒக்கூர் என்ற கிராமத்தையே தீயிலிட்டுச் சாம்பலாக்கியது.

கிராமங்கட்கு எல்லாம் தீயிட்டுக் குடி மக்கட்குச் சொல்லொணாத் துன்பமும் அவமானமும் இழைத்து முன்னேறி வந்த கம்பெனிப் பட்டாளம், கடைசியாக மருது பாண்டியரின் தலைநகரான சிறு வயல் நகருக்குள்ளேயே நுழைந்தது! வீர மறவர் கம்பெனிப் பட்டாளத்தை எதிர்த்துக் கடும்போர் நடத்தினர். பாஞ்சைப் பதியிற்போலவே இங்கும் வீர மறவர்களிடம் பேய் வாய்ப் பீரங்கிகளும் ஏராளமான வெடி மருந்துகளும் இல்லாமையாலும், மேலும் மேலும் துரோகிகளால் கம்பெனிப் படைக்குப் பலம் பெருகியதாலும் - அனல் மழை பொழியும் கம்பெனிப் பட்டாளத்தின் சீற்றம் நிறைந்த தாக்குதலுக்குத் தமிழர் படை பின் வாங்க நேர்ந்தது. ஆனால், வீர மறவர்கள், அவ்வாறு பின் வாங்க நேர்ந்ததை அறிந்து, அழகின் வடிவாய் விளங்கிய தங்கள் அருமைத் தலைநகராகிய சிறுவயலைத் தீக்கு இரையாக்கி, அந்நகரில் ஓர் அங்குலங்கூட அயலானுக்குப் பயன்படாதவாறு செய்துவிட்டுத் திரும்பினார்கள். இவ்வாறு ஆத்திரம் கொண்ட வீரமறவர்கள் வைத்த வெந்தீக்கு இரையான அழகு மிக்க சிறுவயல் நகரின் சிறப்பை அக்காலத்தில் நேரிற்கண்ட கர்னல் வெல்ஷ் சித்திரித்துக் காட்டியுள்ளதைப் பாருங்கள்:

'மருது பாண்டியரின் அரண்மனை ஆரவாரமான தோற்றத்தைவிட எளிமை கலந்த அழகிற்கே பேர் பெற்று விளங்கியது; சிறியதாயினும், உறுதியாகவும் நன்றாகவும் கட்டப்பட்டிருந்தது அவ்வரண்மனை. சிறுவயல் நகரத்தின் வீதிகள் அகலமாகவும் ஒழுங்காகவும் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வீதிகளுள் ஒன்றில் அழகிய மரச்சாலை ஒன்று அமைந்திருந்தது. மொத்தத்தில் அந்த நகரம் இந்தியாவில் நான் கண்ட வேறு நகரங்களைக் காட்டிலும் மிகுந்த அழகும் சிறப்பும் பொருந்தியதாகவே விளங்கியது.'

இத்தகைய சிறந்த நகரைத்தான் மருது பாண்டியர் படை தன்மான உணர்ச்சி காரணமாகத் தீயிட்டுக் கரியாக்க நேர்ந்தது. என்னே காலத்தின்

கோலம்! கொடுமை! கம்பெனிப்படை முகாம் அடித்திருந்த இடத்திலிருந்தே மூன்றே மைல் தொலைவில் இருந்து சிறுவயல் நகரத்தைப் பிடிக்கக் கம்பெனிப்படைகள் பட்ட பாடு கொஞ்சம் அன்று! ஆறு மணி நேரம் மிகக் கடுமையான போர் நடந்தது. அங்குலம் அங்குலமாகவே கம்பெனிப் பட்டாளம் வீர மறவர்களை எதிர்த்து முன்னேற வேண்டியிருந்தது. அவ்வாறு முன்னேறியும், தீயில் வேகும் நகருக்குள்ளேதான் நுழைந்தது ஏகாதிபத்தியப் படை. இதற்குப்பின் மருது பாண்டியரின் வீரப்போர், புதியதொரு திருப்பத்தை அடைந்தது. சிறு வயலுக்குத் தென்மேற்கில் 7 அல்லது 8 மைல் தொலைவில் உள்ளது காளையார் கோவில். மருது பாண்டியர் நாளில் இந்தப் பகுதி முழுதும் அடர்ந்த காடாய் இருந்தது.

சிறுவயல் நகரத்தைத் தீக்கு இரையாக்கிவிட்டு வெளியேறிய வீரமறவர் சேனை, சிறுவயல் காட்டுக்குள்ளே சென்று, காளையார் கோவில் நோக்கிப் பறந்தது. ஆனால், மலை போல உயர்ந்து, பச்சைப்பசேலெனப் பயங்கரமாய் நிற்கும் அக்காட்டுள் நுழைந்து அவர்களை வெற்றி கொள்வது கம்பெனிப் படைகளுக்கு எளிதில் கைகூடுமோ? எனவே, சிறுவயல் காட்டையே அழித்துக் காளையார் கோவிலை அடைய நீண்டதொரு பாதை இடும் வேலையில் முனைந்தனர் கம்பெனிப் படையினர். இந்த வேலையில் முன் நின்றவர்கள் புதுக்கோட்டைத் தொண்டைமான் அனுப்பி வைத்த இரண்டாயிரம் கூலிப்படை வீரர்கள். இவர்களைப் பாதுகாக்க இருநூறு வெள்ளையரும், மலேயா நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட சிப்பாய்களும் துப்பாக்கியும் கையுமாய் நின்றார்கள்.

32 நாள்கள் பாடுபட்டுக் காட்டை அழித்துப் பாதை போடும் பெரிய வேலையில் கம்பெனித் துருப்புகள் காலத்தைக் கழித்தன. ஜூலை மாதம் 31 ஆம் நாள் தொடங்கப்பட்ட இவ்வேலை, செப்டம்பர் மாதம் 2 ஆம் நாள் கைவிடப்பட்டது. காட்டை அழிக்கும் கடின வேலையில் ஈடுபட்ட கம்பெனிப் படைகள் அனைத்தும், உள்ளமெலாம் உடைந்து, மெய்யெலாம் சோர்ந்து, பழைய ஒக்கூர்க் கிராமத்திற்கே ஓடி வந்தன. இந்த 32 நாள்களில் காட்டுக்குள் சிக்கிக் கொண்ட கம்பெனிப்படைகளைக் கண்ட கண்ட இடங்களில் எல்லாம் மருது பாண்டியர்களது படை கண்ட துண்டமாக்கியது. பல முறை கம்பெனிப் படைகள் 'கூண்டோடு கைலாசம்' போக வேண்டிய நிலையிலிருந்து உயிர் தப்பின. காட்டை அழிக்கும் முயற்சியிலும் கம்பெனிப் படைகள் சுலபமாக வெற்றி பெற இயலவில்லை. வெட்ட வெட்டக் காடு அடர்த்தியாகவும் கடினமாகவும் இருப்பது கண்டு, வெள்ளைப்படை வெருண்டு நின்றது. இடையிடையே கடுமழையில் கம்பெனிப் பட்டாளம் அடைந்த துன்பம் சொல்லொணாதது. இயற்கையுங் கூட, இந்தப் பேரரசு வெறியர்களை எதிர்த்துப் போராடியது. கம்பெனிப்படைகளுக்கு மிகுந்த பாதகமாக அடர்ந்த காடும் பலமான

மழையும் இருப்பது கண்டு எக்களிப்புக் கொண்ட வீர மறவர்கள் எல்லையற்ற ஊக்கத்தோடும் வரம்பில்லா வீர உணர்ச்சியோடும் பெரும்போர் உடற்றினார்கள். சிறுவயல் காட்டிற்குள் நுழைந்து நான்கு மைல் போவதற்குள் கம்பெனிப்படைகள் கலகலத்துப் போய்விட்டன. அவர்கள் துன்பத்தையும் துயரத்தையும் எல்லையற்றவையாக்கியது தமிழர் படை.

சிறுவயலையும் காளையார் கோவிலையும் இணைக்கும் காட்டிலே நடந்த கடும்போரில் கம்பெனிப்படைகட்கு ஏற்பட்ட உயிரிழப்புச் சொல்ல முடியாது. காளையார் கோவில் காட்டில் ஒவ்வோர் அடித் தொலைவைக் கடப்பதும் கம்பெனிப் படைகட்குப் பகீரதப் பிரயத்தனமாய் இருந்தது. காட்டின் நடுவில் காவல் கொத்தளம் ஒன்றைக் கட்டும் முயற்சியில் கம்பெனிப் படைகள் கணக்கற்ற வீரர்களைப் பலி கொடுத்தும், சொல்ல முடியாத இழப்பை ஏற்றும் சோர்ந்தன. அவ்வாறிருந்தும், ஆங்கிலக் கம்பெனியின் படை உயிர் பிழைத்ததற்கு முக்கிய காரணம், புதுக்கோட்டைத் தொண்டைமானோடு தோளோடு தோளாய் நின்று எட்டையபுரத்துக் கூலிப்படைகள் செய்த துரோகமே ஆகும். இதோடு கம்பெனி அதிகாரிகள் மறவர் இனத்தைப் பிளவுபடுத்தச் செய்த சூழ்ச்சிகளும் ஓரளவு வெற்றி கண்டன. முக்கியமாகக் கம்பெனி அதிகாரிகளால் மருது பாண்டியர்கட்கு எதிராகப் 'பொம்மை ராஜா'வாக உடையணத்தேவன் என்பவன் உருவாக்கப்பட்டான்; அவன் மாமன் மருது பாண்டியர் சேனையின் மறைகளை எல்லாம் அறியக் கூடிய முக்கிய நிலையில் இருந்தான். அவன் திடீரென ஈனவாழ்வை விரும்பி, மானவாழ்வைத் துறந்து, மருது பாண்டியர்கட்கு முதல் தரமான துரோகம் புரிந்தான்: அப்போது கம்பெனிப்படைகளின் முக்கியத் தளபதியாய் இருந்தவனும், பாஞ்சைப்பதியின் அழிவுக்குக் காரணமாய் இருந்த பாதகனும் ஆகிய கர்னல் அக்நியூ துரையின் காலில் 'அடைக்கலம்' என்று வீழ்ந்தான். அத்துரோகி அக்நியூ துரையின் அருகிற்சென்று இரகசியங்களும் பேசினான். மருது பாண்டியர்களது சேனையைப் பற்றியும் அவர்களுடைய போர்த்திட்டங்கள் பற்றியும் எல்லாச் செய்திகளையும் கூறித் தன் இனத்தவரையே காட்டிக் கொடுத்தான் அக்கல் நெஞ்சன்.

இத்தகைய துரோகச் செயல்கள் தங்களைச் சுற்றி நடந்து கொண்டிருந்த போதிலும் வீரமிக்க மருது பாண்டியர் சிறிதும் மனம் தளராது, 'வீரமறவர் அல்லமோ நாம்!' என ஆவேசம் கொண்டு, 'உயிரினும் மானம் பெரிது', என்று போரிட்டனர். இப்போரில் நேரடியாகப் பங்கு கொண்டிருந்த கர்னல் வெல்ஷ் கூறுவது போல, இருபதாயிரம் தமிழ் மறவர்கள் தமிழகத்தின் விடுதலைக்காக வீரப்போர் நடத்தினர். மண்ணைப் பறிக்க நடந்த போர் அன்று அது; தாய் நாட்டின் மானத்தைக் காக்க நடந்த போர். அப்போரில்

வீடு வாயில்களை எல்லாம் மறந்து, உயிரையும் வெறுத்து, மருது பாண்டியரும் ஊமைத்துரையும் காட்டிய தியாக நெறியில் நின்று போராடி, தலையும் கையும் காலும் கழுத்தும் மார்பும் துண்டிக்கப்பட்டும் சுடப்பட்டும் மாண்ட அம்மாவீரர்கள் சிந்திய குருதியால் காளையார் கோவில் காடு பெருந்தூய்மை எய்தியது. தன் நாட்குறிப்பில் ஓரிடத்தில் கர்னல் வெல்ஷே குறிப்பது போல, அக்காட்டின் எட்டுத்திசையிலும் வீரத் தமிழ் மறவர்களது சிவந்த குருதி கோலமிட்டது போல ஒழுகிக் கிடந்ததாம்! ஆம்! தாய் நாட்டின் மானத்தைக் காக்கத் தங்கள் வீரக் குருதியைத் தமிழ் மண்ணில் சொரிந்த அம்மறவர்களுடைய பொன்னடிகளை எந்நாளும் தமிழ் இனம் நினைவில் வைத்துப் போற்றும்.

இத்தகைய தமிழ் வீரர்களுடைய துணிச்சல் நிறைந்த போராட்ட முறைகளை நினைத்தாலே நம் நெஞ்சம் வியப்பாலும் வீரத்தாலும் விம்மிதம் கொள்ளும்! காளையார் கோவில் காட்டில் நடந்த கடும்போரின் இறுதிக் கட்டத்தை நம்மால் மறக்கவே முடியாது.

காட்டை அழித்துப் பாதை அமைக்கும் வேலையில் இறங்கியிருந்த கம்பெனிப் பட்டாளம், போராடிப் போராடி நாலு மைல் தூரம் முன்னேறிவிட்டது; காளையார் கோவில் கோபுரமும் கண்ணுக்குப் புலனாகியது. ‘இடையே இருக்கும் கண்மாய்க் கரையைத் தாண்டினால், காளையார் கோவில் நம் கையில்தான்!’ என்று இறுமாப்புக் கொண்டது வெள்ளைப்படை. இரவெல்லாம் இந்த இறுமாப்பில் வெறி கொண்டு குடித்துக் கூத்தாடியது கம்பெனிப் பட்டாளம்!

அடுத்த நாள் காலை எழுந்து பார்த்தால், காளையார் கோவில் கோபுரம் காணவில்லை. கண்மாய்க் கரை மண்சுவர் எழுப்பப் பெற்று, பெருமலை போல உயர்ந்து கிடந்தது! கிட்ட நெருங்கினால் குண்டுகள் ‘டபார் டபார்’ என்று வெடித்தன. ஈட்டியும் வேலும் எதிர்த்து வந்து பாய்ந்தன. பதிலுக்குக் கம்பெனிப் படைகள் பீரங்கிக் குண்டுகளைப் பொழிந்தாலோ, அவை அத்தனையும் ‘பொத்துப் பொ’த்தென்று போய் விழுந்தன! வெடித்த குண்டுகள் எல்லாம் வீணாயின. காரணம் என்னவென்று ஆராய்ந்த ஆங்கிலப் படைஞர், அப்போதுதான் உண்மை உணர்ந்தனர்; ‘அடே! அது பாஞ்சைப்பதியில் ஊமையன் எழுப்பிய கோட்டையைப் போன்றே வியத்தகு மண்மலை!’ என்று அறிந்து மனம் இடிந்து போயினர். இவ்வாறு ‘ஆப்பசைத்த குரங்கு போல’க் காட்டுக்கிடையே சிக்கிக் கொண்ட கம்பெனிப் பட்டாளத்தை விரட்டி விரட்டித் தாக்கினர் தமிழ் மறவர். இந்தத் தாக்குதலுக்கு உட்பட்டும், யார் செய்த புண்ணியத்தாலோ தப்பிப் பிழைத்து வந்து, நடந்தவற்றை எல்லாம் மிகச் சிறந்த நாட்குறிப்பாக வரைந்து வைத்திருக்கும் வெள்ளைக் கர்னல் வெல்ஷ் கூறுவது போல மிகவும் அருகில் இருந்தே குண்டுகள் சரமாரியாய் வரும். ஆனால், ஆள்கள் மட்டும்

கண்ணுக்குத் தெரிய மாட்டார்கள். இவ்வாறு பகைவர் பார்வைக்குப் புலப்படாதவாறு தன்னைப் பச்சைப் பசும்புதர்களிலும் காடுகளிலும் மறைத்துக் கொண்டே மருது பாண்டியரின் படை 'குரங்குப் போர்' நடத்தியது. ஆனால், ஏதுமே நேராது என்று கனவு காணும் வெள்ளையரது ஏகாதிபத்தியக் கும்பல்மேல், திடீரெனக் கவண் கற்களின் மழை பொழியும். தலை தூக்க முடியாது. ஒரு கணம் எங்கும் அமைதி நிலவும். எங்கிருந்தோ மீண்டும் குண்டுகள் பாயும். சிப்பாய்கள் புழுப்போலச் சுருள்வார்கள்; குண்டுக்கு அஞ்சிக் கூடாரத்திற்குள் நுழைவார்கள். தொப்புத் தொப்பென்று கூடாரத்தின் மீது தீப்பந்தங்கள் விழும். 'ஐயோ! நெருப்பு!' என்ற அலறல் காட்டைக் கலக்கும். எதிரே இருப்பவர் யாரெனத் தெரியாதவாறு காரிருள் கவிந்திருக்கும். மின்னல் வீச்சுப் போலச் சுருள் கத்திகள் சுழலும். கண்ணிமைப்பதற்குள் கணக்கற்ற தலைகள் - கூலிச்சிப்பாய்கள், கம்பெனி வீரர்கள் தலைகள் - பனங்காய்கள் போல உதிரும். பொழுது விடிந்து பார்த்தால், வீர மறவர்கள் இரவு நிகழ்ந்த போரில் இறந்து போன வீரர்களுடைய பிணங்களை இழுத்துச் சென்ற அறிகுறிகள், பரந்து கிடக்கும் குருதிக் கறையால் தென்படும். விடுதலை வீரர்கள் மிக நெருங்கிச் சுடப்பட்டால் ஒழிய, போர்க்களத்தில் மடிந்த வீரர்களை நம் புரட்சி வீரர்கள் தங்கள் தோள்களில் சுமந்து செல்லத் தவறியதில்லை. இதைக் கர்னல் வெல்ஷ் வியப்போடு கூறுகிறான்.

இவ்வாறு நடுக்காட்டில் சிக்கித் தவித்து மாண்டு மறைந்த கம்பெனிப் பட்டாளத்தின் துயரக் குரலே எதிரொலிப்பதுபோல வெல்ஷ் துரை எழுதி வைத்திருக்கும் எண்ணங்களைப் பாருங்கள்:

'இன்று ஆகஸ்டு மாதம் 30 ஆம் நாள், காளையார் கோவிலுக்குச் சிறுவயலிலிருந்து பாதை போடும் முயற்சியைக் கைவிட்டு இந்த இடத்தை விட்டுக் கிளம்பி விடுவது என்ற முடிவிற்கு வந்தோம். இந்த முடிவைக் கேட்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தனர். ஏனெனில், பெரும்பாலார்க்குச் சுடுகாடாயமைந்த இடத்தைவிட்டுக் கிளம்பிடுவது எங்கள் அனைவருக்கும் அளவற்ற மகிழ்ச்சி தந்தது! அம்மகிழ்ச்சியில் ஒரு மாத காலம் நாங்கள் அரும்பாடு பட்டுச் செய்த வேலையைக் கை விடுவதால் ஏற்பட்ட அவமானத்தைக் கூட மறந்துவிட்டோம். எங்கள் பாசறை முழுவதும் வயிற்றுப்போக்காலும் குருதிப் போக்காலும் அல்லற்படும் நோயாளிகள் நிறைந்த கூட்டமாகிவிட்டது. உண்மையில் அக்கொடிய நோய்க்கு இரையாகி மடிந்த அதிகாரிகளும் வீரர்களும் எண்ணற்றவர்கள். உடல் நலத்துடன் எஞ்சி இருந்தவர்களும் கண்ணெதிரில் பச்சைப்பசேலென மலை போல எழுந்து நின்று உட்புக முடியாதவாறு தடுக்கும் அடர்ந்த காட்டின் நடுவில் செயலற்றுக் கிடப்பதால் உள்ளம் குன்றி, மனநோய் பிடித்துக் கிடந்தார்கள். எங்கள் எதிரிகளோ, நாங்கள் மணிக்கொரு முறை தாக்கியும்,

எவ்வாறோ மாயமாய் மறைந்து, ஆனால் எங்களைச் சுற்றிச் சுற்றி வளைத்த வண்ணம் இருந்தார்கள். ஒரு மாத காலமாக நாங்கள் பாளையங் கோட்டைக்கு ஒரு கடிதங் கூட அனுப்ப முடியவில்லை. அவர்களுடைய எச்சரிக்கையான கண்காணிப்பினின்றும் தப்பிச் செல்ல எவ்வளவோ முயன்றும் பயன் இல்லை. அப்பகுதியின் ஒவ்வோர் அங்குலத்தையும் அங்கு வாழும் மக்களையும் நன்கறிந்து பணி செய்ய வலிய வந்த பாளையக்காரன் ஒருவனிடம் நானே ஐந்து வராகனையும் ஒரு சிறு கடிதத்தையும் கொடுத்து அனுப்பினேன். கடிதத்தைக் கொண்டு போய்க் கொடுத்ததும் இன்னோர் ஐந்து வராகனை அவனுக்குத் தருவது என்பது ஏற்பாடு. ஆனால், பின்னர் நான் அறிந்து கொண்ட வகையில் அவன் எவ்வளவோ எச்சரிக்கையாக இரவு நேரம் பார்த்துப் புறப்பட்டுப் போன போதிலும், எங்கள் முகாமிலிருந்து சில மைல் கடப்பதற்கு முன்பே அவன் எங்கள் பகைவர்களால் கண்டு பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான்.'

இத்தகைய பயங்கரச் சூழ்நிலையில் 32 நாள்கள் அவதிப்பட்டுக் கம்பெனிப் பட்டாளம் குற்றுயிராய்க் கிடந்த நிலையில், அதற்குப் புத்துயிர் அளிப்பது போல இன்னொரு பட்டாளம் பிரான்மலைப் பக்கமிருந்து பேய்த் தனமாகத் தாக்கிக் கொண்டே முன்னேறி வந்தது. சாகக் கிடந்த கம்பெனிப்பட்டாளத்திற்கு இப்பேருதவி கிடைத்ததும் அது சும்மா இருக்குமா? அப்பட்டாளம் வெறி பிடித்து எழுந்தது; பல நாள் பாடு பட்டுத் தான் கட்டி வைத்த முகாம்கள் முதலியனவற்றைத் தீக்கு இரையாக்கிய பின் காட்டை விட்டு வெளியேறித் தப்பினோம் என வந்து சேர்ந்தது.

# 8. மீண்டும் போர்! மானங்காக்கும் விடுதலைப் போர்!

வெறி கொண்டு வெள்ளையன் படை பெருகுவது கண்ட மருது பாண்டியர் ஊமைத்துரை சேனை, காட்டாற்று வெள்ளம் போல, அலை மோதும் கடல்போலப் பெருகியது! மருது பாண்டியரும் ஊமைத்துரையும் 'உடல் நமக்குச் சுமை! உயிர் சிறு துரும்பு!' என்று எண்ணி முழுப் பலத்தையும் காட்டிப் போரிட்டனர்.

காளையார் கோவில் காட்டிற்குள்ளிருந்து கம்பெனிப் படைகள் தப்பி வெளி வருவதை மருது பாண்டியர்கள் மனம் விரும்பவில்லை. காளையார் கோவில் காட்டையே கம்பெனிப் படையின் சுடுகாடாக்க விரும்பியது அத்தமிழ் மறவர் உள்ளம். எனவே, 1801 ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 23 ஆம் நாளிலிருந்து 30 ஆம் நாள் வரை அவ்வீரர்கள் கடும்போர் நடத்தினார்கள். ஆகஸ்டு மாதம் 23 ஆம் நாள் பலத்த போராட்டத்திற்கு இடையே கம்பெனிப்படைகள் காட்டிற்குள் சிக்கிக் கிடக்கும் படைகளோடு தொடர்பு வைத்துக் கொள்ளும் பொருட்டுச் சிறு வயலிலிருந்து காளையார் கோவில் காட்டுக்குள் நுழையும் பாதையின் வாயிலில் இரண்டாவது முறையாக ஒரு காவல் கொத்தளத்தைக் கட்டும் முயற்சியில் வெற்றி கண்டன. இந்த முயற்சியின் போதும் இதைத் தொடர்ந்து ஒரு வாரம் வரையும் கம்பெனிப் படைகள் வெளியுலகோடு எவ்விதத் தொடர்பும் கொள்ளாது துண்டித்துவிட வேண்டும் என்ற ஆத்திரத்துடன் போர் புரிந்தனர் மருது பாண்டியரும் ஊமைத்துரையும் அவர் படைஞரும். இதற்குள் கர்னல் இன்ஸ் தலைமையில் கம்பெனிப் படையின் ஒரு பகுதி புதுக்கோட்டை மன்னன் தத்தம் செய்திருந்த திருமயத்திலிருந்து கொண்டுவரப்பட்ட பொருள்களையெல்லாம் திருப்பத்தூர்க் கோட்டைக்குள் திணித்து, அங்குத் தமிழர் படை புகுவதற்கு முன்பே எச்சரிக்கையோடு பலம் பொருந்திய தற்காப்பு ஏற்பாடுகளைச் செய்து வைத்திருந்தது. இவ்வாறு ஏற்பாடுகளை எல்லாம் செய்த கர்னல் இன்ஸ், பட்டமங்கலம் என்ற கிராமத்திற்குத் தன் படையுடன் வரும் வழியில், மருது பாண்டியர் படையால் நையப் புடைக்கப்பட்டான். இது பற்றிக் கர்னல் வெல்ஷே பின் வருமாறு கூறியுள்ளான்:

'தமிழர் படை எட்டுத் திசையிலும் சுற்றி நின்று வீரப்போராட்டம் நடத்தியது. அதோடு அப்படைஞருள் ஒரு பகுதியினர் கம்பெனிப் பட்டாளத்தின் குண்டுகட்கு இரையாகிச் சுருண்டு வீழ்வதற்கு முன்னால் அவர்கள் இடத்தில் மற்றொரு வீரத் தமிழ்ப்படை நின்று அஞ்சா நெஞ்சுடன் அமர் புரிந்தது.'

பீரங்கிப் பலத்தையும் துப்பாக்கிப் பலத்தையும் ஈட்டியும் வேலும் வாளுமே வென்றன. ஆயுதபலத்தை ஆள் பலமே அழிக்கும் நிலை ஏற்பட்டது. கம்பெனிப் பட்டாளம் பிணக்குவியலாகிவிடும் நிலை தோன்றியது. தாம் எண்ணியதற்கு மாறாக நிலைமை இருப்பது கண்டனர் வெள்ளைத் தளகர்த்தர். கடை விரித்துக் கன்னித் தமிழகத்தில் காசு பறிக்க வந்த அவர்களது சூழ்ச்சி மூளை சுறுசுறுப்பாய் வேலை செய்தது.

சென்ற இயலிலேயே வெள்ளைக் கம்பெனி அதிகாரிகள் மருது பாண்டியர்க்கு எதிராக உடையணத்தேவன் என்ற பொம்மை ராஜாவை உருவாக்கி வைத்திருந்தார்கள் என்பதைப் பார்த்தோம். அந்த உடையணத் தேவனுக்கு இப்போது 'அதிகார பூர்வமான பட்டாபிஷேகம்' செய்யத் துணிந்தது கம்பெனி வர்க்கம்.

சூதினால் வெற்றி பெறத் திட்டமிட்ட கம்பெனித் தளகர்த்தர்கள், 'தப்பினோம்! தப்பினோம்!' என்று தங்கள் படைகளுடனே விரைந்து ஒக்கூர்க்கு அருகில் உள்ள சோழபுரம் என்ற பெரியதொரு கிராமத்திற்கு வந்து, அங்கிருந்த வலிமை பொருந்திய கோவில் மதில்களுக்குள் பாதுகாப்புத் தேடிக் கொண்டார்கள். அங்கிருந்து கொண்டு தங்கள் சூழ்ச்சிச் செயல்களை வெற்றிகரமாகத் தொடங்கினார்கள். வெள்ளிப் பணத்தை வீசி எறிந்தார்கள்; 'வெற்றி பெற்றால் மானியம் தருவோம்; மதிப்புத் தருவோம்,' என்றார்கள்; மண்ணாலும் பொன்னாலும் மயக்கினார்கள். அருகில் இருந்த நாலு கோட்டைக் கிராமத்தைச் சேர்ந்த மறவர் சாதித் தலைவர்கள் மனமுவந்து அளிக்கும் இசைவின் மேலேதான் யாரும் சிவகங்கைச் சடங்கு வழியாக மன்னர் ஆக வேண்டும். ஆனால், நம் மருது பாண்டியரோ, அப்படிச் சாதி காரணமாகவோ, சடங்கு காரணமாகவோ, மன்னர் ஆனவர் அல்லர். நல்ல தலைவனற்ற கப்பல் நடுக்கடலில் திகைப்பது போலக் கம்பெனிப் படையின் கொடுமையில் சிக்கித் தவித்த சிவகங்கைச் சீமையைக் காக்கும்பொருட்டு, மக்கள் அன்பின் துணைகொண்டு மன்னரானவர்களே இவ்வீரத் தலைவர்கள். இந்த உண்மையை நன்கு உணர்ந்திருந்த கம்பெனி அதிகாரிகள், சாதியின் பெயரால், சடங்கின் பெயரால், தமிழினத்தின் ஒற்றுமையைப் பிளக்கப் பெருமுயற்சி செய்தார்கள். பணத்தை இறைத்தும், பொய்களை விரித்தும், பழிகளைப் பரப்பியும், அந்தோ! அயலார்கள் - வெள்ளை நரிகள் செய்த அந்த முயற்சியும் வெற்றி கண்டதே! கொடுமை! கொடுமை!

1801 ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம், 12 ஆம் நாள் கர்னல் அக்நியூ துரை முன்னிலையில் அக்கினி சாட்சியாக, ஐந்து பூதங்கள் சாட்சியாக, சோழபுரம் கோவிற் கட்டடம் சாட்சியாக, உடையணத்தேவன், மறவர் சீமையின் பொம்மை ராஜாவாகப் 'பட்டாபிஷேகம்' செய்து வைக்கப்பட்டான். இந்த விந்தை மனிதனைப் பற்றிக் கர்னல் வெல்ஷ் என்னும் வெள்ளைத் தளகர்த்தனே நேரில் பார்த்து எழுதும் வரிகளைப் படிக்கும் போது நம்மை அறியாமல் நம் வாய் சிரிக்கும்! இதோ படித்துப் பாருங்கள் அவ்வெள்ளையன் கூறுவதை:

'ஆகஸ்டு மாதம் 29 ஆம் தேதி: இன்று மாலை மறவர் நாட்டின் புதிய ராஜா உடையணத்தேவன் தன் அண்ணனோடும் வயதான ஒரு பிராமணனோடும் கர்னல் அக்நியூ துரையை முதன்முதலாகக் காண வந்தான். அவன் பார்வைக்குப் பெரிய சாது போலத் தோன்றினான். ஆனால், சந்தர்ப்பமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் திடீரென எதிர்பாராத விதமான அவனை உயர்த்திவிட்டன. அரச பதவியின் பெருமிதத்திற்கும் கம்பீரத்திற்கும் அவன் மிகவும் புதியவன். ஆகையால், மிகுந்த கூச்சமும் கலக்கமும் உடையவனாய் அவன் காணப்பட்டான். அதோடு கம்பெனி அதிகாரிகள் அவன் மீது காட்டிய கவனிப்பிற்கு மிகுந்த நன்றியுள்ளவனாயும் அவன் காட்சி அளித்தான். அவனை நாங்கள் 'ராஜா' ஆக்கியது பற்றி மற்ற யார் யார் என்னென்ன சொன்ன போதிலும், வறுமையிலிருந்தும் அவனை ஊர் பேர் தெரியாத நிலையிலிருந்தும் உயர்த்தி அரியணை தந்ததற்காகவும், ஒரு சீமையின் வருமானத்தையே அவனிடம் ஒப்படைத்ததற்காகவும், அவற்றின் பொருட்டு நாங்கள் பட்ட துன்பங்களுக்காகவும், செய்த முயற்சிகளுக்காகவும், அவன் எங்கள் பால் காட்டிய ஆழ்ந்த நன்றியையும் நாங்கள் மிகவும் பாராட்டினோம்'.

இத்தகைய வேடிக்கை மனிதனால் வீர மறவர் சீமைக்கு நேர்ந்த வேதனை வாழ்வை எண்ணுந்தோறும் உள்ளம் புண்ணாகிறது! இந்தப் பொம்மை ராஜாவை வைத்துக் கொண்டு, மருது பாண்டியர்க்கு மாறாய்க் கம்பெனிப்பட்டாளம் திரித்துவிட்ட கதை-வதந்தி-பழிக்கயிறுகளின் நீளத்திற்கு ஓர் எல்லையே இல்லை. ஆனால், அந்தோ! அக்கயிற்றின் அழகிலும் பலத்திலும் மயங்கிய மறவர் நாட்டு மக்கள், அது தங்கள் கழுத்தையே இறுக்க விடப்பட்ட கயிறு என்பதை அறியாது போனார்கள். அதன் விளைவாக மறவர் சீமை இரண்டு பட்டது. 'புதிய ராஜா, புதிய ராஜா' என்று ஒரு கூட்டம் பிரிந்தது. மருது பாண்டியர் பலம் கோடை கால ஆறு போல வற்ற ஆரம்பித்தது. தங்கள் சுக வாழ்வையும் துறந்து, விடுதலைக்காகப் போரிட்ட அம்மாவீரர்கள், தங்கள் நாட்டின் ஒற்றுமை இவ்வாறு பிளவுபட்டது கண்டு அடைந்த துயரம் சொல்லும் தரமன்று. எனினும், உறுதியைக் கைவிடாது, அவ்வுத்தம வீரர்கள் கம்பெனிப்

படையை எதிர்ப்பது போலவே தங்கட்கு எதிராகப் பரவும் கதைகளையும் பழிச் சொற்களையும் எதிர்த்துப் போரிட்டார்கள்; சிதைந்து ஓடும் மறவர் குடிமக்களை அன்புக் கயிற்றால் பிணித்து, அவர்கட்குக் கம்பெனிச் சூழ்ச்சியை அம்பலப்படுத்தி, அவர்கள் நெஞ்சில் விடுதலை விளக்குச் சுடர் விட்டெரியச் செய்தார்கள். இவ்வளவு செய்தும், அவர்களால் கம்பெனி அதிகாரிகளது பொய்க் கருத்துப் பரப்பை முற்றிலும் நிறுத்த முடியவில்லை. உடையணத்தேவன் 'பட்டாபிஷேக'த்தை ஒட்டிப் பலமான மழை பெய்தது. அவ்வாறு மழை பெய்தது இறைவனது 'ஆசீர்வாதம்' என்ற அளவிற்கு மக்களை நம்பும்படி செய்தனர் கம்பெனி வெள்ளையர். ஆனால், உண்மையில் அப்போது பெய்த அந்தப் பலத்த மழை கம்பெனிப் படைகட்குக் கிடைத்த பெரிய சாபம் என்பது அவர்களுக்கு மட்டுமே தெரியும்.

கம்பெனிப் பட்டாளம் 'உடையணத்தேவரை ராஜா' வாக்கிவிட்டோம். இச்செயல் பலம் பொருந்திய நம் பீரங்கியாலும் பிளக்க முடியாத தமிழர் படையின் ஒற்றுமையை இனித் தவிடு பொடியாக்கிவிடும்!' என்று இறுமாப்புக் கொண்டு எழுந்தது. ஆம், சாதியும் சடங்கும் பொய்யானவையே. ஆனால், பொய்யான அவை எவ்வளவு பொல்லாதவை, பயங்கரமானவை, வலிமை வாய்ந்தவை என்பதற்கு இவ்வரலாற்று நிகழ்ச்சியே சரியான சான்றாகும்.

கம்பெனிப் படைகள் 17 ஆம் நாள் புதிய 'ராஜா'வின் 'பட்டாபிஷேக'த்திற்குச் சரியான ஐந்து நாள் கழித்து மேலூரை நோக்கிக் கிளம்பின. மேலூரை அடைவதற்குள் அவர்கள் பட்ட அல்லல் அளவிட்டுரைக்க முடியாதது. அச்சமயத்தில் 'ஆண்டவனது ஆசி' என்று மக்களால் நம்பப்பட்ட பெருமழை பெய்து, எங்கும் சேறாய்க் கிடந்தது. பீரங்கிகளையும் போர்த் தளவாடங்களையும் சுமந்து கொண்டு, பலத்த மழையால் பாழ்பட்டுக் கிடந்த அப்பாதையைக் கடக்க முடியாமல், கம்பெனிப் படை திண்டாடித் திணறியது. கடைசியாகச் சிங்கம் பிடாரியைச் சேர்ந்தது கம்பெனிப்படை. அங்கிருந்து பிரான் மலையில் வீர மறவர்கள் தங்கியிருக்கும் செய்தி அறிந்து, அம்மலையைக் காட்டுத்தனமாகத் தாக்கியது வெள்ளைப்பட்டாளம். பிரான் மலை, இறைவன் இருப்பதற்கு ஏற்ப கோவிலாய் மட்டுமன்றி, எண்ணற்ற வீரர்கள் தங்கிப் போர் புரிவதற்கு ஏற்ற பலம் நிறைந்த கோட்டையாயும் விளங்கியது. இம்மலையின் உச்சியிலிருந்து பார்த்தால், குன்றக்குடி, காளையார் கோவில், திருக்கோட்டியூர் என்னும் ஊர்கள் நன்றாகத் தெரியும். மேலூர் ஆனை மலையும் அழகாகத் தோன்றும். பொதுவாக எந்த மனிதனாலும் ஏறிக் காண முடியாத உயர்ந்த உச்சியையும், பலம் பொருந்திய பாறைகளின் பாதுகாப்பையும், வலுவான கோட்டை மதில்களையும் பெற்றுள்ளதாகிய

இப்பிரான் மலையில் முகாம் இட்டிருந்த மருது பாண்டியரது படையை மோதியது கம்பெனிப்படை. ஆனால், ஏற்கெனவே தமக்கு எதிராக உருவாக்கப்பட்டு வரும் சதிகளாலும், மறவர் நாட்டு மக்கட்கு இடையே ஏற்பட்ட பிளவாலும் மனம் உடைந்து போன மருது பாண்டியர் ஊமைத்துரை சேனையால் கம்பெனிப்படைகளை எதிர்த்துத் தீவிரமாகப் போராட முடியவில்லை. இந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு, கம்பெனிப் படைகள் பிரான் மலைக் கோவிலையும் கோட்டையையும் பிடித்துக் கொண்டன.

இதற்குப் பின் கம்பெனிப்பட்டாளம் புதிய ஊக்கத்தோடு காளையார் கோவிலை நோக்கித் தன் இறுதித் தாக்குதலை நடத்த ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்தது. மருது பாண்டியருக்கு உயிர் நாடியாய் இருந்த இக்காளையார் கோவிலைப் பிடிப்பதற்கான கடும்போர் ஆறு நாள்கள் தொடர்ந்து நடைபெற்றது. பலம் பொருந்திய காளையார் கோவிலைப் பிடிக்கும் பொருட்டுக் கம்பெனிப்பட்டாளம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, மூன்று வழிகளில் அனுப்பப்பட்டது.

பிரான் மலையைப் போலவே காளையார் கோவிலும் கோவிலாய் மட்டும் அன்றிக் கோட்டையாயும் இருந்தது. பதினெட்டடி உயரமுடைய கற்சுவர்களால் சூழப்பட்ட கோவிலாய் இருந்தது காளையார் கோவில்! வெல்ஷ் கூறுவது போலக் காளையார் கோவிலைச் சுற்றியிருந்த கோட்டைச் சுவர்கள் மிகப் பெரியனவாயும் உறுதி படைத்தனவாயும் விளங்கின. ஊருக்குள் எங்கும் எழிலும் ஏற்றமும் நிறைந்த மாளிகைகள் காணப்பட்டன. இத்தகைய பெருநகரைப் பிடிப்பதற்காகப் பாய்ந்து வந்த பரங்கிப் பட்டாளத்தையும் கூலிப்படைகளையும் எதிர்த்து வழி மறித்து, இரண்டு இடங்களில் மருது பாண்டியரும் ஊமைத்துரையும் கடும் போர் நடத்தினர். அப்போரில் கம்பெனி வீரர்களுள் கணக்கற்றவர் வீர மறவரின் வாளுக்கு இரையாயினர். எவ்வாறோ கம்பெனிப்பட்டாளம் தமிழர் படையின் ஆத்திரத் தாக்குதலினின்றும் தப்பிக் காளையார் கோவிலுக்குள் நுழைந்து விட்டது.

எந்த அக்டோபர் மாதம் 16 ஆம் நாள் வீரபாண்டியனைத் தூக்கிலிடுவதன் மூலம் பாளையக்காரர்கள் கிழக்கிந்தியக் கம்பெனியை எதிர்த்து நடத்திய போரின் ஒரு முக்கியக் கட்டம் முடிந்ததோ, அதே அக்டோபர் மாதத்தில், சரியாக இரண்டு ஆண்டுகள் கழித்துப் பாளையக்காரரின் வீரப்போரின் முடிவிற்குரிய அறிகுறிகள் தோன்றின.

காளையார் கோவிலுக்குள கம்பெனிப் படைகள் நுழைந்த சமயம் வீரன் ஊமைத்துரையின் உள்ளமும் மருது பாண்டியர் நெஞ்சமும் பெரிதும் இடிந்து போய் இருந்தன. 'நம் நாட்டு மக்களே - தமிழ் நாட்டு மக்களே - தங்கள் ஒற்றுமையை அறியாமையால் சிதறவிட்டு, அயலானுக்கு இடம்

கொடுத்துவிட்டார்களே!' என்று எண்ணிக் கலங்கினர். எனினும், அவ்விடுதலை வீரர்கள் நெஞ்சம் கலங்கினாலும், முற்றிலும் சோர்ந்துவிடவில்லை; காளையார் கோவிலுக்குள் நுழைந்த அயலார் படையை ஆன மட்டும் ஒரு கை பார்ப்பது என்ற உறுதியோடு துள்ளி எழுந்தனர்; 'எழுக படை! முழங்குக முரசம்! தாக்குக பரங்கிப் படையை!' என்று வாளுருவி ஆணை பிறப்பித்தனர். பெரும்போர் குமுறி எழுந்தது. அக்டோபர் மாதம் முதல் நாளன்று காலை 11 மணிக்குக் காளையார் கோவிலுக்குள் நுழைந்த கம்பெனிப்படைகள் கனல் வாய்ப் பீரங்கிகளைத் திறந்துவிட்டன. சுமார் இரண்டு மணி நேரம் ஒரே வெடி முழக்கம் - கடல் ஒலியை அடக்கும் பெருமுழக்கம்! பீரங்கியாலும் துப்பாக்கியாலும் சுட்ட வண்ணம் இருந்தனர். ஊரெங்கும் இரத்தப் பெருக்கு! பிணக்குவியல்! பயங்கர அலறல்! கணக்கற்ற உயிர்கள் இவ்வுலகைத் துறந்தன. மாட மாளிகைகள் மண்ணாயின. எங்கும் புகை மண்டலம்! இருள்! அழிவு! 'ஐயோ! ஐயோ!' என்ற ஓலம். அந்தோ! அன்று நடந்த போரில் காளையார் கோவில் பாழடைந்தே போய் விட்டது. அந்த அழிவின் அடையாளங்கள் இன்றும் காட்சி தருகின்றன.

இக்கடும்போர் நடந்த அன்று இரவு காளையார் கோவிலை அடுத்துள்ள காளையார் மங்கலத்தில் மருது பாண்டியரும் ஊமைத்துரையும் நடுக்காட்டில் நள்ளிரவில் கூடினர். அவர்களைச் சுற்றி நின்றது ஒரு பெரும் படை. நெடுந்தொலைவில் திசைகள் எட்டிலும் தீவர்த்தியோடு வாளும் கையுமாய் வீரர்கள் காவல் காத்து நின்றார்கள். அவர்கள் கையில் இருந்த தீயும் கண்களில் இருந்த நெருப்பும் ஒரே தன்மையாய்த்தான் இருந்தன.

விடுதலைப்படை சூழ்ந்திருக்க, எழுந்தான் ஊமைத்துரை. அவன் வாய் பேசவில்லை; கை விரல்களே பேசின. அந்த பேசாப் பேச்சை விழித்த கண் இமையாது பார்த்திருந்த வீரர்களுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. அவர்கள் அடிக்கடி கையை நிலத்தின் மேல் அறைந்து சபதம் செய்தார்கள். அப்படி என்ன ஊமைத்துரை உணர்த்தினான் தன் சாடை மொழியால்? மானம் உள்ள தமிழ் மறவர்களே, நம் எண்ணிக்கை குறைந்துவிட்டது; படைப்பலம் குன்றிவிட்டது. நம் ஊரும் கோட்டையும் அயலார் கையிற் சிக்கின! ஆனாலும், உயிருள்ள வரை போராடியே தீருவோம்! மானங்கெட்டு ஒரு வினாடியும் வாழ மாட்டோம்; சில ஊர்களும் சில கோட்டைகளும் போனால் என்ன? தமிழ் நாட்டில் எஞ்சியிருக்கும் கோட்டைக்குள் புகுவோம். சிதைந்து விட்ட மறவர் சீமையில் ஒற்றுமைச் சங்கு ஊதுவோம். இதோ! என் கையில் இருக்கும் இந்தத் துரும்பை நசுக்கி ஊதி எறிவது போலக் கம்பெனித் துருப்புகளைக் கசக்கி எறிவோம்! தமிழ் நாட்டிலிருந்து பரங்கியரை வெளியேற்றுவோம்! வெற்றி - இல்லையேல் சாவு!' இதுவே அவ்வீரப் பெருமகன் பேசிய பேச்சு. கேட்டிருந்த - அல்ல கண்டிருந்த மறவர்

உடம்பெல்லாம் கொதிப்பேறி அவர்கள் ஆரவாரத்தோடு எழுந்தார்கள்; அதற்குள் பெரிய மருது எழுந்ததைக் கண்டு அமைதியாய் அமர்ந்தார்கள்.

ஒரு வெள்ளி நாணயத்தை எடுத்துச் சுண்டிக்காட்டினான் பெரிய மருது; அதைக் கீழே இட்டுக் காலால் மிதித்தான்; மீண்டும் கையில் எடுத்தான்; 'பார்த்தீர்களா இவ்வெள்ளிப் பணத்தை! இதில் இருப்பது தமிழ் எழுத்தா, தமிழ் இலச்சினையா? இல்லை. இது கம்பெனியான் பணம். இந்தப் பிச்சைக் காசுக்கு ஆசைப்பட்டு நம்மவர் அறிவை விற்கின்றனர்; அருமைத் தாயினும் சிறந்த நாட்டின் மானத்தைக் காற்றில் பறக்கவிடுகின்றனர். வீரர்களே, இந்தப் பணத்தைத் தீண்டாதீர்கள்! காறி உமிழுங்கள்! நமக்குக் காசன்று பெரியது; மானம் - மறவர் சீமையின் சுதந்தரந்தான் பெரிது!' என்று கூறிக் கொண்டே உறுதியான அந்த வெள்ளி நாணயத்தை இரண்டாக வளைத்தான். அதைக்கண்ட தமிழ் மறவர் தோள் தட்டி எழுந்தனர். 'எட்டுத் திக்கிற்கும் செல்லுங்கள்! விடுதலைக் கனலை மூட்டுங்கள்! ஆம். விடுதலை! விடுதலை! அதுவே நம் உயிர்!' என்று ஆவேசத்துடன் கூவினான் பெரிய மருது.

ஓங்கி உயர்ந்த அப்பெருமகனது வீர முழக்கத்தைக் கேட்ட மறவர் கூட்டம், எண்டிசையிலும் மாயமாய் மறைந்தது. அவர்களோடு சேர்ந்து ஊமைத்துரையும் மருது பாண்டியரும் எங்கோ சென்று விட்டனர்.

காளையார் கோவிலைப் பிடித்துவிட்டான் கம்பெனியான். ஆனால், வீரமிக்க ஊமைத்துரையையும் அவன் உயிர்த் தோழர்களான மருது பாண்டியரையும் பிடிக்க முடியவில்லை. 'எவ்வளவோ அழிவிற்குப் பின் இன்னுமா இந்நிலை!' என்று கம்பெனி அதிகாரிகள் ஆத்திரம் அடைந்தார்கள். கர்னல் அக்நியூ துரையிடமிருந்து அதிகாரங்களை எல்லாம் ஏற்றுக் கொண்ட புதிய தளகர்த்தன் மக்காலே துரை, மூக்கெல்லாம் சிவந்தவனாய், 'அவர்களைப் பிடிக்காமல், பிடித்துக் கொல்லாமல் விடுவதில்லை!' என்று துப்பாக்கியைத் தூக்கினான்.

# 9. களப்பலி

கட்டுப்பாடு நிறைந்த பட்டாளமாயிருந்த மறவர் படை, நாலா திசைகளிலும் பிரிந்து போய்விட்டது. ஊமைத்துரை - மருது பாண்டியர்கள் விருப்பப்படி - திருமயம், திண்டுக்கல், சங்கரப்பதி முதலிய கோட்டைகளிலிருந்து புதியதொரு போராட்டத்திற்குத் தன்னையும் மக்களையும் ஆயத்தம் செய்வதே அப்படை வகுத்த திட்டம். அதன்படி தமிழகத்தின் கோட்டைகள் பலவற்றிலும் விடுதலை வீரர்கள் மறைந்து மறைந்து இருந்து தமிழ் மக்கள் நெஞ்சில் வீரபாண்டியக் கட்டபொம்மன் தூண்டி வைத்த விடுதலை விளக்கை அணையாவாறு காப்பாற்றும் வேலையில் முடுகி ஈடுபடலானார்கள். காற்றைப் போல எவர் கண்ணுக்கும் புலப்படாமல், ஆனால் சக்தி வாய்ந்த செயல்களைச் செய்யும் தீரர்களாய் அவர்கள் திகழ்ந்தார்கள். ஆயினும் என்ன? அயலார் - வெள்ளையர் - சூழ்ச்சி பலித்துவிட்டது. மருது பாண்டியரது கட்டுப்பாடான படை எட்டுத் திசைகளிலும் சிதறி ஓடச் சதி செய்தனர் வெள்ளையர். அச்சதி வென்றுவிட்டது. ஊமைத்துரை மட்டும் அடிக்கடி இந்த விடுதலை வீரர்கள் தங்கிவந்த கோட்டைகளுக்கு மாறுவேடம் பூண்டுபோய் வந்து கொண்டிருந்தான். இந்த உண்மையை எவ்வாறோ உய்த்துணர்ந்த தமிழ் மக்கள், தமிழ் நாட்டில் இருந்த பற்பல கோட்டைகளையும் 'ஊமையன் கோட்டை' என்றே பயபக்தியோடு சுட்டிக் காட்டத் தொடங்கினார்கள். அப்பெயர்கள் இன்றும் நிலை பெற்று விளங்குகின்றன. இவ்வளவெல்லாம் இருந்தும், ஊமைத்துரையாலும் மருது பாண்டியராலும் இழந்த பலத்தை மீண்டும் பெற முடியவில்லை. 'வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தது' போன்று ஆயிற்று அவர்கள் கதை.

வீரமிக்க மருது சகோதரர்கள், தங்கள் உயிரனைய உத்தமத் தோழர் - வீரர் - இருநூறு பேரோடு சங்கரப்பதிக் காடுகளில் கரந்துறையலானார்கள்: இந்நிலையில் கம்பெனியார் நாட்டு மக்கள் நெஞ்சில் பரப்பிய பொய்யும் பழியுமாகிய நஞ்சு, மிக விரைவாகச் செயற்படலாயிற்று. புதிய புதிய கதைகளைக் கம்பெனியார் நாளும் கட்டிவிட்டனர். புதிய புதிய பசப்பு மொழிகளை எங்கும் பரப்பிவிட்டனர். அவற்றுள் ஒன்று, கம்பெனியாருக்கு முதலில் சிறுதொகை செலுத்திப் பின் ஆண்டுதோறும் முறையாகக் குறைந்த வரி கட்ட ஆயத்தமாய் இருப்பவர்க்குச் சிவகங்கைச் சீமையில் பல கிராமங்கள் நிலையான கவுலாகக் கொடுக்கப்படும் என்பது. இச்செய்தியை

அறிந்த எண்ணற்ற மக்கள், மண்ணாசையால் அறிவிழந்து, ஆங்கிலக் கம்பெனிக்குச் சலாம் போடத் தொடங்கினார்கள். கம்பெனியார் பரப்பிய மற்றொரு பொய், 'மருது மன்னர்கள் கோடிக் கணக்கான பணத்தைக் காட்டில் உள்ள பாலை மரப் பொந்துகளில் ஒளித்து வைத்துள்ளார்கள்; அதை அவ்வாறு அவர்கள் மறைத்து வைக்க, மரத்தில் துளை போட்டுத் தந்தவர்களை எல்லாம் மறைப்பு வெளியாகாதிருக்கக் கொலை செய்துவிட்டார்கள்; இப்போது யார் அம்மரங்களைக் குத்தகை எடுக்கின்றார்களோ, அவர்களுக்கு ஆகூழ்!' என்பதாகும். இதைக் கேட்டவர்கள் நாக்கில் நீர் ஊறியது. கம்பெனியாரது அதிகாரம் பெற்றிருந்த பொம்மை ராஜா உடையணத்தேவனிடம் போய்க் காடுகளைக் கவுல் கேட்பதில் பலத்த போட்டி ஏற்பட்டது. காடுகளில் பெரும் பகுதி கவுல் விடப்பட்டது. கவுல் எடுத்த மக்கள் அவ்வளவு காடுகளையும் அழித்துத் தொலைத்தார்கள். அதனால், விடுதலை வீரர்கள் இயற்கையின் அரவணைப்பில் ஆறுதலோடு தங்கும் நிலையும் இல்லாது போயிற்று.

இதை அறிந்து மகிழ்ச்சி கொண்டிருந்த கம்பெனியார், தம் பட்டாளத்துடன் மங்கலம் என்ற கிராமத்தில் முகாம் அடித்திருந்தனர். அவ்வாறு தண்டு இறங்கி இருந்த வெள்ளையரிடம் போய்ப் பல ஊர்களின் 'பெருங்குடி மக்கள்' சலாம் செய்து, மாலை மரியாதைகளுடன் அவர்களை வரவேற்று, பல கிராமங்களைத் தங்கட்குக் கவுல் விடும்படி கேட்டுக் கொண்டார்கள். அதோடு அவர்களைத் திருத்திப்படுத்த வேண்டும் என்ற வீணாசையால், மன்னிக்க முடியாத ஒரு குற்றத்தையும் செய்யத் துணிந்து, மருது மன்னர்களும் ஊமைத்துரையும் மறைந்திருந்து மீண்டும் தமிழகத்தின் வீரப்போருக்கான ஏற்பாடுகளைச் செய்து வரும் சங்கரப்பதிக் காட்டையும் கோட்டையையும் காட்டிக் கொடுத்துவிட்டார்கள்! உண்மை அறிந்த கம்பெனியாரது உள்ளம் பூரித்தது. அவர்கள் நள்ளிரவில் கொள்ளையடிக்கும் கள்ளர் போலத் துப்பாக்கி பீரங்கிகளோடு சென்று, விடுதலை வீரர்கள் தங்கியிருந்த கோட்டையையும் காட்டையும் வளைத்துக் கொண்டு, குண்டு மாரி பொழிந்தார்கள். அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்திருந்த வீரர் பலரும் குண்டு பாய்ந்து பிணமாயினர். விழித்தெழுந்த வீரர் சிலரும் மருது மன்னர்களும் ஊமைத்துரையும் தன்னந்தனியராக வீரப்போர் புரிந்து தப்பினர். ஆனால், கம்பெனித் தளகர்த்தனா விடுவான்! அவன் சங்கரப்பதிக் காடுகளைச் சுற்றிலும் பட்டாளத்தைப் பரப்பிவிட்டான். முப்பெருவீரர்களின் விலைமதிக்க முடியாத தலைகட்கும் விலை வைத்தான் வெளிநாட்டு வெள்ளையன். அந்தத் தலைகட்கு வைத்த விலையை - ரூபாய் நாலாயிரத்தைப் - பெற வேண்டும் என்ற பேராசையால் கம்பெனிப் பட்டாளத்திலிருந்த சிப்பாய்கட்கு இடையே பலத்த ஊக்கமும் போட்டியும் ஏற்பட்டன. எந்த வெள்ளையன் - கர்னல் வெல்ஷ் - மருது சகோதரர்களிடம் வாள், கதை, வளரித்தடி முதலியவற்றைப் பயன்படுத்தும் கலையைக்

கற்றானோ, அவனே மருது சகோதரர்களையும் ஊமைத்துரையையும் எப்படியாவது பிடித்துத் தர வேண்டும் என்று நன்றி கெட்ட நெஞ்சத்தோடு துடியாய்த் துடித்தான் என்றால், மற்றவர்களைப் பற்றி என்ன சொல்வது!

இந்நிலையில் ஒரு நாள் கம்பெனிப்படை காடுகளை எல்லாம், மூலை முடுக்குகளை விடாது துருவித் துருவித் தேடிக் கொண்டிருக்கும் போது, தம் உயிரினும் இனிய படை வீரர்கள் உயிர் வாழ உணவின்றி அவதிப்படும் நிலையை எண்ணி, உள்ளமும் உடலும் சோர்ந்து, உடைவாள் ஒன்றே துணையாகத் தனி வழியே ஊமைத்துரையும் மருது சகோதரரும் நடந்து சென்று கொண்டிருந்தனர். வேட்டை நாய் போல இதை எப்படியோ மோப்பம் பிடித்த கம்பெனிச் சிப்பாய்கள், அவர்களை வளைத்துப் பிடிக்கப் பாய்ந்தார்கள். ஆனால், மருது சகோதரர்கள் மூச்சுள்ள வரை போராடும் தீரர்கள் அல்லவா? முப்பெருவீரர்கட்கும் கம்பெனிச் சிப்பாய்கட்கும் இடையே வெறிபிடித்த போர் - இறுதிப்போர் - நடந்தது. அப்போரிலும் கம்பெனிச் சிப்பாய்களையெல்லாம் வெட்டி வீழ்த்தி, மருது சகோதரர்களும் ஊமைத்துரையும் வெற்றி பெற்று விடுவார்களோ என்ற நிலை இருந்த போது, கொலைகாரக் கம்பெனிப்படையைச் சேர்ந்த ஒரு பாவி சுட்ட துப்பாக்கிச் சூடு, அந்தோ! பெரிய மருதுவின் தொடையில் பாய்ந்து எலும்பை முறித்தது! எந்த மாவீரன் எந்தக் கன்னித் தமிழ் நாட்டின் உரிமையை - மானத்தைக் - காக்கப் போரிட்டானோ, அவனே அதே தமிழக மண்ணில் காலூன்றி நிற்கவும் வலிமை அற்றவனாய், தரையில் - தமிழ்த் தாயின் மடியில் சாய்ந்தான். தான் பெற்ற வீரமைந்தன் இவ்வாறு தன் நாட்டு மக்களாலேயே கைவிடப்பட்டு அயலான் ஆயுத வெறிக்கு இரையாகி, அவதிப்பட்டு வீழ்ந்த காட்சியைப் பொறாதவளாய்த் தமிழ் அன்னை சிந்திய குருதிக் கண்ணீர் போல அவன் தொடையிலிருந்து வழிந்த தியாக இரத்தம் தமிழ் மண்ணை நனைத்துப் புனிதமாக்கியது! ஆம்! அவன் குருதி பட்டுத் தூய்மையான வீர மண்ணேதான் நம் தாயகமாம் தமிழ் நாடு!

பெரிய மருது உணர்ச்சியற்றுத் தரையில் சாய்வது கண்டதும், தன் வீரவாளைச் சுழற்றிக் கம்பெனிச் சிப்பாய்களது கழுத்தைப் பதம் பார்த்துக் கொண்டிருந்த ஊமைத்துரை, உடைவாளை வீசி எறிந்துவிட்டுப் பெரிய மருதுவை நோக்கித் தாவிப் பாய்ந்தான். 'உடுக்கை இழந்தவன் கைபோல'த் தனக்கு உற்றுழி உதவிய ஆருயிர் நண்பனுக்கு நேர்ந்த ஆபத்தைக் கண்டு உயிர் துடித்து, அவ்வீரனைக் காக்கத் தாவிப்பாயும் ஊமைத்துரையைக் கண்டதும், கூலிச் சிப்பாய்களுக்கு இடையில் சிங்கம் போலப் போரிட்டு, அவர்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்த சின்ன மருதுவும், வேங்கை போலக் கண்களில் தீச்சுடர் பறக்க ஓடி வந்து, உத்தம உடன் பிறப்பான பெரிய மருதுவைத் தன் இரு கைகளாலும் தூக்கித் தன் மடிமீது சாத்திக் கொண்டான். கல்லும் மண்ணும் கண்டு கலங்கும் இத்துயரம் நிறைந்த காட்சியைக் கண்டும் எஞ்சியிருந்த கம்பெனிச் சிப்பாய்களின்

கொலையுள்ளம் கொண்ட குருதி வெறி அடங்கவில்லை. ஆயுதமற்று அவ்விடுதலை வீரர்கள் அழுத கண்ணீரில் மூழ்கிக் கிடக்கும் நிலையில், 'இப்பொழுது தப்பின் எப்பொழுது வாய்க்குமோ!' என்று எண்ணியவர்களாய், வேட்டை நாய்கள் போல அவர்கள் மேல் வீழ்ந்து கவிந்து கொண்டார்கள் கம்பெனிச் சிப்பாய்கள்! தமிழ் மக்களது அடிமை விலங்கை முறித்து எறிந்து, அவர்களது மானத்தைக் காக்கப் போரிட்ட அம்மாவீரர்களுடைய திருக்கரங்களில் ஏகாதிபத்தியத்தின் இரும்பு விலங்குகள் ஏறின. வேல் பிடித்த வீரக் கரங்களில் - அறிவிலும் ஆண்மையிலும் சிறந்த மக்கட்கெல்லாம் பொன்னும் பொருளும் வாரி வாரி வழங்கிய அன்புக் கரங்களில் - விலங்கு பூட்டப்பட்ட அந்தக் கொடுங்காட்சியை இன்று நினைத்தாலும் நெஞ்சு பகீர் என்கிறது! அடி வயிற்றில் தீ மூள்கிறது!

மருது சகோதரர்களை, ஊமைத்துரையை, சின்ன மருதுவின் வீரமைந்தர்களான சிவஞானத்தை, பச்சிளம் பாலகனான துரைசாமியைக் கைது செய்வதோடு விட்டதா கொலைகாரக் கம்பெனி வர்க்கம்! அந்தோ! அவர்கள் செய்த ஆறாத்துயர் விளைக்கும் அநீதச் செயலை எவ்வாறு தமிழ் எழுத்தால் எழுதுவது! அந்தக் கொடுமை நிறைந்த செயலை நினைக்கும் போதே கண்களில் நீர் பெருகுகிறது!

கொலைக்கஞ்சாத கம்பெனிப்படை காரைக்குடியிலிருந்து மதுரை செல்லும் வழியிலுள்ள திருப்பத்தூர்க் கோட்டைக்கு விடுதலை வீரர்களை - மருது சகோதரர்களைப் - பலத்த காவலுடன் தூக்கிச் சென்றது. அங்கே மானங்காக்கப் போரிட்ட அவ்வீரர்களைச் சாதாரணமான ஒரு தூக்கு மரத்தில் ஏற்றிக் கொன்றது கம்பெனிப் பட்டாளம்! ஆம். அப்பொழுதெல்லாம் விடுதலை வீரர்களைத் தொடர்ந்தாற்போலத் தூக்கிலிடுவதற்குப் பிரிட்டிஷ் பேரரசு பலம் பொருந்திய தூக்குமேடைகளைக் கட்டி வைக்கும் 'நாகரிகத்தை' அடையவில்லை.

தமிழகத்தின் விடுதலைப் போரை வேறு எக்காலத்தினும் விழுப்பம் உடையதாகத் தொடர்ந்து நடத்திய மருது சகோதரர்கள், தூக்கிலிடப்பட்டார்கள் - அல்ல - கொலை செய்யப்பட்டார்கள். அவர்கள் பொன்னுடலங்கள் உயிரற்ற பிணமாய்த் தூக்கு மரத்தில் தொங்கின! அந்தோ! அந்தக் கோரக்காட்சியை என்னென்று கூறுவது! பெற்ற தாய் தந்தையார் இறப்பதையுங் கூடப் பொறுக்கலாம். ஆனால், பெற்ற தாயினும் தந்தையினும் பெரிய தாய் நாட்டின் விடுதலைக்காகக் காலமெல்லாம் போரிட்டு அல்லற்பட்ட அரும்பெருவீரர்களை, வெறிபிடித்த வெள்ளையர் தூக்கிலிட்டுக் கொன்றதை எந்தத் தமிழ் நெஞ்சந்தான் பொறுக்க முடியும்?

திருப்பத்தூர்க் கோட்டையில் மருது சகோதரர்களையும் அவர்கள் அருமை மைந்தனான சிவஞானத்தையும் தூக்கிலிட்டுக் கொன்ற

ஏகாதிபத்திய வெறியர்கள், ஊமைத்துரையை மட்டும் அதே இடத்தில் தூக்கிலிடவில்லை. குருதி வெறி பிடித்த அந்தக் கொலைகாரக் கூட்டம் ஆளைக் கொல்லுவதிலுங்கூட இடம் பார்த்து, நேரம் பார்த்து, நிலைமை பார்த்தல்லவா கொல்லும்!

பாஞ்சைப் பதியின் விடுதலைக்காக அண்ணனைப் போலவே - அல்ல அண்ணனைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகமாகவும் ஆவேசமாகவும் போரிட்ட அந்த ஊமைத்துரையை, அவன் சொந்தச் சீமையின் தலைநகராகிய பாஞ்சைப்பதிக்கே கொண்டு போய், அங்குள்ள பழைய பீரங்கி மேட்டிலேயே மரம் நட்டு, வாய் வல்லமையினும் வாள் வல்லமையே பெரிது எனக் காட்டிய பெரியோனை - தலையாய தமிழ் வீரனை - தூக்கிலிட்டுக் கருணையின்றிக் கொலை செய்தார்கள் கொடிய வெள்ளையர்கள்!

வீரபாண்டியக் கட்டபொம்மனைப் போலவே, தூக்கிலிடப்பட்டுக் கொலையுண்ட அந்த மாவீரர்கள் சாகும் தறுவாயில் என்னென்னவெல்லாம் நினைத்தார்களோ! அவர்கள் எதை நினைத்திருந்தாலும், நினையாமற் போயிருந்தாலும், இவற்றை மட்டும் உறுதியாக நினைத்திருப்பார்கள்:

'அந்தோ! தமிழகமே, உனக்காக உன் மானத்தைக் காக்க, ஆண்டுக் கணக்காக - அல்லும் பகலும் அதே நினைவாகப் போராடினோம்! துணிச்சல் நிறைந்த வீரர்களைப் பெற்ற உன் திருவயிறு, துரோகிகளையும் பெறாமல் இருந்திருந்தால், நிறத்தால், பேசும் மொழியால், பண்பாட்டால், எல்லாவற்றிலும் முற்றிலும் அயலாரான பிற நாட்டு வெள்ளையர் இப்படி எங்களைத் தூக்கிலிட்டுக் கொன்று கொக்கரிக்கும் அவமானம் நிறைந்த தீய நிலை ஏற்பட்டிராது. தொலையட்டும்! நாங்கள் போகிறோம். ஆனால், எங்கள் வாழ்வு கற்பிக்காத பாடத்தை உனக்கும் உன் வருங்காலச் சந்ததிக்கும் எங்கள் வீரச் சாவாவது கற்பிக்கட்டும்! நாங்கள் சாகிறோம்! ஆனால், எங்கள் குறிக்கோளும் நாங்கள் தொடங்கிய போராட்டமும் சாகா! அவை தொடர்ந்து நடைபெறும். அவற்றிற்கு வெற்றியன்றி வீழ்ச்சி இல்லை.'

ஆம்! அந்த வீரப் பெருமக்கள் இவ்வாறு எண்ணிய எண்ணம் வீணாகவில்லை. அவர்கள் இறந்தார்கள். ஆனால், அவர்களது குறிக்கோள் இறக்கவில்லை. அது வெற்றியே பெற்றது. தமிழகத்தின் மன்னர்களாலேயே தொடங்கி வைக்கப்பட்ட இந்திய விடுதலைப் போர் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த தமிழ் மக்களால் பண்படுத்திப் பாரறியச் செய்யப்பாடு பட்ட மனித குலத்தின் மணி விளக்காம் மகாத்துமாவால் வீழ்ச்சி காணாத வெற்றியோடு முடிந்தது!

தூக்கு மரத்தில் தொங்கி விடுதலைத் தேவியின் திரு முன்பில் களப்பலியான மருது பாண்டியரது ஆவி பிரியும் நேரத்தில் - தூக்கிலிடப்பட்ட அவர்களது கடைசி மூச்சும ஒடுங்குவதற்கு முன்

அவர்களைக் கருணை பொருந்திய கம்பெனி அரசாங்கத்தின் கொலையாளிகள், 'உங்கள் கடைசி விருப்பம் என்ன?' என்று கேட்டார்களாம். ஒரு வேளை வருத்தப்பட்டு ஏதாவது கூறுவார்கள் என்று எண்ணினார்கள் போலும் அந்தப் பேடிகள்! ஆனால், சிறிதும் கலங்காத வீரப் பார்வையோடு, நாடாளும் மன்னன் என்ற இறுமாப்போடு கணீர் என்ற குரலில் பெரிய மருது தன் கடைசி வேண்டுகோள்கள் இரண்டைக் கூறினான். அவற்றுள் முதலாவதாக அவன் விளம்பியது, 'நாங்கள் முள்ளால் கீறியவையும், சொல்லால் கூறியவையும், எள்ளால் இறைத்தவையும் ஆகிய பொருள்களை அவரவர்கட்கே அளித்துவிட வேண்டும்,' என்பது. இரண்டாவதாக அவன் செப்பியது, 'நாங்கள் ஆர்வத்தோடு கட்டிய காளையார் கோவில் சோமேசுவரசுவாமி கோவிலின் கோபுர வாயிற்படிக்கு நேரெதிரிலேயே எங்கள் உடலைச் சமாதி வைக்க வேண்டும்,' என்பது.

மறை மொழி போல அவ்வீரர் கூறிச்சென்ற இச்சொற்களை எண்ணும் போதெல்லாம் நம் மெய் சிலிர்க்கிறது! தூக்கிலிடப்பட்டுச் சாகும் போதும், 'எங்கள் உடல் அழிக! ஆனால், எங்கள் அற உள்ளம் நிலைபெறுக!' என்று எண்ணிய அந்த மாவீரர்களது அறவுணர்வும் ஆண்மை எழுச்சியும் நிறைந்த நெஞ்சத்தை என்னவென்று கூறி எவ்வாறு போற்றி வணங்குவது!

ஆயினும், 'சிந்தையிலே தூய்மையும் செயலிலே உறுதியும் கொண்டு எங்கள் தாய்நாட்டின் மானங்காத்த மருது பாண்டியர்களே, ஊமைத்துரைச் சீமானே, வீர பாண்டிய வேந்தே, செந்தமிழ் நாட்டு விடுதலை வீரர்களே, உங்கள் பொன் உடலை எங்கள் மூதாதையர்கள் மண்ணில் புதைத்தார்கள். ஆனால், நாங்கள் உங்கள் புகழுடலை எங்கள் உள்ளத்திலே புதைத்து, என்றென்றும் போற்றி வழிபடுவோம்! நீங்கள் ஊக்கிய விடுதலைப் போரில் வெற்றி கண்டு, எங்கள் தலைமுறை அடைந்துள்ள கண்ணினும் இனிய விடுதலையை எங்கள் உயிரினும் சிறந்ததாகக் கருதி காப்பாற்றுவோம்!' என்று உணர்ச்சியால் கலங்கும் கண்ணீர் மல்கக் கையுயர்த்திச் சூள் செய்வோமாக!

# 10. கர்னல் வெல்ஷைக் கேளுங்கள்!

கர்னல் ஜேம்ஸ் வெல்ஷ் தமிழகத்தின் உரிமைக்காகப் போரிட்ட வீரர்களுக்கு முதன்மையான பகைவர்களுள் ஒருவன். அவனைப் பற்றி இதற்கு முன் நாம் பல சந்தர்ப்பங்களிலும் படிக்கும் வாய்ப்புக் கிடைத்துள்ளது. அதற்கு இன்றியமையாக்காரணம், போர் வெறி பிடித்த அவன், வரலாற்று உணர்ச்சியோடு எழுதி வைத்துள்ள 'இராணுவ நினைவுகள்' என்ற புத்தகமே. நாட்குறிப்புகள் போல அவன் வரைந்து வைத்துள்ள செய்திகள் நம் ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவன. பாஞ்சாலங்குறிச்சியில் தொடங்கிய விடுதலைப் போரில் தீவிரப் பங்கு கொண்டு, இறுதியில் மருது பாண்டியரையும் பிடிக்க வேட்டை நாய் போல அலைந்து திரிந்த இந்த வெல்ஷ், மருது சகோதரர்களுக்கு நெருகிய நண்பனாய் இருந்து, பின்பு மிகக்கொடிய பகைவனாய் மாறினான் என்பதைப் பார்த்தோம். தமிழகத்தின் விடுதலை வீரர்கள் நடத்திய முதற்பெரும்போரின் இறுதி நிலையைப் பார்த்துக் கொண்டு நிற்கும் நாம், இந்த விடுதலைப் பகைவன் வாயிலாகவே தெரிந்து கொள்ள வேண்டிய திடுக்கிடும் செய்திகள் இன்னும் சில இருக்கின்றன.

பாஞ்சைப் பகுதியில் வீரன் ஊமைத்துரையைத் தூக்கிலிட்ட பீரங்கி மேட்டையும் வெள்ளைக்காரர்களுக்காக எழுப்பப்பட்ட நினைவுக்கற்களையும் தவிர, மற்ற இடங்கள் யாவும் நாசமாக்கப்பட்டு, உழுது உப்புடன் வரகைக் கலந்து விதைத்து, ஆமணக்குச் செடிகளை நடும் படியும், அப்பகுதியிலே எந்தத் தமிழ் மகனும் தலை காட்டக் கூடாது என்றும் பிரிட்டிஷ் பேரரசு கட்டளை இட்டது. குடி மக்கள் எல்லாம் விரட்டி அடிக்கப்பட்டார்கள். அந்த மண்ணுக்கு இருந்த ஆற்றல் கம்பெனியானையன்றி வேறு யாருக்கும் அவ்வளவு நன்றாக, பட்டறிவு வாயிலாகத் தெரியாது அல்லவா? தப்பித் தவறி யாரேனும் ஒரு பிடி மண்ணை அங்கிருந்து அள்ளினாலும் அவர்கள் வெள்ளையன் குண்டுக்கு இரையாகும் நிலையை ஏற்படுத்தினார்கள் கம்பெனி அதிகாரிகள்.

மருது சகோதரர்களையும் ஊமைத்துரையையும் கைது செய்த கம்பெனிப்பட்டாளம், அவர்களுடைய உற்றார், உறவினர், நண்பர், வேலையாள்கள் ஆகிய அனைவரையும் கைது செய்திருந்தது. அவ்வாறு கைது செய்யப்பட்டோருள் தூக்கிலிட்டுக் கொலை செய்யப்படாமல்

எஞ்சியிருந்தவர்கள், மருது சகோதரர்களைச் சார்ந்த 70 வேலையாள்களும், நண்பர் சிலரும், சின்ன மருதுவின் அருமை மகனும் பதினைந்து ஆண்டுகளே நிரம்பியவனும் ஆகிய துரைசாமியுமே ஆவார்கள். இவர்களுள் யாரையும் கொலை செய்யாமல், தீவாந்தர தண்டனை விதித்துக் கடலுக்கு அப்பால் உள்ள, 'பிரின்ஸ் ஆப் வேல்ஸ்' என்ற தீவில் கொண்டு போய்த் தவிக்கவிட முடிவு செய்தது இரக்கமே வடிவான கிழக்கிந்தியக் கம்பெனி! முக்கியமாகப் பதினைந்தே வயதான துரைசாமி தூக்கு மரத்தில் துடிதுடித்துச் சாகுமாறு செய்வது அவர்கள் கொலை நெஞ்சிற்கும் ஒவ்வாத கொடிய செயலாகப் பட்டது போலும்! ஆம்! கொலையாளியின் பகை நெஞ்சையும் உருக்கியது அவ்விளைஞனது கள்ளமற்ற இனிய முகம்.

அவ்விளைஞனையும் அவனோடு சேர்ந்த எழுபது பேர்களையும் தூத்துக்குடித் துறைமுகத்திலிருந்து காப்பாகக் கப்பலேற்றிக் கண் காணாத ஒரு கண்ணற்ற தீவில் ஆயுட் காலம் வரை அடைபட்டுக் கிடந்து சாகும்படி அனுப்பும் மிக முக்கியமான கடமை கர்னல் வெல்ஷ் துரைக்கே கிடைத்தது. உடுத்த உடையோடு, குற்றமற்ற முகத்தில் ஒளி வீசும் பதினைந்து ஆண்டு இளைஞனையும் அவனைச் சார்ந்தோரையும் பெற்ற தாய் நாட்டினின்றும் ஒரேயடியாகப் பிரித்துக் கடலுக்கு அப்பால் அனுப்பும் கொடுமையைக் கல் நெஞ்சத்தோடு தான் ஈடேற்றிய போது அவ்விளைஞனும் அவனைச் சார்ந்தோரும் இருந்த காட்சியையும், அதைக் கண்ட தன் நெஞ்சில் பீரிட்டு எழுந்த உணர்ச்சிகளையும் கர்னல் வெல்ஷே சொல்லட்டும், கேட்போம். இதோ கர்னல் வெல்ஷ் கூறும் உணர்ச்சி நிறைந்த செய்திகள்:

'போர் முடிந்ததும் எஞ்சியிருந்த பகைவர்களை எல்லாம் கப்பலேற்றித் தீவாந்தரம் அனுப்பும் பொறுப்பை நானே ஏற்க வேண்டியதாயிற்று. சின்னமருது மைந்தன் தனக்கு நேர்ந்த விபத்தை நொந்த உள்ளத்தோடு, ஆனால் கம்பீரமாகப் பொறுத்துக் கொண்டான். பெருந்தன்மையும் தியாக உணர்ச்சியும் தவழும் முகத்தோடு விளங்கிய அவ்விளைஞன் - இனிய பண்புகள் படைத்த அந்நல்லோன் - தன் கொடிய தலை விதியை ஒரு சிறு முணுமுணுப்பும் இன்றி ஏற்றுக் கொண்டான். ஆனால், அவனுடைய அழகு பொருந்திய திருமுகத்தில் குடி கொண்டிருந்த அந்த ஆழ்ந்த துயர உணர்ச்சியைக் கண்ணால் காண்பதும், கண்டு கலங்காமல் இருப்பதும் அறவே முடியாத செயல். அவன் எனது நேரடியான பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டிருந் தமையால், நான் அவன் தப்பி ஓடுவதற்கு உடந்தையாய் இருக்க முடியவில்லை. ஆனால், பலத்த பாதுகாப்புடைய ஒரே இடத்தில் நானும் அவனும் இருந்தமையால், அவனைத் தன் வேலையாள்களுக்கு நடுவிலேயே அவமானம் தரும் கைவிலங்குகளோடு நிற்கும் காட்சியினின்றும் விடுதலை செய்யக் கருதி, தன் முன்னாள் வேலையாள்களிடமிருந்து தனியாகப் பிரித்து வைத்தேன். அவன் கை விலங்குகளையும் கழற்றும்படி செய்தேன். அவ்வாறு நான் என்னுடைய வருந்தத்தக்க பழைய நண்பன் சின்ன மருதுவின் மக்களுள் தப்பி உயிரோடிருந்த அந்த ஒரே மைந்தன் - பதினைந்தே ஆண்டான இளைஞன் - நிலையான தீவாந்தர வாசத்திற்கு இரையாக்கப்பட்டிருந்த துரைசாமியின்

கை விலங்குகளைத் தளர்த்தியது வாயிலாகத் தான் என் உள்ளத்தில் ஏதோ ஒரு வகையான துன்பம் கலந்த ஆறுதலாவது ஏற்பட்டது.'

ஒரு குலத்துக்கு ஒரே மைந்தனாகிய அவ்விளைஞனையும், பிரிட்டிஷ் பேரரசு கொல்லாமல் கொல்வதற்காகக் கடல் கடந்த இடத்திற்கு அனுப்பியது. அக்கொடுமையை அப்பேரரசின் சார்பில் நடத்தி வைத்த கர்னல் வெல்ஷ் மேலும் அந்த நிகழ்ச்சியைச் சித்திரித்துக் காட்டும் பகுதி இதே இருக்கின்றது:

'எனக்குத் தரப்பட்டிருந்த பொறுப்பைப் தூத்துக்குடித் துறைமுகத்தில் லெப்டினன்டு ராக்ஹெட்டிடம் ஒப்படைத்த அந்தத் துயரம் நிறைந்த நாளை என்னால் ஒரு போதும் மறக்க முடியாது! அந்த இளைஞன் துரைசாமியைக் கடல் கடந்து போகும் கப்பலில் ஒப்படைத்த போது அழகொழுகும் அவன் முகத்தில் புதைந்து கிடந்த ஏக்கம் இப்பொழுதும் கண்ணெதிரே காண்பது போலவே தோன்றுகிறது. அதோடு அவனைப் போலவே வெந்துயரில் வீழ்ந்து கிடந்த அவன் நண்பர், பெற்ற நாட்டைப் பிரியும் நேரத்தில் உண்டான பெருந்துன்பத்தைப் பேசாமலும் ஆண்மையோடும் பொறுத்துக் கொண்ட காட்சி இன்றும் என் கண் முன் தோன்றுகிறது.'

இந்நிகழ்ச்சி நிகழ்ந்த போது கர்னல் வெல்ஷ், துரை சாமியைச் சந்திக்கும் கடைசி முறை அதுதான் என்று எண்ணிக் கலங்காத நெஞ்சமும் கலங்கினான். ஆனால், இன்னொரு சந்திப்பையும் ஏற்படுத்தி, அவன் மனத்தில் பெரியதோர் உணர்ச்சிப் பேரிடி விழுமாறு செய்யக் காலம் காத்துக் கொண்டே இருந்தது.

1818 ஆம் ஆண்டில் ஏறக்குறையப் பதினேழு ஆண்டுகள் கழித்து - கர்னல் வெல்ஷ், பினாங்கிற்குப் போனான். அப்போது நடந்த ஒரு நிகழ்ச்சியை அவனே கூறுகிறான்:

''ஒரு நாள் நான் அலுவலகத்தில் இருந்த போது, திடீரென மூத்துத் தளர்ந்து போன ஓர் ஏழைக் கிழவன் என் முன் தோன்றினான். பழைய நினைவு எதுவுமே அற்ற மனத்தோடு இருந்த நான், அவனை அதிகாரக் குரலில், 'நீ யார்? எதற்காக வந்தாய்?' என்று அதட்டிக் கேட்டேன். அவன் என்னைச் சிறிது நேரம் உற்று நோக்கினான். கோடு கோடாய்த் திரை விழுந்து போன அவன் முகத்தில் தாரை தாரையாய்க் கண்ணீர் வழிந்தோடியது. நெடுநேரம் கழித்துக் கடைசியாக அவன் சொல்லிய சொல், 'துரைசாமி' என்பது. ஆம்! அந்தச் சொல் என் இதயத்தில் ஈட்டி போலப் பாய்ந்தது!'

வெல்ஷ் வந்திருக்கிறான் என்ற செய்தியைக் கேட்டு அவ்வளவு உணர்ச்சியோடும் உருக்கத்தோடும் அவன் ஏன் அங்கே வந்தான்? தன் விடுதலைக்கா? உயிர்ப் பிச்சைக்கா? தப்பி ஓட உதவி நாடியா? இல்லை இல்லை. உரிமை என்பது போரிட்டு வாங்குவதே அன்றிப் பிச்சை கேட்டுப் பெறும் பொருள் அன்று என அறிந்து வாழ்ந்த வீரமரபின் கான்முளை அன்றோ அவன்? அப்படியிருக்க, அவன் எதற்காக வந்தான்? அக்காரணத்தைக் கர்னல் வெல்ஷே கூறுவதை இன்று நினைத்தாலும் கண்ணீர் பெருகுகிறது! கர்னல் வெல்ஷ் கூறுவதைக் கேளுங்கள்:

'என்னிடம் அவன் வந்த காரணம், தன் தாயகத்தில் வாழும் உறவினர்களுக்குக் கடிதம் அனுப்ப உதவவேண்டும் என்பதற்காகத்தான். ஆனால், சட்டம் அதற்கு இடம் தராததால், என்னால் ஒன்றும் செய்ய முடியாது என மறுத்துவிட்டேன்.'

தன் 'நினைவுகளின்' இறுதியில் கர்னல் வெல்ஷ் கூறியதைப் படிக்கும் போது நம் உள்ளத் துயர் எல்லை கடந்து போகிறது! இதோ இது பற்றி வெல்ஷின் இறுதிச் சொற்கள்:

''துரைசாமிக்கு என்னால் ஒன்றுமே செய்ய முடியாமல் போய்விட்டது. ஆனால், இறுதியாக என் உள்ளத்தில் உள்ள நம்பிக்கையை மட்டும் கூறிவிடுகிறேன். துரைசாமியைப் பற்றி மேலே நான் சொல்லியுள்ள சொற்களை வருங்காலத்தில் படிக்கும் எந்தக் கிழக்கிந்தியக் கம்பெனித் தலைவனாவது அருள் கூர்ந்து ஒரு குற்றமும் செய்யாத இந்த மனிதனுக்கு முழு விடுதலை தர முடியா விடினும், இவன் படும் அல்லலையாவது குறைக்க முற்படுவானாக!"

வெல்ஷ் நினைத்த இந்த நினைப்பும் மண்ணாயிற்று. கடல் அலைகட்கு அப்பால் கொண்டு போய்க் கொல்லாமல் கொல்லப்பட்ட தியாகி துரைசாமி விட்ட மூச்சும் முடிவும் கால அலைகளோடு கலந்து கரைந்து ஒன்றாகிவிட்டன. அந்தோ! துரைசாமி, சாகாமல் செத்துக் கொண்டிருந்த நீ, இந்தச் செந்தமிழ் நாட்டோடு உன் தாயினத்தோடு எழுத்தாலாவது, கடிதத்தாலாவது, உறவு கொள்ளத் துடியாய்த் துடித்தாயாமே! தாரை தாரையாக உன் கண்ணீர் இன்பத் தமிழ் நாட்டை எண்ணி எண்ணி வழிந்ததாமே! உன் பகைவனே இந்த உண்மையை உளம் திறந்து கூறுகிறானே! துரைசாமி, தியாகத்தின் திருவிளக்கே, தூக்கில் ஏறிய உன் தந்தையர்கூட ஒரு நொடியில் உயிர் போக்கிக் கொண்டனர். ஆனால், நீயோ, ஆண்டுக் கணக்காகச் சாகத் துடித்தாயாமே! எங்கள் குலதெய்வமே, தியாக ஒளியே, உன் வீரத் திருவடிகளை அகக்கண்களாலாவது கண்டு, தொட்டு வணங்குகிறோம்! அப்பா, துரைசாமி, உன்னையும் உன் தியாகத்தையும் ஒரு நாளும் மறவோம்! மறவோம்!

## 11. வீரர்களை வணங்குவோம்!

தமிழகத்தின் 'ஜிப்ரால்டர்' என்று வெள்ளையராலேயே போற்றப்படும் பேரும் புகழும் படைத்து விளங்கியது பாஞ்சாலங்குறிச்சி. உலகம் முழுவதிலும் இணை காண ஒண்ணாப் பலம் பொருந்திய மிகப் பெரிய இயற்கை அரண்களைப் பெற்றுத் திகழும் ஜிப்ரால்டரை ஒருவர் பிடித்துவிட்டால், பின்பு மத்தியதரைக் கடல் முழுவதும் அவர் ஆதிக்கத்திற்கு உள்ளாவது எளிது. அவ்வாறே, 'பாஞ்சாலங்குறிச்சியை - தமிழகத்தின் ஜிப்ரால்டரை - வென்று விட்டால், தென்தமிழ் நாடு முழுவதும் நம் அடிப்படும்,' எனக் கருதினர்! அத்தகைய வன்மையும் வான் புகழும் பெற்றிருந்த பாஞ்சாலங்குறிச்சியின் பெயரை மக்கள் நினைப்பினின்றும் அழித்துவிட வேண்டும் என்ற ஆத்திரத்தில், ஆணவத்தில், நாட்டுப் படங்களினின்றும் அகற்ற ஆணையிட்டது கம்பெனி வர்க்கம். மேலும், அத்திருநகரைத் தலைநகராகக் கொண்ட பாஞ்சைப் பதியிலும் அதைச் சுற்றிச் சூழ்ந்த நாட்டிலும் வாழ்ந்த வீர மறவர்கள்,

'மண்வெட்டிக் கூலிதின லாச்சே! - எங்கள்
வாள்வலியும் வேல்வலியும் போச்சே!
விண்முட்டிச் சென்ற புகழ் போச்சே! - இந்த
மேதினியில் கெட்டபெய ராச்சே!'

என்று நெஞ்சம் துடிக்கும்படி அவர்கட்கு நேர்த அழிவை நினைத்தே ஆத்திரமுற்றுப் பாடுவது போலப் பாரதியார் பாடியுள்ள இக்கவிதை காட்டும் காட்சியே கன்னித்தமிழகத்தின் நிலையாயிற்று.

இவ்வளவு கொடுமைகளையும் செய்த பேரரசு இன்று அழிந்து தொலைந்து விட்டது! அதன் அழிவிற்காக ஒரு துளி கண்ணீர் விட்டும் எவரும் அழவில்லை. ஆனால், பாஞ்சைப்பதியின் வீர வரலாற்றையும், வீர பாண்டியக் கட்டபொம்மன், ஊமைத்துரை, மருது பாண்டியர் ஆகியோரது வீரவாழ்வையும் எண்ணுந்தொறும் நன்றி உணர்ச்சியால் கண்கலங்கி மெய்நடுங்கும் மக்கள் தமிழக மெங்கும் நிறைந்துள்ளார்கள்.

வெள்ளையரால் விளைந்த எவ்வளவோ கொடுமைகட்குப் பின்னும் தமிழ் நாட்டுப் பெருங்குடி மக்கள் உள்ளத்தில் மருது பாண்டியர்களைப் பற்றிய நினைவு ஒரு சிறிதும் மங்கவில்லை. இந்த உண்மையை அடிமைப்பட்டுக் கிடந்த இந்தியாவில், காந்தி மகானது விடுதலைப் போர் தொடங்கப்பெறாத இருள் சூழ்ந்த காலத்தில். 1891 ஆம் ஆண்டு, மேத்

திங்களில், தென்பாண்டிச் சீமையில் இன்பத் தமிழ் ஏடுகளைத் தேடிச் சுற்றுப்பயணம் செய்த காலஞ்சென்ற டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தாம் எழுதியுள்ள 'என் சரித்திரம்' என்ற தனிச்சிறப்பு நூலில் எவ்வளவு உணர்வோடு சித்திரித்துள்ளார் என்பதை இங்கே நாம் நினைவுபடுத்திக் கொள்ளல் பொருத்தமும் பயனும் உடையதாகும்.

'குன்றக்குடியைச் சார்ந்த இடங்களிலெல்லாம் ஜனங்கள் மருது பாண்டியரைப் பற்றிய வரலாறுகளையும் கொடையையும் பாராட்டியும் அவரைப் பற்றிய தனிப் பாடல்களைச் சொல்லியும் இன்புற்றனர்.

'சிறுவயல் ஜமீந்தாரும் பல வரலாறுகளைச் சொன்னார்; 'நான் வசித்து வரும் இந்த மாளிகை மருதுபாண்டியர் இருந்த அரண்மனையாகும். அதனால், இவ்வூருக்கு அரண்மனைச் சிறுவயலென்னும் பெயர் உண்டாயிற்று. சிவகங்கைச் சம்ஸ்தானத்துத் தலைவர்களுள் அவரைப் போலப் புகழ் பெற்றவர் சிலரே. தம்முடைய வீரத்தால் சம்ஸ்தானத் தலைமையை அவர் பெற்றார். அவர் மிக்க தெய்வபத்தி உடையவர். பல ஸ்தலங்களில் அவர் திருப்பணி செய்திருக்கிறார்; முக்கியமாகக் குன்றக்குடியில் சில மண்டபங்களைக் கட்டியிருக்கின்றார். அவரால் செப்பம் செய்யப்பட்ட திருக்குளம் 'மருதாபுரி' என்ற பெயரோடு இப்போதும் விளங்குகிறது. அவருடைய சம்ஸ்தானத்தில் இருபத்தொரு தமிழ் வித்துவான்கள் இருந்தார்கள். அவரைப் பாராட்டி அவர்கள் பாடிய செய்யுள் பல.' ஜமீந்தார், மருது பாண்டியருடைய கல்வியிலும், கொடையிலும் வீரத்திலும் ஈடுபட்டவராதலின், மணிக்கணக்காக அவர் புகழை இவ்வாறு சொல்லிக் கொண்டிருந்தார்.'

தென்பாண்டி நாட்டில் இன்றும் மருது பாண்டியர் புகழைப் பேசாமல் பேசிக் கொண்டிருக்கும் எத்தனையோ வரலாற்றுத் தொடர்புடைய செல்வங்கள் உள்ளன. சான்றாகக் குன்றக்குடிக் கோவிலில் மருது பாண்டியர் கட்டியுள்ள மண்டபங்கள், அவர் புதுப்பித்த குளம், காளையார் கோவிலில் வீரர்களால் கட்டப்பட்ட சோமேசுவரசுவாமி கோவில், அங்கே உள்ள இவர்களது சமாதி, அதற்கருகில் இவர்கள் தாயாரால் வெட்டுவிக்கப்பட்டதாகக் கூறப்படும் ஊருணி. காரைக்குடிக்கும் தேவகோட்டைக்கும் இடையே உள்ள சங்கரப்பதிக் காட்டில் பாழடைந்து கிடக்கும் சங்கரப்பதிக் கோட்டை, அக்கோட்டையில் காணப்படும் சுரங்க வழி, மருது பாண்டியர் புகழுடன் தொடர்புடைய இத்தகைய பிற இடங்களையும் கட்டடங்களையும் விடுதலை இந்தியாவின் அரசு, தலை சிறந்த வரலாற்று நினைவுகளாகக் கருதி என்றென்றும் போற்ற வேண்டும். மருது பாண்டியர் தியாகத்தால் மனத்தைப் பறிகொடுத்த நம் தமிழ் நாட்டுக் கலைஞர்கள், குன்றக்குடியிலும் மருது பாண்டியருடைய சமாதிகள் உள்ள காளையார் கோவிலிலும் மிகப் பெரிய அளவில் அவ்விரு உடன்

பிறப்பாளார்களுடைய திருவுருவங்களை அழகும் ஆண்மையும் ஒளிரச் செதுக்கி வைத்துள்ளார்கள். இத்திருவுருவங்களைத் தெய்வச் சிலைகட்கு இணையாகக் கருதி நம் முன்னோர்கள் கோவில்களிலேயே இவற்றுக்கு இடம் அளித்த அருமைப்பாட்டை என்னென்று போற்றுவது! ஆம்! உண்மையான நாட்டுப் பற்றும் உயர்வான தெய்வப் பற்றும் வேறு வேறானவை அல்லவே! இவ்வுண்மையை நம் மக்களும் அரசும் நன்குணர்ந்து போற்றுவதோடு சிலை வடிவில் நிற்கும் அச்செந்தமிழ் வீரர்கள் பெயரால் நாடெங்கும் மக்கட்குப் பல வகையான பயனுடைய நினைவு நிலையங்களை நிறுவ வேண்டும்.

இவ்வாறெல்லாம் செய்ய வேண்டுவது நம் கடமை மட்டுமன்று; கொள்கைக்காக உயிர் கொடுக்கும் வீரர்களைத் தெய்வமெனக் கருதி வழிபடும் தீந்தமிழ்ப் பண்பாடும் இதுவேயாகும். இடைக்காலத்தில் இப்பண்பாடு பழுதுபட்டது. வீர வழிபாடு தொலைந்து வெற்று வழிபாடுகள் பல்கின. அதனால், வழிபாட்டின் பயனே பாழாகியது. இந்நிலை மாறுங்காலம் நாட்டின் வளர்ச்சியும் வாழ்வும் ஆயிரம் மடங்காக ஓங்கி மேன்மை அடையும் ஒப்பற்ற காலமாகும்.

இந்தியாவை - தமிழகத்தை - அடக்கி ஆளவந்த ஆணவம் மிக்க ஆங்கிலக் கொள்ளைக் கூட்டத்தை ஆரம்ப நாளிலேயே ஆவேசத்துடனும் ஆண்மையுடனும் எதிர்த்து, இருபத்தைந்து மாதங்கள் இடைவிடாது போரிட்டு மடிந்த எண்ணற்ற வீரர்களை ஈன்றெடுத்த பெருமை தமிழ் மண்ணிற்கே உள்ள தனியுரிமையாகும். அவ்வீரப் போரைத் தொடர்ந்து நடத்திய பெருமை, இந்திய மக்களுக்கு, இளைஞர்கட்கு உண்டெனினும், அப்போரைத் தொடங்கி வைத்துத் தலைமை தாங்கிய பெருமை தமிழகத்தின் மன்னர்கட்கே உண்டு. ஆம்! இந்திய விடுதலைப் போரை நாட்டின் மானங்காக்கும் ஆண்மைப் போரை - தொடங்கி வைத்த முதல் இந்திய இனம் தமிழ் இனமே ஆகும் - அப்போரில் மூண்டெழுந்த தியாகத் தீயில் குதித்துச் சிறைப்பட்டும், குண்டுக்கும் பீரங்கிக்கும் இரையாகியும், தூக்கு மேடைகளில் தொங்கியும், தீவாந்தரத் தண்டனைகளைப் பெற்றும் அவதிப்பட்ட முதல் இனம் தமிழ் இனமே! அத்தகைய வீரத்தமிழ் இனம் தந்த இணையில்லா இரு மாணிக்கங்களைப் பற்றியே சிறப்பாக இப்புத்தகத்தில் படித்தோம்.

மருது உடன் பிறப்பாளர்கள் நம் தாய் நாட்டின் மானங்காத்த மாண்பு மிக்க வீரர்கள்: தமிழ்ச் சாதியின் விடுதலை வேட்கையையும் தியாக வெற்றியையும் மலைமேல் இட்ட மங்காச் சுடர் விளக்காகச் செய்த புகழுடையோர்கள்.

'இதந்தரு மனையி னீங்கி இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதந்திரு விரண்டு மாறிப் பழிமிகுந் திழிவுற் றாலும்

விதந்தரு கோடி யின்னல் விளைந்தெனை யழித்திட் டாலும்
சுதந்தர தேவி! நின்னைத் தொழுதிடல் மறக்கி லேனே!'

என்று பின்னாளில் பாடினார் தேசீய கவி பாரதியார். அவர் கவிதையின் பொருளையே தங்கள் வாழ்வாக்கி, வாழ்ந்தும் மடிந்தும் அழியாப் புகழ் கொண்ட ஆண்மைச் சிங்கங்கள் மருது பாண்டியர்கள். வீரபாண்டியன் நடத்திய போர் சில வாரங்களே நடந்தது. ஆனால் மருது பாண்டியர் நடத்திய போரோ, பல மாதங்கள் நடந்தது. வீரபாண்டியன் நடத்திய போர் பெரும்பாலும் பாஞ்சைப் பதிக்குள்ளேயே அடங்கிவிட்டது. ஆனால், மருது பாண்டியர் நடத்திய போரோ, பல சதுர மைல் தூரம் பரவி, ஊர் மாறி ஊர், கோட்டை மாறிக் கோட்டை, காடு விட்டுக் காடு, எல்லை விட்டு எல்லை நடந்தது. எல்லா வகையாலும் வீரபாண்டியன் தொடங்கி வைத்த போரை, மாற்றான் பகைக்கு அஞ்சாது, காலந்தந்த வாய்ப்பால் அண்ணனினும் திறமையாகத் தம்பி ஊமைத்துரை நடத்திய போரை மருது சகோதரர்கள் ஊமைத்துரையின் உறுதுணையோடு சற்றேறக்குறைய ஐந்து மாதங்கள் இடையறாது நடத்தினார்கள். அப்போர்க் காலத்தில் அவர்கள் காட்டிய வீரமும், செய்த தியாகமும், பட்ட துன்பமும் கொஞ்சமோ! விடுதலை வீரர்கள் இரவும் பகலும் போரிட்டார்கள்; எண்ணற்ற வீரர்கள் பலியாவது கண்டு கண்ணீர் விட்டார்கள்; 'எவ்வாறேனும் வெற்றி பெறுவோம்! அயலாரை முறியடிப்போம்! அமைதி காண்போம்!' எனத் துடித்தார்கள். ஆனால், அவர்கட்கு அமைதி வெற்றியால் கிட்டவில்லை - வீரச் சாவாலேதான் கிட்டியது.

'உலக வரலாற்றிலேயே இவ்வளவு ஆயுத பலம் நிறைந்த ஒரு கூட்டத்தை, ஆள் பலம் மட்டுமே கொண்ட ஒரு கூட்டம், இவ்வளவு வீரத்துடனும் திறமையுடனும் எதிர்த்துப் போராடியது எக்காலத்திலும் இல்லை, 'என்று வரலாற்று அறிவுடையோர் கூறும்படி செய்தனர் மருது பாண்டியர்! முறத்தினால் புலியைக் காக்கும் மொய்வரைக் குறப்பெண் போலத் தாக்கி, 'உருளுக தலைகள்! ஓங்குக மானம்!' என்று போர் முரசு கொட்டிக் கடும்போர் புரிந்தனர். ஆயினும், வெற்றி பெறவில்லை. ஆனால், அழியாப்புகழ் எய்தினர். 'மன்னா உலகத்து மன்னுதல் குறித்துத் தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனர்.'

வீழ்ந்துவிட்ட பெல்ஜியத்திற்கு வாழ்த்துக் கூறி அமரகவி பாரதியார் அருமையாக ஒன்பது பாடல்கள் பாடியுள்ளார். அவற்றில் உள்ள ஒவ்வொரு சொல்லும் வீர மறவர் மருது பாண்டியர் நடத்திய போரையும் அதன் முடிவையுமே கவனத்தில் வைத்துப் பாடியதாக அமைந்துள்ளது. 'அறத்தினால் வீழ்ந்துவிட்டாய்! வண்மையால் வீழ்ந்துவிட்டாய்! மானத்தால் வீழ்ந்து விட்டாய்! வீரத்தால் வீழ்ந்துவிட்டாய்! துணிவினால் வீழ்ந்துவிட்டாய்,' என்றெல்லாம் அவர் உள்ளம் கொதித்துக் கூறும்

சொற்களில் அயல் நாடாகிய பெல்ஜியத்திற்குத்தான் ஆறுதல் கூறுகிறார் என்றாலும், தென்பாண்டி நாட்டில் பிறந்த அந்தத் தீந்தமிழ்க் கவிஞர் பெருமானார் தம் உள் மனத்தில் தம் தாயகத்திற்காக நடந்த விடுதலைப் போரில் பலியான கட்ட பொம்மனை, ஊமைத்துரையை, மருது பாண்டியரை எண்ணியே, தம் கொதிக்கும் உள்ளத்திற்கு ஆறுதல் கூறிக் கொள்ளவே அவ்வாறு பாடினார் என்று தோன்றுகிறது.

இவ்வாறு தம் நாட்டுப் பெருங்கவியின் - மக்களின் - உள் மனத்தை எல்லாம் உருக்கும் ஆற்றல் படைத்த வாழ்வு வாழ்ந்த மருது பாண்டியரைத் தமிழகத்தின் விடுதலைக்காகப் போரிட்ட வீரர்களாக மட்டும் கருதுவது தவறாகும். அவ்வீரர்களை அடிமை வாழ்வை எதிர்த்து விடுதலைப் போர் புரிந்த மாஜினி, கரிபால்டி, ஆபிரகாம் லிங்கன், ஜியார்ஜ் வாஷிங்டன் போன்ற உலகப் பெருவீரர்களோடு சேர்த்து வைத்துப் போற்றுவதே பொருத்தமாகும்.

மருது பாண்டியரைப் பெற்றெடுத்த பூமிக்கு, அவர்கள் எந்த ஆயுதப் பலத்தை, ஆள் பலத்தாலும், ஆயுதப் பலத்தாலும் வெல்ல முடியவில்லையே என்று எண்ணித் துடித்தார்களோ, அந்த ஆயுதப் பலத்தை வெல்லத்தக்க ஒரே கருவி அன்பு பலமே என்று உலகில் நிறுவிக் காட்ட வல்ல ஒரு மகாத்துமாவைப் பெற்றெடுக்க ஒன்றரை நூற்றாண்டுகள் சென்றன. ஆயினும், நாம் பேறு பெற்றவர்கள்! 'மருது பாண்டியரும் நம் முன்னோர்களும் காண முடியாத விடுதலையை நாம் காணும் பேறு பெற்றோம்!' என்று நினைக்கும்பெழுது இன்ப வெள்ளம் நம் உள்ளத்தில் பொங்குகிறது! ஆயினும், அந்தக் களி வெறியில் நாம் இன்று தலை நிமிர்ந்து துய்க்கும் விடுதலையை அடைவதற்காகப் போராடிப் போராடி உயிர் துறந்த உத்தமர்கட்குத் தலை வணங்கி நன்றி செலுத்த வேண்டிய கடமையை மறவாது இருப்போமாக!

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.'

என்பது வள்ளுவர் வாக்கன்றோ?

'பூர்விக மகான்களின் ஞாபகத்தைத் தீவிரமாகப் பத்தியுடன் வளர்க்காத நாட்டில் புதிய மகான்கள் பிறக்க வழியில்லை. தப்பித் தவறி ஓரிருவர் தோன்றினாலும், அவர்களுக்குத் தக்க மதிப்பிராது!' எனத் தெளிந்து கூறினார் நாட்டுப் பற்றோடு தொலை நோக்கும் சேரப் படைத்த செந்தமிழ் நாட்டுப் புலவர் பாரதியார். மகான்கள் என அவர் கூறியது மாவீரர்கட்கும் முற்றிலும் பொருந்தும்.

நம் தாய் நாட்டின் வருங்காலம் ஒளியும் பயனும் படைத்த பொற்காலமாக வேண்டுமானால், எண்ணற்ற மாவீரர்கள் - மருது பாண்டியர்கள் தேவை. விடுதலைக்காகப் போராட அல்ல - போராடிப்

பெற்ற விடுதலையைப் போற்றிப் பாதுகாக்க.

எனவே, நமக்காகவும் நம் தாயகத்தின் மானத்திற்காகவும் போராடிய அப்பெருவீரர்களை வணங்குவோம்! வரலாறாய், காவியமாய் விளங்கும் அவர்கள் வாழ்வில் நம் அறிவை - நெஞ்சைப் - பறிகொடுப்போம்! மானத்தோடு வாழ்ந்து, மானங்காக்கவே போராடி, மானத்துக்காகவே தூக்கு மேடையிலும் ஏறி, 'சாவு வருக! மானம் வாழ்க!' எனப் புன்முறுவலோடு அப்பெருவீரர்கள் உயிர் துறந்த அந்த ஒப்பற்ற காட்சியை நம் மனக்கண்களால் காண்போம்! தூக்குமேடையில் தாய் நாட்டின் மானத்திற்காகத் தொங்கிய அத்திருவுருவங்களை எண்ணும் போது பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்து விட்டுப் புதிய தமிழகத்தை, புதிய இந்தியாவை, புதிய உலகை ஆக்கும் பணியில் அனைவரும் ஒன்றுபட்டு முனைவோம்!

வாழ்க மருது பாண்டியர் புகழ்!

# 1. கால வெளியிலே

கன்னித் தமிழகத்தின் புகழ் அழியாத் தன்மை வாய்ந்தது. அப்புகழ்க்கு ஊற்றாய் விளங்கும் ஏற்றம் பழம்பெருமை வாய்ந்த பாண்டிப் பெருநாட்டிற்கு உண்டு. புலவர் நாவில் பொருந்திய கொடி-வையையென்னும் பொய்யாக் குலக்கொடி - பாய்ந்து வளங்கொழிக்கும் பொன்னாடு பாண்டி நன்னாடு. தொன்று தொட்டுக் கலை மணமும் கடவுள் மணமும் கமழும் பெருமை அத்திருநாட்டிற்கு உண்டு. முத்தும் முத்தமிழும் சேர விளையும் சிறப்பு அச்செந்தமிழ் நாட்டின் தனி உரிமை. பன்னூறு ஆண்டுகளாய்ப் பாடிவரும் கவிஞர்களின் பாட்டாலும், வரலாற்று ஆசிரியர்களின் எழுதுகோலாலும் அந்நாட்டின் மாண்பை முற்றிலும் அளந்து காட்ட முடியவில்லை. ஏட்டிலடங்கா இலக்கிய உயர்வும், ஆராய்ச்சியிலடங்காச் சரித்திரப் புகழும் ஒருங்கே படைத்த அந்நாட்டின் மாட்சியைக் காலவெள்ளத்தையும் எதிர்த்து நின்று கலங்கரை விளக்கமாய்க் காட்டி நிற்கும் கல்லெழுத்துக்களின் கீர்த்தியோ, பெரிது; மிகப் பெரிது!

சங்கம் நிறுவிச் செந்தமிழ் வளர்த்த அந்நாட்டின் பெருமையைப் பனம்பாரனார் காலம் முதல் பாரதியார் காலம் வரை தோன்றிய தமிழ்ப் புலவர்களுள் பாடாத - பாடி மகிழாத - பாவலரும் உண்டோ? 'சோமன் வழி வந்த பாண்டியா, நின் நாடுடைத்து நல்ல தமிழ்,'[1] என்பது ஔவை மூதாட்டியின் அமிழ்தனைய திருமொழியன்றோ? கொற்கை முத்தும் சங்கத் தமிழும் பாண்டி நாட்டின் இசையைப் (புகழை) பாரெங்கும் பரப்பியது போன்றே, அந்நாட்டில் வாழையடி வாழையாய் வந்த மன்னரும் மாந்தரும் தம் வாழ்விலும் வரலாற்றிலும் காட்டிய மானமும் மறமும் அவர்தம் தாய்த்திருநாட்டினை 'வீரத்தின் விளைநிலம்' என்று வையகம் போற்றுமாறு செய்துள்ளன. ஆரியப் படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் முதலாக, சென்ற தலைமுறையில் தோன்றிய செந்தமிழ் வீரர் வ.உ.சி. ஈறாக ஆயிரம் ஆயிரம் அஞ்சா நெஞ்சுடை அரும்பெருமறவர்களை ஈன்ற பெருமை பாண்டி நாட்டிற்கு உண்டு. ஈன்ற பொழுதினும் அவரைச் சான்றோர் என்று மன்பதை எல்லாம் போற்றியது கண்டு மெய் சிலிர்த்து மனங்குளிர்ந்து பூரித்த பெருமையும் நம் தமிழ்த் தாய்க்கு உண்டு.

பாண்டி நாட்டை முத்தமிழ் நாட்டினும் முதன்மை வாய்ந்த திருநாடு எனல் மிகையாகாது. குமரித்துறையும், குற்றால அருவியும், வைகை ஆறும், கோடை மலையும் அணி செய்யும் அந்நாட்டின் இயற்கை அழகிற்கு ஓர்

இணையும் உண்டோ? ஐவகை நிலத்தின் அழகும் அருமையும் அமைந்த அந்நாட்டின் பெருமை சான்ற தலைநகரிலேதான் திருக்குறள் முதலாய தெய்வத் தமிழ் நூல்களும் அரங்கேறின என்றால், அங்கு நிலைத்திருந்த புலவர் கூட்டுண்ணும் தமிழ்ப் பேரவையின் மாட்சிமைக்கும் நிகரும் உண்டோ? 'கூடலினாய்ந்த ஒண்தீந்தமிழின்' சுவையை உண்டு களிக்க ஆண்டவனும் வட பால் கைலை வரையினின்றும் மெல்ல மெல்லத் தென்பால் வந்து கோயில் கொண்டுள்ள ஆலயங்கள் பலப்பல அமைந்து விளங்கும் செம்மை சான்றது வழுதியின் வளநாடு. இடையிடையே மதவெறிக் கொடுமைகள் மலியினும், பண்டுதொட்டு இன்றுவரை பல்சமயமும் ஒருங்கிருந்து ஓங்கி வளர்ந்த பண்பாடுடையது பாண்டிப் பெருநாடு. இலக்கியமும் வரலாறும் உணர்த்தும் இவ்வுண்மைக்கு ஓர் ஒப்பும் உண்டோ? எல்லாச் சமயங்கட்கும் உயிராய் - உட்பொருளாய் - விளங்கும் ஒரு பரம்பொருளின் திருவருளில் ஆரத்திளைத்த அத்தென்னாட்டில் எந்நாட்டவரும் வியக்க, எண்ணற்ற நீதி மன்னரும், நெறி பிறழா அமைச்சரும், விழித்த கண் இமையா வீரரும் பிறந்து அழியா விழுப்புகழ் கொண்டனர் எனின், அந்நாட்டின் அரசியல் மேம்பாட்டிற்கோர் உவமையுண்டோ?

இவ்வாறு பல்வகையாலும் வானுயர் சிறப்புற்று விளங்கும் பாண்டி வளநாட்டில் - தமிழ்த்தாயின் மதிமுகமெனத் திகழும் திருநாட்டில் - வழிவழியாய்த் தமிழினத்தின் வீரத்தை விளக்கப் பிறந்த தீரப் புதல்வர்களுள் இருபெரு மாணிக்கங்களைப் பற்றி ஆராய்வதே இந்நூலின் தலையாய நோக்கம். ஆம். அவர்களைப் பற்றிய ஆராய்ச்சிக்கே ஒரு நூலும் வேண்டும் - இந்நூல்போல் பன்னூல்களும் வேண்டும் எனின், அவர்களை ஈன்ற தாய்நாட்டின் - தென்பாண்டிச் சீமையின் - புகழ் 'வான்சிறிதாப் போர்த்துவிடும்' வல்லமை படைத்ததன்றோ?

படைப்புக் காலந்தொட்டே விளக்கம் பெற்றிருக்கும் பேறு படைத்தவை பாண்டி நாடும் பாண்டியர் ஆட்சியுமென்பர் தமிழ்ப் பேரறிஞர்.[2] அவ்வளவு பழமை சான்ற அந்நாட்டின் எல்லையைப் பற்றிக் கூறும் குறிப்புக்கள் பல தமிழ் இலக்கியங்களிலும், வரலாற்று ஏடுகளிலும், கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன.

> 'வெள்ளா றதுவடக்காம்; மேற்குப் பெருவழியாம்;
> தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்; உள்ளார
> ஆண்ட கடல்கிழக்காம்; ஐம்பத் தறுகாதம்
> பாண்டிநாட் டெல்லைப் பதி.'[3]

என்பது ஒரு பழம் பாட்டு. இத்தகைய பாடல்கள் பற்றி டாக்டர் கால்டுவெல் தம் நூலின் விரிவாகக் குறிப்பிடுகின்றார்.

பரந்த எல்லையையும் விரிந்த நிலப்பரப்பையும் கொண்ட பாண்டி நாட்டு ஆட்சியின் ஆரம்பகாலத்தைத் 'தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடும் சூழ்கலை வாணர்களாலும்' என்று தொடங்கியது என்று ஆய்ந்துரைக்க இயலவில்லை. சுருங்கச் சொன்னால், பாண்டி நாடு காணாத காட்சி இல்லை; அத்திருநாட்டை ஆளாத ஆட்சி இல்லை. பாண்டி நாட்டைப் பற்றிய பெருமை பொருந்திய குறிப்புக்கள் பல, பாரத நாட்டின் மிகப்பழமையான நூல்களாகிய இராமாயணம், பாரதம் முதலியவற்றிலேயே காணப்படுகின்றன. இலங்கை வரலாற்றை இயம்பும் மகா வமிசத்திலும் பன்னூறு ஆண்டுகட்கு முன் பாரத நாட்டையும் இன்பத் தமிழகத்தையும் காலார மனமாரச் சுற்றிப் பார்த்து அதன் அழகிலும் வளத்திலும் சொக்கிப்போன பிற நாட்டுப் பேரறிஞர்களின் வரலாற்றுச் சிறப்புடைய குறிப்புக்கள் பலவற்றிலும் பாண்டி நாட்டின் பெருமை வெள்ளிடைமலையாய் விளங்குகிறது. அயல் நாட்டவர் குறிப்புக்களாலேயே அன்றி, அருமைத் தமிழ் நூல்கள் பலவற்றாலும் பொலிவு பெறும் மாறன் நாட்டின் மாட்சி அளவிட்டு உரைக்கும் நீர்மையதோ?

பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் பாண்டி நாட்டின் வரலாற்றைச் சங்க காலப் பாண்டியர் காலம், சோழப் பேரரசின் காலம், பிற்காலப் பாண்டியர் காலம், முகம்மதிய மன்னர்களின் காலம், விஜய நகர வேந்தர்கள் காலம், நாயக்கர் காலம், ஆர்க்காட்டு நவாபுகளின் ஆட்சிக்காலம், பிரிட்டிஷ் வல்லரசின் காலம் என்னும் எட்டுப் பெரும்பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

சங்ககாலப் பாண்டியர் வரலாற்றைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம் போன்ற பழந்தமிழ் இலக்கியங்கள் பலவும் நமக்கு விளக்கி வைக்கின்றன. அசோகன் ஆட்சிக்கும் அடிமைப்படாத தமிழகம், சுதந்தர ஆட்சி நடத்திய பொற்காலம் சங்ககாலம். தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், வெற்றி வேற்செழியன், ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன், உக்கிரப்பெரு வழுதி, நன்மாறன் முதலான பாண்டி வேந்தர் தமிழர சோச்சிய அந்நாளில் பாண்டி நாட்டுத் துறைமுகங்களிலும், தலை நகரங்களிலும் ரோம கிரேக்க நாட்டு வணிகர்கள் தமிழகத்தின் பல்வளங்களை - சிறப்பாக முத்துக் குவியல்களை - வாங்கிச் செல்வதற்குக் கட்டித் திரவியங்களுடன் வந்து கையேந்திக் காத்திருந்தார்கள். எல்லா வகையிலும் செல்வச் செழுமை நிறைந்து தேசீய ஒளியும் இன்பமும் பொங்கித் திகழ்ந்த அப்பொற்காலத்திற்கு நிகரான நற்காலத்தை அதற்குப்பின் பாண்டி நாடும் தமிழகமும் கண்டதில்லை.

கி.பி. ஆறாம் நூற்றாண்டளவில் பாண்டியப் பேரரசிற்கும் பல்லவப் பேரரசிற்கும் இடையே போராட்டம் ஏற்படலாயிற்று. அதன் விளைவாகத்

தளராதிருந்த பாண்டியர் ஆட்சி தளரலாயிற்று என்பது கல்வெட்டுக்களால் விளங்கும் வாய்மையாகும். ஆயினும், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை பாண்டியர்கள் ஆட்சி தளர்வுற்ற நிலையிலும் தலை கவிழாது நிலைத்திருந்தது என்றே கூறலாம். மேலும், சில கல்வெட்டுக்களையும் இலங்கையின் வரலாறு கூறும் மகாவமிசத்தையும் துணையாகக் கொண்டு ஆராயுமிடத்து, பாண்டி மன்னர் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கை மீது படையெடுத்துப் பெரிய இடர்ப்பாடு எதுவுமின்றி வெற்றியுறும் அளவிற்குப் பலம் வாய்ந்து இருந்தது பாண்டியர் ஆட்சி என்பதும் புலனாகிறது.

இதற்குப்பின் மூன்று நூற்றாண்டுகளுக்குச் சோழப் பேரரசு தலை தூக்கி நின்றது. முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் பாண்டி நாட்டின் ஆட்சி முழுதும் சோழர் வசம் ஆயிற்று. இம்முதலாம் பராந்தகச் சோழன், தன்னை 'மதுரையின் ஆட்சியைக் கைப்பற்றியவன்' என்று கூறிக்கொள்வதில் பெருமை கொண்டான். இவ்வுண்மையை ஈழ நாட்டின் மீதும் படையெடுத்து வெற்றி கண்ட இவன் பெயரால் தென்குமரி முதல் திருக்காளத்தி வரை பரவிக் கிடக்கும் கல்வெட்டுக்கள் பறை சாற்றுகின்றன. ராஜராஜன் காலத்திலும், முதலாம் ராஜேந்திர சோழன் காலத்திலும் சோழ ஆட்சியைப் பொறுமையோடு ஏற்று வந்த பாண்டி நாடு, முதலாம் ராஜாதிராஜன் காலத்தில் சுதந்தர வேட்கை கொள்ளலாயிற்று. அவ்வேட்கைத் தீ வளரச் சேரரும் சிங்களவரும் நெய் வார்த்தனர். ஆயினும், எடுப்பில் தோல்வியே எதிர்ப்பட்டது. 11-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தொடங்கிய சோழ-பல்லவர் போராட்டம், எத்தனையோ சோதனை நிறைந்த கட்டங்களைக் கடந்து, 12-13-ஆம் நூற்றாண்டு வரை நடந்தது. அந்நூற்றாண்டுகளிலேதான் சோழரின் வீழ்ச்சி வேகம் கொள்ள ஆரம்பித்தது. சோழரின் வீழ்ச்சி பாண்டியரின் எழுச்சிக்கு வித்தாயிற்று. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து சங்கிலித் தொடர் போலப் பிற்காலப் பாண்டிய் மன்னர் சிலர் ஒருவர் பின் ஒருவராய்ப் பாண்டி நாட்டை ஆண்டனர். இம்மன்னர் வரிசையில் சற்றேறக்குறையப் பதினைந்து மன்னர்களைப் பற்றிய செய்திகள் நமக்குக் கல்வெட்டுக்களால் தெரிகின்றன. 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை பாண்டி நாட்டில் அரசோச்சிய இம்மன்னர்களின் ஆட்சிக் காலம், நிகழ்ச்சிகள் நிறைந்த சரித்திர காலமாகக் காட்சி அளிக்கிறது. மார்க்கபோலோவைப் போன்ற மேனாட்டு யாத்திரிகர்களும், முகம்மதிய சீன சிங்கள வரலாற்று அறிஞர்களும், 13-ஆம் நூற்றாண்டின் முடிவிலும், 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பாண்டி நாடு செல்வச் செருக்குடனும் வெற்றிப் பெருமிதத்துடனும் புகழின் உச்சியில் வீற்றிருந்த பெற்றியினை ஒரு மனமாக ஒத்துக் கொல்லத்திலிருந்து வடக்கே நெல்லூர் வரை விரிந்து பரந்து செல்வக் களியாட்டில் செம்மாந்திருந்த பாண்டி

நாட்டைத்தான் மார்க்க போலோ 'உண்மையான பெரிய இந்தியா' என்றும், 'உலகிலேயே அழகும் பெருந்தன்மையும் பொருந்திய பூமி இதுவே,' என்றும் உவகையோடு குறிப்பிடுகிறார். அக்காலத்திலேதான் பாண்டிநாட்டின் பார்த்திபர்கள் மங்கோலிய மன்னன் குப்ளேகானுக்குத் தங்கள் அரசியல் தூதுவர்களை அனுப்பி வைத்தார்கள் என்று சீன வரலாறு செப்புகிறது. சுருங்கச் சொன்னால், இரண்டாவது முறையாகப் பாண்டி நாடு எண்டிசையும் புகழ் மணக்க விளங்கியது என்னலாம்.

இதை அடுத்து -வாழ்வுக்குப்பின் தாழ்வு வருகிறது. இக்காலத்திலேதான் வடநாட்டு முகம்மதியர் தென்றமிழ் நாட்டின் மீது படையெடுத்தனர். டில்லி முகலாய சக்கரவர்த்தியான அல்லாவுதீன் என்பானுடைய படைத்தலைவன் மாலிக்காபூர் தக்காணத்தைப் பிடித்துக் கொண்டு, பாண்டி நாட்டை ஊடுருவி, இராமேசுவரம் வரை சென்று, தன் படைவலியின் அடையாளங்களை அங்கு ஏற்படுத்தினான். அவ்வமயம் பாண்டி நாட்டில் தலை விரித்தாடிய அழிவையும் துயரையும் நாம் வரலாற்றுச் சுவடிகளில் படிக்கும்போது வருத்தமே மிகுகிறது! 'இறைவா, இனி ஒரு போதும் இந்திய வரலாற்றில் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடைபெறச் செய்ய வேண்டா!' என்று நம்மை அறியாமல் நம் நெஞ்சம் இறைவனைப் பிரார்த்திக்கிறது. மாலிக்காபூரின் படையெடுப்பால் நிலைகுலைந்து போன பாண்டி நாடு, 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய விஜய நகர ஆட்சியால் ஒரு வகையில் - ஒருவாறு - புத்துயிர் பெறலாயிற்று. புகழ் சான்ற விஜய நகரப் பேரரசின் தென்கோடி நிலையமாய் மதுரை மாநகரம் விளங்கியது.

விஜய நகர ஆட்சியின் வேரிலே கிளைத்ததுதான் நாயக்கர்கள் ஆட்சி. இந்த ஆட்சிக்காலத்தையும் இதைத் தொடர்ந்து வரும் ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சியையும் பற்றியே நாம் சிறிது அதிகமாகக் கவனம் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை நாயக்கர் ஆட்சி பாண்டி நாட்டை ஆட்கொண்டிருந்தது. இந்நாயக்கர் ஆட்சிக் காலத்தில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சிகளுட்சில, நாம் ஆராய இருக்கும் வீரத் தலைவர்களின் வரலாற்றோடு மிக நெருங்கிய தொடர்புடையனவாகும்.

பழம்பெரும் பாண்டி நாட்டின் எல்லைகளைப் பற்றிச் சற்றுமுன் சிந்தித்தோம். அவற்றின் படி இற்றை நாள் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுர மாவட்டங்களும் திருவாங்கூர்க் கொச்சியின் ஒரு பகுதியும், கோயம்புத்தூர் மாவட்டத்தின் ஒரு பகுதியும் பாண்டி நாட்டின் நிலப்பரப்பு எனக் கொள்ளலாம். இனி இப்பாண்டி நாட்டின் கீழ்த்திசையில் இப்போது இராமநாதபுர மாவட்டம் உள்ள பகுதி, பண்டு தனி அரசுக்குரிய 'மறவர்

நாடாய்' விளங்கியது. பாண்டிப் பேரரசின் ஆட்சிக்கு அஃது ஆரம்பகாலங்களில் உட்பட்டே இருந்தபோதிலும், பின்னாளில் தனிச்சீமையாக அதைப் புகழ் மிக்க 'சேதுபதி' என்பார் ஆண்டு வந்தனர். சேதுபதிகள் ஆண்ட அப்பகுதியைச் 'சேதுநாடு' என்று அறிஞர் கூறுவர். 'சேதுபதிகள் யார்? அவர்கட்கு அப்பெயர் அமைய காரணம் யாது? அவர்கள் வரலாறு என்ன?' என்பன குறித்து இங்கு நாம் சிந்திப்பது பொருத்தமும் பயனும் உடையதாகும்.

சேது நாட்டின் பழமை இராமாவதாரத்தோடு தொடர்பு கொண்டு தொடங்குகிறது. ''இராமபிரானார், தம் பெரும்படைகளுடன் இலங்கை செல்ல வேண்டி வானரத் தலைவர்களைக் கொண்டு கட்டுவித்த திருவணையே 'சேது' எனப்படும். இந்தச் சேதுவைக் காவல்புரிதற்கு அப்பிரானாரால் நியமிக்கப்பெற்ற மறவர் தலைவன் வழி வந்தவரே சேதுபதிகள் என்பது அவர்களின் பழைய வரலாறு. இது பற்றியே திருவணை காவலன், சேது மூல ரக்ஷா துரந்தரன் என்ற சிறப்புப் பெயர்களும் இவர்கட்கு வழங்கலாயின. இவ்வரலாற்றின் உண்மை எப்படியாயினும், இவர் பழமையான மரபினர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இன்றைக்கு முந்நூறு ஆண்டுகட்குமுன் பாண்டி மண்டலத்தை மதுரையிலிருந்து ஆட்சி புரிந்த முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கர் கால முதலே 'சேதுபதி' என்ற சிறப்புப் பெயர் இவ்வரசர்க்கு வழங்கி வருகிறது. இது, சாஸன மூலமாகவும் வரலாற்று நூல்கள் வாயிலாகவும் தெளியப்பட்டதாகும்.

''சேதுவேந்தர் ஆண்டுவந்த நாடு, இப்போதுள்ள இராமநாதபுரம் சிவகங்கைச் சீமைகளும், புதுக்கோட்டை தஞ்சைப் பகுதிகளுமாய் முன்பு விரிந்திருந்தது. முகவை என இலக்கிய வழக்குப் பெறும் இராமநாதபுரம், இவர்கள் தலை நகரம். தெய்வ பத்தியிலும் செங்கோலாட்சியிலும் சிறந்திருந்தனர் இவ்வரசர். சேது நாட்டில் புதுமையும் பழமையுமான தேவாலயங்கள் பல இவர்களால் ஆக்கப்பட்டும் காக்கப்பட்டும் வந்தன. அவற்றின் பொருட்டு இன்னோர் உதவிய நிதிகளும் நிலங்களும் எண்ணிறந்தவை. இத்தலங்களுள் தலை சிறந்தது தேவை எனப்படும் இராமேச்சுரமாகும். தனுஷ் கோடி என்று உலகப் பிரசித்திபெற்ற புண்ணிய தீர்த்தத்துறையும் இச்சேதுநாட்டைச் சார்ந்ததே. இத்தலத்தையும் புண்ணியத் துறையையும் தரிசிக்க வேண்டிச் சேது யாத்திரையாக வரும் இப்பரத கண்டத்துப் பலதேச மக்களுக்கும் வழிப்பயம் சிறிதும் இல்லாமற் செய்தும், வேண்டிய இடங்களில் உண்டி உறையுள் முதலியன உதவியும் பாதுகாத்து வந்தார்கள் சேதுபதிகள். இவற்றிற்காக நாடெங்கும் இவர்கள் அமைத்துள்ள அறச்சாலைகள் மிகப்பல. மற்றும் இன்னோர் அமைத்த தரும நிலையங்களும் வீரம் முதலிய அருஞ்செயல்களும் நாடெல்லாம் நன்கறிந்தவை!''

இவ்வாறு சேதுநாடு தந்த செந்தமிழ்ப் புலவர் பெருமானராகிய திரு. மு. இராகவையங்கார் தம் நூலில் எழுதிச் செல்கிறார்.[4]

புகழ் மிக்க இச்சேதுபதிகளின் இதிகாச - புராண - காவிய காலப் பழமையைப் பற்றியும் அவர்களது சென்ற காலச் சிறப்புக்களைப் பற்றியும் 'இராமநாதபுர மானுவல்' விரிவாகப் பேசுகிறது. 'சேதுபதிகள் குடும்பமும் அவர்கள் ஆட்சியும் மிகவும் தொன்மை வாய்ந்தன என்பதில் ஓர் ஐயமும் இல்லை. ஆனால் அவர்கள் ஆட்சிப்பீடம் ஏறிய காலத்தை அறுதியிட்டு உரைப்பது அரிது. கிடைத்துள்ள சான்றுகள் அவர்கள் பாண்டியப் பேரரசு சிதைவுற்ற காலத்தில் பெரும்புகழ் மேவத் தொடங்கினர் என்று நம்மை ஊகிக்க வைக்கின்றன.' என்று இராமநாதபுர மானுவல் ஆசிரியர் கூறும் வாசகம் மட்டும் இங்கு நினைவில் இருத்ததற்கு உரியது.[5] மேலும், அவர் ஒரு சுவையான குறிப்பையும் தம் அரிய ஆராய்ச்சி நூலில் தெரிவிக்கிறார்.[6]

'இராமபிரானாரால் ஆட்சியிலமர்த்தப்பட்ட முதல் சேதுபதி, அப்பெருமானாரிடமிருந்து வளைதடி என்ற ஆயுதத்தையும் பெற்றார் எனக் கூறப்படுகிறது. அவ்வளை தடி ஓர் அரை வட்ட வடிவினதாய் உள்ளது. அது யாத்திரிகர்களின் நம்பிக்கையில் இராமபிரானார் பயன்படுத்தும் சக்கரத்தின் ஒரு பாதியைச் சுட்டுவதாகும். இங்குக் குறிப்பிடப்படும் வளைதடி இராமநாதபுரம் மாவட்டத்தில் போர் வீரர்கள் பெரிதும் பயன்படுத்திய ஆற்றல் மிக்க கருவியாகும். இதன் வல்லமையைப் பற்றி அறிவதற்கான வாய்ப்புக்கள் பல இந்நூலினுள்ளே பற்பல இடங்களிலும் வருகின்றன. பலம் பொருந்திய - இராமநாதபுர மாவட்டத்திற்கே உரிய - இவ்வாயுதம், தமது வில்லால் மூவுலகையும் தொழவைத்த இராமபிரானார் தொடர்பால் எவ்வளவு பழமை எய்திவிடுகிறது! ஆம். இராமபிரானார் தமிழ் நாட்டின் தலையாய வீரர்களுக்குத் தந்த பரிசு இணையில்லாப் பரிசேயாகும்!

பழமை வாய்ந்த சேதுபதிகளின் பரம்பரையில் தோன்றிய சடையக்கத்தேவர் எனப்படும் உடையன் சேது பதியே சரித்திர பூர்வமான நம் ஆராய்ச்சிக்குத் தலைமை தாங்கும் முதல் சேதுபதி. கி.பி.1605 முதல் 1621 வரை மறவர் நாட்டை ஆட்சி புரிந்த இவருக்குப்பின் சற்றேறக்குறைய 15 சேதுபதிகள் இராமநாதபுரச் சீமையை ஆண்டு மங்காப் புகழ் பெற்றார்கள். முதல் சேதுபதியாகிய சடையக்கத் தேவர், மதுரையை அப்போது ஆண்ட கிருஷ்ணப்ப நாயக்கர் பேராதரவால் அரியணை ஏறினார். காடுகளும் கள்வர் பயமும் நிறைந்திருந்த மறவர் நாட்டில் இராமேசுவரம் செல்லும் யாத்திரிகர்களை - குறிப்பாக மதுரை நாயக்கர்களின் குரு ஒருவரை - புண்ணிய யாத்திரை செய்து முடியும் வரை பத்திரமாகப் பாதுகாத்துப் புகழ் கொண்டமையால், சடையக்கத் தேவர் மதுரை நாயக்கர்கள் பால் பெற்ற சன்மானமே இராமநாதபுர ராஜ்யம் என்று சொல்வது ஒரு வகையில் உண்மையே ஆகும். தம் காலத்தில் மதுரையை

ஆண்ட நாயக்க மன்னராகிய முத்துக் கிருஷ்ணப்பருக்குப் பல்லாற்றாலும் பெருந்துணை புரிந்தார் சடையக்கர்.[7] இவ்வாறு உற்றுழி உதவி உறுதுணை புரிந்த சடையக்கரைத் தொன்மை வாய்ந்த மறவர் நாடு பல்லாற்றாலும் சீர் கெட்டு இருந்த நிலை மாறிச் சிறப்புறும் வகையில் அரசராய் ஏற்று, அவர் வாயிலாக மறவர் சீமைக்குப் புத்துயிர் அளித்த புகழ் மதுரை நாயக்கமன்னராகிய முத்துக்கிருஷ்ணப்பரையே சாரும் என்பது வரலாற்று ஆசிரியர்கள் துணிபு. பதினேழு ஆண்டுகள் பயன் செறிந்த நெறியில் ஆட்சி புரிந்த சடையக்கர், 1621-ஆம் ஆண்டு இயற்கை எய்தினர். அவருக்குப் பின் அவர் மைந்தர் கூத்தன் சேதுபதி என்பவர் 13 ஆண்டுகள் அமைதியாய் நாட்டை ஆண்ட பின் 1635-ல் காலமானார். கூத்தன் சேதுபதிக்குக் குழந்தைகள் இல்லை. எனவே, அவருக்குப்பின் அவர் சகோதரர் இரண்டாம் சடையக்கத்தேவர் எனப்படும் தளவாய் சேதுபதி அரசுரிமை பெற்றார். தளவாய் சேதுபதி, தமக்குப்பின் தம் தமக்கை மகனாராகிய இரகுநாத தேவருக்கு ஆட்சி உரிமையைத் தரத்தாம் கருதியிருப்பதை முன் கூட்டியே அறிவித்தார். இதன் விளைவாக நாட்டில் பெருத்த உள்நாட்டுக் கலவரம் மூண்டது.

மறவர் சீமையின் ஆட்சி உரிமை குறித்து எழுந்த போர் அப்போது காளையார் கோவிலை ஆண்டு வந்தவரும் சடையக்கத்தேவரின் காதற்கிழத்தி மகனாருமான தம்பித் தேவருக்கும் தளவாய் சேதுபதிக்குமிடையே முற்றியது. இவ்வுள் நாட்டுப் போரால் மறவர் சீமையில் ஏற்பட்ட பிளவை நன்கு பயன்படுத்திக் கொண்டு தன் செல்வாக்கை வளர்க்க விரும்பியது மதுரை நாயக்கர் ஆட்சி. சற்றுமுன் சேதுபதிகள் நாட்டை மீண்டும் உருவாக்கி அதற்கு உயிர் கொடுத்தவர் மதுரை நாயக்க வேந்தராகிய முத்துக்கிருஷ்ணப்பரே எனப் பார்த்தோ மல்லவா? அவரால் உருவாக்கப்பட்ட மறவர் சீமை நாளுக்கு நாள் புகழும் பலமும் பெற்று வந்தமை, முத்துக்கிருஷ்ணப்பருக்குப்பின் மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்கட்குச் சற்றும் பிடிக்கவில்லை. மதுரையை அடுத்துப் பலமுள்ள ஓர் ஆட்சி பாண்டி நாட்டில் கால்கொண்டு இருப்பது என்றென்றைக்கும் ஆபத்தே என்று அவர்கள் கருதினார்கள். தளவாய் சேதுபதி காலத்தில் மதுரையை ஆண்டவர் புகழ் வாய்ந்த திருமலை நாயக்கர், வாய்த்த தருணத்தை வயணமாகப் பயன்படுத்தித் தமது வல்லமையை நிலைநாட்ட விரும்பினார். திருமலை நாயக்கரின் திருவுள்ளத்தை அறிந்த தம்பித்தேவர், அவர்பால் சரண் புகுந்தார். அடைக்கலமாய்ப் புகுந்த தம்பித்தேவரை ஆதரித்து அவரையே மறவர் சீமையின் மன்னராகப் பிரகடனம் செய்தார் திருமலை நாயக்கர்; அதோடு அவர்க்குப் பணமும் படை வலியும் பரிந்து அளித்து, தளவாய் சேதுபதியைத் தரணி ஆளும் பொறுப்பினின்றும் நீக்கவும் ஏற்பாடுகள் செய்தார். தளவாய் சேதுபதிக்குக் 'கலகக்காரன்' என்ற பெயர்

வழங்கப்பட்டது. இவற்றை எல்லாம் பாண்டி நாட்டின் பேரரசர் என்ற முறையிலேயே திருமலை நாயக்கர் செய்தாராம். தளவாய் சேதுபதியை அடக்கப் பெரும்படை புறப்பட்டது. அதற்குத் தலைமை தாங்கினார் சரித்திரப் புகழும் இலக்கியப் புகழும் ஒருங்கே பெற்ற இராமப்பையர் என்னும் தளகர்த்தர். கடும் போர் நடைபெற்றது. ஆனால், சேதுபதியை வெற்றி கொள்ள முடியவில்லை. இராமேசுவரத் தீவில் பாதுகாப்பான அரணுக்குள் தங்கியிருந்து மாற்றானைக் கதி கலங்கச் செய்தார் சேதுபதி; தீவைச் சூழ்ந்துள்ள ஆழமான நீர்ப்பரப்பை எதிரிகள் எளிதில் கடக்க இயலாதவாறு ஆவன செய்தார். ஆனால் கூர்த்த மதியும் படை ஆற்றலும் மிக்க பொறி இயல் வல்லார் துணை கொண்டு எவ்வாறோ தீவுக்குள் படையுடன் நுழைந்தார் மதுரைத் தளபதியாரான இராமப்பையர் என்பவர். இதற்கு உதவியாக இலங்கை, கொச்சி என்னும் இடங்களிலிருந்து ஐந்து கப்பல்களில் பலர் ஐரோப்பியர் 'இறக்குமதி' செய்யப்பட்டனர் என்று கூறப்படுகிறது. நுழைய முடியாத அரணுக்குள்ளும் நுழைந்து விட்டார் இராமப்பையர். வெற்றித்திரு அவர் வியன் தோள்களை மேவும் நேரம்! திடீரெனத் தளகர்த்தர் இராமப்பையரின் மூச்சு முடிந்தது! எனினும், அவர் மருமகன் அவர் பதவியை ஏற்று 'மாமனுக்கு மருகன் இளைத்தவனல்லன்' என்று எவரும் கூறும் வண்ணம் போர் புரிந்து வெற்றி கொண்டான். தளவாய் சேதுபதியும் அவர் உறவினராகிய தணக்கத்தேவரும் கைது செய்யப்பட்டு, மதுரைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர்; அங்கு இரும்புச் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டுப் படுகுழி ஒன்றில் தள்ளப்பட்டனர்.

தளவாய் சேதுபதியின் நிலை இவ்வாறு ஆயினும், தம்பித் தேவரால் நாட்டாட்சியை நிம்மதியாக நடத்த முடியவில்லை. தமக்கு எதிராய்த் தளவாய் சேதுபதியின் தமக்கை பிள்ளைகளான இரகுநாதத் தேவரும் நாராயணத் தேவரும் நாளும் கலகம் புரிவதை எதிர்த்து அடக்க வேண்டிய இடர்ப்பாடு மிகுந்த வண்ணம் இருந்தது. தொல்லை பொறுக்க முடியாமல் தம்பித்தேவர் மதுரைத் திருமலை நாயக்கர் முன்னிலையில் மீண்டும் சரண் புகுந்தார். ஆனால், இம்முறை நாயக்கரின் கடைக்கண் அருள் தம்பித்தேவருக்கு அவ்வளவாக வாய்க்கவில்லை. மேலும், இச்சந்தர்ப்பத்தில் மறவர் நாட்டில் கொலையும் கொள்ளையும் களவும் கலகமும் மலிந்தன. அடக்கி ஆள அரசனில்லாக் குறையைப் பயன்படுத்திக் கொண்டு வழிப்பறி செய்வோர் நாட்டின் முடி சூடா மன்னராயினர். எங்கும் அச்சமும் அநீதியும் தலை விரித்தாடின. இந்நிலையால் பெரிதும் துன்புற்ற இராமேசுவர யாத்திரிகர்கள் திருமலை நாயக்கரிடம் சென்று தங்கள் குறை தீர்க்க முறையிட்டார்கள்; தளவாய் சேதுபதியையே மீண்டும் அரசராக்க வேண்டுமென்று மன்றாடினார்கள்.

திருமலை நாயக்கரின் திருவுள்ளம் கனிந்தது. யாத்திரிகர்களின் வேண்டுகோளுக்கு அவர் செவி சாய்த்தார். தளவாய் சேதுபதி வெற்றி

முழக்குடன் முகவைத் திருநகருக்குத் திரும்பினார். தம்பித்தேவருக்குக் கைகட்டி வாய்மூடி இருக்கக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இதற்குப் பின் தளவாய் சேதுபதி ஐந்தாண்டுகள் நிம்மதியாக ஆட்சி நடத்தி, அறப்பணிகள் பல புரிந்தார். ஆயினும், அவர் 1646-ல் தம்பித்தேவரால் கொலை செய்யப்பட்டார். சேதுபதியைக் கொலை செய்த பின் தம்பித்தேவர் அரியணையில் அமர முயன்றார். ஆனால், மறவர் நாட்டுப் பெருங்குடி மக்கள் மனம் ஒப்பவில்லை. மீண்டும் உள் நாட்டுப் பூசல் மூண்டது. இந்நிலையில் திருமலை நாயக்கர் நீதி வழங்கி அமைதியை நிலை நாட்ட முன் வந்தார். அதன் விளைவாக மறவர் சீமை 1646-ல் மூன்றாகப் பிரிக்கப்பட்டது. இராமநாதபுரத்தைத் தன்னகத்தே கொண்ட பகுதி இரகுநாதத் தேவருக்குக் கொடுக்கப்பட்டது. சிவகங்கைப் பகுதி தம்பித் தேவருக்குத் தரப்பட்டது. திருவாடானைப் பகுதி இரகுநாதத் தேவரின் இளைய சகோதரர்களாகிய தணக்கத் தேவருக்கும் நாராயணத் தேவருக்கும் சேர வழங்கப்பட்டது. இவ்வாறு ஒன்றுபட்டிருந்த மறவர் சீமை முதன் முதலாகத் துண்டு துண்டாகியது. இதன் மூலம் அமைதியை அச்சீமையில் ஏற்படுத்துவதில் திருமலை நாயக்கர் வெற்றி கண்டார்! இந்நிகழ்ச்சிக்கு அடுத்து 1647 முதல் 1672 வரை மறவர் சீமையை ஆண்டவர் இரகுநாத சேதுபதி என்னும் திருமலைச் சேதுபதியாவர். இவர் ஆட்சிக்கு வந்த சிறிது காலத்தில் மறவர் சீமையைத் துண்டாடக் காரணமாயிருந்த தணக்கத் தேவரும் தம்பித்தேவரும் காலமாயினர். அதன் விளைவாக மீண்டும் மறவர் சீமை முழுவதற்கும் சேதுபதியாகும் சிறப்பு, இரகுநாத சேதுபதிக்கு எளிதில் வாய்த்தது. இரகுநாத சேதுபதியின் புகழ் மேலும் ஒளிபெற இன்னொரு முக்கிய நிகழ்ச்சியும் காரணமாயிற்று. 1659-ஆம் ஆண்டு மைசூர் நாட்டாரால் மதுரை மாநகரம் பலமாய்த் தாக்கப்பட்டது. அவ்வமயம் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கருக்குப் பேருதவியாக ஒரே நாளில் இருபத்தையாயிரம் படைவீரர்களைத் திரட்டி மைசூர் நாட்டவரை விரட்டி அடித்தார் இரகுநாத சேதுபதி. இரகுநாத சேதுபதியின் இந்த இணையில்லாப் பேருதவி இல்லையேல், மதுரையின் அழிவு தவிர்க்க முடியாத நிகழ்ச்சியாய் இருந்திருக்கும் என்பது அந்நாளிலேயே வாழ்ந்த சரித்திர அறிஞர்களால் ஏட்டில் எழுதப்பட்டிருக்கும் வாய்மையாகும். தமது நாட்டின் உயிரையும் மானத்தையும் நெருக்கடியான நேரத்தில் காப்பாற்றிய இரகுநாத சேதுபதியைத் திருமலை நாயக்கர் மனமாரப் போற்றினார்; வாயார வாழ்த்தினார்; திருமலைச் சேதுபதிக்குத் 'தாலிக்கு வேலி' (அரசியின் உயிரைக் காத்தவர்) முதலான பட்டங்களை மனமுவந்து வழங்கினார்; மதுரை மன்னர்கட்கே உரிய 'அரிமுகப் பல்லக்கு' முதலான விலைமிக்க வெகுமதிகளை வழங்கினார்; எல்லாவற்றிற்கும் மேலாக மறவர் சீமையின் பொருட்டு அவர் திறை செலுத்த வேண்டிய கடமையினின்றும் விடுதலை தந்தார். மறவர் சீமையோடு திருப்புவனம், திருச்சுழி, பள்ளிமடம் முதலிய

பகுதிகளைச் சேர்த்துக் கொள்ள அனுமதித்தார். தாம் மதுரையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடும் நவராத்திரி விழாவைச் சேதுபதியும் சிறப்பாகக் கொண்டாட இசைந்தார். சுருங்கச் சொன்னால், எல்லா வகையிலும் தமிழகத்தின் அரசியலில் சேதுபதிக்குச் சிறப்பு வாய்ந்ததோர் இடம் உண்டாகச் செய்தார் நன்றி உள்ளம் படைத்த திருமலை நாயக்கர் என்னலாம். தம்பால் நாயக்கர் காட்டிய பேரன்பைச் சேதுபதியும் எதிரொலிக்க விரும்பினார். அந்த விருப்பம் ஒரு வகையில் விபரீதமாயும் மாறியது. ஆம், செந்தமிழ்ப் பகுதியாகிய இராமநாதபுரத்தில் தெலுங்கை அரசியல் மொழியாக்கத் தீவிரமாக முயற்சி செய்தார் இரகுநாதர். ஆனால், அவர் முயற்சி வெற்றி பெறவில்லை. வடுகர் மொழி ஆளும் மொழியாவதை மறவர் நாடு சிறிதும் வரவேற்கவில்லை.

திருமலைச் சேதுபதி மைசூர் நாட்டவரைப் போரில் புறங்கண்டது போலவே, திருமலை நாயக்கருக்குத் துணையாய் நின்று மதுரையின் மீது படையெடுத்து வந்த கூகுப்கானையும் வென்று, 'தேசகாவலன்' என்னும் புகழ் பெற்றார்; அவ்வாறே மதுரை நாயக்கரை எதிர்த்து எட்டயபுரப் பாளையக்காரர் தலைமையில் போர் முனை புகுந்த திருநெல்வேலிப் பாளையக்காரர் படையையும் முறியடித்தார்.

இதற்குக் கைம்மாறாகத் திருமலை நாயக்கர் திருநெல்வேலியைச் சேர்ந்த மன்னர் கோயிலுக்கு அருகிலுள்ள ஒரு பெரிய நிலப்பகுதியைப் பரிசிலாக அளித்தார். மதுரை ஆட்சிக்குப் பெருவளம் சுரந்து வந்த முத்துச் சலாபத்திலும் ஓரளவு சேதுபதி பங்கு பெறச் செய்தார். இங்ஙனம் கால் நூற்றாண்டு மறவர் சீமையைக் காசினி போற்ற ஆண்ட பின் இரகுநாத சேது பதி 1672-ல் காலமானார்.

இரகுநாத சேதுபதிக்குப்பின் அரசபீடம் ஏறியவர் இராசசூய சேதுபதி. இவர் ஆறே மாதத்தில் மாற்றார் சூழ்ச்சியால் கொல்லப்பட்டார். இவருக்குப் பின் இவர் தம்பியார் ஆதன இரகுநாத சேதுபதி அரசுரிமை ஏற்றார். இவர் ஆட்சி மூன்றே மாதங்களில் முடிந்தது. இவ்விரு சகோதரர்கட்கும் பிள்ளைகள் இல்லை. எனவே, மறவர் நாட்டுத் தலைவர் பலரும் ஒன்று கூடி, 1674-ல் நாடாண்ட சேதுபதியின் உறவினரான இரகுநாத தேவர் என்னும் கிழவன் சேதுபதிக்கு முடி சூட்டினர்.

மறவர் நாட்டு வரலாற்றிலேயே இக்கிழவன் சேதுபதிக்குத் தனிப்புகழ் உண்டு. கூர்த்த அறிவும் ஆண்மையும் திறனும் ஒருங்கே பெற்றிருந்த சேதுபதியாய் இவர் முப்பத்தாறு ஆண்டுகள் ஆண்டார். ஆட்சிக்கு வந்தவுடனே இவர் தமது இரும்பு நெஞ்சத்தை வையகம் அறியச் செய்தார்; தாம் ஆட்சிக்கு வருவதற்குப் பெருந்துணையாய் இருந்த செல்வாக்கு வாய்ந்த இரு தலைவர்களை - நாளடைவில் அவர்களே தமக்கு விரோதிகள் ஆகக் கூடும் என்ற எண்ணத்தால் கொலை செய்து தீர்த்தார்;

அந்நாளில் தமது ஆட்சிக்குட்பட்டுப் புதுக்கோட்டையை ஆண்ட பல்லவராயன் என்பான் தமது கருத்துக்கு மாறாகத் தஞ்சை காவலனோடு கள்ள உறவு கொள்வதை அறிந்து, அவனை அரச பதவியினின்றும் அகற்றினார்; அப்பதவிக்குத் தாம் காதல் கொண்டு திருமணம் செய்து கொண்டிருந்த கள்ளர் மரபைப் சேர்ந்த காதலி என்பாளின் சகோதரனாகிய இரகுநாதத் தொண்டைமானை அரசனாக நியமித்தார். இதுவே சமீபத்தில் முடிவடைந்த புதுக்கோட்டை அரசின் ஆரம்பம்!

திருமலைச் சேதுபதியைப் போலவே கிழவன் சேதுபதியும் மதுரை மன்னரை மாற்றார் படையெடுப்பினின்றும் காப்பாற்றினார். ருஸ்தம்கான் என்பானின் கொடிய படையெடுப்பினின்றும் இவர் மதுரையை வெற்றியோடு காப்பாற்றியமையால், 'பரராஜ கேசரி' என்ற பட்டப் பெயரை அடைந்தார். இந்நிகழ்ச்சிக்குப் பின் எக்காரணத்தாலோ, கிழவன் சேதுபதிக்கும் மதுரை மன்னருக்குமிடையே மன வேறுபாடு தோன்றிப் போர் மூண்டு வெற்றி தோல்வியின்றி முடிந்தது. இப்போர் முடிந்த சில நாள்களுக்குப் பின் மீண்டும் ஒரு போர் இருதரப்பாருக்குமிடையே நடைபெற்றது. அதில், சேதுபதியே வெற்றி பெற்றார். மதுரை மன்னரின் படைகள் பின் வாங்கி ஓடின. இவ்வெற்றிக்குப் பின் தஞ்சை மன்னரோடு போரிட்டு அம்பரை ஆற்றுக்குத் தெற்கே உள்ள பகுதிகளைத் தம்முடையனவாக்கிக் கொண்டார் கிழவன் சேதுபதி.

மதுரையை அப்போது ஆண்ட மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர் அம்மை நோய்க்கு இரையாகி, 1689-ல் இறந்தார். அவருக்குப் பின் மதுரையின் ஆட்சி மங்கம்மாள் கைக்கு மாறியது. அரங்க கிருஷ்ணமுத்து வீரப்பர் இறக்கும் போது அவர் மனைவி கர்ப்பவதியாய் இருந்தாள். பின்னர்ப் பிறந்த அக்குழந்தை, விஜயரங்க சொக்கநாதர் என்ற பெயர் சூட்டி மூன்றே மாதங்களில் முடிகவிக்கப் பெற்றது. ஆனால், நாட்டின் அரசியல் நிருவாகம் முழுவதும் மங்கம்மாள் கையிலேயே இருந்தது. இந்நிலையில் கிழவன் சேதுபதியின் ஆட்சி மறவர் சீமையில் நாளுக்கு நாள் உரம் பெற்று ஓங்கியது. மதுரை மன்னர்க்குச் சிறிதும் தலை வணங்காமல் சுதந்தர ஆட்சி நடத்தினார் கிழவன் சேதுபதி. இவ்வுண்மை மார்ட்டின் என்பார் 1700 ஆம் ஆண்டில் எழுதிய கடிதத்தாலும் உறுதிப்படுகிறது.[8] அதோடு 1698-ல் மதுரையையே முற்றுகையிட்டுப் பிடித்தார் சேதுபதி என்றாலும், தளவாய் நரசப்பையர் மிக விரைவிலேயே மதுரையை மறவர் நாட்டுப் பிடியினின்றும் விடுதலை செய்தார் என்பது கூறப்படுகிறது. இதன் பின் தொடர்ச்சியாக 1702-ல் மங்கம்மாள் சேது நாட்டின் மீது படையெடுத்தாள். தஞ்சை அரசர் படையோடு திரண்டு வந்த நாயக்கர் பெரும்படைக்குத் தளவாய் நரசப்பையர் தலைமை தாங்கினார். ஆனால், இப்பெரும்படையை எளிதில் புறங்கண்டார் கிழவன் சேதுபதி. அதோடு தளவாய் நரசப்பையரும்

போரில் கொல்லப்பட்டார். சேதுபதியின் புகழ் தென்னாடெங்கும் பரவுவதாயிற்று. ஒரே வாரத்தில் மூவாயிரம் அல்லது நாலாயிரம் படை வீரர்களைத் திரட்டிப் போர்முனையில் நிறுத்தும் ஆற்றல் கிழவன் சேதுபதிக்கு இயற்கையாய் அமைந்திருந்தது எனில், அவர் செல்வாக்கிற்கும் இடையறா வெற்றிக்கும் வேறு விளக்கமும் வேண்டுமோ? இச்சிறப்புக் களின் துணையாலன்றோ 1702-ல் கிழவன் சேதுபதி தமக்கும் மதுரைக்குமிருந்த எல்லாத் தொடர்புகளையும் துணித்துக் கொண்டு தனியாட்சி நடத்தினார்? இது வாயிலாக நெடுங்காலம் மதுரை மாநகர் ஆட்சிக்கு பாண்டி நாட்டின் தலைநகரின் செல்வாக்கிற்கு அடங்கிக்கிடந்த சேதுநாடு சுதந்தர நாடாகியது. இப்பெருமையை மறவர் சீமைக்குத் தேடித்தந்த பெருமகனார் கிழவன் சேதுபதியே என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

1709-ல் வஞ்சம் தீர்க்கும் வகையில் தமது நாட்டின் மீது படையெடுத்து வந்த தஞ்சை மன்னன் படைவீரர்களைப் பஞ்சாய்ப் பறக்கும்படி செய்ததோடு அவனுக்கு உரிய பலம் வாய்ந்த கோட்டையாகிய அறந்தாங்கியையும் கைப்பற்றினார் கிழவன் சேதுபதி. தம் வாழ்நாளின் முடிவிற்குள் தமிழக வரலாற்றில் சேதுநாட்டின் புகழ் மாற்றார் கண்களை எல்லாம் மருட்டும் வகையில் ஒளிர வேண்டும் என்று கிழவன் சேதுபதி கண்ட கனவு ஒரு சிறிதும் வீணாகவில்லை. சேது நாட்டைச் சுதந்தரபூமி ஆக்கிய பின்பே கிழவன் சேதுபதியின் கண்கள் மூடின.

எண்ணற்ற வெற்றிகளைப் போர்க்களத்தில் கண்டு புகழ் வாய்ந்த கிழவன் சேதுபதி, 1710-ல் காலமானார். இவர் ஆட்சிக் காலத்திலேதான் மறவர் சீமையின் புகழ் குன்றின்மேலிட்ட விளக்காயிற்று. தம் ஆட்சிக் காலத்தில் கிழவன் சேதுபதி நாட்டுக்காகச் செய்த நன்மைகள் மிகப்பல. குளம் தொட்டு வளம் பெருக்கியும், கோயில்கள் கட்டியும், அறச்சாலைகள் அமைத்தும், அவற்றிற்கு எண்ணற்ற மானியங்கள் ஈந்தும் அழியாப் புகழ் கொண்டார் கிழவன் சேதுபதி. இராமநாதபுரத்தில் உள்ள முகவை ஊருணியும், கற்கோட்டையும், இராமலிங்க விலாச மாளிகையும் இவர் புகழைச் சரித்திர உணர்ச்சி உடையார்க்கு எடுத்தோதிய வண்ணம் இன்றும் நின்று நிலவுகின்றன.

பதினெட்டு வருட ஆட்சிக்குப்பின் 1706-ல் மங்கம்மாள் மாண்டாள். அதற்குப்பின் மதுரை அரசுரிமை அவள் பேரராகிய விஜய இரகுநாத சொக்கநாதரைச் சேர்ந்தது.

பரராஜ கேசரி கிழவன் சேதுபதியைப் போலத் திறமையையும், நிருவாக ஆற்றலையும், மக்களின் ஒருமித்த அன்பையும் பெற்ற ஓர் அரசரை இராமநாதபுர வரலாறு எக்காலத்திலும் கண்டதில்லை. முப்பத்தாறு ஆண்டுகள் ஆட்சி புரிந்த கிழவன் சேதுபதி, இறப்பதற்கு முன், பவானி

சங்கரத்தேவன் என்ற தம் காதற் கிழத்தி மகனுக்கே அரசுரிமையை வழங்க முடிவு செய்தார்; ஆயினும், தம் குடிமக்களின் வேண்டுதலால் தம் முடிவை மாற்றிக் கொண்டு விஜய இரகுநாதருக்கு முடிசூட்ட இசைந்தார்.

விஜய இரகுநாத சேதுபதியின் ஆட்சி 1711-ல் தொடங்கி, 1725 வரை நடைபெற்றது. விஜய இரகுநாதருக்கு ஆதரவாக மக்களின் முழு அன்பும் இருந்த போதிலும், பவானி சங்கரனால் விளைந்த தொல்லைகள் ஏராளம். பவானி சங்கரன் புதுக்கோட்டை மன்னனையும் தஞ்சை அரசனையும் தனக்குத் துணையாகச் சேர்த்துக் கொண்டு சேதுபதி தங்கியிருந்த அறந்தாங்கிக் கோட்டையைத் தாக்கினான். ஆம் புதுக்கோட்டை மன்னனது பரம்பரை, தனக்குச் சோறும் சுகமும் கொடுத்த சீமைக்கே துரோகம் செய்வதைப் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தொடங்கி விட்டது! அறந்தாங்கிக் கோட்டையிலிருந்து போர் புரிந்து கொண்டிருந்த நிலையில் விஜய இரகுநாத சேதுபதி நோய்வாய்ப்பட்டு இராமநாதபுரம் எடுத்துச் செல்லப்பட்டார்; அங்கு 1720ல் காலமானார்.

மக்களின் ஒருமித்த அன்பிற்கு உரியவராய் விளங்கிய விஜய இரகுநாதரின் மீளாப்பிரிவால் மறவர் சீமை மீண்டும் உள்நாட்டுக் கலகத்திற்கு இரையாயிற்று. அதன் விளைவாக இராமநாதபுரச் சீமை பிளவுபட்டது. விஜய இரகுநாதர், தாம் இறப்பது நிச்சயம் எனத் தெரிந்ததும், கிழவன் சேதுபதியின் பேரரான தண்டத் தேவன் என்னும் சுந்தரேச இரகுநாத சேதுபதியை அரசராக நியமித்தார். ஆனால், பவானி சங்கரனோ வாளா இருப்பான்? அவன் பல்வகையாலும் முயன்று மக்களைப் பசப்பி அரசுரிமையைக் கைப்பற்றினான். அதனால், தண்டத்தேவனின் ஆண்மை சீறியது. மதுரை மன்னனின் துணையையும் புதுக்கோட்டை அரசனின் உதவியையும் தண்டத்தேவன் பெற்றான். புதுப்பலத்தோடு பவானி சங்கரன் தங்கியிருந்த அறந்தாங்கிக் கோட்டை தாக்கப்பட்டது. மாற்றாரின் பெரும்படையைக் கண்ட பவானி சங்கரன், தஞ்சை அரசனிடம் தஞ்சம் புகுந்தான்; தனக்கு உதவி புரிந்தால் பாம்பாற்றிற்கு வடக்கே உள்ள பகுதிகளை எல்லாம் தந்துவிடுவதாக வாக்களித்தான். இரண்டு மாதங்களில் பவானி சங்கரனும் தஞ்சைத் தளபதியும் இராமநாதபுரத்தின் மீது படையெடுத்தனர். தண்டத்தேவனுக்கும் பவானி சங்கரன் படைக்கும் இடையே போர் மூண்டது. இராமநாதபுரம் முற்றுகை இடப்பட்டது. புதுக்கோட்டைப் படைவீரரும் மதுரையிலிருந்து வந்த படைவீரரும் தண்டத்தேவனுக்குத் துணையாய் நின்றனர். ஆனால் தஞ்சைத் தளபதி எவ்விதப் பெருமுயற்சியுமின்றிப் புதுக்கோட்டைப் படையை முறியடித்து, தொண்டை மானின் இரு பிள்ளைகளையும் சிறைபிடித்தான். அதனால், புதுக்கோட்டை அரசன் சமாதான ஒப்பந்தத்திற்கு உடனே தயாராகிவிட்டான்.

எஞ்சியிருந்த எதிரிகள் படையையும் புறங்கண்டு, பவானி சங்கரனும் தஞ்சைத் தளபதியும் இராமநாதபுரக் கோட்டையை முற்றுகையிட்டனர்; சுருங்கை வழிசெய்து கோட்டையை விரைவில் பிடித்தனர். சேதுபதியும் அவரைச் சார்ந்தோரும் கொல்லப்பட்டனர். முடிவில் கடுமுயற்சிகளின் பலனாகப் பவானி சங்கரன் மீண்டும் சேதுபதி ஆனான். ஆனால், அவன் ஆட்சியில் அமைதி நிலைக்கவில்லை. தன் நாட்டில் செல்வாக்கு வாய்ந்த குறுநிலத் தலைவராகிய சசிவர்ணத்தேவர் என்ற பெருவீரரை அவன் பகைத்துக் கொண்டான்; செல்வமும் செல்வாக்கும் மிக்க அவர் உடைமைகளை எல்லாம் பறிமுதல் செய்தான். சசிவர்ணத்தேவரோ, தஞ்சையில் சரண் புகுந்தார். அங்கே அவர் அரசவையில் வீரச் செயல்கள் பல புரிந்து தஞ்சை மன்னனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார். வலிமை சான்ற மிகப்பெரிய வயப்புலி ஒன்றைத் தன்னந்தனியாகப் போரிட்டு வெற்றி கொண்டார் சசிவர்ணத் தேவர். தஞ்சை மன்னனைக் கொல்ல வஞ்சகர் சிலர் ஏவிவிட்ட காளையொன்றின் கொம்புகளைத் தக்க தருணத்தில் முறித்து எறிந்து, அரசரைக் காப்பாற்றினார்.[9] இத்தகைய ஒரு வீரரின் ஆண்மையிலும் ஆற்றலிலும் தஞ்சை வேந்தன் நெஞ்சைப் பறிகொடுத்ததில் வியப்பொன்றும் இல்லை யன்றோ? அடைக்கலமாய்ச் சென்ற இடத்தில் சசிவர்ணர் தம்மைப்போன்றே தமக்கு முன்பே தம் நாட்டார் ஒருவர் அங்கே அகதியாயிருப்பதைக் கண்டார். காலஞ் சென்ற விஜய இரகுநாத சேதுபதியின் அம்மானாரான[10] கட்டையத் தேவரே அவர். துன்பமும் துயரும் ஆத்திரமும் அவமானமும் அவ்விருவரையும் ஒருவராக்கின. எவ்வாறேனும் பவானி சங்கரனை நாட்டை விட்டு விரட்டி அடிப்பது என்று அவ்விருவரும் உறுதிபூண்டனர்; தஞ்சை மன்னரைப் பொருளும் படையும் தந்து உதவி அருளுமாறு உள்ளுருகி வேண்டினர். தஞ்சை அரசனும் வழக்கமான வாக்குறுதியின்மேல் பாம்பாற்றிற்கு வடக்கேயுள்ள பகுதிகள் தனக்கே உரிமையாக்கப்பட வேண்டும் என்ற உடன்படிக்கையின் மேல் - பணமும் படையும் தந்து, தன்னை நாடிவந்த மறவர் நாட்டுத் தலைவர்களைப் பாதுகாக்க முன் வந்தான். ஏற்கெனவே பவானி சங்கரன் இத்தகைய ஓர் உடன்படிக்கையைச் செய்தும், அதை நிறைவேற்றாது துரோகம் புரிந்தானே என்ற எண்ணம் தஞ்சை மன்னனின் இதயத்தைத் துளைத்த வண்ணம் இருந்தது. எனவே, இராமநாதபுரத்தை ஒருவர் கையிலேயே ஒப்படைப்பதைவிடப் பலர் கையில் பகிர்ந்து தருவதன் மூலம் தன் கனவு நனவாகும் என்று கருதினான் தஞ்சை வேந்தன். காலமும் அவனுக்குக் கைகொடுத்தது. தஞ்சைத் தளபதி பெரும்படையுடன் சேதுபதிக்கு எதிராக அனுப்பப்பட்டான். தஞ்சைப் படைக்கும் சேதுபதி படைக்குமிடையே உறையூரில் பெரும்போர் நிகழ்ந்தது. அப்போரில் சேதுபதி படுதோல்வியடைந்ததுமின்றி, தஞ்சைத் தளபதியால் கைது செய்யப்பட்டுத் தஞ்சாவூருக்குக் கொண்டு செல்லப்பட்டார்; அங்கே மிகக்

கடுமையாக நடத்தப்பட்டுக் கடைசியில் சிறையில் இடப்பட்டார். இவ்வாறு மறவர் சீமையில் ஏற்பட்ட பெரும்போராட்டத்திற்குக் காரணமாயிருந்த பவானி சங்கரரின் ஆட்சி 1729-ல் முடிவுற்றது. இப்பெருவெற்றிக்குப்பின் கிழவன் சேதுபதி காலத்தில் ஐயாயிரம் சதுர மைல் நிலப்பரப்பாய் இருந்த இராமநாதபுரச் சீமை, துண்டு துண்டாக்கப்பட்டது. அதன் பயனாகப் பாம்பாற்றிற்கு வடபால் உள்ள பகுதிகளை எல்லாம் தஞ்சை அரசன் கவர்ந்து கொண்டான். எஞ்சிய பகுதிகள் ஐந்து கூறாக்கப்பட்டன. ஐந்தில் மூன்றைக் கட்டையத் தேவர் எடுத்துக் கொண்டார்; அப்பகுதிக்கு அரசராய்க் குமாரமுத்து விஜய ரகுநாதர் என்ற பட்டப் பெயருடன் அவர் முடி சூட்டிக் கொண்டார். எஞ்சிய இரு பகுதிகளையும் பெரும்பாலும் நாலுகோட்டை உடையத் தேவர் என்று வழங்கப்பட்ட சசிவர்ணத்தேவர் தமக்குரியனவாக்கிக் கொண்டு ராஜமுத்து விஜய ரகுநாத பெரிய உடையத் தேவர் என்ற சிறப்புப் பெயருடன் சிங்காதனம் ஏறினார். நாளடைவில் அவர் சிவகங்கை அரசர் என்று வழங்கப்பட்டார். அறிஞர் நெல்ஸன் ஆராய்ந்து எழுதிய நூலினின்றும் கிடைக்கும் குறிப்பு ஒன்றால், சசிவர்ணர் சிவகங்கை அரசைப் பெற்ற சுவை பொதிந்த செய்தி விளங்குகிறது.

'சிவகங்கை ஜமீந்தாரின் குத்தகைக்காரரான மிஸ்டர் பிஸ்சர் அன்புடன் தேடிக் கொடுத்த (கு.கு. 1655 அல்லது கி.பி. 1733ல் செதுக்கப்பட்டு வெளியிடப்பட்ட) மிக முக்கியமான செப்புச் சாசனத்தின் பிரதி ஒன்று கூறுவதாவது:-

பெரிய உடையத்தேவரின் மைந்தரும் ஹிரண்ய கர்ப்ப அரசுபதி இரகுநாத சேதுபதியின் மருமகனாருமாகிய முத்து விஜய இரகுநாத பெரிய உடையத்தேவர், மற்ற அரசர்களைப் போன்று வைகைக் கரையிலுள்ள செழிப்பான நிலங்கள், செம்பியன் வளநாடு, தொண்டித் துறைமுகம் முதலியவற்றிற்குச் சொந்தக்காரராயிருந்தார். யாரோ ஒரு ஞானியார் (இவர் பெயரில் தரப்பட்ட தானத்தின் நினைவுச் சின்னமே இச்சாசனம்) செய்த உபதேசத்தின் பயனாய் அவர் தஞ்சாவூர் சென்று, அங்கு ஒரு புலியைக் கொன்றுவிட்டு, அந்நாட்டினின்றும் திரும்பி வந்த பின், பவானி சங்கரத் தேவரை வென்றார். அதன் பிறகு ஞானியாரை முதன் முதலில் அவர் சந்தித்த ஊரினருகே ஒரு குளம் கட்டி, அங்கே அவருடைய உபதேச மொழிகளைக் கேட்டு, அக்குளத்திற்குச் சிவகங்கை அல்லது சிவனது தீர்த்தம் என்று பெயரிட்டார். சாசனமும் அவரை 'அரசு நிலையிட்டவன்' அல்லது அரசை நிலை நிறுத்தியவன் (ஸ்தாபித்தவன்), சோழ மண்டலச் சண்டப்பிரசண்டன் அல்லது சோழ நாட்டின் சர்வ வல்லமையுள்ளவன், பாண்டி மண்டல ஸ்தாபனாசாரியன் அல்லது பாண்டிய ராஜ்யத்தைத் தோற்றுவித்தவன் என்றே குறிப்பிடுகிறது. மொத்தத்தில் இந்தச் சாசனத்திற்கும் பொன்னுசாமித்தேவரின் விண்ணப்பத்தில் குறிக்கப்பட்டிருக்கும்

சரித்திரத்திற்கும் மிக அதிகமான பொருத்தமிருக்கிறது. மேலும், இராமநாதபுர ராஜ்யத்திலிருந்து இறுதியாகச் சிவகங்கைச் சீமை பிரிந்து தனி அரசாக உருக் கொண்ட தேதியை அறிவதற்குரிய மதிப்புடைய சாசனமாகவும் இது விளங்குகிறது....'

இதுவே 'மதுரை நாடு' என்ற பெயரால் அறிஞர் நெல்ஸன் எழுதியுள்ள நூலில் கூறியுள்ள சாசனச் செய்தி. இச்சாசனச் செய்தியைச் சிவகங்கைச் சரித்திரச் கும்மியும் ஆதரிக்கிறது.[11]

சிவகங்கை அரசின் முதல் மன்னராகிய சசிவர்ணரைப் பற்றியே வேறு ஒரு வரலாற்றுக் குறிப்பும் கிடைக்கிறது. விஜய இரகுநாதத் தேவரின் குறுகியகால ஆட்சியில் இணையில்லாச் செல்வாக்குப் பெற்ற குறுநிலத் தலைவர்களுள் ஒருவர், நாலுகோட்டை உடையத் தேவர் ஆவர். அவர் விஜய இரகுநாதரின் மனங்கவர்ந்த பெருமகனாராய் விளங்கினார். விஜய இரகுநாதர் தம்மேல் வைத்திருந்த அளவிலா அன்பையும் மதிப்பையும் பயன்படுத்திக் கொண்ட நாலு கோட்டை உடையத் தேவர், தம் மைந்தராகிய சசிவர்ணருக்குச் சேதுபதி'யின் காதற்கிழத்தி மகளான அகிலாண்டேசுவரி நாச்சியாரைத் திருமணம் செய்து முடித்தார். இத்திருமணம் வாயிலாகச் சசிவர்ணர் தம் மனைவி சீதனமாகக் கொண்டு வந்த பெருஞ்செல்வம் அத்தனைக்கும் உரியவராயினர். இவ்வுண்மையைச் சரித்திரமும் இலக்கியமும் மறைவின்றிச் சாற்றுகின்றன.[12]

மறவர் சீமை வெட்டொன்று துண்டு இரண்டாகி, இராமநாதபுரப் பகுதி 'பெரிய வாடகை' என்றும் சிவகங்கைச் சீமை 'சின்ன வாடகை' என்றும் வழங்கப்பெற்றன. பெரிய மறவர் நாடு, சிறிய மறவர் நாடு என்றும் அப்பகுதிகளை முறையே சுட்டலாயினர்; சிறிய மறவர் நாட்டை 'நாலு கோட்டைச் சீமை' என்றும் குறிப்பிடுவர்.

மருதிருவரால் பின்னாளில் அழியாப்புகழ் அடைந்த சிவகங்கைச் சீமை தோன்றிய வரலாறு இதுவேயாகும். இந்நிகழ்ச்சி நடைபெற்றது 1730-ஆம் ஆண்டில். இதற்குச் சரியாக ஐம்பது ஆண்டுகட்குப் பின்னே நாம் ஆராய இருக்கும் மாணிக்கங்களின் - மாவீரர்களின் - ஆட்சி உதயமாகியது. இடைப்பட்ட இந்த அரை நூற்றாண்டில் மறவர் சீமையில் தமிழகத்தில் நடைபெற்ற சரித்திர நிகழ்ச்சிகளையும், அவற்றிற்கு அடிப்படையாய் இருந்த வரலாற்றுக் காரணங்களையும் நாம் ஒருவாறு தெரிந்து கொள்ள வேண்டுமன்றோ?

# 2. கன்னித்தமிழகத்தில்

பதினெட்டாம் நூற்றாண்டு தமிழகத்திற்குக் குழப்பம் மிகுந்த காலம். எனவே, இக்காலத்தைப் பற்றிய ஆராய்ச்சியும் சிக்கலும் குழப்பமும் நிறைந்ததாக இருப்பதில் வியப்பில்லை. தமிழகம் என்ற வளமான அரண்மனைக்குத் தீவைத்ததோடு அவ்வரண்மனைச் சொத்தை எல்லாம் இரவு பகலாகச் சூறையாடியக் கள்வர்களைப் பற்றிய ஆராய்ச்சியாகவே இக்காலம் அமைந்து கிடக்கிறது.

இன்பத் தமிழகத்தை ஏகாதிபத்திய வெறிகொண்டு வேட்டையாட நினைத்தான் மொகலாயப் பேரரசன் ஔரங்கசீபு. அவன் தக்காணத்தில் பிஜப்பூரையும் கோல் கொண்டாவையும் கைப்பற்றிய பின், 1693ல் தென் திசை நோக்கிப் படையெடுக்கும் பொருட்டுச் சுல்பிகர் கானை அனுப்பி வைத்தான். அப்போது மதுரையை ஆண்டவள் நாயக்க வமிசத்தைச் சேர்ந்த இராணி மங்கம்மாள், நுண்ணறிவு படைத்த மங்கம்மாள், பலம் பொருந்திய இஸ்லாமியப் பேரரசை எதிர்த்துத் தோல்வியுறுவதைவிடப் பணிந்து வாழ்வதே ராஜ தந்திரமென்று கருதினாள்; எனவே, ஏராளமான பரிசுகள் பலவற்றை மொகலாயப் பேரரசின் தளபதிகட்குக் காணிக்கையாகக் கொடுத்துக் காரியங்களைச் சாதித்துக் கொண்டாள்; தன்னை அழிக்க வந்த இஸ்லாமியப் படையையே தன் எதிரிகளை அழிப்பதற்குப் பயன்படுத்திக் கொண்டாள். ஆம். கடும்புயலை எதிர்த்து அரசாங்கக் கப்பலை நடத்திப் பாழாக்காமல், பக்குவமாகத் தப்பித்துக் கொண்டாள் மங்கம்மாள். இஸ்லாமியப் பேரரசிற்கு இணங்கிப்போவதனால் தமிழகத்தின் குறுநில மன்னர்களின் காட்சியில் தன் புகழ் குன்றாதிருக்கும் என அவள் நம்பினாள்.

ஔரங்கசீபுவின் ஆசையெல்லாம் தமிழ் நாட்டு அரசுகளின் சொத்தை முதலில் சூறையாடுவது; அடுத்து நிலப் பகுதிகளைக் கொள்ளை கொள்வது; மூன்றாவதாக அவ்வரசுகளின் உயிரையே குடித்து ஆனந்தப்படுவது. இத்தகைய ஒரு கொடுமைக்கு - ஔரங்கசீபுவின் ஆசைக்கு - தமிழகம் இரையாகாமல் காப்பாற்றியவள் மங்கம்மாள். தன் பணிவாலும் நயமொழிகளாலும் ஔரங்கசீபுவிடமிருந்து ஒருவாறு மங்கம்மாள் தப்பினாலும், தமிழகத்திற்குள்ளே தானே ஏற்படுத்திக் கொண்ட பகைகளாலும் தன்மேல் பிறர் கொண்ட பகைகளாலும் பெருந்தொல்லைகட்கு உள்ளானாள். உண்மையில் அவள் காலத்திலேயே நாயக்கர் அரசு ஆட்டம் கண்டுவிட்டது.

மங்கம்மாள் இறந்து இருபத்தாறு ஆண்டுகள் கழித்து நாயக்கர் ஆட்சியை ஏற்றவள் இராணி மீனாட்சி. இவளே நாயக்க வமிசத்தின் கடைசி எரிநட்சத்திரம். மங்கம்மாள் ஆட்சிக்கும் இராணி மீனாட்சியின் ஆட்சிக்கும் இடையே நடைபெற்ற நிகழ்ச்சிகள் சிலவற்றையும் கவனிக்க நாம் கடமைப்பட்டுள்ளோம். 1643ல் படையெடுத்து வந்த ஔரங்கசீபுவின் தளபதி, தஞ்சையையும் மதுரையையும் தன் படைவன்மைக்குப் பணிய வைத்து, மொகலாய அரசுக்குக் கப்பமும் கட்டச் செய்தான். டில்லியிலிருந்து நாட்டின் நிருவாகத்தைக் கவனித்து வந்த அவன், தென்னிந்திய நிருவாகத்தைக் கவனிக்க இருவரை நியமித்தான். அவர்களுள் ஒருவன் ஐதராபாது நைசாம். நைசாமே தென்னிந்தியாவிற்கும் தக்காணத்திற்கும் மொகலாய சக்கரவர்த்தியின் நேர்ப்பிரதிநிதி. அவன் அதிகாரத்திற்கு உட்பட்டுக் கர்நாடகத்தை - தமிழகத்தை - கவனித்துக் கொள்ள வேண்டியவனே ஆர்க்காட்டு நவாபு. சட்டப்படியும் சம்பிரதாயப்படியுமே இந்த ஏற்பாட்டைச் செய்தான் மொகலாய சக்கரவர்த்தி. என்றாலும், நடைமுறையில் ஐதராபாது நைசாமும் ஆர்க்காட்டு நவாபுவும் தத்தம் பகுதிகளில் சுதந்தர ஆட்சியே நடத்தினர். ஔரங்கசீபுவிற்குப்பின், மொகலாயப் பேரரசு சீர்குலைந்து போயிற்று. அதனால், நைசாம், தட்டிக் கேட்க ஆளில்லாமல், தனி ஆட்சி நடத்தினான். ஆர்க்காட்டு நவாபுவும் நைசாமுக்கு இணையாகக் கூத்தாடினான். என்றாலும், ஒவ்வொரு சமயத்தில் நைசாம் ஆர்க்காட்டு ஆட்சியில் தலையிடுவதும் அதை நவாபு எதிர்ப்பதுமாக நிலைமை நீடித்து வந்தது. எனவே, சுற்றி வளைத்து மொகலாயப் பேரரசனால் படையெடுத்துப் பணிவிக்கப் பட்ட மதுரை - தஞ்சை அரசுகள், ஆர்க்காட்டு நவாபுவுக்கு வேண்டா வெறுப்பாகவாவது - விட்டுவிட்டாவது - கப்பம் செலுத்தி வாழ நேர்ந்தது. திருச்சிராப்பள்ளியிலிருந்து திருவிதாங்கூர் வரை பரவிக்கிடந்த நாயக்கர் ஆட்சியையும் தமிழகத்தின் நெற்களஞ்சியமாய் விளங்கிய தஞ்சை அரசையும் அடக்கி ஆளுகிறோம் என்ற மமதை ஆர்க்காட்டு நவாபுவையும் அவன் வழி வந்த 'பெருமக்களை'யும் சும்மா விடுமா? விடவில்லை என்பதை வரலாறு எடுத்து இயல்புகிறது.

1732 ஆம் ஆண்டுல் ஆர்க்காட்டு நவாபு தஞ்சையிலிருந்தும் மதுரையிலிருந்தும் கப்பம் வசூலிக்கப் படைதிரட்டி அனுப்பினான். நவாபுவின் மகனான சாப்தர் அலிகானும் அவன் மருமகனான சந்தா சாகிபுவும் நவாபுவின் சேனைக்குத் தலைமை தாங்கி வந்தனர். நவாபுவின் சேனை படையெடுத்து வந்த சமயத்திலேதான் மதுரையை ஆண்ட மீனாட்சியின் அரசியல் பெருத்த உள்நாட்டுக் குழப்பத்திற்கு அரசுரிமைப் போட்டிக்கு இரையாகிக் கிடந்தது. முன்னாள் அமைச்சனாயிருந்த நாராயணப்ப ஐயன் என்பவன் முதல் தரத் துரோகியானான். அவன்

தூண்டுதலால் இராணி மீனாட்சிக்கு எதிராக, பங்காரு திருமலை என்பவன் அரசுரிமையைப் பெறப் பெருங்குழப்பம் செய்தான். வீடு பற்றி எரியும் நேரத்தில் தீவட்டிக் கொள்ளைக்காரன் புகுந்த நிலையை எய்தின திருச்சிராப்பள்ளியும், மதுரையும். பங்காரு திருமலை, நவாபு சாப்தர் அலிக்குப் பணத்தை வாரி வழங்கினான். இராணி மீனாட்சி சந்தா சாகிபுவிடம் ஒப்பந்தம் பேச ஆரம்பித்தாள். நவாபுவின் படைத் தலைவர்களோ இரு கைகளாலும் இரு தரப்பிலும் ஏராளமான பொருளைப் பறித்து விழுங்கி ஏப்பம் விட்டுவிட்டு, முடிவாக இரு கட்சிக்கும் துரோகம் செய்ய முனைந்தார்கள். இராணி மீனாட்சியிடம் ஒரு கோடி ரூபாயை வாங்கிக் கொண்டு, சந்தா சாகிபு ஆர்க்காட்டிற்குத் திரும்பிச் சென்றான்; மீண்டும் 1736ல் திரும்பி வந்தான். 'இந்த முறை எப்படியாவது நாயக்கர் அரசை நம் வசமாக்க வேண்டும்!'' என்ற உறுதி அவன் உள்ளத்தில் உரம் பெற்று நின்றது. அவன் சமர் புரிந்தான்; சதிகள் பல செய்தான். குர் ஆனின் மேல் சத்தியம் செய்வதாக இராணி மீனாட்சியிடம் பாசாங்கு பண்ணி, பட்டுத் துணியில் சுற்றி வைத்திருந்த செங்கல்லின்மேல் கையறைந்து; உறுதி மொழி கொடுத்து. அரசியை ஏமாற்றினான். சந்தா சாகிபுவின் சதிகளால் தன் படை வலியும் மனவலியும் உடைந்து உருக்குலைந்த இராணி மீனாட்சி - அந்தோ! - நஞ்சுண்டு மாண்டாள்!

உள் நாட்டுக் குழப்பங்களும் முகம்மதியப் படையெடுப்பும் மலிந்த அந்நாளில், தமிழ் நாட்டு மக்கள் அடைந்த தவிப்பு வேதனை நிறைந்தது. பொன்னும் பொருளும் பறிபோயின; ஆலயங்களும் அரண்மனைகளும் மாசு படுத்தப்பட்டன; கள்வரும் கயவரும் கணக்கின்றிப் பெருகினர்; மாதர் கற்பும் பொறுமையும் சூறையாடப்பட்டன; இலஞ்சமும் பஞ்சமும் தலைவிரித்து ஆடின.

நாயக்கர் ஆட்சியைக் கைப்பற்றிய சந்தா சாகிபு தன் இரு சகோதரர்களின் துணை கொண்டு நாட்டின் நிருவாகத்தை நடத்தி வந்தான். அவன் வெற்றி அப்போது ஆர்க்காட்டு நவாபுவாய் இருந்த தோஸ்து அலிகான் மனத்தில் பொறாமைத் தீயை மூட்டியது. ஐதராபாது நைஸாமோ, ஆர்க்காட்டு நவாபுவின் வளர்ச்சியைக் கண்டு வயிறெரிந்தான். இந்நிலையில் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த மராத்தியர் தமிழகத்திற்குப் பெருந்தொல்லைகள் இழைத்து வநதனர். ஆண்டுதோறும் அவர்களுக்கு ஒரு பெருந்தொகையைக் காணிக்கையாகக் கொடுத்து அழாவிட்டால், புகைச்சலும் போரும் மிகும். இத்தகைய மராத்தியர் கர்நாடகத்தின் மீது படையெடுத்துக் கொள்ளையிடத் திட்டம் தீட்டினர். அவர்களுடைய தீய எண்ணத் தீக்கு நெய் வார்த்தான் வஞ்சகவுள்ளம் படைத்த ஐதராபாது நைஸாம். 1739ல் மராத்திரியர் பத்தாயிரம் படை வீரர்களுடன் தமிழகத்தை நோக்கிப் படையெடுத்து வந்தனர். அப்படைக்குத் தலைமை தாங்கிய

இராக்கோசி பான்ஸ்லே ஆர்க்காட்டு நவாபுவான தோஸ்து அலிகானைக் கொலை புரிந்தான்; ஒரு கோடி ரூபாய் கொடுத்தால் நவாபுவின் மகன் சாப்தர் அலிக்கு உயிர்ப்பிச்சை கொடுப்பதாகக் கூறினான். இந்நிலையிலும் தனக்கு ஒரு கண் போனாலும் எதிரிக்கு இரு கண்களும்போக வேண்டும் என்று எண்ணி ஆர்க்காட்டில் சந்தா சாகிபுவுக்கு விரோதமாக இரகசியங்கள் பேசப்பட்டன. அவற்றின் பயனாக மராத்தியப் படையெடுப்பு 1741ல் மீண்டும் ஒரு முறை நிகழ்ந்தது. அப்படையெடுப்பில் சந்தா சாகிபுவின் இரு சகோதரர்களும் கொலை செய்யப்பட்டார்கள். சந்தா சாகிபு கைதியாகி, சதாராவிற்கு இழுத்துச் செல்லப்பட்டான். அவன் ஆண்ட அரசபீடம் முராரி ராவிடம் ஒப்படைக்கப்பட்டது. 1736ல் மீனாட்சியின் ஆட்சிக்கு உலை வைத்த சந்தா சாகிபுவின் நிலை இவ்வாறு ஆகியது. மராத்தியர் படையெடுப்பின் போதும் தமிழ் நாட்டு வீரர்கட்கு 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி'யாய் அமைந்த புதுக்கோட்டைத் தொண்டைமான் செய்த துரோகம், கொஞ்சமன்று. சந்தா சாகிபுவுக்கு விரோதமாகப் பல்வகை உதவிகளையும் புரிந்து மராத்தியரிடம் நாட்டைக் காட்டிக் கொடுத்து மாவீரனென்று பட்டமும் பரிசும் பெற்றான் துரோகியாகிய தொண்டைமான்.

மராத்தியர் படையெடுப்பால் நலிந்து போயிருந்த நற்றமிழ் நாட்டைக் குற்றுயிருடையதாக்க விரும்பினான் ஐதராபாது நைஸாம்; எண்பதாயிரம் குதிரைப்படைகளோடும் இருபதாயிரம் காலாட்படைகளுடனும் கர்நாடகத்தை எதிர்த்துக் கடும்புயலாய்ச் சீறிவந்தான். பெரும் புயலில் வீடும், வயலும், ஓடும், கூரையும், மரமும், மட்டையும் பிய்ந்து சிதறுவது போலத் தமிழகம் அயலவர் படையெடுப்புகளால் அலங்கோலமாய்க் கிடந்த காட்சி அவனுக்கே வியப்பையூட்டியிருக்க வேண்டும். ஒவ்வோர் ஊரிலும், ஒவ்வொரு கோட்டையிலும், ஒவ்வொரு தளபதி இருந்தான். அந்த ஊருக்கு, அந்தக் கோட்டைக்கு, அந்தத் தளபதியே தன் நிகரில்லா நவாபுவாய்த் திரிந்தான். ஒரு நாள் நைஸாமே, 'நான் இன்றுமட்டும் கர்நாடக நவாபுகள் என்ற பெயரால் பதினெட்டு நவாபுகளைச் சந்தித்துக் காணிக்கை பெற்று இருக்கிறேன். 'ஒரு நவாபுதான் கர்நாடகத்திற்கு,' என்று நினைத்து வந்தேன். இத்தனை நவாபுகள் இங்கே இருக்கிறார்களே!' என்று கூறினானாம். நைஸாம் தன் சட்டபூர்வமான அதிகாரத்தை நினைத்துப் பார்த்தான். 'கர்நாடகத்தை நம் கருத்து வழிக் கட்டி ஆளப் பலம் பொருந்திய ஒரே நவாபுவை நியமிப்பதுதான் உத்தமம்' என்ற 'ஞானோதயம்' அவனுக்கு ஏற்பட்டது. எனவே, அவன் 1743-ல் மராத்தியர்களிடமிருந்த திருச்சிராப்பள்ளியைப் பறித்துக் கொண்டான். தொடர்ந்து மதுரையையும் கைப்பற்றினான். முராரி ராவ் தன்னைச் சேர்ந்த மராட்டியர்களுடன் மூட்டை முடிச்சுகளை இறுக்கிக் கட்டிக் கொண்டு கர்நாடகத்தை விட்டே வெளியேறினான். நைஸாமின் அட்டூழியங்களைப் பொறுக்கமாட்டாத

தமிழர் - சிறப்பாகத் தஞ்சையைச் சேர்ந்த கள்ள மரபினர் இரவோடு இரவாய்த் திருச்சிராப் பள்ளியிலிருந்த முகம்மதியப்படைகளின் கூடாரங்களில் புகுந்து பழிவாங்கினர். கள்ளர்களின் வாளுக்கு நேரடியாகப் பதில் சொல்வது நைஸாமுக்குக் கடினமாய் இருந்தது. ஆயினும், கடைசியாகப் பெரும்படையின் துணை கொண்டு கள்ளர் நாட்டைச் சூறையாடினான் நைஸாம். எல்லாம் பாழாயின. சுதந்தர உள்ளம் படைத்த தமிழக மக்கள் இவ்வாறு நைஸாமின் கொடுமைக்கு இரையாகிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த காலத்தில், புதுக்கோட்டைத் தொண்டைமான் நைஸாமுடன் விருந்துண்டு காலத்தைக் கழித்தான்; நைசாமிடமிருந்து தன் வீரத்திற்கு விலையாக இலுப்பூரை இனாமாகப் பெற்றான். கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்த கதை போல, நைசாமிடமிருந்து வாங்கிய இலுப்பூர் இனாத்தைப் பின்னாளில் வெள்ளையாட்சி வேரூன்றுவதற்குப் பெரும்பாடு பட்ட முகம்மதலிக்குக் காணிக்கையாகக் கொடுத்தான். என்னே அவன் வீரமும் வள்ளன்மையும்!

1745ல் மீண்டும் முராரி ராவின் தலைமையில் மராத்தியப் பெரும் படையெடுப்பு ஒன்று நிகழ்ந்தது. இப்படையெடுப்பால் கன்னித் தமிழகத்திற்கு நேர்ந்த அழிவுகளைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது! இங்ஙனம் தமிழகத்தின் நிலை பல்வேறு படையெடுப்புகளாலும் பாழாகிச் சீர் குலைந்திருந்த காலத்திலேததான் பதினெட்டாம் நூற்றாண்டின் முதற்பாதி முடிந்து கொண்டிருந்தது. அந்நாளில் துரோகக் கும்பலாகிய ஆர்க்காட்டு நவாபுகளின் ஆட்சிப்பீடத்திற்கான உரிமைப் போராட்டம் தலை தூக்கி நின்றது. அந்நாளில் நடந்த வரலாற்று நிகழ்ச்சிகள் ஆராய்ச்சியாளர்களாலேயே தெளிவாக அறிந்து கொள்ள முடியாத அளவிற்குச் சிக்கல் நிறைந்த சிலந்திக் கூடாய் உள்ளன. எனினும், நம் வரலாற்றிற்கு மட்டும் வேண்டிய முக்கிய நிகழ்ச்சிகளைச் சிறிதே கவனிப்போம்:

பதினெட்டாம் நூற்றாண்டின் முதற்பாதி முடிவதற்குள்ளேயே இந்திய மண்ணிலே ஐரோப்பிய வணிகர்கள் கால்வைத்து விட்டார்கள். பண்டகசாலைகளை அமைத்து வியாபார வேட்டைக்காக வந்த வெள்ளை வியாபாரிகள் மறைமுகமாகவும் நேர்முகமாகவும் அரசியல் வேட்டையாடவும் தொடங்கினார்கள். வியாபாரப் போட்டியிலும் அரசியல் சூழ்ச்சியிலும் தலைமை தாங்கியவர்கள் பிரெஞ்சியரும் ஆங்கிலேயரும் ஆவர். தமிழ் நாட்டு மக்களின் சுதந்தரத்தை வேட்டையாடக் கறுவிக் கொண்டிருந்த அவர்களுக்கு ஆர்க்காட்டு நவாபுகள் மோப்பம் பிடித்துக் கொடுப்பதில் குறைவில்லாத உதவி புரிந்தார்கள்.

மராத்தியர்களுக்கு ஒரு கோடி ரூபாய் கொடுப்பதாக ஒப்புக் கொண்டு தன் அரசையுமுயிரையும் காப்பாற்றிக் கொண்ட ஆர்க்காட்டு நவாபு சாப்தர்

அலி 1742ல் தன் உறவினர் ஒருவரால் கொலை செய்யப்பட்டான். இதன் பிறகு அவன் மகனான இரண்டாம் சாதத் உல்லா நவாபுவானான். இதற்குள்ளேதான் கர்நாடகத்தில் ஏற்பட்ட குழப்பத்தை நீக்கத் தட்சிண சுபேதாரான நிஸாம் - உல்-முல்கு, கர்நாடகத்திற்கு வந்து, அன்வருதீன் முகம்மதுவை ஆர்க்காட்டு நவாபுவாக 1744 இல் நியமித்தான். ஐந்து ஆண்டுகள் வரை அவன் ஆட்சி நடந்தது. 1748ல் நிஸாம்-உல்-முல்கு இறக்கவே, ஐதராபாதில் நாசிர், முசாபர் என்ற இருவருக்குமிடையே அரசுரிமைப் போட்டி நிகழ்ந்தது.

இந்த அரசுரிமைப் போராட்டத்தில் அன்வருதீனும் அவன் மகன் முகம்மதலியும் ஒரு கட்சியாகவும், சந்தாசாகிபு இன்னொரு கட்சியாகவும் இருந்து பெரும்போர் உடற்றினர். அன்வருதீன்-முகம்மதலிக்கும் சந்தா சாகிபுவுக்கும் இடையே ஏற்பட்ட போராட்டம் வெளியே ஆர்க்காட்டு நவாபுகளின் அரசுரிமைப் போராட்டமாய்க் காணப்பட்டாலும், உண்மையில் அஃது ஆங்கில பிரெஞ்சு ஆதிக்கப் போராட்டமே. ஏற்கெனவே சந்தா சாகிபு மராத்தியரால் கைது செய்யப்பட்டுச் சதாராவுக்குக் கொண்டு போகப்பட்டான் என்பதை நாம் அறிவோம். மராத்தியர்களுக்குப் பெருந்தொகை கொடுத்துச் சந்தா சாகிபுவை விடுதலை செய்தான் பிரெஞ்சுக்கவர்னர் டூப்ளே. முசாபர் பிரெஞ்சியர்களோடு உடன்படிக்கை செய்து கொண்டான். அதன்படி அவனை நைசாம் ஆக்குவதற்குச் சந்தா சாகிபுவும் பிரெஞ்சியர்களும் உதவ வேண்டுமென்றும், அதற்குப் பதிலாகச் சந்தா சாகிபுவை நவாபுவாக்கத் தாங்கள் துணை புரிவதாகவும் ஒப்பந்தம் ஏற்பட்டது. இதன்படி ஆர்க்காட்டு நவாபுவான அன்வருதீன் கொலை செய்யப்பட்டான். சந்தா சாகிபு தன்னை ஆர்க்காட்டு நவாபுவாகப் பிரகடனம் செய்து கொண்டான். எனவே ஆம்பூர் வெற்றி சந்தா சாகிபுவுக்கு அமைதியைத் தரும் இறுதி வெற்றியாய் இல்லை. அரசுரிமைப்போர் தொடர்ந்தது. முகம்மதலியும் ஆங்கிலேயரும், தஞ்சை அரசரும், புதுக்கோட்டைத் தொண்டைமானும், மைசூராரும், மராத்தியரும் ஒரு தரப்பில் நின்றனர். இவர்களை எதிர்த்துச் சந்தா சாகிபுவும், பிரெஞ்சியர்களும், மதுரை ஆலம்கானும் அணி வகுத்தனர். இருதரப்புக்குமிடையே நடந்த கடும் போரில் எத்தனையோ சிக்கல்கள், சூழ்ச்சிகள், சதிகள் அமைந்தன. எல்லாவற்றையும் கடந்து இறுதியாக முகம்மதலியும் ஆங்கிலேயரும் வெற்றி பெற்றனர். சந்தா சாகிபு 1752ஆம் ஆண்டு, ஜூன் மாதம் திருச்சிக்கு அருகில் நடநத போரில் கொலை செய்யப்பட்டான். சந்தா சாகிபுவின் வாழ்க்கை கோரமான முடிவைக் கண்டது. கண்டதுண்டமாக்கப்பட்ட அவன் உடல், எவ்வெவ்வாறோ, எங்கெங்கோ, புதைக்கப்பட்டது. சந்தா சாகிபுவின் வீழ்ச்சி மூலம் ஆங்கிலேயர் கை வலுவடைந்தது. முகம்மதலி ஆர்க்காட்டு நவாபு ஆனான். பிரெஞ்சு ஆதிக்கம் நசித்துப் போனது.

அசைக்க முடியாத நிலையில் வெள்ளையரின் ஆட்சி தமிழகத்தில் வேரூன்றியது. ஒண்ட வந்த வெள்ளைப் பிடாரிகளும் ஆர்க்காட்டு நவாபுவையும் புதுக்கோட்டைத் தொண்டைமானையும் போன்ற ஊர்ப் பிடாரிகளும் சேர்ந்து, நாட்டின் மானத்தைக் காற்றில் பறக்கவிட்டுக் கொண்டிருந்தன. பூலித்தேவர் போன்ற விடுதலை வீரர்கள் அக்கொடுமையை எதிர்த்துப் போரிட்டு வீர மரணம் எய்தினர்.[13] இச்சூழ்நிலையிலே தான் நம் அருமைத் தலைவர்களாகிய மருது சகோதரர்கள் பிறந்தார்கள். அந்நிய ஏகாதிபத்தியம் வேரூன்றும் போதே அதன் வேரைக்கல்லி எறியவல்ல மாவீரர்களைப் பெற்றுக் கொடுத்த தமிழ்த்தாயின் மணிவயிறே வயிறு! அம்மணி வயிற்றிலே பிறந்த மாணிக்கங்கள் வல்லமை மிக்க காலக் கடவுளிடம் சுதந்தரதேவதை வரமிருந்து பெற்ற பரிசு. இவ்வாய்மையை மனமார உணரும் பொருட்டே கடந்த காலத் தமிழகத்தின் வரலாற்றை இவ்வளவு ஊடுருவிப் பார்த்தோம்.

ஆம். ஒளரங்கசீபு காலத்திலிருந்து ஆர்க்காட்டு நவாபுகாலம் வரை சென்ற ஒன்றரை நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டு மக்கள் அந்நியப் படையெடுப்புகளால் பட்ட அவதிகளையும் அல்லல்களையும் இதுவரை பார்த்தோம். இந்தத் துன்பங்களாலும் துயரங்களாலும் தமிழ்நாட்டு மக்களுடைய நெஞ்சிலே மூண்டிருந்த கோபத்தீ நாளடைவில் எழுநா விட்டு எரியும் ஏகாதிபத்திய எதிர்ப்புத் தீயாய் மாறியது. ஆர்க்காட்டு நவாபுவின் வெற்றி தமிழகத்தின் அடிமை வாழ்விற்கு இடப்பட்ட அடித்தளம் என்பதை அறியாதவர்களல்ல மறவர்நாட்டு மக்கள். திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் கண்ட வெற்றியால் ஆர்க்காட்டு நவாபுவின் மனம் திருப்தி அடையவில்லை. ஏனைய தமிழ்ப்பகுதி மக்களை ஆங்கிலேயரின் படை வலி கொண்டு சூறையாடியதுபோலச் சுலபமாக இராமநாதபுரம் - சிவகங்கை நாடுகளைக் கொள்ளை கொள்வதென்பது ஆர்க்காட்டு நவாபுவுக்கு இயலாத செயலாய் இருந்தது. எனவே, அவன், 'பெரிய மறவர் நாட்டிலும் சிறிய மறவர் நாட்டிலும் வாழும் வீரச் சிங்கங்கள் விரைவில் கிழட்டுச் சிங்கங்களாகி மாயட்டும்; இரு நாடுகளையும் ஒரு கை பார்ப்போம்!' 'அல்லா'[14] செய்வோம்,' என்று திட்டமிட்டுக் கொண்டிருந்தான். இவ்வுண்மையைப் பல்வகையாலும் அறிந்த பாண்டி நாட்டு மக்கள் நெஞ்சிலே சுதந்தரத் தீக்கொழுந்து விட்டு எரிந்தது. தங்கள் தாய்த்திருநாட்டிற்கு - தெய்வத்தினும் பெரிய தமிழ் நாட்டிற்கு - நேர்ந்த கதியையும் அவமானத்தையும் எண்ணி எண்ணி அவர்கள் உடலும் உள்ளமும் உயிரும் துடித்தன. 'குமரி முதல் இமயம் வரை ஒரு மொழி வைத்தாண்ட தமிழ் மரபு, எங்கிருந்தோ வந்த பரதேசிப்படைக்கும் அடிமைப்புத்தி படைத்த ஆர்க்காட்டு நவாபுவுக்குமா கைகட்டி வாழ்ந்து கப்பம் செலுத்துவது!' என்று எண்ணியபோதெல்லாம் அவர்கள் அடி வயிற்றில் ஆத்திரத்தீ மூண்டது. நாளடைவில் எண்ணற்ற தேசபத்தர்களின்

உயிரையே நெய்யாக உண்டு ஓங்கி வளரும் தேசபத்தி என்ற பெருந்தீயாக அது உருக்கொண்டது. இவ்வுண்மையை மருதிருவர் வரலாறு முழங்கும்; பாரத நாட்டின் சுதந்தர வரலாறு பறை சாற்றும்.

ஆர்க்காட்டு நவாபு பறங்கியரின் படைகொண்டு மறவர் சீமையின் மீது எந்த நேரத்திலும் படையெடுத்து சூழ்ச்சிகள் புரியக் கூடும் என்று எண்ணியபோதெல்லாம் மறவர் மக்களின் கண்கள் சிவந்தன. அவர்கள் செங்குருதி கொதித்தது. அதன் பயனாகக் காலவெளியிலே-வரலாற்று விண்ணிலே - கன்னித் தமிழகத்திலே - அடிவானம் சிவந்தது. காரிருளை - சூழ்ந்துவரும் அடிமை வாழ்வை - வெட்டிச் சாய்க்கும் ஆதவன் உதயமானான். 1748ஆம் ஆண்டில்[15] தமிழகத்தின் தனிப்பெருந்தலைவன் - இந்திய விடுதலைப் போரின் இணையில்லா வீரன் - பெரிய மருது பாண்டியன் பிறந்தான்.

இராமநாதபுர மாவட்டத்திலுள்ள அறுப்புக் கோட்டையிலிருந்து கிழக்கே பதினெட்டு மைல் தொலைவில் முக்குளம் என்னும் அழகிய கிராமம் ஒன்று கிருதுமால் நதிக்கரையில் அமைந்துள்ளது. நீர்வளமும் நிலவளமும் நிறைந்து பச்சைப்பசேலென என்றும் குன்றாப் பசுமையுடன் விளங்கும் இக்கிராமத்தில், தொன்று தொட்டுப் புகழுடன் விளங்கிய சேர்வைக்காரர் குடும்பம் ஒன்று இருந்தது. அக்குடும்பத்தின் பெருமை துலங்க 1748ஆம் ஆண்டில்[15] பிறந்தவரே பெரிய மருதுபாண்டியர். இவரை ஈன்றெடுத்த அருமை அன்னை ஆனந்தாயி என்னும் பொன்னாத்தாள். இவரைச் சான்றோராக்கிய தந்தையார் உடையார் சேர்வை என்னும் மொக்க பழனியப்பன் சேர்வை. சிவகங்கையை அடுத்துள்ள புதுப்பட்டி என்ற கிராமத்தைச் சேர்ந்த பெண்ணரசியாகிய பொன்னாத்தாளைத் திருமணம் புரிந்து கொண்ட உடையார் சேர்வை, தம் காதல் மனைவியுடன் இராமநாதபுரம் சேர்ந்து, கொங்காரு தெருவில் குடியேறினார்.[16] அவர் காலத்தில் பெரியமறவர் நாட்டை ஆட்சி புரிந்து வந்த சேதுபதி, முத்து விஜய இரகுநாதர். உடையார் சேர்வை, சேதுபதியின் படையில் சிறப்பு வாய்ந்த படைத்தளபதியாய் விளங்கினார். ஆம். உடலுரத்திலும் நெஞ்சுரத்திலும் நிகரற்று விளங்கிய அவ்வீரருக்குத் 'துப்பாக்கி வயிற்றில் பீரங்கி பிறந்தது போல'ப் பிறந்த வீரரே நம் பெரிய மருது பாண்டியர். தவமிருந்து பெற்ற தம் அருமைக் குழந்தைக்கு உடையார் சேர்வையும் அவர் மனைவியாரும் தம் குல தெய்வமாகிய மருதப்பசுவாமியின்[17] பெயரையே சூட்டினர்; அன்புடன் தழுவி அகமகிழ்ந்து உச்சிமோந்து உணர்வு மேலிட்டுச் சீராட்டிப் பாராட்டிச் சுதந்தர வீரரை வளர்த்தனர். அன்னை ஈந்த அமுதுடன் வீரப் பாலுண்டு வளர்ந்தது குழந்தை. ஆனந்தாயி ஆத்தாள் குழந்தையின் உடலைப் பாலூட்டி உணவளித்துப் போற்றியது போலவே, பாண்டிச் சீமையின் பழமை சான்ற வீரக்கதைகள் பலவற்றையும் கூறி மருதுவின்

உள்ளத்தையும் உரமுடையதாக்கி வந்தாள். அன்னை அளித்த உணவும், உணர்வும், அருமைத் தந்தையார் அளித்த கல்வியும், படைக்கலப் பயிற்சியும் சேர்ந்தே பின்னாளில் பெரிய மருதுவை உலகம் மதிக்கும் ஒப்பற்ற வீரராக்கின எனல் மிகையாகாது.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்ற பழமொழிக்கேற்ப, பிள்ளைப் பருவத்திலிருந்தே பெரிய மருதுவின் தோற்றப் பொலிவிலும் செயல் திறங்களிலும் அவர் மாவீரராய்ப் பின்னாளில் உருவாவதற்குரிய அறிகுறிகள் பல காணப்பட்டன. ஓடும் பாம்பையும் அஞ்சாது மிதிக்கும் இளமைப்பருவத்தை அடைந்தார் பெரிய மருது. அந்நாளில் அவருடைய ஒளி பொருந்திய விழிகளையும், நீண்ட கைகளையும், எடுப்பான பிடரியையும், நிமிர்ந்த பார்வையையும், செதுக்கிவிட்ட சிலை போன்ற உடல் அமைப்பையும், விரைந்த நடையையும், வெடுக்கெனப் பேசும் மொழிகளையும், துடுக்கான செயல்களையும் கண்ட முதியோர், உடையார் சேர்வையையும் அவர் வாழ்க்கைத் துணைவியையும் கண்ணாரக்கண்டு வாழ்த்தினர். காலக் கணிதரும் கைரேகை பார்ப்போரும் மருதுவின் சாதகக் குறிப்பையும் கைரேகைகளையும் முகச்சாடைகளையும் அங்க அடையாளங்களையும் கண்டு 'பாட்டனார் ஆண்ட பழுதில்லாப் பாண்டி ராஜ்யத்தை ஆள வந்தவன் ஐயா உம் பிள்ளை!' என்று உடையார் சேர்வையை அணுகி வாய் குளிர மனங் குளிரக் கூறினார்; மருதுவின் பெற்றோர் கண்களில் இன்பக் கண்ணீர் சுரந்தது. எல்லாவற்றிற்கும் மேலாகச் சுதந்தர தேவதை 'மைந்தனே, மருதப்பா, வளரு; விரைவாக வளரு; நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளரு! புல்லர்களைப் புழுதியாக்கக் காளையைப் போல - களிற்றினைப் போல - வளரு! ஏகாதிபத்திய வெறியர்களின் எலும்பை நொறுக்க மின்னல் வேகத்தில் வளரு!' என்று வாழ்த்திய வண்ணம் இருந்தாள். அவள் வாழ்த்தியது வாசியாவது திண்ணமன்றோ?

மருதுவின் உடல் வளர்ந்தது; உள்ளம் விரிந்தது; வீரம் பெருகியது; தியாகம் ஓங்கியது; 'ராஜக்ளை' மிகுந்தது; புகழ் பரவியது.

இந்நிலையில் பெரிய மருதுவின் புகழுக்குப் போட்டியாக அவர் வீட்டிலேயே இன்னொருவர் தோன்றினார். ஆம். அவர்தாம் சின்ன மருது; பெரிய மருதுவின் அருமைத் தம்பியார். ஐந்து ஆண்டுகளில் அடுத்ததும் ஆணாய்ப் பிறந்தது கண்டு அளவிலா மகிழ்ச்சி கொண்டனர் பெற்றோர்; இரு பிள்ளைகளையும் தம் இரு கண்கள் போலப் போற்றி வளர்த்தனர். ஆனந்தாயிக்கு மட்டுமே அல்லாமல் தமிழ்த் தாய்க்கே இரு கண்கள் போன்ற அம்மைந்தர் இருவரும், பெற்றோர் அன்பையும் நல்லோர் ஆசியையும் இறைவன் திருவருளையும் துணையாகக் கொண்டு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வரலாயினர்.

பெரிய மருது சிவந்த மேனியர்; கள்ளமற்ற நெஞ்சம் படைத்தவர்; எனவே, அவரை 'வெள்ளை மருது' என மக்கள் கொள்ளை அன்போடு வழங்கியது முற்றிலும் பொருத்தமே! சின்ன மருது, கருமையின் அழகைக் காட்டும் கவினுறு தோற்றமுடையவர். தமையனார் ஆஜானுபாகு; தம்பியார் அவரைப் போன்றவரல்லர்; எனினும், எவர்க்கும் இளைக்காத அழகும் அறிவும் ஆண்மையும் படைத்தவர். சுருங்கச் சொன்னால், இராமனும் இலக்குவனும் போல்வார் பெரிய மருதுவும் சின்ன மருதுவும் என்னலாம். அவர்களின் புகழைக் கேள்வியுற்றார் அந்நாளில் சிவகங்கையை ஆண்ட அரசர். 'கேட்டுவேட்ட' அவர் நெஞ்சம், நேரில் அவர்களைக் கண்டதும் கொண்ட இறும்பூதிற்கும் இறுமாப்பிற்கும் ஓர் எல்லை இல்லை. அவர், 'தெய்வத் தமிழ் மகளின் திருநுதலாய் விளங்கும் பாண்டி நாட்டின் திலகமெனத் திகழ்வது மறவர் நாடே. அத்திலகத்தின் நறுமணமாய்த் திகழ்வது சிவகங்கைச் சீமையே. அச்சீமையின் புகழுக்கு அமரத் தன்மை அளிக்க வல்ல வைரங்கள் இவர்களே,' என மனமுவந்து மருதுபாண்டியரைப் போற்றினர். அந்நாள் முதல் தங்கள் தாயகமாகிய சிவகங்கைச் சீமையின் படை வரிசையிலும் - வரலாற்றுப் பெருமையிலும் மருது சகோதரர்கள் சிறப்பிடம் பெறலானார்கள்.

# 3. கடும்புயல்

மருது சகோதரர்கள் சின்னஞ்சிறு குழந்தைகளாய் இருந்த நாளில் செந்தமிழ் நாட்டின் நிலை எவ்வளவு சீர் கேடுற்றிருந்தது என்பதைச் சென்ற இயலில் பெரிதும் கவனித்தோம். அந்தச் சீர்கேடான நிலை நாளுக்கு நாள் முற்றி வந்ததேயொழியச் சற்றும் குறையவில்லை. 1728ல் லாலி என்ற பிரெஞ்சு சேனாதிபதி மீண்டும் ஆங்கிலேயருக்கு எதிராகப் போர் தொடங்கினான். கர்நாடகத்தின் பல்வேறு பகுதிகளிலும் சிதறிச் சிதறி நடைபெற்ற இப்போரில் தொண்டைமான் படைகள் நவாபுவின் சேனையுடனும் வெள்ளைப் படையுடனும் தோளோடு தோள் தொட்டு நின்றன. இந்நாள்களிலே தான் மபூஸ்கான் பேரும், யூசப்கான் பேரும் பெரிதும் அடிபட்டன. நவாபுவினிடமும் வெள்ளையரிடமும் தனக்குள்ள செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு புதுக்கோட்டைத் தொண்டைமான் துரை ஆடாத ஆட்டமெல்லாம் ஆடினான். இராமநாதபுரச் சீமைக்கும் சிவகங்கைச் சீமைக்கும் எதிராக நவாபுவும் தொண்டைமானும் சிறுகச் சிறுகச் செய்துவந்த அநீதிகள் பலவாகும். முகமதலியும் ஆங்கிலேயரும் திருச்சிக் கோட்டையில் தம் வெற்றிக் கொடியை நாட்டியபின் தென்பாண்டி நாட்டில் தமது அதிகாரத்தையும் ஆட்சியையும் வேரூன்றச் செய்ய அரும்பாடு படலாயினர். அவர்கள் முயற்சிகள் அனைத்திலும் புதுக்கோட்டைத் தொண்டைமானும் தஞ்சை அரசனும் மனமுவந்து ஒத்துழைத்தனர். சேதுபதிக்கும், நவாபு-ஆங்கிலக் கம்பெனிக்கும் எவ்வித உறவும் ஏற்படாமல் துண்டித்து வைத்திருப்பதில் தொண்டைமானும் தஞ்சை வேந்தனும் கண்ணும் கருத்துமாயிருந்தனர்; வெற்றியும் பெற்றனர். இச்சூழ்நிலையில் மறவர் நாட்டின் ஒரு பெரும்பகுதியாகிய இராமநாதபுரம் எந்த நிலையிலிருந்தது என்பதைக் காண்போம்:

கட்டையத் தேவருக்குப்பின் இராமநாதபுரத்தை ஆண்ட சேதுபதிகள் நால்வர். அவர்களுள் முதல்வர் சிவகுமார முத்து விஜய இரகுநாத சேதுபதி. பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்த இவர் காலத்தில் மறவர் சீமை கண்ட அறப்பணிகள் பல. புலால் உண்ணாமையைத் தலை சிறந்த அறமாக வாழ்நாள் முற்றிலும் போற்றி, 'சைவத்துரை' எனப் புகழ் கொண்ட இவர், வாரிசின்றி இறந்தார். அதனால், இவர் ஆட்சியில் செல்வாக்கு மிக்க தளவாயாய் இருந்த வெள்ளையன் சேர்வைக்காரர் காலஞ் சென்ற கட்டையத் தேவரின் உறவினராகிய இராக்கத்தேவரைச் சேதுபதி ஆக்கினார்.

சேதுபதி இராக்கத் தேவரின் ஆட்சி ஓராண்டில் முடிவெய்தியது. வெள்ளையன் சேர்வைக்காரர் சிறந்த வீரர். இவர்க்கும் சேதுபதிக்கும் இடையே மனவேறுபாடு மிகுந்தது. வீரத்தளவாய் வெள்ளையன் சேர்வையாரின் வரம்பில்லா ஆற்றலையும் வசையில்லாப் புகழையும் கண்டு வெகுண்டார் சேதுபதி. தஞ்சை மன்னது படையெடுப்பை வெற்றிகரமாய் முறியடித்துப் பின் திருநெல்வேலிச் சீமையில் பாளையக் காரர்களின் கொட்டத்தை அடக்க முகாமிட்டுக் கொண்டு இருந்தார் வெள்ளையன் சேர்வைக்காரர். அவரை உடனே அக்காரியத்தை விட்டுவிட்டு வரும்படி உத்தரவிட்டார் சேதுபதி. யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டது போல ஆயிற்றுச் சேதுபதியின் இச்செயல். திருநெல்வேலியிலிருந்து திரும்பிவந்த தளவாய்ச் சேர்வை சேதுபதிக்கெதிராகப் படை திரட்டினார்; போரிட்டார்; அரசரைக் கைது செய்தார்; அரசுரிமையைச் செல்ல முத்து விஜய ரகுநாத சேதுபதி என்பாருக்கு உரிமையாக்கினார். இப்புதிய சேதுபதி பதின்மூன்று ஆண்டுகளும், ஆறு மாதங்களும், ஒன்பது நாள்களும் நாடாண்டார். இவர் காலத்தில் பெரிய மருதுபாண்டியர் ஒரு வயதுக் குழந்தை.

செல்லமுத்து விஜயரகுநாதர் ஆட்சியில் மீண்டும் ஒரு முறை தஞ்சை மன்னனது படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. தளவாய் வெள்ளையன் சேர்வையாரோடு சேர்ந்து இச்சேதுபதி தம் காலத்தில் செய்த அறப்பணிகள் கணக்கற்றவை. 1754 ஆம் ஆண்டில் வெள்ளையன் சேர்வையாரும் சிவகங்கை அமைச்சர் தாண்டவராயப்பிள்ளையும் தோளோடு தோள் சேர நின்று மைசூர் மன்னரின் சார்பாக மதுரையைக் கைப்பற்றியிருந்த கேப்டன் கோப்பு என்பவனைப் போரில் புறங்கண்டனர். அவ்வமயம் மதுரையை ஆண்ட நாயக்க வமிசத்தின் கடைசிப் பிரதிநிதியாகிய இராணி மீனாட்சியின் சுவீகாரப் புத்திரனுக்குப் பட்டம் சூட்டியும் வைத்தனர். ஆனால், அவர்கள் செய்த காரியம் நெடுநாள் நீடிக்கவில்லை. மதுரை முகம்மதியர்கள் கைவசமாயிற்று. மேலும் இராமநாதபுரத்தை முகம்மதியர்கள் தாக்கவும் துணிந்தார்கள். ஆனால், அவர்கள் இறுமாப்பை நொறுக்கி எறிந்தார் வெள்ளையன் சேர்வையார். செல்லமுத்து விஜயரகுநாத சேதுபதி ஆரம்பத்தில் சந்தா சாகிபுவையும் மைசூராரையும் முகமதலிக்கு விரோதமாக ஆதரித்தார்; ஆனால், 1755 இல் ஆங்கிலேயர்களோடு நேச உடன் படிக்கை செய்து கொண்டார்; ஆங்கிலேயர்கட்கு இலங்கையோடு இடரின்றி வியாபாரம் செய்யத் தம் தென்பாண்டிக் கடற்கரையில் இரண்டிடங்களைத் தருவதாகவும் வாக்கு அளித்தார்; இவ்வாறே 1759இல் டச்சுக்காரர்களுக்கும் கீழ்க்கரை என்னுமிடத்தில் பண்டகசாலை நிறுவ அனுமதி அளித்தார். ஒரு வகையில் ஆங்கிலேயர் ஆட்சிக்குத் தமிழகத்தில் 'நல்வரவு' கூறிவிட்டுச் செல்லத் தேவர் 1782-ஆம் ஆண்டில் விண்ணுலகம்

சென்றார். அவருடைய சகோதரி மைந்தர் முத்து இராமலிங்கத்தேவர் பட்டத்திலமர்ந்தார். அப்பொழுது அவருக்கு வயது இரண்டு மாதம்! பாலகனின் ஆட்சி தொடங்கியதும் பலமிகுந்த தளவாய் சேர்வையார் மண்ணுலக வாழ்வை நீத்தார். அவர் பதவியில் தாமோதரம் பிள்ளை அமர்ந்தார். குழந்தை சேதுபதியின் கார்டியனாகத் தாயார் முத்திருவை நாச்சியார் நாட்டின் நிருவாகத்தைக் கவனித்து வந்தார். அமைச்சர் தாமோதரம் பிள்ளை இராமநாதபுரத்தின் அரண்மனைகளையெல்லாம் புதுப்பித்துப் பலப்படுத்தினார்; திருப்புல்லணையில் கோட்டை ஒன்றைக் கட்டினார்; அதன் பின் மதுரையை ஆண்ட நாயக்கர் ஆட்சியை அடுத்துக் கவ்விக் கொண்டிருந்த ஆர்க்காட்டு நவாபுவைக் கடுமையாக எதிர்த்தார்; சேதுபதியிடம் ஆர்க்காட்டு நவாபு கப்பம் வாங்க அனுப்பிய பட்டாளத்தைத் தோல்வியுற்றுத் திரும்பி ஓடச்செய்தார்; உள்நாட்டுக் கலகங்களை எல்லாம் ஒடுக்கினார். டச்சுக்காரர்களுடன் 1767-ல் நேச உடன் படிக்கை செய்து கொண்டார்; 1770ல் நேர்ந்த தஞ்சை மன்னன் படையெடுப்பை நாசமாக்கினார்; சுருங்கச் சொன்னால், மீண்டும் மறவர் நாட்டின் புகழைக் குன்றின்மேலிட்ட விளக்காகச் செய்ய முற்பட்டார் என்னலாம். அந்நிலையில் அவர் வாழ்வு விளக்கை அணைத்தான் ஒரு பாவி! இராமநாதபுரத்தில் இருள் சூழ்ந்தது. அவ்வாறு இருள் சூழ்ந்திருந்த நேரத்திலும் சிவகங்கைச் சீமையில் 'சுதந்தர விளக்கு' அணையவில்லை. காரணம், அப்போது சிவகங்கைச் சீமையை ஆண்ட முத்து வடுகநாதர் மாவீரர். அவர் தர்ம பத்தினியும் வீர பத்தினியுமான வேலு நாச்சியோ, வாளேந்திப் போர் புரியும் வல்லமை படைத்தவள். இவ்விருவர் இதயங்களையும் கொள்ளை கொண்ட இளஞ்சிங்கங்களே நம் மருதிருவர். தொடக்கத்தில் சிவகங்கைச் சீமையின் படைத்தலைவர்களாக வந்து சேர்ந்த இவர்கள், மிக விரைவிலேயே மன்னரும் மக்களும் போற்றும் புகழ் படைத்த நல்லமைச்சர் ஆயினர். இவ்வாறு ஆற்றல் மிக்க முத்துவடுக நாதரும், வீரத்தில் சிறந்த வேலுநாச்சியும், அறிவிலும் ஆண்மையிலும் நிகரற்ற மருதிருவரும் வாளும் கையுமாய் நாட்டைக் காவல் புரிந்து வந்த போது சிவகங்கைச் சீமை மக்கள் ஏன் அஞ்ச வேண்டும்?

அந்நாளில் ஆர்க்காட்டு நவாபுவுக்கு இருந்த செல்வாக்கு அளவற்றதாகும். சென்னையை ஆண்ட கவர்னர் பீகாட்டு வாயிலாகப் பரந்து கிடக்கும் நிலப்பகுதி எல்லாம் நவாபுவின் உடைமை என்ற பிரகடனத்தை விடும்படி செய்தான் நவாபு. அவனுக்கு - அவன் தர்பாருக்கு இருந்த மகிமையைக் கண்டு அந்நிய நாட்டுச் சரித்திர ஆசிரியர்களே வியந்தார்கள். சுருங்கச் சொன்னால், குரங்கின் கையிலகப்பட்ட பூமாலை போலத் தமிழ்நாடு ஆர்க்காட்டு நவாபுவின் கையிலகப்பட்டு அலங்கோலப் பட்டுக் கொண்டிருந்தது என்னலாம். இந்நிலையில் எத்தனையோ

பெரும்புயல்களைக் கடந்த நூற்றைம்பது ஆண்டுகளாகக் கண்டு கண்டு களைத்தும் கலங்கியும் போயிருந்த கன்னித் தமிழகத்தில், இன்னொரு பெரும் புயல்-கடும்புயல்-போர்ப் புயல்-அடித்தது. அப்புயலால் விளைந்த சேதம் அளவிற்கு எட்டாதது.

கடலிலே பெரும்புயல் ஏற்படுவதற்கு எத்தனையோ விஞ்ஞான ரீதியான காரணங்கள் உண்டு என்பதை நாம் அறிவோம். அவ்வாறே சிவகங்கையைச் சுற்றிச் சூழ்ந்திருந்த தமிழகமும் கடும்புயல் ஒன்றுக்கு இரையாவதற்கு எத்தனையோ அரசியல் காரணங்கள் இருக்கத்தான் செய்தன. அக்காரணங்களுள் எல்லாம் தலையாய காரணங்கள் இரண்டு. ஒன்று, ஆர்க்காட்டு நவாபுவின் அடிமைப்புத்தி; மற்றொன்று, ஆங்கிலக் கொள்ளைக் கூட்டத்தின் ஏகாதிபத்திய வெறி. இவ்விரு காரணங்களும் ஒன்றோடொன்று பிரிக்க முடியாமல் பிணைந்திருந்த பான்மையை என்னென்று சொல்வது!

1770ல் தஞ்சை வேந்தன் மறவர் சீமையைத் தாக்கினான் என்று சற்று முன் பார்த்தோமல்லவா? தஞ்சை வேந்தனை எப்படியாவது ஆண்டியாக்கித் தமிழகத்தின் நெற்களஞ்சியத்தைக் கொள்ளையிட வேண்டும் என்று பேராசை கொண்டிருந்த நவாபு, தஞ்சை வேந்தனின் போக்குச் சட்டத்திற்கும் சமாதானத்திற்கும் நீதிக்கும் நேர்மைக்கும் தீங்கிழைக்கும் என்று வெள்ளைக் கம்பெனியிடம் புகார் செய்தான். இஃது எவ்வளவு நல்லெண்ணம்! வெள்ளைக் கம்பெனிக்கு ஆர்க்காட்டு நவாபுவின் குரலுக்குச் செவி சாய்க்காமல் இருக்க முடியவில்லை. காரணம், அந்நாளில் இங்கிலாந்தை ஆண்ட ஜார்ஜ் மன்னன் எக்காரணத்தாலோ ஆர்க்காட்டு நவாபுவின் மேல் ஒரு வகையான இரக்கம் கொண்டு, அவனுடைய 'கவுரவம்' கம்பெனியாரால் களங்கப்பட்டு விடாமல் காப்பாற்றத் தேவையற்ற செயல்களைச் செய்து கொண்டிருந்தான். 'எத்தனையோ இடர்ப்பாடுகள் இதனால் பின் நாளில் கம்பெனிக்கே நேர்ந்தன' என்பதை வரலாற்று ஆசிரியர்கள் வாய்விட்டுக் கூறிப் புலம்புகிறார்கள். எதிர்பாராமல் தனக்கு வந்த வாழ்வினால் மமதை கொண்ட நவாபு, மேலும் ஒரு படி துள்ளிக் குதிக்கலானான்; 'தஞ்சை வேந்தனைக் கண்டித்தல் மட்டும் போதாது; தண்டிக்கவும் வேண்டும்,' என்று தலைகீழாய் நின்றான்; இராமநாதபுரச் சீமை தன் ஆட்சிக்குட்பட்டு ஆளும் குறுநில மன்னனின் பூமி என்றும், அம்மன்னைப் போலவே தனக்குத் தலை வணங்கி வாழவேண்டிய தஞ்சை மன்னன் தன்னைக் கேளாமல் சேதுபதிமேல் படையெடுத்தது அநியாயமென்றும் அலறினான். 'ஆமாம்! இதைவிட அநியாயம் வேறு இல்லை. இராமநாதபுரச் சேதுபதியை நாமே காப்பாற்ற வேண்டும். இந்த வினாடியே வெள்ளைக் கம்பெனி அதற்காக வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட வேண்டும்,' என்று முதலைக் கண்ணீர் வடித்தான். புதுக்கோட்டை

நவாபுவுக்குத் துணையாக, தொண்டைமானின் முறையீட்டையும் நவாபுவின் பாய்ச்சலையும் கண்ட வெள்ளையர், தஞ்சை அரசனை விரட்டினர். அவனோ, 'நான் செய்வது ஒன்றும் புதுவதன்று; பரம்பரையாக நடக்கும் காரியந்தான். எங்கள் உடைமையாகிய அநுமந்தக் குடியை மறவர் வேந்தன் பறித்துக் கொண்டான். அதை மீட்பதே எங்கள் நோக்கம். அதோடு சிவகங்கை மீதும் நாங்கள் சீற்றங் கொள்ளக் காரணம், எங்கட்குரிய யானைகளை அந்நாட்டரசர் கொள்ளை கொண்டுவிட்டதே. எனவே, வேறு வழியில்லாமல் போர்க்களம் புகுந்திருக்கிறோம்,' என்று பதில் கூறினான். முடிவாக நவாபு தன் மகன் உமாதுல்... உமாராவை அனுப்பி, அவன் வாயிலாகத் தஞ்சை மீது படையெடுப்பில் வெற்றி கண்டான். அப்போது திருச்சிராப்பள்ளியிலே வெள்ளைப் படைகளுக்குத் தளகர்த்தனாய் இருந்தவன் ஜோசப்பு ஸ்மித்து. அவனோடு சேர்ந்து கொண்டு நவாபுவின் மகன் 1771 செப்டம்பரில் தஞ்சையின் மீது படையெடுத்தான்; வல்லம் கோட்டையைக் கைப்பற்றினான். வெற்றி வீரனான உமாதுல் உமாராவோ, செப்டம்பர் 28-ஆம் தேதி தஞ்சை அரசனோடு ஒப்பந்தம் செய்து கொண்டான். அதன்படி இலட்சக்கணக்கான ரூபாய்களைத் தஞ்சை வேந்தன் தர வேண்டுமென்றும், இராமநாதபுரம் சிவகங்கைச் சீமையிலிருந்து கைப்பற்றப்பட்ட பகுதிகள் திருப்பி அந்தந்த நாட்டிற்கே ஒப்படைக்கப்பட வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று.

தஞ்சாவூர் வேட்டை முடிந்ததும் நவாபு இராமநாதபுரம் சிவகங்கைச் சீமையை விழுங்கத் திட்டமிட்டான். தஞ்சையை வெற்றி கொண்ட மறுநாளே நவாபுவின் மகன் உமாதுல்-உமாராவே தன் தந்தைக்குக் கடிதம் தீட்டினான். அதில் இராமநாதபுரம் சிவகங்கைச் சீமையர்கள் அடக்கலாகா மறவர் மக்களாய் இருக்கிறார்கள் என்றும், தஞ்சையைச் சூறையாடிய போது ஆர்க்காட்டுச் சேனைக்குத் துணையாக அவர்கள் ஒரு சிறிதும் படை உதவியோ பொருள் உதவியோ புரியவில்லை என்றும், மறவர் மக்கட்குத் தஞ்சையிலிருந்து தங்கட் குரிய பகுதிகளைக் கவர்ந்து கொள்வதிலேதான் குறி என்றும், எனவே, இத்தகையோரை முறியடிக்கத் தஞ்சையை வென்ற பட்டாளத்தையே தாமதம் இன்றிப் பயன்படுத்த வேண்டும் என்றும் எழுதினான். 1772 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் நவாபு கும்பெனி அரசாங்கத்துக்கு ஓலை அனுப்பினான். அதில் இராமநாதபுரத்தை ஆள்வோர் டச்சுக்காரர்கட்குத் தன்அனுமதியின்றிக் கோட்டை கட்டிக் கொத்தளங்கள் அமைத்துப் போர்த்தளவாடங்களைப் பெருக்கக் கடற்கரை நகரங்களை உரிமையாக்கிவிட்டனர் என்றும், இராமநாதபுரம் சிவகங்கைச் சீமைத் தளபதிகள் போருக்குரிய ஏற்பாடுகளை எல்லாம் விரைந்து செய்கின்றார்கள் என்றும், தனக்குக் கட்ட வேண்டிய கப்பத்தை ஒழுங்காகக் கட்டவில்லை என்றும், தம் காடுகளில் கொடிய கள்வர் கூட்டங்கட்கு எல்லாம் அடைக்கலம் அளித்துள்ளனர் என்றும், இன்னும் எவ்வளவோ

அநீதிகள் புரிகிறார்கள் என்றும், இல்லாததும் பொல்லாததுமான குற்றச்சாட்டுக்களை எல்லாம் எழுதினான்; இராமநாதபுரம் சிவகங்கைச் சீமையை அடிமைப்படுத்தக் கும்பினிப் பட்டாளத்தை உடனே அனுப்ப வேண்டும் என்றும் குமுறினான். ஆனால், கும்பினி அரசாங்கத்திற்கே நவாபுவின் போக்கு வியப்பை அளித்தது. நேற்று வரை மறவர் சீமைக்காகப் பரிந்து பேசிய நவாபு திடீரென்று அவர்கள் மீது பாய்வது கண்டு, ஏகாதிபத்திய வெறியர்களே திடுக்கிட்டுப் போனார்கள். ஆனால், அதைப்பற்றி அவர்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? நவாபுவின் பெயரையும் தர்பாரையும் பயன்படுத்திக் கொண்டு நாட்டு வேந்தர்களை அழிப்பதில் அல்லவா அவர்கள் எதிர்காலம் அடங்கியிருந்தது! 1772, மே மாதம், நவாபுவின் நச்சு எண்ணங்களை நிறைவேற்ற ஜோசப்பு ஸ்மித்தின் தலைமையில் கும்பினிப் பட்டாளம் புறப்பட்டது. பழைய படியே நவாபுவின் திருக்குமாரன் கும்பினிப் படையோடு சென்றான்; டோர் வீரர்கட்குப் பணம் கொடுப்பதாக முன்னதாகவே பசப்பு மொழிகள் கூறி இராமநாதபுரத்தைக் கொள்ளையடித்தான். இப்படையெடுப்புக்குப் பேருதவி புரிந்தான் புதுக்கோட்டைத் தொண்டைமான். சர்தார் சதாசிவ ஐயர், ஆதிநாராயணன் முதலியவர்கள் தலைமையில் இருநூறு பேரடங்கிய குதிரைப்படையையும் ஐயாயிரம் பேரடங்கிய காலாட்படையையும் அவன் அனுப்பி வைத்தான். இராமநாதபுரத்தார் தாம் செய்த குற்றம் என்ன என்பதை அறியுமுன்னே கும்பினிப் படை இராமநாதபுரத்தைத் தாக்கியது; கைப்பற்றியது[18].

இந்தச் சமயத்தில் இராமநாதபுரச் சீமையை ஆண்ட சேதுபதி ஒன்பது வயதுச் சிறுவன் குழந்தைச் சேதுபதியையும் அவன் தாயையும் சகோதரியையும் கும்பினிக் கூட்டமும் நவாபு சேனையும் சேர்ந்து கைது செய்தன; திருச்சியில் சிறை வைத்தன. இதன் பின் எட்டு ஆண்டுகள் என்றும் காணாத காரிருள் கவ்விக் கொண்டது.

இராமநாதபுரம் பிடிபட்டதும் வெள்ளைப்படையும் நவாபுவின் சேனையும் சிவகங்கைச் சீமையை நோக்கிப் புறப்பட்டன; காளையார் கோவில் கோட்டைக்கு எதிரில் அணி வகுத்து நின்றன. அங்குத்தான் சிவகங்கைச் சீமையின் அரசராகிய வீரர் முத்து வடுகநாதரும்,[19] அவர் பத்தினியும், அமைச்சர்களான மருதிருவரும் இருந்தனர். காளையார் கோவிலைக் கைப்பற்றுவது ஏகாதிபத்திய வெறியர்கட்கு எளிதாய் இல்லை. இந்நிலையில் நவாபு தொண்டைமானுக்கு ஓலமிட்டு ஓலை அனுப்பினான். அதில் தொண்டைமான் சிவகங்கைச் சீமையை அடக்கப் படை ஏதும் அனுப்பாதது வியப்பை அளிக்கிறது என்றும், தொண்டைமானின் தந்தையார் சிவகங்கைச் சீமையைக் கைப்பற்றுவதில் கொண்டிருந்த ஆவல் பெரிது[20] என்றும், தந்தையாரின் ஆவலை நிறைவேற்றப் பிள்ளைகட்குக்

கிடைத்துள்ள வாய்ப்பு அரிதானது என்றும், எனவே தொண்டைமான் அடர்ந்து கிடக்கும் காளையார் கோவில் காட்டைச் சிதைத்து எறிய ஐயாயிரம் காடு வெட்டிகளை உடனே அனுப்ப வேண்டும் என்றும் கண்டிருந்தது. நவாபுவின் கருத்தறிந்த புதுக்கோட்டையான் முந்நூறு பேரடங்கிய குதிரைப்படையையும் ஐயாயிரம் பேரடங்கிய காலாட்படையையும் கிருஷ்ணன் என்ற சர்தாரின் தலைமையில் அனுப்பி வைத்தான். துரோகிகளது படை வலியின் துணை கொண்டு கர்னல் பான்ஷோர் காளையார் கோவில் அரணைக் கடுமையாகத் தாக்கினான். அப்போது நடந்த போர் மாவீரர் முத்து வடுகநாதரோடு சேர்ந்து மருதிருவர் நடத்திய கடும்போர் - பேடியையும் போர் மறவனாக்கும் தன்மையதாகும். காளையார் கோவிலைக் காக்க அரசரும் அமைச்சரும் தோளோடு தோள் சேர நின்று வீரப்பட்டாளத்தின் துணைகொண்டு நடத்திய அப்போரில் முத்துவடுகநாதரின் வீரபத்தினியும் வாளேந்தி வெள்ளை வெறியர்களின் - அடிமைப்புத்தி படைத்த துரோகிகளின் தலைகளை உருட்டிய ஆண்மை, கோழைகளையும் வீரர்களாக்கும் வன்மை வாய்ந்தது. ஆம். முத்துவடுக நாதரின் மனைவி - வீரமங்கை வேலுநாச்சி - அன்று நடத்திய சிறப்பு வாய்ந்த வீரப்போர் வாயிலாக 'வேங்கடத்திற்கு வடக்கே ஒரு ஜான்சி ராணி தோன்றுவதற்கு இரு நூற்றாண்டுகட்கு முன்பே தமிழகம் தன் ஜான்சி ராணியைக் கண்டு விட்டது' என்று வரலாற்று ஆசிரியர்கள் போற்றும்படி செய்து விட்டாள்.[21]

அரசன், அரசி, அமைச்சர்கள், ஆருயிர் மக்கள் அனைவரும் சேர்ந்து நடத்திய அப்போர் - காளையார் கோவிலைக் காக்க நடத்திய கடும்போர் - கடைசியாக வீரமுத்துவடுக நாதரின் சாவிலேயே முடிந்தது.[22] எமனும் கண்டு அஞ்சச் சுதந்தரப்போர் புரிந்த அப்பெருமகன் உயிரற்ற சவமாய்த் தமிழ் மண்ணில் சாய்ந்ததும் அரசியும் அமைச்சர்களும் அடைந்த கலக்கம் சொல்லி முடியாது; படை வீரர்களும் சீமை மக்களும் அடைந்த துயரம் அளவிட்டுக் காண முடியாதது, 'தலையாய ஒரு தமிழ் வீரனின் தியாக இரத்தம் பட்டுப் புனிதமானோம்!' என்று மண் மகள் குளிர்ந்தாள். ஆனால், 'வீரர்கள் போற்றும் வீரனை - வையகமெல்லாம் அடிமையிருளில் மூழ்கினும் நம் சீமையின் சுதந்தர ஒளி குன்றாது என்று நாம் கொண்டிருந்த நம்பிக்கைக்குக் காரணமான காவலனை - வீர சுவர்க்கத்திற்கு அனுப்பி உயிரற்ற உடல் ஆனோமே!' என்று மக்கள் கண்ணீர் வடித்தனர்; மனங்குமுறினர். 1772-ல் சிவகங்கைச் சீமையை எதிர்த்துக் கிளம்பிய ஏகாதிபத்தியக் கடும்புயல், தன் அழிவு வேலையைப் பூரணமாகக் காட்டிவிட்டது. நடுக்கடலில் கடும்புயலில் - சிக்கிய கப்பலின் கதியாயிற்று, சிவகங்கைச் சீமையின் நிலை. கப்பல் வேறு மாலுமி வேறு என்று ஆனாற்போலச் சிவகங்கைச் சீமை வேறு வீரமங்கை வேலு நாச்சியோடு

மருதிருவரும் வேறு என்ற நிலை உண்டாயிற்று. போர்ப்புயல் காட்டிய கடுமையின் விளைவாக நாட்டை விட்டே அரசியும் அமைச்சர்களும் அகலும் நிலை நேர்ந்தது. 'தலைவனை இழந்தோம்; தமிழகத்தை - தாயகத்தை - இழந்தோம்; ஆனால் இன்னும் நம் உயிரை இழக்கவில்லை. எனவே, வெளியேறுவோம்; வீரன் ஐதரின் நிழலில் சில நாள் இருப்போம்; தமிழர் படையைத் திரட்டுவோம்; மீண்டும் போரிடுவோம்; சுதந்தரம் அல்லது சாவு' என்று முழங்கிக் கொண்டே புறப்பட்டனர் வேலு நாச்சியும் மருது சகோதரர்களும். காற்றாய்க் கடுகிச் சென்ற அவர்களைத் திண்டுக்கல் வரவேற்றது: ஐதரும் அகங் குளிர வரவேற்றான்.[23]

மருது பாண்டியரும் வேலு நாச்சியும் இரவு பகலாய்த் தங்கள் கண்ணினும் இனிய மக்களை நினைத்துக் கவலைப்பட்ட வண்ணம் இருந்தனர். சிவகங்கை மக்களோ, ஊன் உறக்கம் இன்றித் தங்கள் ஆருயிரினும் இனிய அரசியையும் இரு கண்கள் அனைய மருது சகோதரர்களையும் எண்ணி எண்ணி ஏங்கிய வண்ணம் இருந்தனர்.

போருக்குப் பின் சிவகங்கைச் சீமை குத்தகைக்கு விடப்பட்டது! ஆம். சுதந்தரப் பூமியில் அடிமை ஆட்சி தலை விரித்தாடியது!

# 4. புயலுக்குப் பின்........!

1772-ஆம் ஆண்டில் அடித்த அரசியற்கடும்புயலின் தீய விளைவுகளினின்றும் தப்பித் தேறுவதற்குச் சிவகங்கைச் சீமைக்கு ஆண்டுகள் எட்டாயின. இவ்விடைப்பட்ட ஆண்டுகளில் மக்களின் உடல் மட்டுந்தான் சிவகங்கையில் இருந்தது; உள்ளமெல்லாம் திண்டுக்கல் மலை மேலேயே இருந்தது. அவ்வாறே அங்கிருந்த வேலு நாச்சியும் மருது சகோதரர்களும் தங்கள் உடலை மட்டும் மலை மேலேயே வைத்து மனத்தை எல்லாம் சிவகங்கைச் சீமையிலேயே பொருத்தி வைத்திருந்தனர். சிவகங்கைச் சீமையின் பெருங்குடி மக்கட்கும் நாட்டின் காவலர்கட்கும் இடையே ஏற்பட்ட இரகசியத் தொடர்பு நாளும் வளர்ந்து வரலாயிற்று. பொன்னையும் பொருளையும் மக்கள் தங்கள் அருமைத் தலைவர்கட்கு அனுப்பி ஆவன புரிந்தார்கள். 'எக்கணத்திலும் வாருங்கள்; வந்து எங்களை ஆட்கொள்ளுங்கள்; அடிமை வாழ்வு வாழ்வதினும் வீர சொர்க்கம் புகவே எங்கள் ஆவி துடிக்கிறது!' என்று செய்தி அனுப்பிய வண்ணம் இருந்தது சிவகங்கைச் சீமை. சிவகங்கைச் சீமையில் ஆங்காங்கே கிளர்ச்சிகளும் புரட்சிகளும் தோன்றின; ஒழுங்கும் அமைதியும் காற்றிலே பறந்தன. குத்தகைக்காரனுக்கு வாழ்வு சாவாய் இருந்தது. நவாபுவுக்குத் தோப்பிராப்பணம் வந்து சேரவில்லை என்பது தெரிந்ததும் ஆத்திரம் அளவுக்கு மீறிப் பொங்கியது. அவன், 'என்ன சேதி?' என்று உறுமினான். 'மக்களின் மனம் எரிமலையாயிருக்கிறது. அவர்கள் அடியுண்ட அரவம் சீறுவதுபோலச் சீறுகின்றார்கள். கிட்ட நெருங்க முடியாது!' என்று பதில் கிடைத்தது. வேறு வழியில்லை. மக்கள் மனமெல்லாம் தங்கள் அரசியிடமும் வீரசகோதரர்களிடமுமே குடிகொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தான் நவாபு; 'யார் ஆண்டால் என்ன? முத்து வடுகநாதர் தொலைந்தார். இனி என்ன, அரசியின் ஆட்சிதானே? நமக்குக் கப்பம் வந்தால் சரி,' என்று நினைத்தான். தனக்கும் தன் நண்பர்களாகிய வெள்ளையர்கட்கும் கொடிய பகைவனாயுள்ள ஐதரிடமிருந்து சிவகங்கைத் தலைவர்களைப் பிரிப்பதே மேல் என்று கருதினான் போலும்! தூதுகள் பறந்தன, மருதிருவரும் வேலு நாச்சியும் தம் தாயகம் திரும்பினர். முத்து வடுகநாதரை இழந்த பின் நெடுநாள் அரசியாய் இருந்து வாழ வேலு நாச்சிக்கு அவ்வளவாக விருப்பமில்லை. மேலும், நாட்டின் நிருவாகம் முழுவதையும் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வரும் மருது சகோதரர்களே பாராளும் தகுதி முற்றிலும் படைத்தவர்கள் என்பதை அவள் முற்றிலும் தெளிந்தாள்.

என்றாலும், மருது பாண்டியர் தன் சாதியினர் அல்லர்;[24] சேர்வைக்காரர் வகுப்பைச் சேர்ந்தவர் என்பதை அவள் அறிவாள். எனினும், 'நாடாள வேண்டுவது சாதியன்று; அறிவும் ஆண்மையுமே', என்று அவள் கருதினாள்; குடிமக்களுக்கும் மாவீரர் மருது பாண்டியர் மகராசர் ஆவதில் தடையொன்றுமில்லை; அவர்கள் களிப்பே அடைவார்கள் என்பதையும் உணர்ந்தாள். சுற்றி இருக்கும் பகை நெருப்புக்குச் சிவகங்கைச் சீமை இரையாகாதபடி அதைக் காப்பாற்றி வாழ்விக்கத் தன்னினும் மருது சகோதரர்களே ஆயிரம் மடங்கு வல்லவர்கள் என்று அவள் உளமார உணர்ந்த உணர்வு ஓர் உயில் சாசனமாய் உருக்கொண்டது.[25] அதன்படி சீமை பெரிய மருது பாண்டியரின் உடைமையாயிற்று. ஆட்சி மாறினும் தங்கள் சீமையின் மாட்சி சிறிதும் மாறாது என்று மக்கள் திடமாக நம்பினார்கள். அந்த நம்பிக்கைக்குச் சிறிதும் கேடு சூழவில்லை நம் மருது சகோதரர்கள்.

சீமை தங்கள் கைக்கு வந்ததும் சகோதரர்கள் தங்கள் பொறுப்பினை உள்ளினார்கள். 'எவ்வளவு பெரிய பொறுப்பு!' என்று எண்ணினார்கள், 'நேர்மையும் நியாயமும் வீரமும் தியாகமும் நம் ஆட்சியை மக்களின் அன்புக்கு உரியதாக்கும்', என்று நம்பினார்கள். அவர்கள் தொட்ட காரியம் பொன்னாகியது. சிவகங்கையின் வரலாற்றில் மருதிருவர் ஆட்சிக்காலமே அறம் மலிந்த பொற்காலமாய்ப் பொலிந்தது.

சிவகங்கைச் சீமை நிருவாகத்தில் முக்கியப் பங்கு சின்ன மருதுவுக்கே இருந்தது. வழக்கம் போலத் தன் இயற்கைச் சுபாவப்படி பெரிய மருது காட்டு ராஜாவாகவே காலங் கழிப்பதில் மகிழ்ச்சி கொண்டார். சின்ன மருதுவே நடை முறையில் நாட்டு ராஜாவாய் இருந்து குடிபடைகளின் நலங்களை எல்லாம் தாயுள்ளத்தோடு கவனித்து வந்தார். நாட்டின் நிருவாகத்தை ஏற்றதும் பெரிய மருதுவின் முன் நின்ற முதற்பிரச்சனை, நவாபுவுக்குக் கட்டப்பணம் எங்கே?' என்பதே. பணம் திரட்டப் பெருமுயற்சிகள் புரிந்தார்கள் மருது சகோதரர்கள்.[26] திருவிதாங்கூர் வரை சென்று அந்நாட்டு மன்னனிடம் கடும்புலியைக் கைவளரி ஒன்றே துணை கொண்டு போராடிக் கொன்றும், இன்னும் பல வீரச் செயல்கள் புரிந்தும் தங்கள் வீரத்தை வெளிப்படுத்தினார்கள் என்றும், சகோதரர்களின் பேராற்றலைக் கண்டு மகிழ்வுற்ற கேரள மன்னனிடம் பெரும் பொருளைப் பரிசிலாகவும் கடனாகவும் வாங்கி வந்தார்கள் என்றும் கூறுவார்கள்.

எட்டாண்டுகளாய் (1772-1780) சிவகங்கைச் சீமையில் நல்லாட்சி நடைபெறவில்லை என்பதை நாம் அறிவோம். இந்த எட்டு ஆண்டுகளிலும் நவாபுவின் குத்தகைக்காரனால் சிவகங்கைச் சீமையிலிருந்து செல்லாக்காசும் வசூலிக்க முடியவில்லை. இதை அறிந்த நவாபு கறுவிக் கொண்டிருந்தான்; கம்பெனிப் பேய்க்குத் தூபம் போட்டான். பேயும் ஆட ஆரம்பித்தது. அந்தப் பேயாட்டம் கர்நாடகத்தில் வெறிகொண்டு திக்குவிஜயம் செய்யப்

புறப்பட்ட கர்னல் புல்லர்ட்டன் படையெடுப்பாக வடிவெடுத்தது. 'மருது பாண்டியர்கள் ஒழுங்காகக் கப்பம் கட்டவில்லை; அண்டை நாடுகளில் புகுந்து கொள்ளை அடிக்கின்றார்கள்,' என்று புகார் கூறிக் கொண்டு பாய்ந்து வந்த புல்லர்ட்டனுக்குப் புதுக்கோட்டைத் தொண்டைமான் இம்முறையும் வரிந்து கட்டிக்கொண்டு உதவி புரிந்தான். அதுவும் எத்தகைய உதவி? சிவகங்கையையும் தென்பாண்டி நாட்டையும் அடக்கி அழிக்க ஆவணம் கொண்டு வந்த வெள்ளைப் படைக்கு ஐயாயிரம் கலம் நெல்லையும் படையையும் கோட்டய்யா ஆச்சாரி என்ற வஞ்சகத் தளபதியையும் தந்து உதவினான்.

1783-ஆம் ஆண்டு மேலூரை நோக்கி விரைந்த கர்னல் புல்லர்ட்டன் அங்கு வலிமை வாய்ந்த ஒரு படையை வைத்துவிட்டு, அங்கிருந்து கிழக்கே இருபது மைல் தூரத்தில் உள்ள சிவகங்கைக்குச் சாடினான். ஜோசப்பு ஸ்மித்தின் படையெடுப்புக்களால் கண்ட அழிவு போதாது என்று, கடந்த பதினோர் ஆண்டுகளாகக் களவுக்கும் கொள்ளைக்கும் நவாபுவின் திறமையற்ற நிருவாகத்திற்கும் இரையாகி நலிவுற்றுக் கிடந்த சிவகங்கைச் சீமையை மீண்டும் ஒரு கடும்போரில் ஆழ்த்தக் கருணை உள்ளமும் நுட்பமான அரசியல் அறிவும் படைத்த மருது சகோதரர்கள் ஒரு சிறிதும் விரும்பவில்லை. எனவே, தாங்கள் பாடு பட்டுத் திரட்டிய செல்வத்திலிருந்து நாற்பதாயிரத்தை எண்ணி எண்ணிக் கொடுத்தார்கள் கும்பினியார்க்கு மருது சகோதரர்கள்; 'எஞ்சிய ஐயாயிரத்தைப் பின்னர் தருகிறோம்,' என்று, கூறி, அதற்குத் தக்க ஈடுகளும் காட்டினார்கள்.[27]

காசைக் கண்ட கும்பினிப்படை கும்மாளம் இட்டுக் கொண்டு திரும்பியது. வேலு நாச்சி, 'சீமை தப்பியதே!' என்று எண்ணி மனங்குளிர்ந்தாள். சீமை மக்கள், 'சரி; நம்மீது மருதுபாண்டியர் வைத்த கருணை இது; தொலைந்து போகட்டும் கும்பினியான்! இன்னொரு முறை தலை காட்டினால் நொறுக்கி அனுப்ப வேண்டுவதுதான்!' என்று பொருமிக் கொண்டே தங்கள் மனத்தை ஆற்றிக் கொண்டார்கள்.

ஒருவாறு ஆர்க்காட்டு நவாபுவின் பிடுங்கலிலிருந்தும் வெள்ளைக் கம்பெனியின் பீரங்கிகளிடமிருந்தும் சீமையைக் காப்பாற்றிய பின் சிவகங்கையின் புகழைத் தரணியெல்லாம் போற்றும் தனிச்சிறப்பு வாய்ந்த தாக்குவதற்கான ஆக்க வேலைகளில் இரவு பகலாய் ஈடுபட்டார்கள் மருது சகோதரர்கள்.

மருது சகோதரர்கள் செய்த ஆக்க வேலைகளுள் எல்லாம் தலை சிறந்தது அவர்கள் ஆற்றிய கோயில் திருப்பணியே.

### இறை பணி

1. காளையார் கோவிலில்: தெய்வ பத்தியையும் தேச பத்தியையும் இரு கண்களெனப் போற்றிய பெருமக்கள் மருது சகோதரர்கள். தினம் சிவ

வழிபாடு செய்து 'கேடு செய்யும் துஷ்டர்கள் கெட்டொழிந்து போகவே நாடு கூடி வாழவே நல்லசிவம் அருள்கவே' என்று இறைவனை வணங்குவார்களாம் அச்சகோதரர்கள். அவர்களது கடவுள் பத்திக்குச் சான்று பகர்வனவாக அவர்கள் செய்துள்ள திருப்பணிகள் பலவாகும்.

சிவகங்கைக்குப் பத்து மைல் தொலைவிலுள்ள காளையார் கோவில் கோபுரம் மருது சகோதரர்களின் புகழை வானுற உயர்த்திக் காட்டுவதுபோல நிமிர்ந்து நிற்கும் காட்சி, கண்கொள்ளாக் காட்சியாகும். காளையார் கோவில் கோபுரத்தின் உச்சியிலிருந்து பார்த்தால், மதுரைக் கோபுரம் பளிச்சென்று தெரியும். 'மதுரைக் கோபுரம் தெரியக் கட்டினவரல்லவா' மருது பாண்டியர்! கருமலையிலே கல்லெடுத்துக் காளையார் கோவில் உண்டு பண்ணிய அவரது கைத்திறத்தை நாட்டுப் பாடல்கள் அழியா வரலாறு ஆக்கிக்காட்டும் அழகே அழகு![28]

காளையார் கோவில் கோபுரம் கட்டப் பல மைல் தொலைவிலுள்ள மானா மதுரையிலிருந்து கை வழியாகச் செங்கற்கள் வந்து சேர்ந்தனவாம். அவர் நினைத்தால் ஆகாதது ஒன்று உண்டோ? காளையார் கோவிலிலுள்ள சோமேஸ்வரசுவாமி ஆலயமும் மருதரசரால் கட்டப்பட்டதே யாகும். இக்கோவிலுக்காகப் பெரியதொரு தேரினையும் மருது பாண்டியர் செய்வித்தனராம்.[29] காளையார் கோவிலிலுள்ள ஆனை மடு என்னும் அழகான நீராழியைப் புதுப்பித்தவர்களும் மருது சகோதரர்களே. மேலும், கோவிலில் 'சோதியாய்ச் சுடராய்ச் சூழ் ஒளிவிளக்காய்'த் திகழும் திருவாட்சித் தீபமும் மருதரசர் உபயமே என்பது அதில் பொறிக்கப்பட்டுள்ள அவர் பெயரால் விளங்கும். இத்தீபங்கட்கு இலுப்பை நெய் வார்க்க மருதரசரால் விடப்பட்ட மானியமே இலுப்பந்தோப்புக்கள் நிறைந்த மணவராயன் ஏந்தல் என்பர். மருதரசர் காலத்தில் இலுப்பை நெய் ஊற்றி வைக்கப் பயன்பட்ட சாடிகள் இன்னும் காளையார் கோவிலில் காட்சி அளிக்கின்றன.[30]

2. மதுரையில்: மதுரை மீனாட்சியும், காஞ்சி காமாட்சியும், காசி விசாலாட்சியும் பாரத மக்கள் போற்றும் பழம்பெருந் தெய்வங்கள். மதுரையை ஆண்ட அன்னை அரசி என்று திருவிளையாடல் புராணம் போற்றும் அம்மையின் ஆலயத்திற்கு மருதரசர் செய்த திருப்பணிகள் போற்றற்குரியனவாகும்.

மீனாட்சி அம்மையின் சந்நிதியில் அழகுற விளங்கும் இரு திருவாட்சித் தீபங்களும் இன்றும் மருது பாண்டியர் புகழை ஒளியுடன் விளங்குமாறு செய்து வருகின்றன. இத்தீபங்கட்கு நெய் வார்க்க மருதரசர் விட்ட மானியமே ஆவியூர்க் கிராமம். இஃதன்றியும், ஆறு காலத்திலும் அன்னையின் பூசைக்காகத் தக்க மானியங்களையும் உப்பிலிக் குண்டு, கடம்பங்குளம், சீகனேந்தல், மாங்குளம், மங்கை ஏந்தல், பூவனேந்தல்

முதலிய கிராமங்களை மீனாட்சித் தாயின் புஷ்பக் கட்டளைக்காகவும் மருதுபாண்டியர் விட்டனர் என்பர். பாண்டி நாட்டின் பழம்பெருங் கோவிலாகிய மதுரைக் கோவிலிலுள்ள கலியாண மண்டபமும் மருதரசர் கை வண்மையின் விளைவே என்றும் இம்மண்டபத்தில் காணப்படும் சிலைகளில் மருதரசர் குடும்பம் வடிக்கப்பட்டுள்ளது என்றும் இயம்புவர்.

3. குன்றக்குடியில்: குன்றக் குடியில் கோயில் கொண்டுள்ள குமரவேள் மருது பாண்டியருக்குக் கண் கண்ட தெய்வம்; அவருக்குற்ற பெரும்பிளவை நோயைத் தீர்த்து வைத்தது வைத்தீஸ்வரர். எனவே, அவர்பால் பேரன்புபூண்டொழுகிய மருதரசர் குன்றக்குடி மலைமேல் கோபுரமும் மண்டபங்களும் கட்டியுள்ளார். கோவிலுக்குத் தெற்கிலுள்ள மருதாபுரி என்னும் குளமும் அவர் பத்தியின் விளைவே. கோபுரமும் குளமும் கட்டிய மருதரசர், குன்றக்குடியில் ஆயிரம் தென்னை மரங்களைக் கொண்ட தோப்பு ஒன்றையும், ஆயிரம் மாமரங்கள் கொண்ட மற்றொரு தோப்பையும் அமைத்தார். திருவிழாக் காலங்களில் திருமுருகப் பெருமானுக்குச் சார்த்தப்படும் பொற்கவசத்தில் ‘சின்ன மருது உபயம்’ என்ற செம்மைசான்ற சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோவிலில் குடி கொண்டுள்ள மயிலேறும் பெருமாள் மீது மருது பாண்டியர் விருப்பப்படி பாடப்பெற்ற சிறந்த தமிழ் இலக்கியமே மயூரகிரிக்கோவை. இக்கோவிலில் மருது பாண்டியர் சிலைகள் அழகொளிர அமைக்கப் பெற்றுள்ளன.[31] கோவிலுக்குக் கிழக்கே கோபுரவாயிலுக்கு எதிராக இப்போது இடிந்துள்ள கட்டடங்கள் பழைய மருது பாண்டியர் அரண்மனையே.

4. சிவகங்கையில்: சீமையின் தலைநகரமாகிய சிவகங்கையிலும் மருதரசர் கட்டிய கோவில் ஒன்று உள்ளது. இக்கோவிலின் பெயர் திருஞான சுப்பிரமணியர் கோவில் என்பது. நகருக்குக் கிழக்கே உள்ள இலட்சுமி தீர்த்தமும் அதை அடுத்துள்ள பூங்காவும் மருதரசரால் படைக்கப் பெற்றவையே. நெடுநாட்களாக வேலு நாச்சிக்குக் குழந்தை இல்லாமலிருந்து, முத்துவடுகரின் கடைசி நாட்களில் ஒரு பெண் மகவு பிறந்தது. ஆனால், அரசரின் மீளாப் பிரிவாலும் வேறு பல காரணங்களாலும் ‘குழந்தை பிறந்தால் கோவில் கட்டுகிறோம்!’ என்று முத்துவடுகநாதரும் அவர் மனைவியும் செய்திருந்த பிரார்த்தனை தடைப்பட்டு விட்டது. இதை அறிந்த மருதரசர் இக்கோவிலைக் கட்டிச் சுண்ணாம்பூர் என்ற கிராமத்தை மானியமாக விட்டாராம். இவ்வுண்மை அறியாதார் இக்கோவில் கட்டிய வரலாற்றைப் பலவாறு திரித்தும் உரைப்பார்.

இக்கோவிலிலுள்ள முன் மண்டபத்தில் இடப்புறமுள்ள முதல் தூணில் (கொடி மரத்தருகில்) உள்ள கல்வெட்டு வருமாறு:

1801 ஆம் வருஷத்திற்குச் சரியான துன்மதி வருஷம், வைகாசி மாதம், 32 ஆம் தேதி சிவகங்கைச் சீமையின் ஆதீன கர்த்தாவாகிய

மகாராஜா - சத்திரபதி - போதகுரு மகாராஜா அவர்களது துரைத்தனத்தில் சிவகங்கையில் இருக்கும் மருது சேர்வைக்காரர் உபயம்.

5. திருப்பத்தூரில்: திருப்பத்தூரிலுள்ள பைரவசாமி கோவிலிலும் மருதரசருக்கு மிக்க ஈடுபாடுண்டு. அங்குக் கோவில் கொண்டுள்ள இறைவரின் மார்பில் 'மருது சேர்வை' என்ற பெயர் பொறித்த பதக்கம் இன்றும் காட்சி அளிக்கிறது என்பர்.

6. மானூரில்: நரிக்குடி - முக்குளத்திற்கு அருகில் உள்ள இவ்வூரில் அழகிய சுப்பிரமணிய சுவாமி கோயில் ஒன்று உண்டு. இக்கோவிலைக் கட்டியவர் ஒரு துறவியாராம். எனினும், இக்கோவிலுக்குக் கோபுரமும் தேரும் மருதரசரால் அமைக்கப்பட்டவைகளே என்பர். இக்கோவிலில் நடைபெறும் விழாக்களுக்கு மருது பாண்டியர் மானியங்கள் அளித்துள்ளனராம். திருவிழாச் சமயத்தில் தம் குடும்பத்தார் நினைவாக நான்காம் நாள் விழா நடக்கவும் ஏற்பாடுகள் செய்துள்ளார் மருதரசர்.

7. வீரக்குடியில்: நரிக்குடி - முக்குளத்திற்கு அருகில் உள்ள முருகர் கோவிலும் மருதரசர் பணிகளைக் கண்ட பெருமையுடையது. அங்கு வெள்ளை மருதுவின் அழகிய சிலை ஒன்று உள்ளது.[32]

8. திருச்சுழியில்: மகரிஷி இரமணர் பிறந்த திருச்சுழியில் கோவில் கொண்டுள்ள பூமிநாத சுவாமி துணைமாலம்மான் என்னும் இருவருக்கும் மருது மன்னர் மண்டபங்களை நிறுவியுள்ளார் என்பர்.

9. தடுத்துப்புணங்கியனூரில்: இவ்வூரிலுள்ள ஸ்ரீராமநல்லூர் விநாயகர் கோவிலுக்கு இவ்வூர்க் கணக்கரின் பிரார்த்தனைப்படி நான்கு செய் நிலங்கள் மானியமாக அளித்தாராம் மருதரசர்.

10. ஏரியூர்: போர் நடந்து கொண்டிருந்த ஒரு சமயம் பெரிய மருது திருப்பத்தூர்த் தாலுக்கா (அந்நாளில் மல்லாக்கொட்டைத் தாலுக்கா என்று வழங்கப்பட்ட தாம்) காடுகளில் சுற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் தம் குதிரைமேலேறிச் சவாரி செய்து கொண்டு ஏரியூர்க் கண்மாய்க்கரையை வந்து அடைந்ததும் குதிரை நகர மறுத்ததாம். எவ்வளவு முயன்றும் குதிரையை அரசரால் நகர்த்த முடியவில்லை. அவர் அங்குள்ளவர்களை, 'இங்கு ஏதாவது சிறப்பு உண்டா?' என்று கேட்டாராம். அங்குள்ளவர்கள் 'இங்குக் கழுகு ஐயனார் இருக்கிறார். அவர்க்கு நீங்கள் ஏதாவது திருப்பணி செய்வதாக வேண்டிக் கொண்டால் குதிரை நகரும்; உங்கட்கும் புண்ணியம் உண்டாகும்' என்றார்களாம். அங்கேயே அதற்கான ஏற்பாடுகளைச் செய்ததோடு மருதரசர் அக்கோயிலுக்காக நன்செய், புன்செய் மானியங்களாக விட்டார் என்றும் கூறுவர். இவ்வூரில் இப்போதும் பங்குனி உத்திரத்தன்று மருதுவின் பெயரால் அஷ்டோத்திர ஜபம் நடைபெறுகிறதாம்.

11. அலையான் குளத்தில்: இராமநாதபுரம் தாலூக்காவிலுள்ள அலையான் குளத்தில் மருது பாண்டியரால் ஏற்படுத்தப்பட்ட பிள்ளையார் கோவில் ஒன்று உள்ளதென்றும், விநாயகர் கோவில்களுக்கெல்லாம் அது முதன்மை வாய்ந்தது என்றும் மொழிவர்.

12. நரிக்குடியில்: மருதரசர் தமது சொந்த ஊராகிய நரிக்குடியில் அன்னதான மருது விநாயகர் கோவிலையும் அழகிய மீனாம்பிகை கோவிலையும் கட்டிப் பாண்டியன் கிணறு என்ற ஒரு கிணற்றையும் ஏற்படுத்தினர் என்பர்.

13. திருப்பாச்சேத்தியில்: இவ்வூரிலுள்ள சுந்தரவல்லியம்மன் கோவிலிற்கு மருதரசர் மரகதப் பச்சையில் சிவலிங்கம் செய்தளித்தாராம். அது இன்றும் அக்கோயிலில் வைத்து வழிபடப்பட்டு வருகிறது.

14. திருக்கோஷ்டியூர்: மருதரசர் சைவ சமயக் கோவில்கட்கு ஏராளமான திருப்பணிகள் செய்திருப்பது போலவே, வைணவக் கோவில்கட்கும் வேண்டும் அளவு திருப்பணிகள் புரிந்துள்ளார்.

சிறந்த வைணவ ஸ்தலமாகிய திருக்கோஷ்டியூர் கோவில் - குளம் முதலியவற்றைப் புதுப்பித்துத் தேரும் செய்வித்தாராம் மருது பாண்டியர்.

15. ஸ்ரீவில்லிபுத்தூர்: ஸ்ரீவில்லிபுத்தூர்க் கோவிலுக்கு மருதரசர் தேர் செய்து விட்டார் என்பர்.

16. திருமோகூர்: மருதரசர் உள்ளங் கவர்ந்த வைணவக் கோவில்களுள் தலை சிறந்தது இக்கோவில் என்பது தெரிகிறது.

சிவகங்கைச் சீமையில் ஒரு சமயம் கள்வர் பயம் மிக அதிகமாய் இருந்ததாம். இந்நிலைமையை மாற்ற நினைத்த மருதரசர், இரண்டாயிரம் வீரர்களுடன் மதுரைக்கு வட கிழக்கில் ஆறுமைல் தொலைவிலுள்ள ஆனைமலைக்கு அப்பால் கள்வர்களை விரட்டி அடித்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தாராம். வரும் வழியில் திருமோகூரில் தங்கினாராம். அங்குள்ள அழகிய திருமால் கோவிலையும் அதில் எழுந்தருளியுள்ள கார்மேகப் பெருமாளையும் கண்டு கண்ணும் கருத்தும் குளிர்ந்தாராம்; ஆதிபாண்டியர்களால் கட்டப்பட்ட அக்கோவில் அப்போது பழுதுற்ற நிலையிலிருந்தது கண்டு உள்ளம் நொந்து, மருதரசர் உடனே அக்கோவிலின் முன் மண்டபத்தைக் கவினுறக் கட்டி முடித்தார் என்பர். கோவில் பூசை முதலிய காரியங்கட்குப் பார்த்திபனூரை அடுத்த மாங்குடிக் கிராமத்தையும் சிவகங்கைக்கு மேற்கேயுள்ள மானாகுடி என்ற கிராமத்தையும் மானியங்களாக விட்டாராம்.

குன்றக்குடிக் கோவிலில் இருப்பது போலவே ஈண்டும் மருது சகோதரர்களின் சிலைகள் உள்ளன [33] அவற்றோடு தூண்களில் இரு புறங்களிலும் மருதரசர் மக்களின் சிலைகளும் உள்ளன.

17. திருப்புல்லணையில்: இங்குள்ள திருமால் கோவிலில் ஜகன்னாதப் பெருமாள் உற்சவ காலங்களில் அணியும் பதக்கத்தில் 'மருது உபயம்' என்று பொறிக்கப்பட்டுள்ளதாம்.

18. மாறைநாடு: பழைமை சான்ற இவ்வூரில் இடிந்த நிலையில் விஷ்ணு ஆலயம் ஒன்று உள்ளது; இரு அருகர் சிலைகளும் உள்ளன. இவை ஏற்பட்ட காலம் மருது பாண்டியர் காலமென்று கூறுகின்றனர். அவ்வாறானால், மருதரசர் சமயத்துறையில் சைவத்தையும் வைணவத்தையும் சமணத்தையும் சேரப் போற்றும் சமரச உள்ளம் படைத்த சமயசீலர் என்பது தெளிவாய் விளங்கும்.[34]

மசூதியும் மாதா கோவிலும்: மருதரசரின் சமரசப் பேருள்ளத்திற்குச் சான்று பகர்வனவாக ஓர் இஸ்லாமிய ஆலயமும் ஒரு கிறிஸ்தவக் கோவிலும் உள்ளன. நரிக் குடியிலுள்ள மசூதியும் சருகணியிலுள்ள மாதா கோவிலுமே அவை.[35]

மக்கட் பணி:

மருதுபாண்டியரின் இறை அன்பால் பழங்கோவில்கள் பல புதுக்கோவில்கள் போல ஆயின என்பதும், புதுக்கோவில்கள் பல பழங்கோவில்களின் பெருமையோடு போட்டியிட்டுக் கொண்டு எழுந்தன என்பதும் பார்த்தோம். தெய்வங்கள் உறையும் ஆலயங்களின் பால் இவ்வளவு நாட்டம் செலுத்திய மருது பாண்டியர், ஏழை எளிய மக்கட்கு வாழ்வளிக்க வல்ல கோவில்களாகிய சத்திரங்கள் பலவற்றையும் கட்டினார். அவற்றுள் இன்றும் அவர் பெயர் விளக்கி நிற்கும் சத்திரங்கள் சிலவற்றின் சிறப்பை மட்டும் ஈண்டு நோக்குவோம்:

1. நரிக்குடியில்: மருது பாண்டியரால் நிறுவப்பட்ட சத்திரங்களுள் முதன்மை வாய்ந்தது நரிக்குடிச் சத்திரம் எனல் மிகையாகாது. காரணம், இச்சத்திரம் அவர் சொந்த ஊரில் அமைந்திருப்பதே. பல சமயங்களில் இங்கு அவர் தங்கினார் என்பதற்கு ஆதாரங்கள் கிடைக்கின்றன. இச்சத்திரத்திற்காக மருது பாண்டியரால் விடப்பட்ட மானியம் பன்னிரண்டு கிராமம் என்பர். இச்சத்திரத்தின் சார்பில் தினம் அன்னதானமும், ஆண்டு தோறும் உற்சவமும் நடைபெற்று வருகின்றன.[36] நரிக்குடிச் சத்திரத்தைப்போலவே மருதரசர் காளையார் கோவில், குன்றக்குடி, சிவகங்கை, திருப்பத்தூர், திருக்கோஷ்டியூர், முத்தனேந்தல், மானாமதுரை, சூடியூர், அலையான்குளம், பாம்பன் முதலிய இடங்களிலும் சத்திரங்கள் கட்டியுள்ளனர் என்பர். சீனிக்காரனேந்தலில் அவர் கட்டிய சத்திரமும் மடமும் காட்டாற்று வெள்ளத்திற்கும் கால வெள்ளத்திற்கும் இரையாகி விட்டனவாம்.

ஊருணி-குளம்: மருது பாண்டியரால் மக்களின் நன்மைக்காகச் சிவகங்கைச் சீமையில் வெட்டப்பட்ட குளங்களும் ஊருணிகளும்

பலவாகும். அவற்றுள் இன்றும் சிறப்புடன் விளங்குவன பொன்னாத்தாள் குளமும்[37] உடையார் சேர்வை ஊருணியும் ஆகும். 'அன்னையும் பிதாவும் முன் அறிதெய்வம்' எனக்கருதிய மருதிருவர் தம் தாயார் பெயராலும் தந்தையார் பெயராலும் முறையே உண்டு பண்ணியவைகளே இவை.

வீரவணக்கம்: எவர்க்கும் வணங்காத மருதரசர் முடி, மாசற்ற வீரத்திற்கு மட்டும் தலை வணங்கும். உண்மையான வீரர்களைக் கண்டால், அவர் உள்ளம் உவகையால் பொங்கும். இவ்வுண்மையை விளக்கவல்ல பல கதைகள் செவிவழிச் செய்திகளாய் வழங்கி வருகின்றன. அவற்றுள் ஒன்றை இங்குக் காண்போம்.

நைனப்பரது நெஞ்சுரம்: நைனப்பன் சேர்வை என்பவர் மருதரசர் படையின் தளபதியாய்த் திகழ்ந்தனர். ஒரு சமயம் அவர் உடல் வலிமையையும் உள்ளத்திண்மையையும் சோதிக்க விரும்பினார் பெரிய மருது. கடியா வயல் என்னுமிடம் சிவகங்கையிலிருந்து சுமார் 56 கி.மீ. தொலைவில் இருக்கிறது. இக்கடியா வயலுக்குச் சிவகங்கையிலிருந்து தம் குதிரைமேல் போய் மீள விரும்புவதாகவும் தம்மோடேயே நைனப்பன் சேர்வையும் ஓடி வந்து திரும்ப வேண்டும் என்றும், எங்கும் தங்கக் கூடாதென்றும் கூறினார் மருதரசர். 'சரி' என்று நைனப்பன் சேர்வையும் ஒத்துக் கொண்டார். சோதனை நாள் வந்தது. மருதரசர் விருப்பப்படி இரண்டு பர்லாங்குத் தூரம் முன்னாலேயே புறப்பட்டார் நைனப்பர். மருதரசரும் பின் தொடர்ந்தார். குதிரை காற்றாய்ப் பறந்தது. அதன் கடிவாளத்தை இறுகப் பற்றிக் கொண்டார் நைனப்பர். குதிரையும் நைனப்பரும் சளைக்காமல் போட்டியிட்டுக் கொண்டு ஓடுகையில் வழியில் கூரிய பெரிய உடைமுள் ஒன்று சேர்வைக்காரரின் காலில் சுரீர் என்று பாய்ந்தது. அதை ஆர அமர எடுக்க முனைந்தால் குதிரை பறந்து விடுமே என்று நினைத்த நைனப்பர் ஒரு கடுமையான காரியத்தைச் செய்தார். தம் இடக்கையால் இடுப்பில் செருகியிருந்த வளரியை எடுத்து ஒரு தட்டுத் தட்டினார். பலகைக்குள் ஆணி பாய்ந்தது போல் பாதத்திற்குள் உடைமுள் ஓடி ஒளிந்து கொண்டது. போட்டி முடிந்தது. நைனப்பர் வெற்றி பெற்றார். அரசர் அடைந்த அகமகிழ்விற்கு எல்லையில்லை; நைனப்பருக்கு மாலை சூட்டினார்; மணி ஆரம் பூட்டினார்.

இன்னொருநாள் வேட்டைக்குச் சென்ற மருதரசரோடு சென்றார் நைனப்பர். எதிர் பாராத வகையில் புதரிலிருந்து புலியொன்று நைனப்பன் சேர்வை மீது பாய்ந்தது. பயந்தாரில்லை மருதுவின் தளபதி; புலியோடு பொருது அதன் வாயைப் பிளந்து ஆப்பசைப்பது போல அதன் பல்லை அசைத்துப் பிடுங்கி மருதரசர் காலடியில் காணிக்கையாக்கினார். அரசர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லை. ஆனால், புலியோடு போராடி நைனப்பர் அடைந்த காயங்கள் நாள் பல ஆகியும் ஆறவில்லை. மருந்துகள் பல இட்டும் குணம் பெறவில்லை. 'புரையோடிப் போயிற்று! காப்பாற்றும்

வழி காணோம்!' என்று கையை விரித்தனர் மருத்துவர். எதற்கும் எளிதில் நெகிழாத மருதரசர் நெஞ்சம் நெகிழ்ந்தது. 'நம் வலக்கை போன்ற ஒரு வீரனைப் பிரியப் போகிறோமே!' என்ற எண்ணம் அவர் இதயத்தைத் துளைத்தது; கண்களைக் கலக்கியது.

சில நாட்களில் நைனப்பர் - உயிரினும் பெயர் பெரிது என நினைந்த வீரத் தமிழர் - காலமானார். மருதரசர் மனம் கலங்கியது. காலஞ்சென்ற நைனப்பரின் மனைவிக்குச் செம்பனூர், சோழகிரி, காட்டுக்காளி, செங்குளம், மருதங்குடி, சாத்தரசன்கோட்டை ஆகிய ஊர்களில் பட்டையச் செய்கள் வழங்கப்பட்டன. 'ராஜகரம்' எனப்படும் அரசாங்க மரியாதையில் மூன்றில் ஒரு பங்கும் வழங்கப்பட்டது. அரிய குதிரைகளும், அழகிய கொட்டகைகளும், மாடு மனைகளும் மறைந்த வீரரின் குடும்பத்திற்குச் சன்மானமாக வழங்கப்பட்டன. இவற்றை இன்றும் நைனப்பன் சேர்வையின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் அனுபவித்து வருகிறார்களாம்.

வலையனுக்கு வைத்த சிலை: நீலவானைத் தொடுவது போல நிமிர்ந்து நிற்கும் காளையார் கோவில் கோபுரத்திற்குள் நுழையுமுன் வலப்புறத்தில் ஒரு வீரன் கையில் துப்பாக்கியை ஏந்திக் கொண்டிருப்பதையும் அவன் முன் ஒரு கரடி நிற்பதையும் நிலை வடிவிற்காணலாம். யார் இந்த வீரன்? அல்ல...

மருதரசருக்கு மிகவும் வேண்டிய வலையன் ஒருவன் அவர் வேட்டையாடப் போகும் பொழுதெல்லாம் உடன் போவது வழக்கம். எத்தனையோ முறைகளில் அவன் வேட்டைத் திறமையைக் கண்கூடாகக் கண்டு மகிழ்ந்தார் மருதரசர். ஒரு நாள் வேட்டையாடச் சென்ற தமக்கு உதவியாய்க் காட்டிற்கு வந்த வலையன் எங்கோ ஓடிப் போய்ப் பெரிய கரடி ஒன்றைச் சுட்டுக் கொண்டுவந்தானாம். அவன் திறமையை மெச்சி வீரனுக்கு வேந்தர் எடுத்து வைத்த சிலையே இன்றும் காளையார் கோவில் வாயிலில் இருப்பது. அரசர்பால் இவ்வளவு அருமையான பாராட்டுதலைப் பெற்ற இவ்வலையனே மருதரசரின் கடைசிக் காலத்தில் அவர் உயிருக்கே உலை வைக்கும் வஞ்சகனாய் மாறினான்; தன் வீரத்தை எல்லாம் துரோகிகட்கு அடகு வைத்தான். ஒரு வகையில் வீரத்திற்கும் வஞ்சகத்திற்கும் பேர் போன இவன் சிலையும் பகைவர்க்கும் அருள் புரியும் பண்பாளராகிய மருதரசர் கட்டிய கோபுரத்தினடியில் காட்சிப் பொருளாயிருப்பது பொருத்தந்தானே!

பத்தினிக்கு வழிபாடு: மருதுபாண்டியர்கள் ஒழுக்கத்தை உயிரினும் சிறந்ததாகப் போற்றிய பெருமக்கள்; 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் நல்லாட்சி இல்லாத நாட்டில் நில்லா,' என்னும் உண்மையை உணர்ந்தவர்கள். இத்தகையவர்களின் ஆட்சியிலும் ஒரு சமயம் தவிர்க்க முடியாத வகையில் கொடுமை ஒன்று நிகழ்ந்து விட்டது.

குடும்பக்கவலை காரணமாகத் தம் சொந்த ஊராகிய கோசுகொண்டுவை விட்டுப் புறப்பட்டு வந்தனர் கணவனும் மனைவியுமாகிய இருவர்: பற்பல இன்னல்களையும் கண்டு கடந்து, இறுதியாகச் சிவகங்கைச் சீமையிலுள்ள நரிக்குடிச் சத்திரத்தில் வந்து நள்ளிரவில் தங்கினர். சிறு நாய் ஒன்றே துணையாகத் தன்னந்தனியே வந்து தங்கிய அவர்களைச் சில கயவர்களின் பருந்து விழிகள் ஆராய்ந்தன. 'அவன் நல்லவன்; அவள் அழகி,' என அறிந்தார்கள். நச்சு மூளை வேலை செய்தது. மறுநாள் அந்திப் பொழுது; காரிருள் சூழும் வேளை; கயவர் சிலர் வந்து அவனை நய மொழிகள் கூறி எங்கோ அழைத்துச் சென்றனர். அவனோடு அக்குடும்பத்திற்குத் துணையாய் இருந்த நாயும் சென்றது. எங்கும் இருள் சூழ்ந்தது. போனவன் திரும்பவில்லை. அவள் இதயம் படபடத்தது. சிறிது நேரத்தில் நாய் மட்டும் நடுங்கிக் கொண்டே திரும்பி வந்தது. அவள் உடலெல்லாம் துடித்தது. நாய் அவள் சேலையைக் கௌவி எங்கோ இழுத்தது. அவள் அதன் பின்னேயே ஓடினாள். நரிக்குடிக்கு அருகிலுள்ள வெட்டி நாடான் ஊருணிக்குள் நுழைந்தது அந்நாய். அவளும் உள்ளே பாய்ந்தாள் - பார்த்தாள். அந்தோ! அவள் கணவன் - பிணம்! ஊருணியில்! பதறினாள்; அலறினாள்; மருது இருக்கும் திக்கு நோக்கி ஓடினாள்; அவர் முன்னே வீழ்ந்தாள்; முறையிட்டாள். செய்தியறிந்த மருது சகோதரர்கள், 'நம் ஆட்சியிலா இந்த அநீதி!' என்று கொதித்துக் கொண்டே குதிரை ஏறினார்கள்; நாய் வழி காட்டியது; குதிரைகள் விரைந்தன; பத்தினியும் பின் தொடர்ந்தாள்; நரிக்குடிக்குச் சென்று சம்பவம் நடந்த இடத்தை நேரில் பார்த்துச் சகோதரர்கள் உண்மையை அறிந்தார்கள். 'யார் அந்தக் கயவன்?' என்று உரக்கக் கூவினார் பெரிய மருது இடி போன்ற குரலில். அம்பு போலப் பாய்ந்தது நாய். அது தன் பற்களால் ஒரு மனித மிருகத்தினைப் பற்றி இழுத்து வந்தது. அனைவர் உடம்பும் மயிர்க் கூச்செறிந்தன. 'உம்!' என்றார் பெரிய மருது. காவலாளிகள் கயவனைக் கண்ணிமைக்கும் நேரத்தில் எங்கோ கொண்டு சென்றார்கள். பெரிய மருது பத்தினியைப் பார்த்துப் பணிவுடன் பேசினார்; 'அம்மா, என்னை மன்னியுங்கள்! கவலை வேண்டா. அந்தப் பாவி அகப்பட்டுவிட்டான். இந்நேரம் அவன் உயிர் பிரிந்து சென்ற உம் கணவரிடம் போய் மன்னிப்புக்கு மன்றாடிக் கொண்டிருக்கும். எனவே, நீர் கவலையுறாதீர்; கலங்காதீர். உம்மை என் தாயாராகக் கருதிக் காப்பாற்றுகிறேன்,' என்றார். பத்தினி கைகூப்பிக் கண்களில் நீரொழுகப் பதிலுரைத்தாள்; 'அரசரே, எனக்கு எதுவும் வேண்டா. என்னை என் கணவரிடமே சேர்த்து விடுங்கள். சந்தனக் கட்டையை அடுக்குங்கள்; என் நாயகரின் பொன்னுடலை அதிற்கிடத்துங்கள்; தீ மூட்டுங்கள். நானும் அவரும் ஒன்றாகிவிடுகிறோம்! அரசரே, பத்தினியின் சொல்லைத் தட்டவேண்டா. என் கற்பு மாசற்றதானால், என் உடல் தான் வேகும். நான் அணிந்துள்ள பட்டாடையும் காதோலையும்

கருமணியும் சிறிதும் தீக்கிரையாகா,' என்றாள். பத்தினியின் பேச்சுக்கு மறு பேச்சு இல்லை. அவள் சொல்லியபடியே காரியங்கள் நடந்தன. கற்பரசி தாமரைப் பொய்கையில் புகுவது போலத் தழலிடைப் புகுந்தாள். அனைத்தும் சந்தனச் சாம்பலாயின. ஆனால், அவள் அணிந்திருந்த சேலையும் காதோலையும் கருமணியும் மட்டும் அக்கினித் தேவன் வயப்படாது வெளியே விழுந்தனவாம். தீப்பாய்ந்த தெய்வத்தின் மாண்பைக் கண்ட மருதரசர், 'தம்பி, எங்கிருந்தோ வந்த இவள், நாம் வழிபடும் தெய்வம்! வீட்டில் இப்பொருள்களைப் பத்திரமாகவை,' என்று சின்ன மருதுவிடம் கூறினாராம். ஆண்டுகள் பலவாகியும் இன்றும் முக்குளத்தில் மருதரசர் வாழ்ந்த மனையென்று போற்றப்படும் இல்லத்தில் இப்பொருள்களை வைத்துச் சிறப்பாக மகளிர் வழி பாடாற்றி வருகின்றனர்.[38]

மருதுபாண்டியர்: மக்களின் உயிர்-தெய்வம்: மருது பாண்டியர்களை அந்நாளைய மக்கள் தங்கள் உயிர் போலப் போற்றினார்கள். அவர்கள் நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதே அல்லும் பகலும் மக்கள் செய்து வந்த பிரார்த்தனை. இந்த உண்மையை வெள்ளைத் துரைகளே நேரில் கண்டு ஒளியாமல் கூறியுள்ளார்கள்.[39] இவ்வாறு குடிகளின் நெஞ்சையெல்லாம் கொள்ளை கொண்ட மருதுபாண்டியர் பெயரை மக்கள் பயபத்தியுடனே போற்றி வந்தார்கள். 'எங்கள் ஐயன், அரசன், அப்பன்,' என்று மருதுபாண்டியரைக் குறிப்பிடுவதில் அவர்களுக்கிருந்த ஆர்வம் சொல்லிலடங்காது. தமிழ் நாட்டு மரங்களுள் பழைமை சான்ற மரம் மருதமரம். இம்மரங்கள் நிறைந்த நிலப்பகுதியை மருத நிலம் என்றே புலவரும் மக்களும் போற்றினார்கள். அம்மருத நிலம் ஐவகை நிலங்களுள் ஒன்றன்றோ!

வையை பாயும் வளநாட்டிலும் மருதமரங்கள் ஏராளமாய் உண்டு. வையை ஆற்றின் தென்கரையிலுள்ள சிறந்த ஒரு தலம் - பாடல் பெற்ற ஊர் - திருப்பூவனம் ஆகும். இவ்வூரில் மருது பாண்டியர் காலத்தில் ஒரு பெரிய மருதமரம் இருந்தது. காளையார் கோவில் கோபுரம் கட்டிய களிப்பில் மூழ்கியிருந்த மருதரசர், அக்கோயிலுக்காகப் பெரியதொரு தேர் செய்விக்க வேண்டுமென்று பேராவல் கொண்டார்; நாடெங்குமுள்ள சிற்பிகளைப் பறை அறைந்து விரும்பி அழைத்தார். மிகப் பெரிய தேருக்கு உறுதியான அச்சு மரம் வேண்டுமல்லவா? அந்தக் கவலை அரசருக்கும் ஏற்பட்டது. திருப்பூவனத்திலுள்ள பெரிய மருத மரத்தின் நினைவு அவருக்கு வந்தது. உடனே மிக்க மகிழ்ச்சியோடு ஆள்களை அனுப்பி அதை வெட்டிக் கொணரும் படி கட்டளையிட்டார். ஏவலாளிகள் சென்றார்கள். மரத்தை வெட்ட முனைந்தார்கள். ஆனால், என்ன அதிசயம்! ஓர் அர்ச்சகர் அம்மரத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, "என் உயிர் போனாலும் இதை

வெட்ட விட மாட்டேன்!'' என்றார். ஏவலாளிகள், ''ஐயரே, இஃது அரசர் ஆணை!'' என்றனர். ''ஐயா, ஆண்டவன் ஆணையானாலும் அனுமதியேன்'' என்றார் அர்ச்சகர். இச்செய்தியை அரசரிடம் சென்று கூறினர் வேலையாள்கள். வேந்தர் வெகுண்டார். 'யார் அப்படித் தடுப்பவன்?' என்று விசாரிக்க உடனே புறப்பட்டார்; அர்ச்சகரைக் கண்டார்; 'நீர் நம் காளையார் கோவில் குருக்கள் அல்லவா?' என்றார். 'ஆம் அரசே,' என்றார் அர்ச்சகர். 'ஏன் இந்த அடம்?' என்றார் அரசர். 'அடமன்று அரசே, தேர் அச்சுக்குத் தேவையான மரம் உங்கள் சீமையில் உண்டு. காளையார் கோவில் காட்டில் உறுதியான மரங்கள் எத்தனையோ இல்லையா? நானும் என்னைப் போல்வார் பலரும் இதோ இந்த மரத்தையும் இந்த மரத்திற்கருகிலுள்ள அந்த மருத மரத்தையும் முறையே பெரிய மருது, சின்ன மருது என்று பல காலமாகப் போற்றி வருகிறோமே! காளையார் கோவிலில் குருக்களாயிருந்து பணி புரிவதெல்லாம் நீங்களும் உங்கள் தம்பியாரும் குறையின்றி வாழ வேண்டும் என்று ஆண்டவனை அருகிருந்து வேண்டிக் கொள்வதற்குதானே! அப்படி இருக்க, அடியேன் எப்படி உங்கள் பெயர் கொண்ட இந்த மரத்தை வெட்ட அனுமதிக்க முடியும்?' என்றார். குருக்களின் உணர்ச்சி வயப்பட்ட பேச்சு மருதரசர் மனத்தையே ஒரு கலக்குக் கலக்கியது. பிறிதொரு மாற்றம் பேசாமல் திரும்பி விட்டார் பெருந்தகை. இன்றும் பெரிய மருது - சின்ன மருதைத் தெய்வமாக வழிபடும் பண்பு பாண்டி நாட்டில் பல பகுதிகளில் உள்ளது.

இவ்வாறு உயர்ந்தவனாயினும் இழிந்தவனாயினும், 'எங்கள் தந்தை - தெய்வம்' என்று மருதுபாண்டியர்களை அந்நாளில் போற்றக் காரணமாய் அவர்கள் பாலிருந்த நற்பண்புகள் பலவற்றுள்ளும் சிலவற்றை இந்த அத்தியாயத்தில் பார்த்தோம். இனி நாம் காணக்கூடிய ஒரு சுவையான கதையும் கவிதையும், அவர்கள் பெருமைக்கெல்லாம் காரணம் அவர்கள் எளிமையும் அருளுடைமையும் தியாக உணர்வும் பரந்த உள்ளமும் எல்லாவற்றிற்கும் மேலாக 'மக்களின் தொண்டர் நாம்', என்று கருதி அவர்கள் அரசாட்சி செய்ததுமேயாம் என்னும் உண்மையை வலியுறுத்தும்.

அரும்பாடு பட்டு மருதரசர் காளையார் கோவில் தேரை உருவாக்கிவிட்டார். வெள்ளோட்டத்திற்கு நாளும் குறித்தார்கள். பொழுது புலர்ந்தது. கதிரவனும் தேரோட்டக் காட்சியைக் காணப் பெரிதும் விரும்பியவன்போல விரைவாக வான வீதியில் கிளம்பி விட்டான். ஒரே மக்கள் கூட்டம்! தேர் வடம் பிடித்தாகிவிட்டது. மருது பாண்டியர்கள் தேர்மேலேறி இறைவனுக்கருகில் பூரிப்போடு நின்றார்கள். மருதரசர் மனம் மகிழத் தேரை உருவாக்கிய குப்பமுத்து ஆசாரியும் அருகில் நின்றான். 'காளீஸ்வரா! மருதையா!' என்று மக்கள் முழங்கிக் கொண்டே தேரை இழுக்கத் தொடங்கினார்கள். மூச்சைப் பிடித்தார்கள்; முழுப் பலத்தோடு

இழுத்தார்கள்; உந்தினார்கள்; உரக்கக் கூவினார்கள். ஒன்றும் பயனில்லை. தேர் ஓர் அலங்குலங்கூட நகர வில்லை. எல்லோருக்கும் ஒரே வியப்பு; திகில்! காரணம் எவருக்கும் புரியவில்லை. மருதரசர் கண்கள் குப்பமுத்து ஆசாரியைக் கூர்ந்து பார்த்தன. 'என்ன சேதி?' என்றார் பெரிய மருது. 'அரசே' என்றான் ஆசாரி. அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. மருதரசர் திருமுகத்தையும் தேர்மீது செம்மாந்து வீற்றிருக்கும் ஆண்டவன் அருள் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான்; தாழ்ந்த குரலில் பேசினான்; 'அரசே, கவலை வேண்டா. தேர் தாராளமாக ஓடும். அது இறைவன் திருவுள்ளம் போலும்!' என்றான். 'நான் என்ன செய்யவேண்டும்?' என்றார் நாட்டின் வேந்தர் பரபரப்புடன். "ஒன்றுமில்லை அரசே, என் மீது சினங்கொள்ளாது செவி சாய்க்க வேண்டும். உங்கள் கை மோதிரத்தையும் செங்கோலையும் இந்த ஏழையின் கையில் கொடுத்துவிட வேண்டும். 'தேர் நிலைக்கு வரும்வரை இந்தப் பாடு படும் தொழிலாளியே சீமையின் அரசன்,' என்று உங்கள் திருவாயாலேயே அறிவிக்க வேண்டும்," என்றான் ஆசாரி. ஒரு கணம் திகைத்துப் போனார் வெள்ளை மருது. சுற்றி இருந்தவர்கட்கு மயக்கமே வந்துவிடும் போலிருந்தது. ஆனால், மருதரசரோ, அடுத்த கணத்திலேயே புன்முறுவலோடு 'இதோ பிடியும் ஆசாரியாரே செங்கோலையும் மோதிரத்தையும்! நீயே சிவகங்கைச் சீமையின் ராஜா,' என்றார். உடனே ஆசாரி இறைவனை வணங்கிவிட்டுப் பெரிய மருதுவைப் பார்த்து, 'ஐயா, இறங்குங்கள் கீழே, தேர் வடத்தைப் பிடித்து, பத்தியோடு இழுங்கள். உம்! நடக்கட்டும்!' என்றான். அடுத்த வினாடி மருதரசரும் அவரைச் சூழ்ந்து தேர்மேல் நின்ற பெரிய மனிதர் அனைவரும் கீழே இறங்கினர். அவர்களுக்கெல்லாம் தலைமை தாங்கினான் சிவகங்கைச் சீமையின் புதிய அரசன் குப்பமுத்தாசாரி. 'காளீஸ்வரா!' என்று விண்ணதிரக் கூறிக்கொண்டே அனைவரும் தேரிழுக்கலாயினர். தேரோடியது - தட்டாமல் தயங்காமல் ஓடியது. நிலம் நெளியக் காளையார் கோவில் தெப்பக் குளத்தில் நீர்க்குமிழிகள் கணக்கின்றி அரும்பத்தேர் கனஜோராய் ஓடியது. ஆம்! பாட்டாளியைப் பார்வேந்தனாக்கிப் பார்வேந்தர் தம்மைப் பாட்டாளியாக்கிக் கொண்டு கடமையைச் செய்த இந்நிகழ்ச்சியை இன்றும் பாண்டி நாட்டு மக்கள் கதையாகக் கூறிக் களிப்பெய்துகின்றார்கள். அன்று நடந்த இந்த நிகழ்ச்சி - பதவியினும் பணியே பெரிது என்று மதித்த பார்த்திபரின் கதை - அழகான ஒரு நாட்டுப் பாடலால் அழியா வரம் பெற்று விளங்குகிறது.

'மருதுவந் தாலும்தே ரோடாது - அவன்
மச்சினன் வந்தாலும் ஓடாது;
தேருக் குடையவன் குப்பமுத் தாசாரி
தேர்வடம் தொட்டாலே தேரோடும்.'

கவிஞரைப் போற்றிய காவலர்: பழந்தமிழ் மன்னர்களைப் போலவே மருது பாண்டியரும் தமிழ்ப்புலவர்களை ஆதரிப்பதில் தலை சிறந்து விளங்கினர். 'அவருடைய சமஸ்தானத்தில் இருபத்தொரு தமிழ் வித்துவான்கள் இருந்தார்கள். அவரைப் பாராட்டி அவர்கள் பாடிய செய்யுள்கள் பல.'[40]

மருது பாண்டியரைப் போற்றிப் புகழ்ந்து அப்புலவர் பெருமக்கள் பாடிய பாடல்கள் அனைத்தையும் இன்று நாம் கண்டு கற்கும் பேறு பெற்றோம் இல்லை. ஆயினும், சிற்சில தனிப்பாடல்கள் ஆங்காங்கே கிடைக்கின்றன.[41] தொன்றுதொட்டே நன்றி உணர்ச்சியும் கடவுள் அன்பும் மிக்க நற்றமிழ்ப் பாவலர்கள் தங்கள் உள்ளங்கவர்ந்த மன்னர்களைப் பற்றிய குறிப்புகளையும் தெய்வங்களைப் பற்றிய செய்திகளையும் அகப்பொருள் நூல்களில் நயமாகச் செறித்து வைத்துப் பாடும் பண்பும் மரபும் உண்டு. இவ்வுண்மையைச் சங்க இலக்கியங்கள் பலவற்றிலும் பரக்கக் காணலாம்; திருக்கோவையார், தஞ்சைவாணன் கோவை முதலான தீந்தமிழ் நூல்களிலும் விரிவாகக் காணலாம். இவ்வாறு புலவர் பாடும் புகழ் பெற்ற புண்ணியர் நம் மருதரசர் என்பதை நினைக்கும்போதே நம் நெஞ்சம் தேன் கடலாகிறது. ஆம். இந்திய விடுதலைக்காகப் போரிட்டு மடிந்த தமிழ் வீரரான மருதுவின் புகழ் 'மயூரகிரிக் கோவை' என்னும் சுவை மலிந்த கோவை நூலால் என்றும் அழியா ஏற்றம் பெற்றுள்ளது. இக்கோவை நூலை இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவானாய் இருந்த சர்க்கரைப் புலவர் குமாரர் சாந்துப் புலவரை இயற்றுமாறு செய்தருளியவர் மருது பூபதியே என்பது இந்நூலுக்கு அமைந்துள்ள பழைய சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றால் இனிது விளங்குகிறது.[42] இந்நூல் அரங்கேறிய காலம் கி.பி.1778 என்பது தெரிகிறது.[43]

புலவர் பெருமானராகிய சாந்துப்புலவர் தம் இலக்கிய இலக்கணப் புலமையும், பாநலமும், கற்பனை வளமும் புராணப் பயிற்சியும் தெள்ளிதின் விளங்கப் பாடிய இக்கோவை நூலை அரங்கேற்றியபோது பல ஆடையா பரண வாகனாதி விருதுகளுடன் காளையார் கோவிலுக்கு அருகில் இப்போது புலவன் மருதன்குடி என வழங்கும் கிராமத்தையும் சம்மானமாக மருது பாண்டியர் மனமுவந்து தந்தாராம். இவ்வுண்மை அச்சமயத்தில் இப்புலவர் பெருந்தகையால் பாடப்பெற்றதாய் அறியப்படுகின்ற அழகிய கட்டளைக்கலித்துறைப் பாட்டொன்றால் விளங்குகிறது.[44]

மயூரகிரிக் கோவையின் ஆசிரியருக்கும் மருதரசருக்கும் தொடர்பேற்பட்ட வரலாறு மறக்க முடியாத சரித்திரச் செய்தியாகும். நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அவ்வரலாற்றை மயூரகிரிக் கோவையை அரும்பாடுபட்டுத் தேடி ஏட்டிலிருந்து அச்சுக்குக் கொண்டு வந்த தமிழ்ப் பெரியார் - மன்னார்குடி பின்ட்லே கல்லூரித் தமிழ்ப் பண்டிதர்

சர்க்கரை இராமசாமிப் புலவர் அவர்களது உரைநடை வாயிலாக உணர்வதே பொருத்தம் உடையதாகும்; இணையில்லா இன்பம் தருவதுமாகும்:

'இவர் (சாந்துப்புலவர்), பாண்டி வள நாட்டில் தேவாரம் பெற்ற தலங்களுள் திருப்புனவாயிலுக்கு மேற்கில் மூன்று கடிகைத் தூரத்திலுள்ள சிறுகம்பை யூரிலிருந்த வேளாளகுல திலகரும், இராமநாதபுரஞ் சம்ஸ்தான வித்துவ சிகாமணியாய் விளங்கியவருமாகிய சர்க்கரைப் புலவருடைய குமாரராவர். இவர் தம்பிமார் சீனிச் சர்க்கரைப் புலவர், சீனிப்புலவர், முத்து முருகப் புலவர் என்பவர் என்ப.

'இவர் இளமை முதல் தமது பிதாவினிடத்தில் இலக்கணவிலக்கியங்களை ஐயந்திரிபறக் கற்று வருங்காலத்தில், கி.பி.1780-ஆம் வருஷம் முதல் 1801 ஆம் வருஷம் வரையில் சிவகங்கையை ஆண்டு வந்த பெருங் கொடையாளரும், இம்மைப்பயன் கருதாது மறுமைப் பயனையே கருதிய வள்ளலும், தம்மையொழியத் தமவெனச் சார்ந்தவைகளையெல்லாம் அக்காலத்துத் தமிழகத்திலுள்ள புலவர் பலர்க்குமுதவி, அன்னோரை ஒருங்கு கூட்டி, அன்னோருடன் போது போக்குதலையே பெரும்பயனாகக் கொண்ட அருங்கலை விநோதரும், அநேக தேவாலய பிரமாலய அன்ன சத்திரங்கட்குப் பல கிராமங்களை முற்றூட்டாகவளித்த தர்மப்பிரபுவும், ஐதரலியின் உதவியைக் கொண்டு நவாபுவின் படைகளை முறியடித்து வெற்றி மாலை கொண்ட ரணசூரருமாகிய மருது பாண்டியரென்பவர் சேது மார்க்கத்திலுள்ள கலிய நகரியில் அன்னசத்திரங்கட்டுவித்தற்கு வந்திருந்ததைக் கேள்வியுற்ற சர்க்கரைப் புலவர், அந்த மருது பூபதியைப் பார்த்து வரவிரும்பி அட்டநாகபந்தம் என்னுஞ் சித்திர கவியொன்றெழுதி வைத்துவிட்டுத் தாம் சிவபூசை செய்யச் செல்வாராயினர். அச்சமயத்தில் ஆண்டினிளையராயினும் அறிவின் முதியவராகிய சாந்துப்புலவர், தம் தகப்பனார் எழுதிவைத்திருந்த அட்டநாகபந்தத்தைப் பார்த்துத் தாமும் அதனுள் அட்டநாகங்களைச் சிறிய வடிவாய் வரைந்து, ஒரு செய்யுளையுமெழுதி, முன்னிருந்த இடத்தில் வைத்துப் போய்விட்டனர்.

'பூசை முடித்துப் போஜனஞ் செய்து வந்த புலவர், தம் பரிசனங்களுடன் சிவிகையூர்ந்து கலியநகரிக்குச் செல்ல, கவிராசர் வரவு கேட்ட புவிராசராகிய மருது புலவர் தம் ஞாபகத்திலிருந்த அட்டநாகபந்தச் செய்யுளைச் சொல்லிப் பொருள் கூறிப்பின் அக்கவி வரைந்த ஏட்டை அரசரிடங்கொடுக்க, ஏற்ற அரசர் படித்துப் பார்த்துப் பெருமகிழ்வுற்று, 'கவியரசரே, நீங்கள் எழுதிய அட்டநாகங்களுங் குட்டி போட்டுளவே! என்னை?' என, மதியூகத்தாலறிந்த புலவர் 'குழந்தையைக் கேட்க வேண்டும்' என்று மறுமொழி கூறக்கேட்ட அரசர், 'அக்குழந்தை எங்குளது? யாருடையது?' என வினவியறிந்து, அக்குழந்தையைப் பார்க்க

வேண்டுமென்று உடனே கொண்டுவரும்படி சிவிகையைச் சிறுகம்பையூருக்கு அனுப்பிவிட்டனர். 'இராச திருட்டியாகுமே!' என்று பயந்த புலவர், தாம் ஊருக்குப் போய்க் குழந்தையை அனுப்புவதாய்ப் பன்முறை கூறியும் பார்க்க வேண்டுமென்னும் அவாமேலீட்டாற் புலவர் சொல்லை மறுத்து விட்டனர் பாண்டியர்.

'பின்னுஞ் சிறிது போதுக்குள் ஐந்து கடிகைத் தூரத்திலுள்ள சிறுகம்பையூரிலிருந்த குழந்தை பல்லக்கில் வந்து சேர்ந்தது. வரவறிந்த பூபதி குழந்தையைத் தழுவி, 'இதிற்குட்டி நாகம் வரைந்து பாட்டெழுதினவர் யாவர்?' என்று கேட்க, 'எழுதினவன் யானே,' என்று துடுக்காய்ச் சொல்லவே, பாண்டியர் அடங்காப் பெருமகிழ்வுற்று, 'கவிராசரே, இன்று முதற் குழந்தை என்னருகில் இருக்க வேண்டும்,' என்று சொல்லிவிட்டனர். புலவர் திகைத்து வருந்திச் சிறிது தேறி, 'அரசே, குழந்தை இலக்கிய இலக்கணங்கள் படித்து வருகின்றமையால், ஒருவாறு முற்றிய பின் நானே கொண்டு வந்து சமுக வித்துவானாக இருக்கச் செய்து வைக்கிறேன்,' என வேண்டினர். 'குழந்தை இப்பொழுதே பெரும்புலவர்தான்; இன்னும் புலவராக்க விரும்பினால், கூட நீங்களும் வந்திருக்கலாகும்; அன்றேல், என்னருகிலுள்ள வித்துவான்களைக் கொண்டு படிப்பித்தலுமாகும்' என்று சொல்லிய பின்னரும் மறுத்தற்கஞ்சிய புலவர், விசுவாமித்திர முனிவர் கையில் ஸ்ரீராமபிரானைப் பிடித்துக் கொடுத்த தசரதனைப் போலக் கலக்கமுற்றுத் தம்மூர் போய்ச் சேர்ந்தனர். அப்போது சாந்துப் புலவருக்கு வயது பதினாறு.

'அன்று முதற் சாந்துப்புலவரை யாவரும் அரண்மனைக் குழந்தையென்று வழங்குவாராயினர். குழந்தை மருது பாண்டியருடைய புகழென்னுந் தொட்டிலிலாடி, அவரது சங்கப் புலவர்களென்னுஞ் செவிலியானுங் கல்வியமுதூட்டப் பெற்றுக் கவிச்சிரோரத்தினமென்று பெரும்புலவர்களெல்லாங் கொண்டாடும்படி, பல சித்திரங்களும் அமைய நிமிஷ கவி பாடுவதிலும், பிரசங்கஞ் செய்வதிலும், நாவன்மையுடையவராய் நடுநாயகமாய்ச் சிறந்து விளங்கியதன்றி, மருது பாண்டியருக்குக் கண்ணுங் கவசமுமனையராய்ப் பிரதிநிதியாயுமிருந்து இராசாங்கக் காரியங்களை நிருவகித்து வந்தனரென்றுங் கூறுப. இது சிறப்புப் பாயிரச் செய்யுளில், 'எங்களிந்திரன் சாந்து மகிபால வாலக வீச்சுரனே', என்பதனாலும் வலியுறுகின்றது.[45] மருது பாண்டியர் அவையிலிருந்த தமிழ்ப்புலவர் பலர் என்பதை முன்பே கண்டிருக்கிறோம். அவர்கட்கு எல்லாம் திலகமாய் - தலைவராய் விளங்கியவர் நம் சாந்துப் புலவரே. இவர்க்கும் இவரோடு அந்நாளில் தம் அவையில் இருந்த தமிழ்ப் புலவர் பலர்க்கும் மருதரசர் பல கிராமங்களை முற்றூட்டாக அளித்துப் போற்றினர் என்பது, அந்நாளில் தம்பிப் பட்டியிலிருந்தவரும் 'வாலசரஸ்வதி' என்ற பாராட்டைப் பெற்றவருமாகிய முத்துவேலுக் கவிராசர் பாடிய பாடல்களால் புலனாகிறது.'[46]

சாந்துப் புலவர் பாடிய இம்மயூரகிரிக்கோவை குன்றக் குடியில் கோவில் கொண்டுள்ள பெருமானாகிய ஆறுமுகக் கடவுளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட சிறப்புடையதாகும். குன்றக் குடியில் அமர்ந்த குமரப்பெருமான் பால் மருதரசருக்கு அளவிலாப் பத்தி தோன்றக் காரணம் யாதென்பதைச் சுருக்கமாக முன்பே கண்டிருக்கிறோம். இப்போது அவ்வரலாற்றின் விரிவை மருதரசர் மனத்தையே கோவிலாகக் கொண்ட சாந்துப் புலவரின் கால்வழியில் தோன்றிய சர்க்கரை இராமசாமிப் புலவரே கூற அறிவோம்.

'இத்தகைய மாட்சிமை பெற்றிருந்த மருது துரையருகில் இவர் மேற்கூறியவாறு அமரும் நாளிற் பூபதிக்கு இராஜபிளவை புறப்பட்டுப் பல மணி மந்திர மாதிய வைத்தியங்களால் அநுகூலமாகாமல் மிகவும் வருந்துவாராயினர். அப்போது ஒரு முதியவர் பூபதியை நோக்கி, 'அரசே, கலியுக வரதராகிய சுப்பிரமணியக் கடவுளுடைய பக்தர்களால் விபூதி போடப்பெறின் அநுகூலமாம்,' என்று சொல்லக்கேட்ட பாண்டியர், 'அங்ஙனமாயின் அத்தகையார் யாவர்?' என்று வினவ, 'நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகளுக்குக் குமரக் கடவுள் பிரசன்னமுள்ள குலதெய்வமாகலால், அவர்களுள் எவரேனும் விபூதி போடுவது நலம்,' என்றுரைக்கவே, 'அத்தகைய செட்டியாரொருவரைக் கொண்டு வருக,' என்று உத்தரவளித்தனர்.

'உத்தரவுப்படி சென்ற ஏவலாளர், எருத்துமாட்டிலேற்றிய உப்பு வியாபாரியாய் எதிர்ப்பட்ட காடன் செட்டியார் என்பவரை அழைத்து வந்து பாண்டியர் முன்பு விட, விடப்பட்ட செட்டியார், 'யாதாமோ!' என்று அச்சமுற்றயருங் குறிப்பறிந்த பாண்டியர், முகமன் கூறி, 'உமது குலதெய்வமாகிய சுப்பிரமணியக் கடவுளுக்குப் பிரார்த்தனை பண்ணி, யானிப்பிளவையால் வருந்தாது பிழைக்கும் வண்ணம் விபூதியளிப்பீராக!' என வேண்டச் செட்டியார் சிறிது மனந்தெளிந்து, 'இந்த மருது பாண்டியருக்கு அநுக்கிரகம் பண்ணி என்னை இவ்விடத்தினின்றும் விடுவிக்க வேண்டுஞ் சண்முக நாதா', எனச் சிந்தித்து விபூதியுதவிய பின்பு, பாண்டியர் அருகிருந்தவரை நோக்கிச் 'செட்டியாருக்கு உண்டி முதலியன அளித்து உபசரித்து வைத்திருங்கள்,' என்று கட்டளையிட்டவாறு உபசரிக்கப் பெற்றும் செட்டியார் அச்சமுடையவராய்ச் சண்முகக் கடவுள் திருவடிகளைத் தியானித்திருந்தனர்.

அப்பால் வெகுநாளாய் நித்திரையில்லாமல் வருந்திய பூபதி அன்றிரவு அயர்ந்து தூங்கும்போது பால சந்நியாசியார் ஒருவர் மயிற்றோகையுடன் வந்து தம் பிளவையைப் பிதுக்கி ஆணியெடுத்து வாழையிலையில் வைத்துவிட்டுப் பிளவை வாயில் விபூதியை வைத்ததாகக் கனவு கண்டு வெருண்டு எழுந்து பார்க்கும் போது அச்செயல்

யாவும் நனவாகவே இருக்கக் கண்டு மகிழ்ந்து வியந்து, காடன் செட்டியாரைத் தமது அருகு வரவழைத்து, 'எனக்கு அப்பனீ, அம்மை நீ, ஐயனும் நீயே' என்று புகழ்ந்து, அன்று முதல் அண்ணன் என்று முறை பாராட்டிப் பேரன்புடன் தமதருகிற் சில நாளேனும் இருக்கும்படி வேண்டிக் கொண்டனர்.

'அங்ஙனம் செட்டியாரிருக்கச் சில தினத்துள் தேக சௌக்கியமுற்ற பாண்டியர், செட்டியாரை நோக்கி, 'அண்ணா, நமது குலதெய்வமாகிய குமாரக் கடவுள் இருக்குந் தலம் யாது?' என்று வினாவிக் குன்றக்குடி என வழங்கும் மயூரகிரியென்றறிந்த வேந்தர், செட்டியாருடன் தம்மைச் சார்ந்த பரிவாரங்களுடன் புடை சூழக் குன்றக்குடிக்குச் சென்று, மலையடிவாரங்களில் அடர்ந்துள்ள காடுகளை வெட்டிச் சீர் செய்து, மலைமேலேறிச் சண்முகக் கடவுளைத் தரிசனஞ்செய்து, 'இத்தகைய கருணாநிதியாகிய முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் இத்தலம் இவ்வாறு பொலிவிழந்திருப்பதேன்?' எனப் பல சோதிடர்களை வருவித்து வினவிச் சண்முகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் பீடத்தின் கீழிட்டிருக்கும் தகடு குப்புறக் கிடக்கிறதென்றறிந்து, பரிசோதனை செய்து, அங்ஙனந் தகடு கிடப்பக் கண்டெடுத்துச் செவ்வை செய்து, பிரதிட்டை பண்ணுவித்து, மண்டபம், மதில், கோபுரமுதலான திருப்பணிகளும் பிறவும் புதுக்கிக் கும்பாபிடேகமுஞ் செய்வித்து, செம்பொன் மாரி முதலிய கிராமங்களை அளித்தும், மருதாபுரி என்னும் தடாகமுண்டாக்கியும், தென்னந்தோப்புகள் வைத்தும், வெள்ளிமயில் வாகனம், பொற்கவசம், திருத்தேர் முதலியன செய்வித்தும், தைப்பூசத் திருவிழாவாகிய சிறப்புகளைப் பெருமை பெறச் செய்தும், சண்முகக் கடவுள் திருவடிக்கண் இடையறாத பேரன்புடன் அத்தலத்தில் அரண்மனையுங் கட்டுவித்து (இந்த அரண்மனை இப்போது கீழ வீதியில் சிதைவுற்றிருக்கிறது என்பர்). அங்கு அமருநாளில் அவர் வேண்டுகோளால் இக்கோவையைப் பாடினரென்ப.'[47]

இவ்வாறு தமிழ்க் காதலால் பிணைக்கப்பட்டு 'இரு தலை ஒரு புள் போல' வாழ்ந்தனர் மருதரசரும் சாந்துப் புலவரும். ஆனால், எமனுக்கு அது பொறுக்கவில்லை. மருதரசருக்கும் புலவர் பெருந்தகைக்கும் நேர்ந்த முடிவை நினைத்தால் நெஞ்சு நெக்குவிட்டு உருகும்; கண்களில் நீர் மல்கும். அந்த அவலச்சுவை நிறைந்த வரலாற்றுச் சான்றோர்கள் பண்பு பற்றி விளங்கும் தலை சிறந்த உண்மைகளையும் உள்ளவாறு உணர மீண்டும் சர்க்கரை இராமசாமிப் புலவரிடமே சரண் புகுவோம்.

'இங்ஙனஞ் சம்மானிக்கப் பெற்ற சாந்துப் புலவர், தம்மையாதரித்த மருது பூபதிக்குப் பகைவரிடையூறு உண்டான போது அவரைப் பிரியாதவராய் நின்று போர் புரிந்து, கி.பி.1801 ஆம் வருடம், அக்டோபர் மாதம் 3 ஆம் தேதி மருது துரையானவர் பகைவர் கையிலகப்பட்டுப்

போனவுடன் பிரிவாற்றாது துயரக் கடலின் மூழ்கினவராய்த் தமது ஊராகிய சிறுகம்பையூருக்குச் சென்று, பின்னொரு வாரத்துள் சிவபெருமான நிருவடி நீழலை அடைந்தனர். பின்னர் இவருடைய குமாரராகிய சர்க்கரைப் புலவரை இவர் பிதாவாகிய சர்க்கரைப் புலவர் சில காலம் படிப்பித்துப் பாதுகாத்தனர் என்று கூறுப.

'இதனால் இப்புலவருடைய செய்ந்நன்றி மறவாமையென்னும் உத்தமக் குணமும், தம்மையாதரித்த பிரபுவினிடத்தில் வைத்திருந்த பேரன்பும்,

'காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப்
பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால்
மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்னா
ஊணிடு மொருதாய் நீத்த பார்ப்பென வுளங்கு லைந்தார்'

-பிரபுலிங்க லீலை - கோரக்கர்கதி-4

என்ற ஆன்றோர் வாக்குக்கிணங்க உத்தம நண்பரைப் பிரிந்துயிர் வாழாமையென்னும் நட்புத்திறனும் நன் குணரலாகும்.'[48]

இவ்வாறு வாழ்விலும் சாவிலும் கணவனும் கற்புடைய மங்கையும் போல வாழ்ந்த சாந்துப்புலவர் இயற்றிய மயூரகிரிக் கோவையின் தமிழ்ச்சுவை அரசஞ் சண்முகனார் போன்ற பெருந்தமிழ்ப் புலவரேறுகளாலும் பாராட்டப் பெற்ற பெருமை வாய்ந்ததாகும்.[49]

ஐந்நூற்று முப்பத்தாறு அருஞ்செய்யுள்களைக் கொண்ட மயூரகிரிக் கோவையில் பதினான்கு பாடல்கள் மருதரசர் புகழ் பேசுபவையாகும். மருது பூபதியால் தருமகர்த்தாவாக்கப் பெற்றுத் திருவண்ணாமலை ஆதீனத்தைச் சார்ந்தவராயிருந்த சங்கரலிங்க முனிவருடைய ஈகை, அன்பு முதலிய பெருமைகளை இரு பாடல்களில் போற்றியுள்ளார் இக்கோவையின் ஆசிரியர். இஃதன்றி, மருது பூபதிக்குச் சகோதர பாந்தமுள்ளவராகிய காடன் செட்டியாருடைய[50] மண்டபப்படிச் சிறப்பையும் ஒரு பாடலில் பாராட்டியுள்ளார். இப்பாடல்கள் அனைத்தையும் இந்நூலின் பிற்சேர்க்கையில் தனித்தனியே கண்டு களிக்கலாம்.[51]

புலவர் போற்றும் பெருமை சான்ற சாந்துப்புலவர்[52] பாடிய மயூரகிரிக் கோவையாலேயேயன்றி வேறு தனிப்பாடல்களாலும் மருது பாண்டியர் புகழ் விளங்குகின்றது. காலவெள்ளத்திற்கும் கறையானுக்கும் இரையாகியது போக எஞ்சியுள்ள சில தமிழ்ப் பாடல்கள் விஞ்சு சுவையுடையவைகளாய்த் திகழ்கின்றன. இங்கு இரு இனிய பாடல்களை மட்டும் பார்ப்போம்.

மருதரசர் ஐந்து மனைவியரை மணந்து இன்ப வாழ்வு வாழ்ந்தவர். அவர் காதல் திருமணம் புரிந்து கொண்ட மனைவியருள் ஒருத்தி-மீனாட்சி ஆத்தாள் அயல் சாதிப் பெண்.[53] இத்தகைய கருத்தொத்த காதல்

வாழ்க்கையில் திளைத்தவர் மருதரசர் எனினும், இரு மனப்பெண்டிர்க்கு அவர் இதயத்தில் இடம் சிறிதும் இருந்ததில்லை. எந்நாளும் ஒழுக்கத்தைச் சிறந்த உறுதிப் பொருளாகப் போற்றிய அப்பெருமகனாரின் - வேறெதற்கும் அஞ்சாவிடினும் தெய்வத்தின் ஆணைக்கு அஞ்சும் சீலரின் - நல்வாழ்வை நயம் நிறைந்த மொழிகளால் போற்றுகிறார் ஒரு புலவர்:

'பரனா ரியல்புணரும் பண்பன்ற னின்பம்
பரநா ரியரறியாப் பண்பன் - திரனார்
அணிமருது பாண்டில்விழ வன்றுதைத்தோன் யாரும்
பணிமருது பாண்டியபூ பன்.'[54]

ஒழுக்க வாழ்வில் சிறந்த மருது பாண்டியர் உள்ளம் பாடிவந்த புலவரின் பாட்டோசை கேட்டால், பனிபோல உருகும்; ஆசை தீர வாரி வழங்கினால் அன்றி அவரது கலையுள்ளம் - கருணையுள்ளம் - ஆறுதல் கொள்ளாது. இவ்வுண்மையைப் பலகாலும் அனுபவித்து உணர்ந்தார் தமிழ்க் கவிஞர்; திக்கெட்டும் தீரர் மருதுவின் கொடைப் பெருமை பரவியிருக்கும் பான்மையை உணர்ந்தார். அவரை அறியாமல் அவர் மனம் கற்பனை செய்தது. கவிஞரின் கற்பனைக்குக் கன்னித் தமிழும் உதவியது. அருமையான பாடல் தமிழ் மொழிக்குக் கிடைத்தது. அப்பாடல் இதுதான்:

'தேனுந்து தாமன் மருதேந்த்ர ராசன் தியாகங்கண்டு
வானும்பர் தாமும் புலவரென் றார்வடி வேற்குகனென்
போனும் புலவனென் றான்புதன் றானும் புலவனென்றான்
நானுங் கவியென்றி சுக்கிரன் றனு நவின்றனனே.'[55]

விண்ணாளும் தேவர் எல்லோரும் மண்ணாளும் மருது பாண்டியர் பால் வந்து, 'பண்ணாளும் கவிஞர் நாங்கள்; பண்ணாளும் கவிஞர் நாங்கள்' என்று கூறிக் கொண்டனராம் மருதரசர் கையால் பரிசில் பெறக் கொண்ட காதலால். என்னே புலவரின் கற்பனை! மருதரசரின் கொடைத்திறன்!

இயற்றமிழ்ப் புலவர் பாடல்களால் பெரும்புகழ் கொண்ட மருதிருவரை மதுரகவி என்னும் இசைத் தமிழ்வல்ல புலவரேறும் அரிய பெரிய இசைப் பதங்களால் போற்றிப் பெருமை செய்துள்ளார் என்று கூறுவர் 'சேது நாடும் தமிழும்' என்ற சிறந்த நூலின் ஆசிரியர் திரு.ரா. ராகவையங்கார்.

இவ்வாறு புலவர் பெருமக்கள்[56] பாடிய பாடல்களால் மட்டும் அன்றிப் பாமர மக்களின் நாவில் நடமாடிய நாட்டுப் பாடல்களிலும் மருதரசர் புகழ் மங்காக் காவியமாய் வாழ்கிறது.

சான்றாக,

'எட்டுத் திசைகட்டும் ஆக்கினா சக்கிரம்
ஒன்றாய்ச் செலுத்தும் ரணசூரன்

விட்டுவி டாக்கருத் தன்பாஞ் சைப்பதி
னெட்டு விருதும் படைத்ததங்கம்
'வெள்ளை மருது வணங்கா முடித்துரை
வில்விஜ யன்போல வந்துநிற்க

✱✱✱

'வெள்ளைத் தலைகளை வெட்டின வன்அவன்
வேந்தர்தம் கோட்டையைக் கட்டினவன்
தீரன் பெரிய மருதுசிங் கக்குட்டி
போல வேவந்து அங்கு நிற்க

✱✱✱

'வம்புக் காரர்கள் அத்தனை பேரையும்
வம்பு மரத்திலே சேர்த்தடிக்கும்
கொம்புக்கா ரனேந்தல் மருது பாண்டியன்
கொலுச்சிங் காரத்தைப் பாருங்கடி.'

எனப் பாமரமக்களால் இன்றும் பாடப்பெறும் பாடல்களைக் கேட்கக் கேட்க நம் செவியிலும் சிந்தனையிலும் இன்பத்தேன் பெருக்கெடுக்கும்.

# 5. விடுதலை வேள்வி

கடும்புயலுக்குப்பின் சிவகங்கைச் சீமையில் பேரமைதி நிலவியது. அந்த அமைதியைக் கூடிய வரையிலும் குலையாமல் காப்பாற்றினர் மருதுபாண்டியர். அம்மட்டோ? 1780 முதல் 1801 வரை இருபத்தோர் ஆண்டுகள் அவர்கள் ஆண்ட அந்த ஆட்சிக் காலமே சிவகங்கைச் சீமையின் பொன் பூத்த காலமாய்த் திகழ்ந்தது. ''அந்நாள்களில் சிவகங்கை நாட்டில் சைவம் தழைத்தது; வைணவம் வளர்ந்தது; இஸ்லாமும் கிறிஸ்தவமும் இன்னலின்றி வாழ்ந்தன. சமயப்பகை ஏதும் இன்றிச் சமரசத் தென்றல் வீசிய அந்நாளில் நாட்டில் கள்வர் பயமும் கொள்ளை நோய்களின் பயமும் இன்றி மக்கள் அன்பிலே மூழ்கி இன்பத்தில் திளைத்துச் செம்மாந்து இருந்தார்கள். 'தாயுமாய்த் தந்தையுமாய்த் தெய்வமுமாய் விளங்கும் மருது பாண்டியர் எங்கள் அரசராய் இருக்கும்போது என்ன குறை?' என்ற இறுமாப்பு அவர்கள் இதயத்தில் நிறைந்து நின்றது.

மருதிருவர் ஆட்சித் திறனால் சிவகங்கைச் சீமை நாளுக்கு நாள் இவ்வாறு பேரும் புகழும் சீரும் சிறப்பும் அடைந்து வருவதைக் காண அண்மையிலிருந்த புதுக்கோட்டைத் தொண்டைமானுக்கும் ஆர்க் காட்டிலிருந்த நவாபுவுக்கும் பொறுக்குமா? அச்சமும் பொறாமையும் அவர்களை வாட்டி வதைத்தன. அதன் விளைவாகப் பன்முறை சிவகங்கைச் சீமை மீது யாதாவது ஒரு காரணம் பற்றிப் போர் தொடுக்க விரும்பினர்; பூசல்களை விளைத்தனர்; கலகங்களை மூட்டினர்; பழிகளைப் பரப்பினர்.

கிடைக்கக் கூடிய ஆதாரங்களிலிருந்து புதுக்கோட்டைத் தொண்டைமான் இருமுறை 'நிலத் தகராறு'கள் என்ற போர்வையில் சிவகங்கைச் சீமையை மோதினான் என்பது தெரிகிறது. 1788 லும் 1792 லும் ஏற்பட்ட இந்த எல்லைத் தகராற்றில் இரு தரப்பிலும் இரத்த வெள்ளம் பெருகாதபடி வெள்ளைக் கம்பெனிப் படைகள் காத்து நின்றனவாம்.[57] இதைப் பற்றிக் குறிப்பிடும் போது 'மதுரை நாடு' என்ற வரலாற்று நூலின் ஆசிரியராகிய அறிஞர் நெல்ஸன், 'இந்நிலை நம் கவனத்திற்குரியது. உள்நாட்டு அரசுகள் எவ்வாறு தங்கள் சத்தியை எல்லாம் இழந்து நின்றன என்பதும் பிரிட்டிஷ் அதிகாரம் அவைகளை எவ்வாறு தன் படைப்பலத்தால் அச்சுறுத்தி வந்தன என்பதும் விளங்குகின்றன. மேலும் ஐம்பது ஆண்டுகட்கு முன் இத்தகைய ஓர் எல்லைச் சண்டை புதுக்கோட்டைத் தலைவனுக்கும் சிவகங்கை அரசனுக்கும் இடையே ஏற்பட்டிருந்தால் அது பத்தாயிரம் முதல்

இருபதாயிரம் வீரர்கள் வரை உயிரைப் பலிகொள்ளும் போராய் முடிந்திருக்கும்' என்று கூறும் வாசகம் நம் சிந்தனைக்கு உரியது.[58]

இவ்வாறு புதுக்கோட்டைத் தொண்டைமான் ஒருபுறம் சச்சரவுகளை விளைவித்துக் கொண்டிருக்க, இன்னொரு புறத்தில் சிவகங்கைச் சீமையின் வலிமையைக் குலைக்க ஆர்க்காட்டு நவாபு படை திரட்டிக் கொண் டிருந்தான். கறுவிக்கொண்டே இருந்த அவன் கடைசியாக 1789-ஆம் ஆண்டில் புதுக்கோட்டைத் தொண்டைமானின் படைத்துணையையும் பயன்படுத்திக் கொண்டு, சிவகங்கைமீது படையெடுத்தான்; இப்படை யெடுப்பை வழக்கம் போல வெள்ளைத் தளபதி ஒருவன் தலைமையிலேயே நடத்தினான்.

பல ஆண்டுகளாக இப்படையெடுப்புக்கு நவாபு திட்டமிட்டிருந்தான் என்பது வரலாற்றுச் சான்றுகளை ஆராயும்போது நமக்குத் தெளிவாகிறது. 1786-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்திலேயே வெள்ளைக் கம்பெனிக்கு நவாபு ஒரு கடிதம் தீட்டினான். அதில் அவன் வெள்ளை ஆட்சி சிவகங்கைச் சீமைக்கு எதிராகக் கத்தி தீட்ட வேண்டும் என்பதைத்தான் எவ்வளவு திறமையாக வாதித்திருக்கிறான்! வேலு நாச்சியின் பாதுகாப்பில் இருந்த ஓர் அரசனை மருது பாண்டியர் கைது செய்து வைத்துள்ளனர் என்றும், இராமநாதபுரம் சேதுபதி மீது பகைகொண்டு அவன் ஆள்களில் பலரை மருது சகோதரர் கொன்று குவித்துவிட்டனர் என்றும், மருதிருவர் போக்குக் கடுமையும் கொடுமையும் நிறைந்ததாய் இருக்கிறது என்றும் தன் கடிதத்தில் குறைபட்டுக் கொண்டான் நவாபு. மீண்டும் 1788 ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் அவன் எழுதிய கடிதத்தில் சாலைகளை எல்லாம் அடைத்து விட்டுத் தன் நாட்டிற்குள் நுழைந்த தபாற்காரர்களையும் வழிப்போக்கர் களையும் சின்ன மருது கொலை புரிந்து விட்டார் என்றும், நெடுங்காலமாகக் கப்பம் கட்டாமல் காலங்கழிக்கின்றார் சிவகங்கைத் தலைவர் என்றும், அவரை அடக்கப் பலம் பொருந்திய ஆங்கிலப்படை உடனடியாகத் தேவை என்றும் தன் நலம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்ட ஆர்க்காட்டு நவாபு தமிழகத்தை அடிமைப்படுத்தத் தன்னுடைய கை நோக்கியிருக்கும் ஆங்கிலப் படைக்கு அழைப்பு விடுத்தான். கொக்குப் போலத் தமிழகத்தின் இருதயத்தில் குத்தத் தவமிருந்த கம்பெனி அதிகாரிகள் வலிய வந்த இந்த அழைப்பை வீணாக்கிவிடுவார்களா? நவாபுவின் கடிதம் கண்டதும் அவர்கள் நாவில் நீரூறியது. 'திறமை மிக்க தளபதி ஸ்டூவர்ட்டின் தலைமையில் பெரும்படை ஒன்று சிவகங்கைச் சீமைக்குள் நுழையும்' என்று பதில் எழுதினர் கம்பெனி அதிகாரிகள் ஆர்க்காட்டு நவாபுவுக்கு. அளவில்லா மகிழ்ச்சி கொண்ட நவாபு சென்னைக் கவர்னருக்கு நன்றி தெரிவித்துக் கடிதம் வரைந்தான். அதில் கவர்னர் முடிவு அறிந்து தன் சிந்தை குளிர்ந்ததையும் வெள்ளைப் படை வரும் செய்தியைத் தொண்டை

மானுக்கும் இராமநாதபுரச் சேதுபதிக்கும் மதுரையில் உள்ள தன் அதிகாரிக்கும் அறிவித்துவிட்டதாகவும் குறிப்பிட்டிருந்தான்.

கர்னல் ஸ்டூவர்ட்டும் தன் படை இன்னும் மூன்று நாள்களில் புதுக்கோட்டைச் சீமைக்கு வந்துவிடும் என்றும், அப்படைக்கு எல்லா உளவுகளையும் கூறித் தக்க வசதிகள் அனைத்தையும் செய்துதர வேண்டும் என்றும் தொண்டைமானுக்கு 1789-ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் 21 ஆம் தேதி கடிதம் வரைந்தான். வெள்ளைத் தளபதியின் கடிதம் கண்ட தொண்டைமான் விழுந்து விழுந்து தன் ‘கடமைகளை’ச் செய்து முடித்தான். 1789-ஆம் ஆண்டு ஏப்பிரலில் கர்னல் ஸ்டூவர்ட்டுத் தொண்டைமானுக்கு எழுதிய கடிதத்தில் தொண்டைமான் தன் ‘வக்கீலா’கிய கோட்டையா ஆச்சாரி வாயிலாகப் படைக்கு வேண்டிய பொருள்களை எல்லாம் வழங்கத்தக்க ஏற்பாடுகள் செய்திருப்பதையும் திருமயத்தில் தொண்டைமான் படை எந்நேரத்திலும் போருக்குப் புறப்படத் தயாராய் இருப்பதையும் தான் அறிந்து மிக்க மகிழ்ச்சியுற்றதாக எழுதியுள்ளான். இன்னும் ஒரு கடிதத்தில் கர்னல் ஸ்டூவர்ட்டுப் புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமயத்தில் தாசில்தார் போருக்கான உதவிகளைப் புரிவதில் கம்பெனி ஊழியனைப் போலவே நடந்து கொண்டது பாராட்டற்குரியது என்றும், கூடிய விரைவில் தொண்டைமான் தன்படை வீரர்களைத் திருப்பத்தூருக்கு அனுப்பினால் அவர்கட்குப் போர் முறைகளைப் பற்றிய பயிற்சியை அளிப்பதாகவும், தொண்டைமான் போர் முனைக்குகந்த படை வீரர்கட்கு வேண்டிய பொருள்களை விற்குமாறு தன் சீமையில் உள்ள கடைக்காரர்களுக்கு ஆணை பிறப்பிக்க வேண்டும் என்றும் எழுதியுள்ளான். மேலும், அவன் தொண்டைமானிடமிருந்து முந்நூறு மண் வெட்டிகளையும் மற்றும் பல தளவாடங்களையும் வேண்டியதாகவும் தெரிகிறது. தொண்டைமான் வெள்ளைத் தளபதியின் விருப்பங்களை எல்லாம் முகம் சுளிக்காமல் நிறைவேற்றி வைத்தான். ருசி கண்ட வெள்ளைப் பூனை தொண்டைமான் செய்த இவ்வளவு உதவிகளோடு திருப்த்தி கொள்ளுமோ? தொண்டைமானிடமிருந்து வேண்டிய அளவு உணவுப் பொருள்களையும் ஆட்டுக் கிடாய்களையும் வாங்கி விலாப்புடைக்கத் தின்றது கர்னல் ஸ்டூவர்ட்டின் படை. வளமான தீனி தின்று கொழுத்த வெள்ளைப்படை 1789 ஆம் ஆண்டு மே மாதம் சிவகங்கைக்கு அருகில் உள்ள கொல்லங்குடியைக் கைப்பற்றியது; ஜூன் 2-ஆம் தேதி காளையார் கோவிலையும் பிடித்தது.[59] பலம் பொருந்திய வெள்ளைப்படையை எதிர்த்து நின்று தமக்கும் தம் நாட்டிற்கும் சேதத்தை விளைத்துக் கொள்வதைவிடப் பேய்க்காற்றுக்கு வளைந்து கொடுத்துப் பின்னர் நிமிர்ந்து கொள்ளும் நாணலாய் இருக்க விரும்பினர் போலும் மருது பாண்டியர்! ஆறு மாதம் அவர்கள் அஞ்ஞாத வாசம் நடந்தது, நாட்டின் பொருட்டு எவ்வளவு அல்லல்களைப்

படவேண்டுமோ, அவ்வளவு அல்லல்களையும் பட்டு அனுபவித்துத்தானே ஆக வேண்டும்?

ஜெனரல் ஹோர்ன் என்பவன் எழுதிய அறிக்கை ஒன்று வாயிலாக மீண்டும் 1789 நவம்பர் தொடங்கிச் சின்ன மருது நிருவாகம் சிவகங்கைச் சீமையில் தொடர்ந்து நடந்தது என்பது தெளிவாகிறது. இம்முறை சிவகங்கை மீது படையெடுத்து வந்த கர்னல் புல்லர்ட்டன், தனக்குத் தொண்டைமான் ஆட்டிறைச்சி முதலாக எல்லாப் பொருள்களையும் தந்துதவிய 'தகைமையினை' நன்றியுள்ளத்தோடு பாராட்டத் தவறினான் இல்லை. போர் அரக்கனின் கோரப் பற்களினின்றும் சிவகங்கைச் சீமையைக் காப்பாற்றிய மருது பாண்டியரால் அதற்குப் பின் பதினோர் ஆண்டுகள் அமைதியாக ஆட்சி செய்ய முடிந்தது. 1801 ஆம் ஆண்டில் சிவகங்கைச் சீமையின் சுதந்தர வாழ்வை - மருது பாண்டியரின் இன்னுயிரைக் கொள்ளை கொள்ளும் ஏகாதிபத்தியக் கொடும்போர் தொடங்கிவிட்டது. வயிறு வளர்க்க வந்த ஒரு சிறு கூட்டம் - சில மைல் விஸ்தீரணம் உள்ள பூமியைத் தமிழகத்தில் வாடகைக்கு வாங்கக் கையேந்தி நின்று பிச்சை கேட்ட கூட்டம் - ஏகாதிபத்திய வெறிகொண்டு தமிழகத்தின் சுதந்தரத்தையே சூறையாட முனைந்தது யார் பலத்தால்? தமிழகத்திலேயே பிறந்து தமிழகத்தையே காட்டிக் கொடுக்க எப்போதும் தயாராய் இருந்த ஆர்க்காட்டு நவாபுவின் அடிமைப் புத்தியாலும் தொண்டைமானின் துரோக சிந்தையாலுமே ஆகும். வரலாற்று வழியாக இவ்வுண்மையை நிறுவ வல்ல எத்தனையோ சான்றுகளைப்பதினெட்டாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் சரித்திரம் நமக்கு வாய் திறந்து சொல்லுகிறது.

கடற்கரை நகரமாகிய புதுவையைக் கைப்பற்றியது காரணமாக ஆங்கிலேயரின் ஆட்சி உச்சநிலையை அடைந்தது என்றும்; கர்நாடகத்தில் அவர்கள் அதிகாரம் வேரூன்றியது என்றும், நாம் முன்பே பார்த்து இருக்கிறோம். இதன் விளைவாக ஆர்க்காட்டு நவாபு முகம்மதலி ஆங்கிலேயர் கையில் ஒரு சிறு கைப்பாவை ஆனான். கர்நாடகத்தைக் காப்பாற்றும் பொறுப்பு வெள்ளையர் வசமாயிற்று. ஆயினும், அப்பொறுப்பை நவாபுவின் கஜானாவிலிருந்தே நிறைவேற்ற வேண்டிய நிலைமைதான் வயிறு வளர்க்க வந்த கிழக்கிந்தியக் கம்பெனிக்கு இருந்தது. ஆர்க்காட்டு நவாபுவோ, வீணான ஆரவாரச் செலவுகளால் பெருங்கடனாளியானான். ஒவ்வொரு மாவட்டத்திலும் அவனுக்கு இருந்த கடன் சொல்லி முடியாது. கடனாளி நவாபு அவன் சிப்பந்திகளாலேயே கிள்ளுக்கீரையாக மதிக்கப்பட்டான். சுலபமாகக் கட்டாயப்படுத்தி ஆங்கிலேயர்கள் செங்கற்பட்டு ஜில்லாவை அவனிடமிருந்து பறித்துக் கொண்டார்கள். மண்ணைப் பறித்ததுமன்றி, ஆர்க்காட்டு நவாபு ஏராளமான பொன்னையும் தர வேண்டும் என்று பரதேசி வெள்ளையர் எதிர் பார்த்தனர்.

பிரெஞ்சியர்களை எதிர்த்து அவர்கள் நடத்திய போர், ஆர்க்காட்டு நவாபுவைக் காப்பதற்காகவும் கர்நாடகத்தைப் பிரெஞ்சுக் கொடுங்கோன்மையினின்றும் தப்புவிப்பதற்காகவுமே என்று வாதாடினார்கள் ஆங்கிலக் கொடுங்கோலர்கள்.[60] நவாபு முகம்மதலியோ, எவ்விதச் சுயமரியாதையும் அற்றவனாய்த் தன் தலைநகராகிய ஆர்க்காட்டைத் துறந்துவிட்டு, சுகபோக வாழ்க்கை நடத்துவதற்காகச் சென்னையிற்குடிபுகுந்து, வெள்ளை அதிகாரிகளுடன் சிங்கார வாழ்வு வாழ ஆரம்பித்தான். நாட்டின் பணம் அவன் கையால் நானா வழிகளிலும் பாழாகியது. வாங்கிய கடன்களை ஒழுங்காகத் திருப்பிக் கொடுக்கும் வல்லமை அவனுக்குச் சிறிதும் இல்லை. தன் மக்களிடமிருந்து வசூலித்த வரிப்பணத்தை எல்லாம் கடனுக்காக ஈடு காட்டினான் முகம்மதலி. அவன் கடன் வாங்குவதும் வெள்ளை முதலாளிகளிடமிருந்தே. இதற்குக் காரணமாக 'இந்தியர்கள் அதிக வட்டி கேட்கிறார்கள்' என்று அவன் சாக்குக் கூறினான்.[61] முகம்மதலியினுடைய நிலை இவ்வளவு மோசமாய் இருந்த காலத்தில் ஐதர் அலியின் படையெடுப்பும் கர்நாடகத்தை - தமிழகத்தை - பயமுறுத்தியது. ஏற்கெனவே ஊழலுக்கு உறைவிடமாய் இருந்த கிழக்கிந்தியக் கம்பெனியோடு ஆர்க்காட்டு நவாபுவின் போக்கும் சேர்ந்து நாட்டை மீட்க முடியாத அபாயத்திற்குக் கொண்டுபோய்க் கொண்டிருந்தது.[62] 'சம்பளமில்லாமல் வேலை செய்யோம்; ஐதர் அலியோடு சேர்வோம்; சதி செய்வோம்!' என்று பயமுறுத்தினர் நவாபுவின் படை வீரர். நவாபுவுக்கோ, கடன் வாங்குவதில் இருந்த கருத்தும் களிப்பும் வாங்கிய கடனைத் திருப்பித் தருவதில் எள்ளளவும் இல்லை. அடைமானப் பத்திரங்களை அடுக்கடுக்காக எழுதிக் கொடுத்து ஆயிரக்கணக்கில் பணத்தை வாங்குவது அவனுக்கு அளவில்லா மகிழ்ச்சியை அளித்தது.[63] இந்த நிலையில் 1781-ல் நவாபு ஓர் அருமையான ஒப்பந்தத்தை ஆங்கிலக் கம்பெனியோடு செய்து கொண்டான். வெள்ளையரின் வற்புறுத்தலின் பேரில் செய்து கொள்ளப்பட்ட அவ்வொப்பந்தத்தின் சாரம் கர்நாடகத்தின் வருமானத்தின் ஆறில் ஒரு பங்கை வாங்கிக் கொண்டு எஞ்சிய தொகையை எல்லாம் கிழக்கிந்தியக் கம்பெனிக்கே கொள்ளை கொடுப்பது என்பதே.[64] இவ்வளவு மோசமான நிலையில் மைசூர் யுத்தமும் ஒரு புறம் மக்களைச் சொல்லொணாத் துன்பங்கட்கு இரையாக்கியது. இவ்வாறு பல வகையாலும் பாழ்பட்டுக் கிடந்த கர்நாடகத்தின் நிலை குறித்து டாக்டர் கால்டுவெல் தம் நூலுள் விளக்கியுள்ளார். அதன் சுருக்கம் வருமாறு:[65]

எண்ணற்ற பாளையக்காரர் சண்டை ஏற்படுவதற்கும் இறுதியாகக் கர்நாடகம் கிழக்கிந்தியக் கம்பெனியிடம் ஒப்படைக்கப்பட்டதற்கும் ஏதுவாய் இருந்த காரணங்களைப் பற்றி அறிவதற்கு 1781 முதல் 1801 வரை இருந்த அரசியல் நிலை பற்றி, அதாவது கிழக்கிந்தியக் கம்பெனி

நிருவாகத்திற்கும் ஆர்க்காட்டு நவாபுவிற்கும் இடையே நிலவியிருந்த உறவு பற்றி அறிந்து கொள்வது அவசியம்.

1781லே தான் திருநெல்வேலியில் ஒருவாறு ஆங்கிலேயரின் நிருவாகத் தொடர்பு நேரடியாய்த் தொடங்கியது. எனினும், 1799லிருந்த லூஷிங்டனுடைய நிருவாகம் வரை நாட்டில் நிலவியிருந்த குழப்பம் ஒழியவுமில்லை; ஒடுங்கவுமில்லை. இத்தகைய செயலற்ற தன்மைக்கு முக்கியமான ஒரு காரணம், ஐதர் அலி, திப்புச் சுல்தான் போன்ற ஆங்கில ஏகாதிபத்தியத்தின் கொடிய எதிரிகளின் கடுமையான படையெடுப்புகளிலிருந்து நாட்டைப் பாதுகாக்கத் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கேயும் மைசூருக்கு அருகேயும் படைகளைச் சேகரித்து வைக்க வேண்டியது அவசியமாயிருந்தமையே. ஆனால், ஸ்ரீரங்கப்பட்டணம் பிடிபட்டதாலும் 1799-ஆம் ஆண்டு, மே மாதம் 4-ஆம் தேதி திப்பு இறந்ததாலும் இந்தத் தொல்லைக்கு ஒரு முடிவு ஏற்பட்டது.

அந்தக்காலம் முழுவதும் ஆங்கில நிருவாகத்திற்கும் நவாபுவிற்கும் இடையே இருந்த நல்லுறவற்ற நிலையே திருநெல்வேலிப் பாளையக்காரர்களை அடக்குவதில் ஏற்பட்ட தாமதத்திற்கு மற்றொரு முக்கியமான காரணம். 1781 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 24 ஆம் தேதி ஆங்கிலேயருக்கும் நவாபுவுக்கும் ஓர் உடன் படிக்கை ஏற்பட்டது. அதன்படி போர்க்காலங்களில் கர்நாடகம், அதைச் சேர்ந்த திருநெல்வேலிப் பகுதி முதலிய இடங்களிலிருந்து வரும் வருமானத்தை வசூலிப்பதற்கான உரிமையை ஆங்கிலேயரிடம் விட்டுவிட வேண்டுமென்றும் சொந்தச் செலவிற்காக நவாபுவுக்கு ஆறில் ஒரு பங்கைக் கொடுத்துவிட வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று.

1787 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் 24 ஆம் தேதி மற்றோர் உடன்படிக்கை ஏற்பட்டது. இந்த ஒப்பந்தம் வாயிலாக முக்கியமாக வரிவசூலிப்பதற்கும், பாதுகாவலுக்கும், நாட்டில் ஒழுங்கை நிலை நாட்டுவதற்கும், நிருவாகத்தையும் அதிகாரத்தையும் இடையூறின்றி நடத்துவதற்கும் தேவையான பொழுது நவாபுவுக்குக் கம்பெனி படைகளைக் கொடுத்து உதவ வேண்டுமென்பது முடிவாகியது.

ஆனால், இந்த ஏற்பாட்டின் படி தன் அதிகாரம் பின்னப்பட்டுவிடும் என்றும் நாட்டில் ஒழுங்கை நிலை நிறுத்தும் முயற்சிக்கு ஊறு நேருமென்றும் கருதி, இம்முடிவை ஆங்கில அரசாங்கம் விரும்பவில்லை. கர்நாடகத்தில் வரி வசூலிக்கவும் செலவுகளை மேற்பார்வையிடவும் நவாபுவுடன் செய்து கொண்ட உடன்படிக்கைகள் பயனற்றுப் போனதால், சென்னை அரசாங்கம் எவ்வித உடன்படிக்கையுமின்றி ஓர் அறிக்கையின் மூலம் 1790 ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 7 ஆம் தேதி நாட்டின் நிருவாகத்தைத் தனது நேரடிக் கண்காணிப்பிற்குக் கொண்டுவந்தது.

1792 ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 12 ஆம் தேதி நவாபுவுடன் ஒரு புதிய உடன்படிக்கை உருவாகியது. அதில் நாடு முழுவதும் பிரிட்டிஷ் படைகளால் சூழப்பட்டிருக்கும் என்பதும், அதன் செலவிற்குத் தேவையான தொகையை நவாபு கொடுக்க வேண்டுமென்பதும் குறிக்கப்பட்டன. போர்க்காலங்களில் கம்பெனி நாட்டின் முழு நிருவாகப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளும் என்றும், ஆனால் அமைதியான காலங்களில் நாட்டின் சிறந்த நிருவாக நலனுக்காகக் கப்பம் அல்லது பாளையக்காரரின் காணிக்கை நவாபுவின் பெயரால் வசூலிக்கப்படும் என்றும் அது அவன் பெயரில் வரவு வைக்கப்படும் என்றும் கண்டிருந்தது. இந்த ஏற்பாட்டால் பாளையக்காரர்கள் முன்பு இருந்ததைவிட ஆங்கில அரசாங்கத்தின் நேரடி அதிகாரத்திற்குக் கொண்டு வரப்பட்டார்கள்.

ஆனால், நவாபு தன் கடன்களைச் சரிக்கட்டுவதற்காகப் புதிது புதிதாகப் பெருந்தொகைகளைக் கடன் வாங்கிக் கொண்டு அத்தொகைக்கு ஈடாக வெவ்வேறு மாவட்டங்களின் வருமானங்களைக் கடன்காரர்களுக்கு எழுதிக் கொடுத்தான். இதனால் நாட்டு மக்களிடையே ஏற்பட்ட எதிர்ப்பும் விளைந்த இன்னலும் அளவிறந்தன.

1792-ல் ஏற்பட்ட ஒப்பந்தம் கருதிய பயன்களைத் தாராததால், அதனால் உண்டான தீமைகளைத் தவிர்ப்பதற்கான முயற்சிகள் பல சென்னை அரசாங்கத்தால் செய்யப்பட்டன. அவற்றுள் ஒரு திட்டம் திருநெல்வேலியிலுள்ள தேசக்காவல் - தலங்காவல் வருமானங்களை அதிகாரப்பூர்வமாகச் சென்னை அரசாங்கமே வசூலித்துக் கொள்வது என்பதாகும். இதனால் வரி விதிக்கும் உரிமையும், வரி வசூலிக்கும் உரிமையும், பாளையக்காரர்களின் கப்பத் தொகைகளை வேண்டியவாறு மாற்றுதல் முதலியவற்றிற்கான உரிமையும் கம்பெனி வசம் இருந்தன. ஆயினும், அரசாங்க நிருவாகம் நவாபுவின் கையிலிருக்கும் வரை நாட்டின் நல்லாட்சிக்கு ஒரு சிறிதும் பயன் ஏற்படாதென்று சென்னை அரசாங்கம் கருதியது.

இது காறும் நாம் கண்ட உண்மைகளால் தமிழகம் இரட்டை ஆட்சியால் - கணக்கற்ற குட்டி நவாபுகளின் அதிகார வேட்கையால் - பாழாகிக் கொண்டிருந்தமை புலனாகும். இந்நிலையிலேதான், 'இனிப் பொறுக்க முடியாது இந்த ஈன வாழ்வு,' என்ற சுதந்தர வேகம் தமிழ்நாட்டுத் தலைவர்கள் நெஞ்சில் பொங்கி எழுந்தது. தென்பாண்டி நாட்டில் தமிழ் மக்களின் சுதந்தர ஆவேசமாகிய எரிமலை இரண்டாவது முறையாக 'குபீர்' என வெடித்தது. முன்னம் பூலித்தேவர் மூட்டிவிட்ட சுதந்தரக் கனல் நீறுபூத்த நெருப்பாய்க் கனன்று கொண்டே இருந்தது.[66] ஆம். 1797 ஆம் ஆண்டில் இராமநாதபுரத்தில் அது புரட்சித் தீ, காட்டுத் தீயாய்க் கனன்றது. அப்புரட்சியில் அநேகமாகத் திருநெல்வேலிப் பாளையக்காரர் அனைவரும்

கலந்து கொண்டனர். அவர்களுக்குத் தலைமை தாங்கினான் வீரபாண்டியக் கட்டபொம்மன். புரட்சியில் கலந்து கொண்ட அத்தனை பாளையக்காரர்களும் 'வானம் பொழியுது; பூமி விளையுது; மன்னவன் காணிக்குக் கிஸ்தி ஏது?' என்று வாளை உருவி, வான் அதிர விடுதலைக் குரல் எழுப்பினார்கள். நவாபுவின் கால்கள் நிலத்தில் ஊன்ற முடியாமல் நடுங்கின. சென்னை அரசாங்கம் செய்வது அறியாமல் சிந்தை தடுமாறியது.

நயத்தாலும் பயத்தாலும் வீரபாண்டியனைப் பணிய வைக்க பிரிட்டிஷ் அரசாங்கம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனைத்தும் வீணாயின. வீரபாண்டியனின் விடுதலை வேட்கை ஈனர்களின் பசப்பு மொழிகளால் தணிக்க ஒண்ணாததாய் இருந்தது. வீரபாண்டியனை அடக்கப் போர் ஒன்றுதான் வழி என்று கண்டனர் பிரிட்டிஷ் கொடுங்கோலர்கள். அதன் விளைவாக 1799 ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம் 5 ஆம் தேதி பாஞ்சாலங்குறிச்சியின் மீது பிரிட்டிஷ் படைகளின் பேய் வாய்ப் பீரங்கிகள் அனல் மழை கக்கின. 'செந்தில் ஆண்டவா! சக்கம்மா! தமிழ்த் தாயே! நீயே துணை!' என்று வீரவாளை உருவினான் வீரபாண்டியக் கட்டபொம்மன். அண்ணனது இடி முழக்கம் கேட்ட தம்பி ஊமைத்துரையின் சுருள்வாள் மின்னல் போல மின்னியது; சுழன்றது; பாய்ந்துவந்த பரதேசிப் படைகளின் தலைகளை இளநீர்க் காய்களைக் குலைகுலையாக வெட்டிக் குவிப்பது போலச் சீவிக் குவித்தது. ஆம். பாஞ்சாலங்குறிச்சிச் சகோதரர்களின் தலைமையில் இந்திய சுதந்தரப்போரின் முழக்கம் மீண்டும் விண்ணதிர மண்ணதிர மாற்றார் மனமதிர முழங்கியது. பாஞ்சாலங்குறிச்சிப் போர் - பாரதத்தாயின் விடுதலைக்கான போர் - நாற்பத்தொரு நாள்கள் மிகக் கடுமையாய் நடந்தது. பாஞ்சைப்பதி புனித பூமியாயிற்று. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைச் சுற்றி ஒரே இரத்த வெள்ளம்; பிணக்காடு. முடிவில் கோட்டை பிரிட்டிஷ் படைகள் வசமாகியது. வீரபாண்டியன் தன் படைகளுடன் வெளியேறினான். 'சுதந்தரச் சிங்கங்கள் மலிந்த நாடு தமிழகம். அவர்கள் துணை கொண்டு மீண்டும் போரைத் தொடங்குவோம்!' என்பதே அவன் திட்டம். ஆனால், சிங்கம் இருக்கும் குகையோ என்று சிந்தை தடுமாறி அவன் புகுந்த புதுக்கோட்டைச் சீமை, குள்ளநரி வாழும் கொடும்புதராய் இருந்துவிட்டது. வீரபாண்டியக் கட்டபொம்மன், துரோகி தொண்டைமானால் பிடித்துத் தரப்பட்டான் பிரிட்டிஷார் கையில். கொடுங்கோலர்கள் கையில் அகப்பட்ட சுதந்தர வீரன், அக்டோபர் மாதம், 16 ஆம் தேதி தூக்குமேடை ஏறி வீரமரணம் அடைந்தான். முடிந்தது இந்திய சுதந்தரப் போரின் - தமிழக விடுதலைப் போரின் ஒரு முக்கிய கட்டம். வீரபாண்டியன் தூக்கிற்கு இரையாகி மடியக் காரணமாயிருந்த பிரிட்டிஷ் ஆதிக்கம், அவன் அருமைத் தம்பியரையும் இன்னும் பல சுதந்தர வீரர்களையும் பாளையங்கோட்டைச் சிறையில் அடைத்து வைத்திருந்தது, 'கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம்

மாறும்' என்று அவ்வீரர்கள் பொருமிக்கொண்டேயிருந்தார்கள். ஆனால், வெள்ளைப் படைகள், 'பிரிட்டிஷ் படைகட்குச் சிம்ம சொப்பனமாய் இருந்த திப்புவையும் ஐதரையும் தீர்த்துக் கட்டி விட்டோம்! சீரங்கப்பட்டணம் இனி நம் கோட்டை!' என்ற மமதையில் பேயாட்டம் ஆடின. ஆர்க்காட்டு நவாபு பல்லிழந்த பாம்பாய்த் தன் மாளிகையில் சுருண்டு கிடந்தான். அவன் படைகளையும் துரோகி தொண்டைமானின் படைகளையும் குற்றேவல் கொண்டு வெள்ளைப் படைகள் நாட்டில் புரிந்த அநீதிகள் அளவிட்டுரைக்க இயலாதவை. இந்நிலைமைகளை எல்லாம் கண்ட தமிழ் மக்கள் நெஞ்சம், கொல்லன் உலை போலக் கொதித்தது. 'கோட்டை என்றால் சீரங்கப்பட்டணந்தான் கோட்டையோ? வீரர்கள் என்றால் திப்புவும் ஐதருந்தான் வீரரோ? நாமெல்லாம் மனிதர் அல்லமோ? நம் நரம்புகளில் வீரக்குருதி - தன்மான இரத்தம் - ஓடவில்லையோ? தமிழகத்துக் கோட்டைகள் எல்லாம் என்ன, வெறும் பஞ்சுப் பொதிகளோ? பார்ப்போம் ஒரு கை இந்தப் பறங்கிப் படைகளை! தண்ணீர் விட்டோ வளர்த்தோம் சர்வேசா! இந்தச் சுதந்தரப் பயிரைக் கண்ணீரால் காத்தோம்!' என்று அவர்கள் இதயம் முழங்கியது. அதிலும் சிவகங்கைச் சீமையிலிருந்த சுதந்தர வெறி சொற்களால் வரம்பிட்டு உரைக்கும் தரத்ததன்று. காடே நாடாய் இருந்த பெரிய மருதுவினும் நாடே வாழ்வாய் இருந்த சின்ன மருதுவுக்கு இருந்த சினம் அஞ்சத்தக்கது. 'ஆர்க்காட்டு நவாபுகளையும் வெள்ளைத் துரைமார்களையும் செக்கிலிட்டு ஆட்டிச் சக்கையாய்ப் பிழிந்து தொண்டித் துறைமுகத்தில் தூக்கி எறிய வேண்டும்!' என்று அவன் துடித்துக் கொண்டிருந்தான்.

இந்நிலையில் ஒருநாள் - ஆம் 1801 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், இரண்டாம் தேதி, கங்கைக் கரையுடைந்து வெள்ளம் பெருக்கெடுத்தது போலத் தென்பாண்டி நாடெங்கும் சுதந்தர வீரர்கள் கத்தியைச் சுழற்றிக் கொண்டு வீரநடை போட்டார்கள். பாளையங் கோட்டைச்சிறைக்கதவுகளை விடுதலை வீரர்களின் துணை கொண்டு நொறுக்கி எறிந்து விட்டு வெளிக் கிளம்பிய ஊமைத்துரை, வீரர் பட்டாளத்திற்குத் தலைமை தாங்கினான். வீரபாண்டியக் கட்டபொம்மனைக் கொன்ற பின் தரை மட்டமாக்கப்பட்டுக் கிடந்த பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை ஆறே நாள்களில் முன்னினும் உறுதியோடு எழுந்து நின்றது; 'வெள்ளையனே வா! உன் நெஞ்சாழத்தைக் காண்போம்!' என்று அறை கூவியது. மீண்டும் தொடங்கியது சுதந்தரப்போர். பாஞ்சைக் கோட்டையைத் தகர்க்க இம்முறை நடந்த கடும்போர். 1801 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 9 ஆம் தேதி முதல் மே மாதம் 24 ஆம் தேதி வரை 104 நாள்கள் நடந்தன. இறுதியில் பேய்வாய்ப் பீரங்கிகள் பாஞ்சைக் கோட்டையைப் பிளந்தன. ஆயினும், சுதந்தர வீரர்கள் நெஞ்சையோ அவர்களின் ஒற்றுமை உணர்ச்சியையோ - ஒரு சிறிதும் அப்பீரங்கிக் குண்டுகளால் உடைக்க முடியவில்லை. பாஞ்சைப் பதியை விட்டு

வெளியேறிய ஊமைத்துரை இம்முறை தன் அண்ணனைப் போல நரி வாழும் குகைக்குள் நுழையவில்லை. சுதந்தரச் சிங்கங்கள் வாழும் சிவகங்கைச் சீமைக்குள்ளேயே நுழைந்தான். விழுப்புண் பட்டு வந்த வீரர் திலகத்தைச் சிவகங்கை மக்கள் பல்லக்குகளுடன் சென்று கொட்டு மேளத்துடன் ஆரத்தி எடுத்து அன்பு கூர்ந்து வரவேற்றார்கள் தங்கள் நாட்டு எல்லையில். என்னே அவர்களின் சுதந்தர உணர்ச்சி! சுயமரியாதை உள்ளம்! வீரப் பெருமகனைத் தன் மகனைப் போல அன்போடு ஆரத்தழுவி வரவேற்றுத் தன் எழில் பூத்த இல்லத்திலேயே விருந்தினனாக வைத்திருந்தாள் ஒரு தாய். அந்தத் தமிழ்த்தாய் யார் என்று நினைக்கிறீர்கள்? நம் அரும்பெறல் மாணிக்கங்களாகிய மருதுபாண்டியர்களை ஈன்ற முதுகுடிப் பிறந்த மூதின்மகளே அவள். இந்த உண்மையைப் 'புதுக்கோட்டை வரலாறே' கூறுகிறது.[67]

மருது பாண்டியருக்கும் ஊமைத்துரைக்கும் இடையே இத்தகைய உறவு ஏற்படக் காரணம் என்ன? இவ்வினாவிற்கான விடையை அறிஞர் கால்டுவெல் தம் நூலுள் ஆராய்ந்து கூறுகிறார். 'பாஞ்சாலங்குறிச்சி மன்னர் தம் கோட்டை பிடிபட்டதும் ஏன் சிவகங்கைச் சீமைக்குப் பறந்து சென்றார் என்று கேட்கலாம். அவர் அவ்வாறு சென்றதன் காரணம் தம்மை அடைக்கலமாக ஏற்றுக் கொள்ளத்தக்க நாடாக அப்போது இருந்தது சிவகங்கைச் சீமை ஒன்றே. புதுக்கோட்டைத் தொண்டைமானோ, வெள்ளையர்களின் மிக நெருங்கிய நண்பனாயிருந்தான்; அத்தோடு இரண்டு ஆண்டுகட்கு முன்னேதான் வீரபாண்டியக் கட்டபொம்மனை வெள்ளையரிடம் பிடித்துக் கொடுத்தான். இராமநாதபுரம் சேதுபதியும் வெள்ளையர் பக்கமாகவே இருந்தான். வெள்ளையர் தயவு மட்டும் அவனுக்கு இல்லாதிருந்தால், எப்பொழுதோ மருது பாண்டியர் அவன் சீமையைக் கைப்பற்றியிருப்பர். மேலும், அவனுக்குத் தன் உறவினர்களுக்குள்ளேயே மைலப்பன் என்ற ஒரு பகைவன் இருந்தான். வெள்ளையருடைய படை வலியும் கண்காணிப்புந்தான் அவன் சூழ்ச்சிகளை அடக்கி வைத்திருந்தன. மற்றும் இராமநாதபுரம் நெடுங்காலமாகவே வெள்ளையரால் நியமிக்கப்பட்ட தென் பகுதிக் கலெக்டருக்கு தலைமை அலுவலகமாய் இருந்தது. கர்நாடகம் முழுவதும் வெள்ளையர் ஆக்கிரமிப்புக்கு இரையாகிய பின்னும், இராமநாதபுரம் கலெக்டர் லூஷிங்டனுடைய அதிகாரத்திற்கே அடங்கி இருந்தது. அதன் நிருவாகம் முழுவதையும் லூஷிங்டனின் தலைமைச் சிப்பந்தி ஒருவனே கவனித்து வந்தான். இக்காரணங்களால் இராமநாதபுரத்தில் கட்டபொம்மனும் அவன் தோழர்களும் அடைக்கலம் புகுவது என்பது ஒரு நாளும் இயலாத காரியம். ஆனால், அதே நேரத்தில் எந்த மருதுபாண்டியர் தூண்டுதலின்மேல் அவர்கள் புரட்சி விளைத்தார்களோ, அவர்கள் சீமையிலேயே அடைக்கலம் புகுவது இயற்கை. நமக்குக் கிடைக்கக் கூடிய

ஆதாரங்கள் சிலவற்றிலிருந்து சிவகங்கைக்கும் பாஞ்சாலங்குறிச்சிக்கும் கடிதத் தொடர்பு இருந்தது லூஷிங்டனுக்கே தெரியும் என்பது புலனாகிறது.[68] ஆனால், பாஞ்சைப்போர் முடியும் வரையில் மருது பாண்டியர்களிடம் இது பற்றி லூஷிங்டன் எதுவும் கண்டு கொள்ளவில்லை. ஒரு சமயத்தில் ஒரு பாளையக்காரரோடு போர் நடத்துவதே அறிவுடைமை என்று அவன் கருதினான்!'

இது கால்டுவெல்லின் தெளிவான ஆராய்ச்சி. 'திருநெல்வேலி வரலாற்று' ஆசிரியர் கூறும் இவ்வுண்மையோடு செவிவழிச் செய்தியாக வழங்கி வரும் கருத்தொன்றும் இங்கே நாம் கவனித்தற்கு உரியது.

ஆந்திர நாட்டினின்றும் பஞ்சப்பேய்க்கும் மகம்மதியரின் மதமாற்றக் கொடுமைக்கும் அஞ்சித் தென்பாண்டிச் சீமையில் பாஞ்சைப்பதிக்குக் குடியேறிக் குடிசைகளில் வாழ்ந்த கம்பளத்து நாயக்கர் கூட்டத்தை அப்போது அப்பகுதியை ஆண்டு வந்த ஜெகவீரபாண்டியன் கண்டான்; புதியவர்களாய் வந்து குடியேறிய அவர்களை அணுகி, 'உங்கட்கு என்ன வேண்டும்?' என்று கேட்டான். அவர்கள், 'எங்கட்கு வேறொன்றும் வேண்டா; நாயை முயல் துரத்திய இடம் அதோ இருக்கிறது. அந்த இடத்தை எங்களுக்கு இனாமாக வழங்கவேண்டும்,' என்றார்கள். மன்னவனும் இசைந்தான். ஒருநாள் கம்பளத்து நாயக்கர்கள் தங்கள் குலதெய்வத்திற்குப் பூசை போட்டுக் கொண்டிருந்த போது ஒரு முதியோள் மீது மருள் வந்தது. தெய்வமுற்ற அம்மூதாட்டி, 'அரசர் கொடுத்த இடத்தில் கோட்டை ஒன்று கட்டுங்கள். உங்கட்கு யோகம் பிறக்கும்,' என்றாள். 'தாயே நாங்கள் ஏழைகளாயிற்றே!' என்றனர் கூடியிருந்த கம்பளத்தார். 'கவலை வேண்டா. அடுத்துள்ள சிவகங்கைச் சீமையை நண்ணுங்கள். அந்நாட்டை ஆளும் மருது பாண்டியர்கள் உங்கள் ஆவலை நிறைவேற்றுவார்கள்,' என்றாள் மருளுற்ற மங்கை. 'அரசரிடம் ஆண்டிகள் எவ்வாறு செல்வது?' என்று மீண்டும் குறையிரந்தார்கள் நாயக்கர்கள். 'அஞ்ச வேண்டா. சிவகங்கையை ஆளும் மருதரசருக்குச் சேவற்சண்டை[69] என்றால் உயிர். அதற்காகச் சேவல்களை வளர்ப்பதில் அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சி. எனவே, அச்சேவல்கட்குக் கம்புத் தானியத்தை வண்டிகளில் பொதிகளாய் ஏற்றிக் கொண்டு அவரிடம் செல்லுங்கள். அவர் உங்களை இன்முகத்தோடு வரவேற்று ஆவன செய்வார்,' என்றாள் அந்த அரிவை. அவள் வாக்குப் பலித்தது. கம்பளத்தார்க்கு யோகம் பிறந்தது. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை மருதரசர் ஆதரவால் கண்டவர் மயங்கும் வண்ணம் எழுந்தது. அக்கோட்டைக்குத் 'தச்சு'ச்[70] செய்யக் கம்பளத்தாரின் அழைப்பை ஏற்றுச் சென்றாராம் மருதரசர். அப்போது கம்பளத்தார் அன்பில் சிக்கிய அவர், 'உங்கட்குத் துன்பம் உற்ற வேளை எனக்குத் தெரிவியுங்கள். நான் உங்களைக் காப்பாற்றுவேன்', என்று உறுதி மொழி கொடுத்தாராம். அதை

எண்ணியே - நம்பியே - ஊமைத்துரை தமக்கு இடர்வந்த நேரத்து மருதரசரை நாடினாராம்.

ஊமைத்துரையின் துயரக்கண்ணீர் மருது பாண்டியர் மனத்தை - சிறப்பாகச் சின்ன மருதுவின் உள்ளத்தை - உருக்கியது. இன்பமாய் இருந்த காலத்தினும் துன்பம் உள்ள வேளையில் ஒன்றிய உள்ளத்தினர் ஆதல் அன்றே தலையாய நண்பர்களின் தனிப்பண்பு? அப்பண்பு வழி இயங்கியது தமிழ் நாட்டுச் சுதந்தர வீரர்களின் வாழ்க்கை.

பாஞ்சைப்பதியை விட்டு வெளியேறிய ஊமைத்துரை சிவகங்கைச் சீமையின் அடைக்கலம் புகுந்துவிட்டான் என்ற செய்தி வெள்ளைத் தளபதிகள் காதில் ஆயிரந்தேள்கள் ஒரே சமயத்தில் கொட்டியது போலப் போய்ச் சேர்ந்தது.

'மருது பாண்டியரை வெல்வது எப்படி!' என்று அவர்கள் மனம் கலங்கினார்கள். ஆனாலும், பீரங்கியின் பலம் இருக்கிறது; தமிழகத்தில் தமிழனையே காட்டிக் கொடுக்கும் தமிழர்களும் இருக்கிறார்கள்; நச்சுக் குண்டுகளால் - முடியாவிட்டால் - நயவஞ்சகத்தால் வெல்வோம்!' என்று திட்டமிட்டார்கள் பரதேசித் தளபதிகள்.

தென்னாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் லூஷிங்டன் மருதுவை அழைத்துச் சிவகங்கைச் சீமையின் முதல் தலைவராகிய சசிவர்ணர் வழிவந்தவரே மருது பாண்டியர் என்பதற்கும் அவர்கள் சீமையை ஆளும் உரிமையைப் பெற்றதற்கும் உரிய ஆதாரங்களைக் காட்டும்படி வற்புறுத்தினான். தாம் வேறு சாதியைச் சேர்ந்தவர் என்ற காரணத்தை வைத்துக் கொண்டு வெள்ளையன் சதி செய்ய விரும்புகிறான் என்பதை அறிந்து கொண்டார் வெள்ளை மருது. 'நாடோடியாக வந்தவன் நாடாளும் உரிமை படைத்த என்னை அதிகாரம் பெற்ற ஆதாரம் காட்டக் கட்டளையிடுவதா!' என்று ஆத்திரங்கொண்டார்.[71] எனவே, அறிஞர் கால்டுவெல் கூறுவது போல, 'இனி வெள்ளையர்க்கு வளைந்து கொடுப்பதினும் வாளேந்திப் போர் புரிவதே தவிர்க்க முடியாத ஆபத்தினின்றும் தப்புவதற்கான நல்ல வழி,' என்று முடிவு செய்தனர் மருது பாண்டியர். அதோடு சென்னை அரசாங்கத்திற்கு ஒரு கடிதமும் எழுதினராம் மருதரசர். அதில் தென்பாண்டி நாட்டில் மூளும் கலகங்கட்கெல்லாம் லூஷிங்டனின் குறும்புகளே காரணம் என்றும், எனவே, அவனை மாற்றிவிட்டு வேறு கலெக்டரை நியமிக்க வேண்டும் என்றும் அதில் வரைந்திருந்தனராம்.[72]

ஊமைத்துரை அடைக்கலமாகப் புகுந்த சிவகங்கைச் சீமையின் நிலையை நேரில் கண்டறிந்த கர்னல் புல்லர்ட்டன் தன் அறிக்கை ஒன்றில் சித்திரித்துக் காட்டியுள்ளான். அது வருமாறு:[73]

'சிவகங்கை அல்லது சிறிய மறவர் நாடு கிழக்கே கடற்கரையிலிருந்து மேற்கே மேலூர் மதுரை ஜில்லாக்கள் வரையும், வடக்கே தொண்டைமான் நாடு வரையும், தெற்கே பெரிய மறவர் நாடு (அல்லது இராமநாதபுரம்) வரையும் சுமார் ஐம்பது மைல் நீளமும் நாற்பது மைல் அகலமுள்ள நிலபரப்பாய் அமைந்திருந்தது. ஆறுகளும் செயற்கை நீர்த்தேக்கங்களும் சிறிய அளவிலிருந்த போதிலும், அதிகமான முட்களும் புதர்களும் நாடு முழுவதும் வளர்ந்திருந்தமையால், தானியங்களைப் பயிரிடத் தகுதியற்ற நிலையாயிருந்தது. சுமார் நாற்பது மைல் சுற்றளவுள்ள காளையார் கோவில், காட்டின் நடுவில் அமைந்துள்ள காளையார் கோவில், படையெடுப்புகளுக்குத் தக்க பாதுகாவலான இடம். அது அரண்களாலும் தற்காப்பு வசதிகளாலும் பலப் படுத்தப்பட்டிருந்தது. காடுகளிலும் அதைச் சுற்றிலுமுள்ள நாட்டிலும் கால் நடைகள் அதிகமாயிருந்தன. கத்தி, வாள், ஈட்டி, வேல், துப்பாக்கி முதலியவைகள் தாங்கிய பன்னிரண்டாயிரம் வீரர்களைத் தேர்ந்தெடுக்கத்தக்க அவ்வளவு அதிக மக்கள் தொகையிருந்தது. அம்மக்கள், அருகே வாழ்ந்த கள்ளர்களைவிடச் சிறிது நாகரிகமுடையவர்களாயிருந்தபோதிலும், கலை தொழில் முதலியவை சிவகங்கை நாட்டில் சிறிய அளவிலேயே விருத்தியடைந்திருந்தன.'

பாஞ்சாலங்குறிச்சி பிடிபட்ட ஐந்து நாள்களுக்குப் பின் 1801 ஆம் ஆண்டு, மே மாதம் 28 ஆம் தேதி வெள்ளைப் பட்டாளம் முழுவதும் நாகலாபுரத்தில் மேஜர் ஷெப்பர்டு தலைமையில் குழுமியது. இப்பட்டாளத்தோடு மேஜர் கிரே தலைமையில் வந்த இன்னொரு பட்டாளமும் சேர்ந்து கொண்டது. மே மாதம் 29 ஆம் தேதி இராமநாதபுரத்திற்குரிய பலம் வாய்ந்த கமுதிக் கோட்டையை மருதுவின் படை பிடித்துக் கொண்டது. இதை அறிந்ததும் வெள்ளைப் படைகள் அக்கோட்டையை விடுவிக்க விரைந்தன. பலத்த போருக்குப்பின் கமுதிக் கோட்டை வெள்ளையர் உடைமையாயிற்று. கோட்டையின் பாதுகாப்பிற்காகச் சிறு படையை இங்கே விட்டு விட்டு, வெள்ளைப்பட்டாளம் நாகலாபுரச்சேரியிலிருந்து நாற்பத்தாறு மைல் தூரத்தில் உள்ள திருப்பூவனத்தை அடைந்தது. சிவகங்கைச் சீமையில் முதல் முதலாக வெள்ளைப்படைக்கும் மருதுவின் வீரர்கட்கும் மோதல் ஏற்பட்ட இடம் இதுவே. அல்லும் பகலும் மருதுவின் படை ஆங்கிலேயச் சேனைக்கு வெற்றிலை தோட்டத்திலிருந்தும் வேறு இடங்களிலிருந்தும் ஆறாத் துயர் விளைத்தது.[74]

ஜூன் மாதம் 4 ஆம் தேதி மேஜர் கிரகாம் என்பவன் படைப்பிரிவையும் அதற்குத் துணை போன மேஜர் ஷெப்பர்டின் படைப்பிரிவையும் மருது பாண்டியர் சேனை கடுமையாகத் தாக்கியது.

ஜூன் மாதம் 7 ஆம் தேதி வெள்ளைப் படை மெள்ளத் திருப்பூவனத்தை விட்டுத் திருப்பாச்சேத்திக்கு நகர்ந்தது.

திருப்பூவனத்திலிருந்து எட்டரை மைல் தூரத்திலுள்ள திருப்பாச்சேத்திக்கு வருவதற்குள் வெள்ளைப் பட்டாளம் சுதந்தர வீரர்கள் கையில் பட்ட அவதி சொல்லி முடியாது. இந்தச் சந்தர்ப்பத்தில் நடைபெற்ற போரில் மேஜர் கிரே தன் உயிரையே இழந்தான். அவன் நெஞ்சைக் குறி பார்த்துச் சுட்ட மருதுபாண்டியர் படை தனக்கு இருந்த ஆத்திரத்தில் அவன் பிணத்தையும் கண்ட துண்டமாக்கிவிட்டது. மருதுபாண்டியர் படை வீரர்களுள் அறுபது எழுபது பேர் வெட்டுண்டு மாண்டனர்; ஆங்கிலப் படைகள் கண்ட சேதமும் அதிகம். படைத்தளபதிகளுள் பலர் படுகாயப் பட்டனர். இந்நிலையில் லெப்டினன்ட் பார்மின்டன், லெப்டினன்ட் ஸ்டூவர்ட்டு என்ற இருவரும் மருதிருவர் படை தங்கியிருந்த பக்கத்துக் காடு ஒன்றில் படையுடன் புகுந்து தாக்கினர். சினங்கொண்ட சுதந்தர வீரர்கள் வெள்ளைப் படையோடு வீரப் போரிட்டு அப்படை புறமுதுகு காட்டும்படி செய்தார்கள். அதோடு படை வீரர்களிடமிருந்து தளபதி பார்மின்டனைத் தனியாகப் பிரித்து வைத்து நையப்புடைத்தார்கள். ஐந்து முறை உடலைக் குத்திக் குத்திப் புண்ணாக்கினார்கள்; லெப்டினன்ட் கர்னல் ஸ்டூவர்ட்டின் மோவாய்க்கட்டையை நொறுக்கினார்கள். துணைக்கு வந்த வெள்ளைப் படைகளை அறு நூறு எழுநூறு விடுதலைச் சகாக்கள் ஒன்று திரண்டு உழக்கி எறிந்தார்கள். இந்த ஒருநாட் போரில் மட்டுமே கர்னல் வெல்ஷ் கணக்குப்படி மேஜர் கிரே கொல்லப்பட்டான்; பிளாக்கர், கோல், பார்மின்டன், ஸ்டூவர்ட்டு என்னும் தளபதிகள் படுகாயமுற்றார்கள். படை வீரர்களுள் 16 பேர் உயிரிழந்தனர்; முப்பத்தைந்து பேர் புண்பட்டனர்.

ஜூன் மாதம் 10 ஆந்தேதி வெள்ளைப்படை வைகைக்கரை வழியாக விரைந்தது. காட்டு வழியே கடுகிச் சென்று கொண்டிருந்த ஏகாதிபத்திய வெறியர்களை மானாமதுரைக்கும் பார்த்திபனூருக்கும் இடையே மூவாயிரம் சுதந்தர வீரர்கள் தங்கள் முழுப்பலத்தையும் பயன்படுத்தித் தாக்கினார்கள். அந்நியப் படைகள் பலத்த இழப்புக்கு இரையாயின. பத்து ஐரோப்பியரும் எண்பத்து ஆறு கூலிப்படைகளும் இப்போரில் உயிரிழந்தனர் என்பது வெள்ளையர் கணக்கு. நம் வீரர்கள் அடைந்த இவ்வெற்றிக்குச் சிவகங்கைச் சீமையின் பூகோள அமைப்பே பெருந்துணையாய் இருந்து விட்டது என்பது வெள்ளையர் கருத்து.

பார்த்திபனூரை அடைந்த வெள்ளைப் பட்டாளங்கள் கிடுக்கிக்குள் அகப்பட்டது போலச் சிக்கிக் கொண்டன. சுற்றிலும் காடு; தப்பத் திசை தெரியவில்லை. பகற்பொழுதும், வெள்ளைச் சிப்பாய்களைச் சுதந்தர வீரர்களிடம் பத்திரமாக ஒப்படைத்து விட்டு விரைவாகவே விடை பெற்றுக் கொண்டது. ஒரே இருள்! மருது படைக்கோ, திருவிழா! விருந்து! அன்று தங்கட்குக் கிடைத்த அனுபவத்தைப் பற்றிக் கர்னல் வெல்ஷின் நாட்குறிப்பு, ‘எங்கட்கு ஒரு வினாடியும் ஓய்வில்லை; இரவெல்லாம் துன்பம். எங்கள்

தளபதியின் குரல் பொழுது புலர்ந்ததுமே எங்கட்கு இனியதாயிருந்தது,' என்று கூறுகிறது.

விடியற்காலம் வந்தது. 'தப்பினோம்!' என்று புறப்பட்டது பதினொரு மைல் தொலைவில் உள்ள பரமக்குடியை நோக்கி வெள்ளைப் பட்டாளம். பரமக்குடி மக்களிடம் வெள்ளைப் பட்டாளம் மருதுவின் படை பற்றி உளவு விசாரித்தது. அவர்கள் கூறிய பதில்களைக் கேட்ட வெள்ளைத் தளபதிகள், 'இவர்களை நம்புவதை விட நம்பாமல் இருப்பதே மேல்,' என்ற முடிவுக்கு வந்தார்கள். நாடு பிடித்து ஆள விரும்பிய நாடோடிகட்குக் குடிமக்கள் மேல் அவ்வளவு அன்பு! நம்பிக்கை!

ஜூன் மாதம் 12 ஆம் தேதி பரமக்குடியிலிருந்து 12 மைல் தொலைவிலுள்ள சத்தமரம் என்ற இடத்திற்கு ஆங்கிலப் பட்டாளம் விரைந்தது; அங்கிருந்து 'இனிச் சிவகங்கைச் சீமைக்குள் விஷயம் தெரியாமல் நுழையக் கூடாது,' என்ற எண்ணத்தோடு ஜூன் மாதம் 14 ஆம் தேதி இராமநாதபுரம் சேர்ந்தது. அங்கே அப்போது இருந்த கர்னல் மார்ட்டின் சிவகங்கைச் சீமையைப் பற்றிய உளவுகள் பல தெரிந்தவனெனக் கருதப்பட்டான். உதைபட்டு வந்த வழியில் பருக நீருமில்லாமல் பல இடங்களில் வெள்ளைப்பட்டாளம் தவித்துப் போனது. ஓரிடத்தில் ஆற்றின் கரையில் எட்டடி ஆழமுள்ள கிணறு தோண்டித் தண்ணீர் குடித்ததாம் ஆங்கிலப் படை. பாவிகட்குப் பசித்த போது நீர் கொடுப்பது கூடப் பாவம் என்று கருதியது போலும் இயற்கை! இப்படிக் காய்ந்து வந்த படை இராமநாதபுரத்தில் ஆறு நாள்கள் ஓய்வு கொண்டது; குடித்துக் கூத்தாடியது.

இராமநாதபுரத்தை அடைந்த கர்னல் அக்கினியூ அம்மாவட்டத்தின் வடபகுதி முழுவதும் சுதந்தர வீரர்களின் பாசறையாய் இருப்பதைக் கண்டான். இந்நிலையில் அவன் மிகவும் மனம் உடைந்த நிலையில் மதுரைக்கு ஜூலை மாதம் 4 ஆம் தேதி போய்ச் சேர்ந்தான். இராமநாதபுரத்திலிருந்து மீண்டும் புறப்பட்ட வெள்ளைப்பட்டாளம், இருபது மைல் தொலைவில் உள்ள கமுதிக்கோட்டையில் ஜூன் மாதம் 22 ஆம் தேதி முகாம் இட்டது. பழமனேரி ஆற்றங்கரையில் உள்ள இக்கோட்டை சிறியதாயினும், மிக்க பலம் வாய்ந்தது என்பதை முன்பே அறிந்திருக்கிறோம். இக்கோட்டையில் குளமும் களஞ்சியமும் உண்டு. இங்கு வந்த பின் நடந்த பல சிறு சிறு நிகழ்ச்சிகட்குப்பின் ஆங்கிலப் படை ஜூலை மாதம் 24 ஆம் தேதி திருப்பத்தூருக்கு அருகில் உள்ள திருக்கடையூரை அடைந்தது. இங்கே தான் திண்டுக்கல் வழியே வந்து கொண்டிருந்த கர்னல் இன்ஸ் என்பான் படை மதுரையிலிருந்து வந்து கொண்டிருந்த கர்னல் அக்கினியூவின் படையோடு சேர்ந்து கொண்டது. இவ்விரு படைகளையும் சேர விடாதபடி வீரப்போர் புரிந்தனர் விடுதலை வீரர்.

நத்தத்திலிருந்து புறப்பட்ட கர்னல் இன்ஸின்படை புரட்சி வீரர்களால் பட்ட அல்லல் சொல்லி முடியாது. சிங்கப்பிடாரியிலும் மண்ணப்பச்சேரியிலும் இன்ஸின் படையை நையப் புடைத்தார்கள் மருதுவின் வீரர்கள். இப்போரில் காப்டன் ஹிட்லண்டு என்பவனும் லெப்டினன்ட் பிர்த்து என்பவனும் படுகாயமுற்றனர். ஐந்து ஐரோப்பியரும் கொல்லப்பட்டனர். இருபத்து நான்கு படை வீரர் படுகாயமுற்றனர் - வெள்ளையர் கணக்குப்படி. இந்நிலையில் கர்னல் இன்ஸ், புதுக்கோட்டைத் தொண்டைமான் தன் துரோக சிந்தைக்கு அறிகுறியாக அனுப்பி வைத்த கூலிப்படைகளுடன் வந்து சேர்ந்தான். தங்கட்கு எதிராகத் தொண்டைமானின் கூலிப்படைகள் சிவகங்கைச் சீமையில் கால் வைத்த இந்நாளிலேதான் மருதுபாண்டியர்கள் தீப்பந்தங்களை எறியும் முறையைக் கடுமையாக மேற்கொண்டார்கள்.

ஒருவாறு கர்னல் இன்ஸின் படையும் அக்கினியூவின் படையும் சேர்ந்து ஏழாயிரம் வீரர்கள் கொண்ட பெரும்படையாயிற்று. இப்படை ஒக்கூரை நோக்கிப் புறப்பட்டது. ஜூன் மாதம் 28 ஆம் தேதி ஒக்கூரைப் பிடிக்க வெள்ளைப் படைகள் போரிட்டன. அவற்றை எதிர்த்து மருதிருவர் நடத்திய போராட்டத்தில் நாலாயிரம் சுதந்தர வீரர் ஆர்வத்துடன் பங்கு கொண்டனர். பகலெல்லாம் ஒக்கூரைப் பிடிக்கப் பெரும்போர் புரிந்த பறங்கிப்படை, பொழுது சாய்ந்ததும் அந்த அழகிய ஊரைத் தீவைத்துச் சாம்பலாக்கியது.

ஜூலை மாதம் 29 ஆம் தேதியிலிருந்து ஆங்கிலப் படை ஒவ்வோர் அங்குலத்தையும் கடக்க எண்ணற்ற உயிர்களைப் பலி கொடுக்க நேர்ந்தது. கரடு முரடான பாதைகளிலும் காடடர்ந்த பகுதிகளிலும் வெள்ளைப் பட்டாளம் சிக்கித் தவித்தது. சிறுவயலை - சின்ன மருதுவின் தலை நகரை நோக்கிச் சென்று கொண்டிருந்த வெள்ளைப் படையை எதிர்த்துக் கடும் போர் உடற்றினர் உரிமைக்காகப் போராடிய உத்தமர்.

ஜூலை மாதம் 30 ஆம் தேதி அழகிய சிறுவயல் நகரம் கோரமாய்த் தாக்கப்பட்டது. அத்தாக்குதலில் 540 வெள்ளையரும், மலாய் நாட்டுத் துப்பாக்கிக்காரர்களும், மூன்று கூலிப்பட்டாளமும் கலந்து கொண்டார்கள். கர்னல் அக்கினியூவின் தலைமையில் நடந்த இக்கடுந்தாக்குதல் முடியும் வரை மருதுவின் படை வீரர்கள் தங்கள் ஆற்றலை எல்லாம் பயன்படுத்தித் தடுத்தார்கள்; எதிர்த்தார்கள். ஆனால், பீரங்கிகளின் கனல் மழைக்கு ஆற்றாது மருதுவின் படை தளர நேர்ந்தது. தாங்கள் தளரினும் தங்கள் அருமைத் திருநகராகிய சிறுவயல் பகைவர் கைக்குள் அகப்படக் கூடாது என்று எண்ணிய சுதந்தர வீரர்கள் தங்கள் கையாலேயே தங்கள் நகர்க்குத் தீ வைத்தார்கள்.

'நான் கண்ட இந்திய நகரங்களுக்குள்ளேயே எளிமையும் அழகும் ஏற்றமும் பொருந்திய நகரம்' என்று வெள்ளைத் தளபதி ஒருவனாலேயே[75] போற்றப்படும் சிறப்பு வாய்ந்த சிறுவயல் நகரம் செந்தீக்கு இரையாகியது. விடுதலை வீரர்களால் தீ வைக்கப்பட்ட அத்திரு நகரம், 'எனக்கும் தேச பத்தியும் தன்மானமும் உண்டு. கற்புடைய மகள் போல அனல் வாய்ப்பட்டு அழியினும் அழிவேனேயன்றி, அந்நியர் கைப்படேன்!' என்று எழுநா விட்டு எரிந்தது. காற்றுத்தேவனும் சுழன்று சுழன்று அடித்து அக்கற்புடை நகரின் ஆசையை நிறைவேற்ற நெடுநேரம் குற்றேவல் புரிந்தான். இறுதியாகத் தீப்பிழம்பாய்க் காட்சி அளித்த அந்நகரை வெள்ளைப்பட்டாளம் ஜூலை மாதம் 30 ஆம் தேதி கைப்பற்ற முடிந்தது.[76]

சிறுவயல் நகரைப் பிடித்த வெள்ளைப்பட்டாளம், அடுத்துக் காளையார் கோவிலைப் பிடிக்கப் படாதபாடு பட்டது. அது பற்றிய விவரங்களை ஆராயுமுன் இப்போரோடு தொடர்புடைய வேறு சில முக்கிய நிகழ்ச்சிகளும் வேறு திசையில் நடைபெற்றன. நாம் சிறிது முன்பு மருதிருவர் படை இராமநாதபுரத்தின் வடபகுதியைத் தன் வயமாக்கிக் கொண்டதன் விளைவாக அப்பகுதி முழுவதும் புரட்சி வீரர்களின் பாசறையாய் விளங்கியது என்பதை அறிந்தோமல்லவா? இராமநாதபுரத்தின் வடபகுதியைக் கைப்பற்றிய மருதுவின் படை இராமநாதபுரத்தையே கைப்பற்றிவிடும் என்ற நிலை ஏற்பட்டது. வெள்ளையர் பெரிதும் கலங்கினர் கலெக்டர் லூஷிங்டனோ, 'என்ன ஆனாலும் சரி! நடப்பது நடக்கட்டும்! சிவகங்கைப் போர் முடியட்டும், பார்த்துக் கொள்ளலாம்!' என்று தன் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டிருந்தான். அவ்வளவு பயம் அவனுக்கு! மருதிருவர் படையோ, கமுதிக்கோட்டையை எப்படியாவது கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆவலால் பலமாகத் தாக்கிக் கொண்டிருந்தது; வெள்ளையர் வசமிருந்த திருப்பத்தூர்க் கோட்டையைத் தாக்கி வெற்றிக் கொடியைப் பேரார்வத்துடன் உயர்த்தியது. இவ்வாறு வேறு வேறு முனைகளில் மருதிருவர் படை கடும்போர் புரிந்து கொண்டிருக்கும் வேளையில் கடலூரிலும் போர் மூண்டது. ஆம், இந்தியாவின் முதல் விடுதலைப்போர் நீர்மேலும் நடந்தது; நிலத்தின் மேலும் நடந்தது. சிவகங்கைச் சீமை உள் நாட்டிலேயே அமைந்திருந்தாலும், சீமை பிரிந்தபோது சேதுபதியோடு செய்து கொண்ட ஓர் ஒப்பந்தத்தின்படி தொண்டித் துறைமுகம் சிவகங்கைச் சீமைக்கு உரியதாய் இருந்தது. அமைதியான நாள்களில் சீமையின் வியாபாரத் துறைமுகமாய் இருந்த அத்தொண்டித் துறைமுகம் இப்போது விடுதலைப்போரின் தலை வாயிலாய்த் திகழ்ந்தது.

விடுதலைப் போர் மூண்டதும் வங்காளக் குடாக்கடலில் அரிசி மூட்டைகளை ஏற்றிக் கொண்டு திரியும் வெள்ளையர்க்குச் சொந்தமான

அத்தனை தோணிகளையும் பிடித்துக் கொண்டு வரும்படி கட்டளையிட்டனர் மருதுபாண்டியர். அவ்வளவுதான்! வங்காளக் குடாக் கடலில் மருதுபாண்டியர் நாட்டைச் சேர்ந்த தோணிகள் கணக்கின்றி மிதந்தன. விடுதலை வேள்வியில் ஈடுபட்டு இருக்கும் சுதந்தர வீரர்களைப் பட்டினியின்றிப் பாதுகாக்கவே மருதுபாண்டியர் இத்தகைய முயற்சியில் ஈடுபட்டுள்ளனர் என்பதை அறிந்தது கம்பெனி அரசாங்கம்; ஆத்திரம் கொண்டது. கலெக்டர் லூஷிங்டன் உறுமினான். பாம்பனில் அப்போது படைத் தலைவனாய் இருந்த வெள்ளைத்துரைக்கு வெறி பிடித்தது. சிவகங்கைச் சீமையைச் சேர்ந்தனவாய்க் கடலில் மிதந்த கணக்கற்ற தோணிகளில் பல பிடிக்கப்பட்டன; நாசமாக்கப்பட்டன; தீ வைத்துச் சாம்பலாக்கப்பட்டன.

இவ்வாறு வெள்ளை அரசாங்கம் எடுத்துக் கொண்ட கடுமையான நடவடிக்கைகட்குக் காரணம் சிவகங்கைச் சீமையைப் பட்டினிக்கு இரையாக்குவது மட்டுமன்று; சுதந்தர வீரர்கள் கடல் வழியாக எங்காவது தப்பிச் சென்றுவிடுவார்களோ என்ற பயமுந்தான் என்று அறிஞர் கால்டுவெல் தம் 'திருநெல்வேலி வரலாற்றில்' கூறுகிறார்.

இனிச் சிறுவயலைப் பிடித்த வெள்ளைப்பட்டாளம் காளையார் கோவிலைப் பிடிப்பதற்காக மேற்கொண்ட கடுமுயற்சிகளைப் பற்றிக் கவனிப்போம்.

சிறுவயலையும் காளையார் கோவிலையும் இணைக்கும் காடு பெருங்காடு. கருநாடகம் முழுவதிலும் அதைப் போன்ற அடர்ந்த காடு இல்லை. அம்பும் நுழைய முடியாத அக்காட்டைக் கிழித்துச் சாலை அமைத்து அது வழியாக முன்னேறிக் காளையார் கோவிலைப் பிடிக்க வேண்டும் என்பது பறங்கியர் திட்டம். இத்திட்டத்தை நிறைவேற்றும் முயற்சியை வெள்ளைப்பட்டாளம் ஜூலை மாதம் 31 ஆம் தேதி தொடங்கியது. பறங்கியரின் முயற்சிக்குத் துணையாய்த் தொண்டைமான் அனுப்பிய கூலிப்பட்டாளம் இருந்தது. வழி காட்டுவதற்கும் மரம் வெட்டுவதற்கும் தொண்டைமான் சீமையிலிருந்து வந்த ஈராயிரவர் ஆடவர்களோடு இருநூறு வெள்ளையரும் மலாய் நாட்டுத் துப்பாக்கி வீரர்களும் காட்டை அழிக்கும் கடுமுயற்சியில் ஈடுபட்டார்கள்; ஏழுமணி நேரம் பாடு பட்டு ஒன்றரை மைல் தூரம் வழி கண்டார்கள்.

ஆகஸ்டு முதல் தேதி மேஜர் ஷெப்பர்டு காளையார் கோவில் காட்டுக்குள் அமைந்த ஒரு சிறு கிராமத்திற்குள் படையுடன் நுழைந்தான். அங்கே தயாராய் இருந்த மருதுவின் படைக்கும் வெள்ளைப் பட்டாளத்திற்குமிடையே போர் மூண்டது. அதிக சேதம் ஏதும் இன்றி வெள்ளை மேஜர் தன் முகாமிற்கு வந்து சேர்ந்தான். பாதை அமைக்கும் படையும் முக்கால் மைல் அளவிற்குக் காட்டில் பாதை கண்டது.

ஆகஸ்டு மாதம் 2 ஆம் தேதி மேஜர் ஜேம்ஸ் கிரகாம் தலைமையில் பாதை அமைக்கச் சென்ற பட்டாளத்தைத் தாக்கியது மருதுவின் படை. மலாய் வீரர்கள் மருண்டு வந்து வெள்ளையர் மத்தியில் விழுந்தார்கள். அவர்களுள் இருவர் விடுதலை வீரர்களின் துப்பாக்கிக்கு இரையாயினர். இந்த ஒரு நாளில் மட்டும் வெள்ளைப் பட்டாளம் பாதை போட எடுத்துக் கொண்ட முயற்சி அறுநூறு கெஜத் தூரத்திற்குமேல் பலிக்கவில்லை. இந்தச் சிறு முயற்சியை முடிப்பதற்குள்ளேயே பறங்கிப் பட்டாளம் பலரை இழக்க நேர்ந்தது; மருதிருவர் படையால் சொல்லொணாத் துன்பங்கட்கு இரையாகியது.

ஆகஸ்டு மாதம் 3 ஆம் தேதி மீண்டும் காட்டை அழிக்கக் கர்னல் டார்லிம்பில் தலைமையில் புறப்பட்ட பட்டாளம், நாள் முழுதும் சிவகங்கை வீரர்களோடு போராட வேண்டியிருந்தது. நானூற்று முப்பது கெஜத் தூரத்திற்கு மேல் முன்னேற முடியவில்லை. இந்த ஆகஸ்டு மாதம் 3 ஆம் தேதியில் அவமானத்திற்குரிய ஒரு முக்கிய நிகழ்ச்சி நடந்தது. பின்னாளில் பிரிட்டிஷாரால் சிவகங்கையின் அரசன் என முடி சூட்டப்பட்ட உடையத் தேவனின் மாமன், வெள்ளையர் முகாமுக்கு, உண்டவர் வீட்டுக்குத் துரோகம் செய்ய வந்தான். மருதுவின் படையில் நம்பிக்கைக்கு உரிய ஓர் இடத்தில் இருந்தவன் அவன். காசாசையால் மானமிழந்து வந்த அப்பாவி, மருதுவின் போர் முறைகள் - திட்டங்கள் பற்றிய பல முக்கியச் செய்திகளைக் கர்னல் அக்கினியூவுக்குத் தெரிவித்தான்.

ஆகஸ்டு மாதம் 4 ஆம் தேதி நடந்த போராட்டத்தில் நான்கு ஐரோப்பியரும் ஒன்பது சுதேசிகளும் உயிரிழந்தார்கள். வெள்ளையர் கணக்குப்படி மருதுவின் படையிலும் பலர் உயிர் இழந்தனர். 580 கெஜம் முன்னேறவும் ஐரோப்பியப் படையால் இயலவில்லை. மருதுவால் தற்காப்புக்காகக் கட்டப்பட்ட ஒரு சிறு அரண் தகர்க்கப்பட்டது.

ஆகஸ்டு மாதம் 5 ஆம் தேதி வெள்ளைப் படையால் நானூற்று நாற்பது கெஜத்தூரம் முன்னேற முடிந்தது. மருதுவின் படை வன்மை அதிகரித்தது; காளையார் கோவில் காடும் வரவர அடர்த்தி நிறைந்ததாய் இருந்தது.

ஆகஸ்டு மாதம் 6 ஆம் தேதி மேஜர் கிரகாம் தலைமையில் இருந்த வெள்ளையர் படைக்கும் சுதந்தர வீரர்களின் படைக்கும் இடையே பலத்த போர் நிகழ்ந்தது. காளையார் கோவில் காட்டில் எண்டிசையிலும் இரத்தக்கறைகள் தென்பட்டன. வெள்ளைப் பட்டாளத்திற்கு நேர்ந்த இழவு பெரியது. ஆயினும், மருதுவின் படையை ஒருவாறு வெற்றி கொண்டு ஆங்கிலப்படை அன்றைய தினத்தில் 237 கெஜத் தூரம் காட்டில் வழி கண்டது.

ஆகஸ்டு மாதம் 7 ஆம் தேதி ஆங்கிலப்படைகளால் 335 கெஜங்களுக்கு மேல் முன்னேற முடியவில்லை.

ஆகஸ்டு மாதம் 8 ஆம் தேதி அடிமேல் அடியிட்டு முன்னேறி வந்த ஆங்கிலப் படைக்குக் காளையார் கோவில் கோபுரம் புலப்பட்டது. 500 கெஜத் தூரத்திற்குமேல் இன்றைய தினத்தில் இங்கிலீஷ் துரைகளால் முன்னேற முடியவில்லை.

ஆகஸ்டு மாதம் 9 ஆம் தேதி நடைபெற்ற போரில் ஆங்கிலப் படையின் கையே வலுத்திருந்தது. அதன் விளைவாக 30 சதுர கெஜம் அளவு கொண்ட காவல் கொத்தளம் ஒன்று கட்டப்பட்டது. வெட்டுதற்கரிய மிகப்பெரிய புளியமரம் ஒன்றை அடுத்திருந்த இடத்திலிருந்து பார்த்தால் காளையார் கோவிலும் சிறுவயலும் கண்ணுக்குத் தெளிவாய்த் தெரிந்தன.

ஆகஸ்டு மாதம் 10 ஆம் தேதி கர்னல் இன்ஸ் தலைமையில் ஆங்கிலப் படை 500 கெஜத்தூரம் வழி கண்டது. இன்றைய தினத்தில் காப்டன் பிளாக்பர்ன் தலைமையில் படையும் உணவுப் பொருள்களும் அறந்தாங்கி வழியே வந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தி ஆங்கிலப் படைக்குத் தெரிந்தது.

ஆகஸ்டு மாதம் 11 ஆம் தேதி கர்னல் பார்லிம்பர் தலைமையில் ஆங்கிலப் படைக்கு உதவியாக மிகுதியான பொருள்கள் வந்து சேர்ந்தன. காளையார் கோவில் ஆங்கிலப் படைகள் இருக்கும் இடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலேயே இருக்கும் என்பது ஊகிக்கப்பட்டது.

ஆகஸ்டு மாதம் 12 ஆம் தேதி ஆங்கிலப் படை மருது பாண்டியரின் கடுமையான துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இரையாயிற்று.

ஆகஸ்டு மாதம் 13 ஆம் தேதி மேஜர் ஷெப்பர்டு தலைமையில் கிளம்பிய வெள்ளைப்படையும் எட்டயபுரக் கூலிப்படையும் நையப்புடைக்கப்பட்டன. எட்டயபுரக் கூலிப்படையைக் களத்தில் கண்டதும் அவமானமும் ஆத்திரமும் பொறுக்கமாட்டாத மருதுபாண்டியரின் வீரர்கள் உயிரைத் துரும்பாகக் கருதி உறுத்தெழுந்து பெரும்போர் புரிந்தார்கள். இன்றைய போரில் மட்டும் இருநூறு விடுதலை வீரர் பலியாயினர். 'காளையார் கோவிலை நெருங்கிவிட்டோம்!' என்று களிவெறி கொண்டிருந்த ஆங்கிலப்படை முன்னினும் காட்டின் அடர்த்தி நுழைய முடியாத பெருநெருக்கமாய் இருந்தது கண்டு திகைக்கலாயிற்று.

ஆகஸ்டு மாதம் 16 ஆம் தேதி ஆங்கிலப் படைகள் 355 கெஜம் முன்னேறின. காளையார் கோவில் மிகத் தெளிவாகப் பரதேசிப்படையின் கண்கட்குப் புலனாகியது. இரவெல்லாம் ஆங்கிலப் படையை மருதிருவர் படை வீரர்கள் சுட்டவண்ணம் இருந்தார்கள்.

ஆகஸ்டு மாதம் 16 ஆம் தேதியிலிருந்து போரின் கடுமை அதிகமாயிற்று. காட்டுக்குள் சிக்கிய கயவர் கூட்டத்தை உயிரோடு வெளியே அனுமதிக்கக் கூடாது என்பதே சிவகங்கை வீரர் ஒவ்வொருவரின் விருப்பமும். இதன் விளைவாக ஆகஸ்டு மாதம் 15 ஆம் தேதி நடந்த சுதந்தரப் போரில் வெள்ளைப்படை உயிர் தப்பியது அருமையினும் அருமையாயிற்று. காடு வெட்டிகளால் ஒரு சிறிதும் தங்கள் கைவரிசையைக் காட்ட முடியவில்லை.

ஆகஸ்டு மாதம் 17 ஆம் தேதி வெள்ளைப்படை இதுவரை அமைத்து வந்த பாதைக்கு வலப்புறத்தில் ஆயிரத்து இருநூறு கெஜத்தூரம் உள்ள ஒரு சிறு பாதையை இடத் தொடங்கியது.

ஆகஸ்டு மாதம் 18 ஆம் தேதி புதிய பாதை வழியாக முன்னேறிக் கொண்டிருந்த ஏகாதிபத்தியப் படையைத் தமிழ் மக்கள் கொன்று குவித்தார்கள். இன்றும் கடுமையான துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இரையான வெள்ளைப் படை வீரர்களால் தங்களைச் சுடுகின்ற சுதந்தர வீரர்கள் எங்கிருந்து குறி பார்த்துத் தங்களைக் கொல்லுகிறார்கள் என்பதைச் சிறிதும் அறிந்து கொள்ளக் கூடவில்லை. கர்னல் இன்ஸ் மயிரிழையில் உயிர் தப்பினான்.

ஆகஸ்டு மாதம் 19 ஆம் தேதி வெள்ளைப் படையை நடுக்காட்டில் வைத்து நாற்புறமும் சூழநின்று விடுதலை வீரர் சுட்டுத் தீர்த்தனர். ஆனால் வெள்ளைப்படை வீரர்களின் கண்களில் ஒரு விடுதலை வீரன் படவேண்டுமே! அது தான் இல்லை. என்ன மாயமோ அது!

கடுமையான துப்பாக்கிப் பிரயோகத்தைத் தங்கள் மீது செய்து கொண்டிருந்த சுதந்தரப் படைகளின் குன்றுகளினின்றும் தப்ப ஓர் அற்புதமான வழியைக் கையாண்டன ஆங்கிலப் படைகள். ஆம். அது அப்படைக்கு வெற்றியும் தந்தது. நின்று கொண்டே விடுதலை வீரர்களோடு போரிட்டால் தங்கள் நெஞ்சு சல்லடைக் கண்களாகிவிடும் என்று அறிந்த வெள்ளைப் படை வீரர் உட்கார்ந்து கொண்டே சுடலானார்கள். இதன் விளைவாக நாற்புறமும் சுற்றி நின்று சுட்ட நம் விடுதலை வீரர்களின் குண்டுகள் அவர்களை மீறி எதிர் எதிர்த்திசைகளில் பாய்ந்தன. அந்தோ! அழிவு! பேரழிவு நேர்ந்தது! அப்படியிருந்தும் வெள்ளைப் படைகள் மேலும் முன்னேற முடியாமல் புறங்காட்டி ஓடின. கர்னல் அக்கினியூ தன் கடுமையான பகைவர்கள் போக்கைக் கண்டு கலங்கிப் போனான். கண்ணுக்குத் தெரியாத இந்தத் துப்பாக்கி வீரர்களைத் தேடிப் பிடிப்பதில் படுதோல்வி அடைந்தது வெள்ளைப் பட்டாளம். வெள்ளைப் பட்டாளத்தை வேரறுக்கக் கூடியிருந்த விடுதலை வீரர்களின் தொகையே 15 ஆயிரம் முதல் 20 ஆயிரம் வரையில் இருக்கும் என்று கருதப்பட்டது. ஆகஸ்டு மாதம் 20 ஆம் தேதி முக்கிய நிகழ்ச்சி ஒன்றும் நடைபெறவில்லை.

ஆகஸ்டு மாதம் 21 ஆம் தேதி மேஜர் ஷெப்பர்டு தலைமையில் முன் வலப்புறம் அமைக்கப்பெற்ற பாதைக்கு நேர் எதிரில் - இடப்புறத்தில் - இரு நூறு அடி நீளமுள்ள புது வழி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அன்றும் கடுமையான துப்பாக்கிப் போர் நடைபெற்றது.

ஆகஸ்டு மாதம் 22 ஆம் தேதி வெள்ளையர் படை குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதையும் அடையவில்லை. கடந்த சில தினங்களில் இரவெல்லாம் பெய்த மழையால் வெள்ளைப்படை துன்புற்றது.

ஆகஸ்டு மாதம் 23 ஆம் தேதி கர்னல் இன்ஸ் தலைமையில் ஒரு படை புறப்பட்டது. திருமயத்திற்குச் சென்று பட்டினியால் வாடும் வெள்ளைப் பட்டாளத்திற்கு உணவுப் பொருள்கள் கொண்டு செல்வதும், சென்ற இருபத்தைந்து நாள்களாக வெளி உலகத் தொடர்பு சிறிதும் இல்லாமல் துண்டிக்கப்பட்டிருந்த ஆங்கிலப்படையின் சார்பில் தபால்களை எடுத்துச் செல்வதுமே கர்னல் இன்ஸ் தலைமையில் புறப்பட்ட படையின் நோக்கம். அன்றைய தினத்தில் புதிய காவற்கொத்தளம் ஒன்றும் கட்டப்பட்டது.

ஆகஸ்டு மாதம் 24 ஆம் தேதி மேஜர் ஷெப்பர்டு தலைமையில் வெளியே சென்ற படை, மருதிருவர் படையால் இரு புறங்களிலிருந்தும் சுடப்பட்டது. வெள்ளைத் தளபதிகளுள் ஒருவனான சாட்லர் என்பவன் கண்டு பிடித்த ஒரு புது விதத் துப்பாக்கிக்குப் பறங்கிப் படையைச் சார்ந்த ஒருவனே பலியானான்.

ஆகஸ்டு மாதம் 23 ஆம் தேதி விடுதலை வீரர்கள் வெள்ளை வெறியர்களை நேருக்கு நேர் நின்று கடுமையாகச் சுட்டார்கள். தங்கள் படை வீரர்களுள் ஒருவன் குண்டால் இருகூறாக்கப்பட்ட போதிலும், அவன் திருவுடலைப் பகைவர் கையில் விடாது சுமந்து சென்றார்கள் சுதந்தர வீரர்கள். அதுவன்றோ நாட்டுப்பற்று!

ஆகஸ்டு மாதம் 27 ஆம் தேதி திருமயம் சென்ற கர்னல் இன்ஸை உயிரோடு கொண்டு வந்து சேர்ப்பதற்காக இன்னொருபடை மேஜர் ஷெப்பர்டு தலைமையில் புறப்பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் மருதிருவர் படை திருப்பத்தூர்க் கோட்டையைப் பிடிக்க விரைந்தது. ஆனால், துரதிருஷ்டவசமாக எச்சரிக்கையோடு இருந்த ஆங்கிலேயர்கள் மருதிருவர் வெற்றிக்கு இடம் தரவில்லை.

ஆகஸ்டு மாதம் 29 ஆம் தேதி காட்டிலிருந்து புறப்பட்டுச் சென்ற ஒரு படைப்பிரிவு பட்டமங்கலத்தை அடைந்தது.

ஆகஸ்டு மாதம் 30 ஆம் தேதி காட்டுக்குள் இருந்த படைக்கு உணவு கொண்டுவர வெளியே சென்ற பட்டாளங்களை மருது பாண்டியர் படை சுற்றி வளைத்துக் கொண்டு, மனஞ்சலிக்குமட்டும் வேட்டையாடிற்று.

எப்படியோ தப்பிப் பிழைத்து வெள்ளைப்பட்டாளம் சிறு வயலுக்கு ஓடோடி வந்து நின்ற பின்பே மூச்சுவிட்டது. அன்றைய போரில் பலியான வெள்ளை வீரர் பலர். அன்று மாலைதான் முதன் முதலாகச் சிவகங்கைச் சீமைக்கும் பரதேசிகள் தயவால் அரசனான உடையத் தேவன் தன் அண்ணனோடும் கிழட்டுப் பார்ப்பனன் ஒருவனோடும் வந்தான்; அக்கினியூவைக் கண்டு 'சலாம்' போட்டுவிட்டுத் தன் கூடாரத்திற்குத் திரும்பினான். திருடன் ராஜவிழி விழிப்பது போல விழித்துக் கொண்டிருந்த அந்தக் கோழையின் அடிமைப் புத்தி ஆங்கிலத் தளபதிகட்கு அளவிலா ஆனந்தம் அளித்தது.

ஆகஸ்டு மாதம் 30 ஆம் தேதிதான் வெள்ளைப் படை ஒரு முக்கியமான முடிவுக்கு வந்தது. அம்முடிவு வேறொன்றும் அன்று; 'ஒரு மாதமாகப் படாத பாடு பட்டுச் செய்த முயற்சியெல்லாம் பாழ். எனவே, காட்டு வழியாகக் காளையார் கோவிலை அடையவைத்த ஆசைக்கு நெருப்பு வைக்க வேண்டுவதுதான்' என்ற முடிவு எழுந்தது. வெள்ளை வீரர்கள், 'இஃது அவமானந்தான் என்றாலும், உயிர் தப்பினால் போதும்!' என்று இம்முடிவை மனமார வரவேற்றார்கள். இவ்வாறு வெள்ளைப்படை விலவிலத்துப் போனதற்குக் காரணங்கள் பல. அவற்றைக் கர்னல் வெல்ஷ் தன் நாட்குறிப்பில் மிகச் சுவையாக வருணித்துள்ளான்.[77]

வெள்ளைப்பட்டாளத்தின் பாசறை பல்வகை நோய்களுக்கு இருப்பிடம் ஆயிற்று. மணிக்கு மணி மருதிருவர் படை தாக்கப்பட்டது. எனினும், வெள்ளைப்படையை விடுதலை வீரர்கள் வளைத்து வாட்டாத நாளில்லை; நேரமில்லை. ஒரு சிறு கடிதத்தைக் கூடக் காளையார் கோவில் காட்டுக்குள்ளிருந்து வெள்ளையர்களால் வெளியே அனுப்ப முடியவில்லை.

ஆகஸ்டு மாதம் 31 ஆம் தேதி காளையார் கோவில் காட்டை அழிக்கும் வேலை வெள்ளையர்களால் அறவே கைவிடப்பட்டது. அன்று மட்டும் நான்கு வெள்ளையர் மருதிருவர் படையால் கொல்லப்பட்டனர்.

செப்டம்பர் மாதம் 1 ஆம் தேதி முப்பத்திரண்டு நாள்கள் வெள்ளைப்பட்டாளத்தார்கள் இரவு பகலாய்ச் செய்த வேலைகள் - இட்ட பாதைகள் - கட்டிய கட்டடங்கள் அனைத்தும் அவர்களாலேயே தீ வைக்கப்பட்டு அழிந்து நாசமாக்கப்பட்டன; ஆம். அழக்கொண்ட வெல்லாம் அழப்போயின.

இவ்வாறு வெள்ளைத் தளபதிகள் அவமானத்தால் உடல் சிறுத்துப் போகும்படி முடிந்த காளையார் கோவிற்காட்டைச் சிதைக்கும் போராட்டம் பற்றி நாம் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்ளப் பெரிதும் பயன்படுவன கர்னல் வெல்ஷின் நாட்குறிப்புகளே ஆகும். எனினும், சென்னை இராணுவத்தின் வரலாற்றை மிக விரிவாக எழுதியுள்ள அறிஞர் வில்ஸன் தம் நூலுள் இப்போர்க்காலம் பற்றித் தரும் சில குறிப்புகள் சுவை மிக்கவை.

'கடிதப் போக்குவரவு முற்றிலும் அற்றுப் போய் விட்டது. எனவே, ஜூலை முடிவிலிருந்து செப்டம்பர் 6 ஆம் தேதி வரை மூன்று கடிதங்களே கர்னல் அக்கினியூவிடமிருந்து கிடைத்துள்ளன. இம்மூன்றில் இரு கடிதங்கள் மூன்று அங்குல நீளமும் ஓர் அங்குல அகலமும் உள்ள துண்டுச் சீட்டுகளாய் உள்ளன. இக்கடிதங்கள் வாயிலாகக் காளையார் கோவிலைக் காடு வழியாக அடையும் முயற்சி படுதோல்வி அடைந்தது என்பதைத் தவிர வேறொன்றையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. சிறு வயலிலிருந்து ஆகஸ்டு மாதம், 21 ஆம் தேதி கர்னல் அக்கினியூ எழுதிய ஒரு கடிதத்திலிருந்து எடுத்துக் கீழே தரப்பட்டுள்ள பகுதிகளால் அப்போது வெள்ளை இராணுவம் இருந்த நிலைமை விளங்கும்.

'பகைவனது இடத்தை அடைய நாளும் காட்டை அழித்துப் பாதை இடப்படுகிறது. ஆனால் ஒரு சிறிதும் வெற்றி ஏற்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். அகழிகளையும் அரண்களையும் அடர்ந்த காடுகளையும் கடந்து நம் படைகளால் முன்னேற முடியவில்லை. மேலும் மேலும் காட்டை ஊடுருவிச் செல்ல நாங்கள் மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சியையும் எங்கள் எதிரிகள் முறியடித்துவிட்டார்கள். தக்க பாதுகாப்பான இடங்களில் தங்களை மறைத்துக் கொண்டு புரட்சிக்காரர்கள் எங்கள் முன்னோடிகள் மீது பிரயோகித்த குண்டுகளினின்றும் தப்பி முன்னேற நம் படை வீரர்களால் இயலவில்லை. திரும்பத் திரும்ப ஏற்பட்ட தோல்விகள் நம் படை வீரர்களை மிகவும் சோர்வடையச் செய்து விட்டன.

'நமக்குப் பெருத்த நஷ்டம் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை என்றாலும், இந்த வழியில் நமக்கு வெற்றி கிட்டும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்க முடியவில்லை.'

'இடையறாது வெயிலில் கிடந்தமையாலும், ஓய்வின்றிப் போரிட்டமையாலும் நம்படையில் நோய்கள் மலிந்து விட்டன. மிகப் பெரும்பாலான தளபதிகள் ஏதும் செய்ய இயலாத நிலையில் இருக்கின்றனர்.'

மேற்கண்ட அக்கினியூவின் கடிதமே உரிமை வீரர்களின் கையில் அயலார் பட்டாளம் பட்ட அவதியை விளக்கப் போதுமானது.

செப்டம்பர் மாதம் 2 ஆம் தேதி புறப்பட்ட இடமாகிய ஒக்கூருக்கே திரும்ப ஓடிவந்தது ஆங்கிலப் படை. ஒக்கூரிலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ள சோழபுரத்தில் கர்னல் இன்ஸ் தலைமையில் ஒரு படை நிறுத்தப்பட்டது.

செப்டம்பர் 3 ஆம் தேதி இன்னொரு படை கர்னல் அக்கினியூவோடு சோழபுரத்திற்குச் சென்றது. சோழபுரத்தில் கோட்டைபோல உயர்ந்த மதில்களை உடைய பெருங்கோயில் ஒன்று உண்டு. அவ்வூரை அடுத்தே

'நாலு கோட்டை' என்ற புகழ் வாய்ந்த நகரம் இருந்தது. சிவகங்கைக்கு மன்னராய் வருவோர் அவ்வூரின் தலைமக்கள் அனுமதி பெற்றே முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்ற கண்டிப்பான வழக்கம் அந்நாளில் இருந்தது.

வெள்ளையர் தயவால் சிவகங்கைக்கு மன்னராக முடி சூட்டிக் கொள்ள இருந்த உடையத் தேவர் அந்த ஊர் மக்களின் காணிக்கையையும் ஆதரவையும் எப்படியோ பெற்றிருந்தார்.

சோழபுரத்துக் கோயிலைப் பாதுகாக்கும் பொருட்டுக் காப்டன் ஸ்மித்துத் தலைமையில் ஒரு படை நிறுத்தப்பட்டிருந்தது.

செப்டம்பர் மாதம் 4 ஆம் தேதி இரண்டு மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் மருதுவின் படை இருந்த துப்பு வெள்ளையர்க்குக் கிடைத்தது. உடனே மேஜர் ஷெப்பர்டு தலைமையில் ஒரு படை புறப்பட்டுச் சென்றது. அது மருதுவின் படையோடு கடும்போர் புரிந்து அந்தக் கிராமத்திலிருந்த ஏராளமான உணவுப் பொருள்களையும் கொள்ளை அடித்து வந்தது.

செப்டம்பர் மாதம் 9 ஆம் தேதி மேஜர் கிரகாம் புண்பட்டும் நோயுற்றும் நலிந்திருந்த பல அதிகாரிகளுடன் மதுரைக்குக் கிளம்பிச் சென்றான். மருதிருவர் படையால் ஆகஸ்டு மாதம் 6 ஆம் தேதி நையப் புடைக்கப்பட்ட கிரகாம் அந்த அதிர்ச்சியிலிருந்து மீள முடியாமலே மாண்டான்.

செப்டம்பர் பன்னிரண்டாம் தேதி நல்லோர் வருந்த வேண்டியநாள். ஆனால், அன்றுதான் சோழபுரத்தில் கொட்டு முழக்கு ஏராளமாய் இருந்தது. கொம்புகள் முழங்கின. வேத பாராயணங்கள் நடந்தன; பொம்மை ராஜா உடையத் தேவருக்கும் முடிசூட்டு விழா நடந்தது. இந்தப் பொம்மை அரசரைப் பற்றி வெல்ஷ் தன் நூலில் நகைச்சுவை ததும்ப வரைந்துள்ளான். பொம்மை ராஜா உடையத் தேவர் செப்டம்பர் பன்னிரண்டாம் தேதி அதிகாலையிலேயே பறவைகள் விழிக்கு முன்பே - எழுந்து விட்டார்; கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி போலத் தம்மைச் சிங்காரித்துக் கொண்டார்; வெள்ளையர் இராணுவம் தம் உடலையும் உயிரையும் பாதுகாக்கும் பொருட்டுக் கூடவே வரச் சோழபுரக் கோவிலுக்கு ஊர்வலமாய்ச் சென்றார். நடுப்பகல் வரை சடங்குகள் நடந்தன. மாலை கர்னல் அக்கினியூவும் கர்னல் இன்ஸும் தலை நிமிர்ந்து தனி ஊர்வலமாய்ப் புறப்பட்டுச் சோழவரக் கோவிலுக்குச் சென்றனர். அங்கே ஆலயத்திற்கு முன் அமைக்கப்பட்ட பந்தலில் அனைவரும் அமர்ந்தனர். பரதேசி அக்கினியூ பொம்மை ராஜா உடையத் தேவருக்கு 'அரச ஆடை' அளித்தான்; அதே நேரத்தில் அவர் தமையனாருக்கு ஒரு சாதாரண உடையைத் தந்தான். வெள்ளையன் கொடுத்த ஆடைகளை உடுத்துக் கொண்டு சற்றும் சுயமரியாதையின்றி வெளியே வந்தார் உடையத் தேவர். பந்தலில் பட்டுக்

கம்பளம் ஒன்றின் மேல் கர்னல் அக்கினியூவும், கர்னல் இன்ஸும் கொலுவிருக்க, அவர்கட்கு இரு புறமும் அமர்ந்தனர் உடையத் தேவரும் அவர் தமையனாரும். அவர்கட்கு எதிரே நாற்காலிகளில் அரை வட்டமாய் அமர்ந்திருந்தார்கள் வெள்ளைத் தளபதிகள். சற்று நேரத்தில் அமைதி நிலவியது. ஒருவன் எழுந்து உடையத் தேவரைச் சிவகங்கை அரசராக வெள்ளை அரசாங்கம் நியமித்திருக்கும் பிரகடனத்தைப் படித்தான்; பின்பு அப்பத்திரத்தைக் கர்னல் அக்கினியூவின் கையில் கொடுத்தான். அந்தச் சீமைத்துரை அதை உடையத்தேவர் கையில் கொடுத்துவிட்டு, ஒரு 'பாராட்டுரையும்' நிகழ்த்தினான். இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருந்த சகோதரர்களின் இதயம் என்ன கல்லா, களிமண்ணா? அப்படி இருந்திருந்தாற் கூட நன்றாய் இருந்திருக்கும். புதிய ராஜா உடையத் தேவர் எழுந்து ஆவேசமாகத் தம் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். பதினொரு பீரங்கிகள் முழங்கின. பட்டத்து யானைமேல் 'பொம்மை ராஜா'வின் பவனி நடந்தது; சோழபுரக் கோவிலைச் சுற்றி ஊர்வலம் வந்தது. ஊர்வலம் கடைசியாகப் பந்தலுக்கு வந்து சேர்ந்ததும் உடையத் தேவரால் தமது உணர்ச்சியை அடக்கிக் கொள்ளவே முடியவில்லை. அவர் கண்களில் நீர் வழிந்தது. 'இனிச் சமாளிக்க முடியாது நம் உணர்ச்சியை!' என்று தெரிந்ததும் கர்னல் அக்கினியூவின் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்தார் உடையத் தேவர். அவர் சகோதரரும் அக்கணமே கர்னல் அக்கினியூவின் அருகிலிருந்த கர்னல் இன்ஸின் காலில் விழுந்தார். இருவரும் கர்னல் அக்கினியூவின் கால்களையும் கர்னல் இன்ஸின் கால்களையும் கட்டிப் பிடித்துத் தழுவிக் கொண்டனர். இதை நேரில் பார்த்த வெல்ஷ் தன்நூலில் வருணிக்கும்போது நம் அங்கமெல்லாம் அவமானத்தால் ஆயிரம் ஊசிகள் கொண்டு குத்தியது போல வேதனைக்கு உள்ளாகிறது! ஐயோ! அடிமை வாழ்வே! ஏகாதிபத்தியச் சூழ்ச்சியே! என்னே உன் அலங்காரம்! இக்காட்சியையெல்லாம் பார்த்துக் கொண்டு அந்தச் சோழபுரத்துக் கோவில் தெய்வமும் இருந்ததோ!

முடிசூட்டு விழா என்ற பெயரால் இந்த அவமானக் காட்சி முடிந்ததும், புதிய 'ராஜா' உடையத் தேவருக்கு அவரை ஒத்த மனம் படைத்த பல 'விசுவாசிகள்' காணிக்கை கொண்டு வந்தார்கள். மானத்தினும் பொன்னையும் மண்ணையுமே பெரியனவாக மதித்தார் உடையத்தேவர். ஆனால், மருது பாண்டியரோ....

சிவகங்கைச் சீமையில் அரிமாவுக்கு அல்லல்; நரிமாவுக்குக் கொண்டாட்டம்!

செப்டம்பர் மாதம் 14 ஆம் தேதி லெப்டினன்ட் கர்னல் ஸ்பிரே மதுரையிலிருந்து ஏராளமான பொருள்களை வெள்ளையர் முகாமுக்குக் கொண்டுவந்தான். வௌத்தூரில் ஒரு குதிரைப்படையும் எட்டயபுரச் சிப்பாய்களுள் சிலரும் தபால்களைக் கொண்டு வருவதற்காக நிறுத்தி

வைக்கப்பட்டனர். மலேயாப் படைத் தளபதியான பீட்லீயும், லெப்டினன்டுகள் பிளிச்சரும், விகோவும் நோய் நீங்கிப் போருக்குச் சித்தமானார்கள். மலேயாப் படைத்தளபதி ஒருவன் அன்றைய தினத்தில் வயிற்றுப் போக்கால் காலமானான்.

செப்டம்பர் மாதம் 15 ஆம் தேதி லெப்டினன்ட் பெப்பர் தலைமையில் சென்ற ஒரு படை டிராட்டர் என்பவனோடு சேர்ந்து கொண்டு இரவோடு இரவாய்க் கீழவிளவு என்று கிராமத்தைத் தாக்கியது. அதே இரவில் சேம்பர் என்ற தளபதியின் தலைமையில் சென்ற படை பக்கத்தில் உள்ள இன்னொரு கிராமத்தைத் தாக்கியது. இத்தாக்குதல்களால் வெள்ளைப்படைக்குப் பெரிய இலாபம் ஒன்றும் கிட்டவில்லை.

செப்டம்பர் மாதம் 17 ஆம் தேதி வெள்ளைப் பட்டாளம் பிரான் மலையைத் தாக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு புறப்பட்டது. பகலெல்லாம் காட்டு வழிகளைக் கடந்து சென்று அப்பட்டாளம் மேலூரில் முகாம் இட்டது. நன்றாக மழை பெய்திருந்தமையால் வெள்ளைப் பட்டாளம் இச்சந்தர்ப்பத்தில் சேற்றிலும் சகதியிலும் சிக்கி அடைந்த அவதி கொஞ்சநஞ்சம் அன்று. இந்த நிலையில் இருள் சூழ்ந்ததும் பறங்கிப்படை தான் செல்ல வேண்டிய பாதையினின்றும் எப்படியோ தவறிவிட்டது. ஒரு சிறு திடலில் பட்டாளம் முழுவதும் உறங்கிவிட்டு அதிகாலையிலே எழுந்து மீண்டும் சேற்றிலும் சகதியிலும் இறங்கித் துப்பாக்கிகளை இழுத்துக் கொண்டும் சுமந்து கொண்டும் சென்ற வெள்ளைப்படை, உரைக்க ஒண்ணாத் துன்பம் உற்றது. கடைசியாக ஆங்கிலப்படை சிங்கப் பிடாரியை அடைந்தது. அங்கிருந்து நான்குமைல் தூரந்தான் பிரான் மலை உள்ள இடம். பிரான் மலைக்கோட்டையைப் பிடிக்க எட்டயபுரக் கூலிப்படைகளோடு வெள்ளைப் படையில் ஒரு பகுதியும் ஏவப்பட்டது. ஆனால், மருது பாண்டியர் மலை மேல் இருந்து அளித்த வரவேற்பைக் கண்டு அஞ்சிய புதுக்கோட்டைக் கூலிப்படைகள் முன்னேற அஞ்சின.[78] கோழைகளின் நடுக்கத்தை அறிந்ததும் விடுதலை வீரர்கள் பேருக்கம் கொண்டு மழையெனக் குண்டுகளைப் பொழிந்தார்கள்.

ஆனால், வெள்ளைப் படைகளின் பீரங்கித் தாக்குதலால் பிரான் மலை இறுதியாகப் பிடிபட்டது. கர்னல் அக்கினியூ தலைமையில் வெள்ளைப் பட்டாளம் மலைமேல் ஏறிக் கோட்டைக்குள் நுழைந்தது. அங்கே அது கண்ட காட்சி பெருவியப்பை அளித்தது. தூரத்திலிருந்து பார்த்தால் ஒரு சிறு சத்திரம் போலத் தெரிந்த அக்கோட்டை இவ்வளவு பலம் பொருந்தியதாகவும் பெரியதாகவும் இருக்கும் என்று பறங்கிப் பட்டாளம் கனவிலும் கருதவில்லை. பிரான் மலையைப் பிடித்த வெள்ளைப்பட்டாளம் செப்டம்பர் மாதம் 21 ஆம் தேதி ஒக்கூருக்குத் திரும்பியது.

செப்டம்பர் மாதம் 24 ஆம் தேதி எட்டயபுரச் சிப்பாய்களோடு குதிரைப்படையும் காலாட்படையும் மீண்டும் பிரான் மலைக்கு அனுப்பப்பட்டன. நத்தத்திலிருந்து காப்டன் காட்பிரை ஏராளமான உணவுப் பொருள்களை எடுத்து வருவதற்குத் துணை புரிவதே அப்படை சென்றதன் நோக்கம்.

செப்டம்பர் மாதம் 30 ஆம் தேதி காளையார் கோவிலை வேறு வேறான மூன்று வழிகளில் தாக்கித் தகர்ப்பது என்றும் திட்டமிடப்பட்டது. அதே தினத்தில் கர்னல் ஸ்பிரே இரவோடு இரவாய் ஒக்கூரிலிருந்து சிறுவயல் சென்று அங்கிருந்து முன்பு பறங்கிப்படைகளால் அமைக்கப்பட்ட காட்டுப்பாதை வழியாகப் போய்க் காளையார் கோவிலைத் தாக்கும்படி கட்டளை இடப்பட்டது. அப்படையில் ஆயிரவருக்கு மேற்பட்ட படை வீரர் இருந்தனர். சிறு வயலிலிருந்து காளையார் கோவிலுக்குப் போக முன்னர் வெள்ளையர் அமைத்த பாதையின் முடிவிலிருந்து காளையார் கோவிலுக்குப் போக ஒரு இரகசிய வழி இருந்தது. சுதந்தர வீரர்கட்கு மட்டுமே தெரிந்திருந்த அப்பாதையை மகம்மது கலீல் என்ற பாவி வெள்ளையர்க்குக் காட்டிக் கொடுத்தான். அவன் சொல்லிக் கொடுத்த உளவைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டது ஏகாதிபத்தியக் கும்பல். நாட்டைக் காட்டிக் கொடுத்த துரோகிக்குப் பரிசும் தந்தது பரங்கியர் கூட்டம்.[79]

கர்னல் ஸ்பிரே இவ்வாறு அந்தத் துரோகி காட்டிய வழியே செல்ல மறுநாள் அக்டோபர் மாதம் முதல் தேதி காலை கர்னல் அக்கினியூ புறப்பட்டுக் காளையார் கோவிலுக்கு முத்தூர் வழியாகச் செல்லும் நேர்ப்பாதை வாயிலாக விரைந்தான். கர்னல் இன்ஸ் என்பவன் தாளான் குடி கீரனூர் வழியாகச் சோழபுரத்திலிருந்து காளையார் கோவிலைச் சாடினான். இப்படி எதிர்பாராத வகையில் மூன்று வழியாகவும் தங்கள் அருமைத் திருநகரம் தாக்கப்பட்டது அறிந்து திடுக்குற்றனர் மருது பாண்டியரும் அவர் படை வீரர்களும். எனினும், சுதந்தர வீரர்கள் ஆங்காங்கே பாய்ந்து வரும் பறங்கிப் படைகளை எதிர்த்துக் கடும்போர் புரிந்தார்கள். கர்னல் இன்ஸ் படையை எதிர்த்து அவர்கள் நடத்திய ஆவேசம் மிக்க போரில் மட்டும் விடுதலை வீரர்களுள் நூறு பேர் பலியாயினர்.

கடைசியாகக் காளையார் கோவிலும்[80] அதன் பலம் பொருந்திய கோட்டையும் விழுந்தன. 1801 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் முதல் தேதி காலை எட்டு மணிக்கெல்லாம் கடும்போரின் முடிவில் துரோகி ஒருவன் கூறிய உளவைப் பயன்படுத்திக் கொண்டு காலன் போலக் கடுகி வந்த கர்னல் ஸ்பிரே காளையார் கோவிலைக் கைப்பற்றிவிட்டான். அங்கே அவனும் ஆங்கிலப் படை வீரர்களும் தங்கள் நெஞ்சைப் பிளக்கத் தயாராக வைக்கப்பட்டிருந்த இருபத்தொரு துப்பாக்கிகளையும், ஏராளமான

தளவாடங்களையும், கணக்கற்ற சாமான்களையும், கடிகாரம் முதலியவற்றையுமே கண்டார்கள். விடுதலை வீரர்கள் ஆத்திரத்தோடும் ஆண்மையோடும் போரிட்டும் பயனேற்படாமல் போயிற்று. ஆம். துரோகம் வென்றது; ஏகாதிபத்தியம் வென்றது. காளையார் கோவில் வெள்ளைப் பறங்கியர் கையில் சிக்கியது.

கணக்கற்ற விடுதலை வீரர்கள் குடும்பம் குடும்பமாக வீடு வாயிலை, மனைவி மக்களை எல்லாம் மறந்து, 'நீர்க் குமிழியினை ஒத்த உயிரை நல்ல கொள்கைக்கு ஈவதே அமிழ்தினும் இனிய தமிழ்ப் பண்பு' எனக் கருதிப் போர்க் களம் புகுந்து சுதந்தர தேவியின் உள்ளம் குளிர மருது பாண்டியர் வளர்த்த ஒரு பெருவிடுதலை வேள்வித் தீயில் தங்கள் இன்னுயிராகிய நெய்யை வார்த்து 'நெஞ்சுமலி உவகை' கொண்ட வீர வரலாறும் ஒருவாறு முடிந்தது.[81]

# 6. விண்ணவர்க்கு விருந்து

பலம் பொருந்திய காளையார் கோவில் பகைவர் கையில் சிக்கியது. சென்னை இராணுவ வரலாற்றை வரைந்த மேஜர் விபர்ட் என்பவன் தன் நூலில் சுட்டிக் காட்டியுள்ளது போல 'ஆங்கில ஏகாதிபத்தியத்தை நிலை நாட்ட விடாது பெருங்கேடு சூழ்ந்த சிவகங்கையை அடக்கிவிட்டோம்!' என வெள்ளையர் வெறி கொள்ளச் சிறிய மறவர்நாடு நடத்திய பெரிய போராட்டம் ஒருவாறு முடிவடைந்தது. ஆறுமாதங்கள் இடைவிடாது போர் புரிந்த எண்ணற்ற சுதந்தர வீரர்களின் முயற்சி எல்லாம் மண்ணுக்கு இரையாயிற்று. அவர்களுக்குத் தலைமை தாங்கி உலகம் கண்டிராத ஒப்பற்ற சுதந்தரப் போரை உறுதி தளராது நடத்திய வீரமருது சகோதரர்கள், காளையார் கோவில் பிடிபட்டதும் பல்லாயிரம் வீரர்களின் பெருந் துணையையெல்லாம் இழந்து, எங்கோ சென்று மறைய நேர்ந்தது. இத்தகைய அவலநிலை சிவகங்கைச் சீமைக்கு - தமிழகத்தின் சுதந்தரப் போருக்கு - வருவானேன்? வரலாற்றுக் கண்கொண்டு இவ்வினாவிற்கு விடை காணும் அறிஞர்கள் இருவகையான காரணங்களையே இறுதியாகச் சுட்டிக்காட்ட முடியும்; ஒன்று ஆங்கிலேயரின் கட்டுப்பாடு மிக்க ஆயுத பலம் நிறைந்த படை வன்மை; மற்றொன்று, தமிழினத்தைக் காட்டிக் கொடுப்பதற்குத் தமிழகத்திலேயே பிறந்த தமிழ்த் துரோகிகளின் சதிச் செயல்.[82]

மேற்கண்ட உண்மையைப் 'புதுக்கோட்டை வரலாறே' சற்றும் வருத்தமின்றி ஒத்துக் கொள்கிறது. காப்டன் வில்லியம் பிளாக்பர்ன் என்பவன் தமிழகத்தின் சுதந்தரப் போர் நடைபெற்ற காலத்தில் புதுக்கோட்டைத் தொண்டைமானோடேயே நிழல் போன்றிருக்கும்படி சென்னை அரசாங்கத்தால் கட்டளை இடப்பட்ட ஒரு வெள்ளைத் தளபதி. போர்க்களத்தில் கர்னல் அக்கினியூவிடமிருந்து செய்திகள் வரத் தாமதமாகக் கூடுமாதலால், அதனால் விளையக்கூடிய இழப்புகளிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் காப்பாற்றவே பிளாக்பர்ன் என்பவன் அவ்வாறு நியமிக்கப்பட்டிருந்தான். தொண்டைமான் வெள்ளையருக்கு எவ்வெவ்வாறெல்லாம் வரிந்து கட்டிக் கொண்டு பாடுபட்டான் என்பதை அவன் அரசாங்கத்திற்கு அந்நாளில் அனுப்பிய அறிக்கை ஒன்று விரிவாகக் கூறுகிறது. அவ்வறிக்கையின் சுருக்கத்தை மட்டும் இங்குக் காண்போம்.

''புதுக்கோட்டைத் தொண்டைமானுக்குப் பாஞ்சாலங்குறிச்சித் தலைவன் என்றால் சிம்ம சொப்பனமாய் இருந்தது. வீரபாண்டியக் கட்டபொம்மனைத் தூக்கு மேடைக்கு அனுப்பவும் அவன் தம்பியைச் சிறையில் வைக்கவும் காரணமாய் இருந்தவன் அல்லவா அவன்! ஊமைத்துரையின் உள்ளங் கவர்ந்த சிவகங்கைச் சகோதரர்களாகிய மருதுபாண்டியவர்கள் அடிக்கடி தொண்டைமானை அச்சுறுத்தி வந்தார்கள்; தங்களோடு முழுமனத்தோடும் முழுப்பலத்தோடும் ஒன்று சேர்ந்து வெள்ளையரை எதிர்க்காவிடில் பலவகையாலும் நாசம் விளைவிப்பதாகப் பயமுறுத்தி வந்தார்கள்; தங்களோடு ஒத்துழைக்க விருப்பமில்லை எனின், வெள்ளையருக்கு எவ்வித உதவியும் எப்பொழுதும் செய்யாமல் நடுவு நிலைமையாவது வகிக்க வேண்டும் என்று நாளும் வற்புறுத்தினார்கள். ஆங்கிலப் படைகட்குத் தொண்டைமான் பொருள் வகையாலும் படைவகையாலும் எவ்வித உதவியும் செய்யக் கூடாது என்பதும் அவன் தன் நாட்டின் வழியாக வெள்ளைப் படைகளை நடமாடவிடக் கூடாது என்பதுமே சிவகங்கைச் சகோதரர்களின் விருப்பம். தங்கள் விருப்பத்தைத் தொண்டைமான் நிறைவேற்றவில்லை என்றால் புதுக்கோட்டைச் சீமையிலுள்ள ஒவ்வொரு வீடும் தீக்கு இரையாகும் என்றும் அவர்கள் மிரட்டினார்கள்.

''1801 ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 11 ஆம் தேதி நான் தொண்டைமானைக் கண்டு பேசினேன்; அவனுடைய பரிபூரண ஒத்துழைப்பை வேண்டினேன். அச்சமயத்தில் அவன் மருது பாண்டியரின் பயமுறுத்தல்களால் நடுங்கிக் கிடந்தான். எப்படியும் மருதுபாண்டியர்கள் தனக்கு நாசம் விளைவிக்கக் கூடும் என்று அவன் திடமாக நம்பினான்; 'கர்னல் அக்கினியூவின் படைகளாலேயே மருதுபாண்டியர்க்குப் பதில் சொல்ல முடியாத போது நாம் எம்மாத்திரம்!' என்று அஞ்சினான்.

''தொண்டைமான் பத்தே நாள்களில் தன் குலத்து மங்கை ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்வதற்கு அச்சமயத்தில் திட்டமிட்டிருந்தான். எனவே, திருமணத்தைக் காரணம் காட்டிப் படையுதவி அனுப்புவதற்குச் சற்றுத் தாமதமாகுமென்று என்னிடம் மன்றாடினான். நான் மறுத்தேன்; அவன் பணிந்தான்; தன் திருமண ஏற்பாடுகளை உடனே நிறுத்தினான்; போருக்கான ஏற்பாடுகளைச் சடுதியில் தொடங்கினான்; என் வேண்டுகோளின்மேல் இரண்டு நாள்கள் கழித்து மீண்டும் திருமண ஏற்பாடுகளை ஆரம்பித்தான்; ஆனால், படை சேர்க்கும் பணியையும் கருத்தாகச் செய்தான். நான்கே நாள்களில் மூவாயிரம் வீரர்களடங்கிய படை கர்னல் இன்ஸின் தலைமையில் சிவகங்கை நோக்கிச் சென்றது.

''நான் சொன்னவுடனே தொண்டைமான் தன் பலம் பொருந்திய ஒரே கோட்டையாகிய திருமயத்தை அக்கினியூவின் உபயோகத்திற்காக அர்ப்பணஞ் செய்தான்.

"தொண்டைமான் புதிய ராஜாவாகிய படமாத்தூர் கௌரி வல்லபப் பெரிய உடையத் தேவனை மிக்க மரியாதையோடு தன் நாட்டிற்குள் வரவேற்றான். அந்தப் படமாத்தூர் உடையத்தேவன் பிரிட்டிஷாரால் சிவகங்கைக்கு அரசனாக்கப்பட்டவன்; விடுதலை வீரர்களின் பட்டாளத்தின் ஒற்றுமையைப் பிளப்பதற்குப் பெரிதும் பயன்பட்டவன். சென்னைக் கவர்னர் 1801 ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்தப் புதிய ராஜாவுக்குத் தொண்டைமான் ஆதரவளிக்க வேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தான். கவர்னரின் கருத்துவழி நடந்தான் தொண்டைமான்.

"சிவகங்கைச் சீமையின் புதிய ராஜாவிற்கு ஆபத்து எதுவுமின்றிக் கர்னல் அக்கினியூவின் முகாமிற்கு அழைத்துச் செல்ல ஐந்நூறு வீரர்களைத் தந்துதவுமாறு தொண்டைமான் கேட்டுக் கொள்ளப்பட்டான். வெள்ளையரின் விருப்பத்தை அறிந்த தொண்டைமான் தொள்ளாயிரம் வீரர்களைப் புதிய ராஜாவுக்குத் துணையாக அனுப்பியதோடன்றித் தானும் அந்த ராஜாவுக்கு மெய் காப்பாளன் போலக் கூடவே சென்று கர்னல் அக்கினியூவின் பாராட்டுதலைப் பெற்றான்.

"சிவகங்கை நாட்டைச் சேர்ந்த சில குடும்பங்கள் தொண்டைமான் நாட்டின் எல்லையிலிருந்த காடுகளில் ஒளிந்திருந்தன. அக்குடும்பத்தவர்களின் பட்டியல் ஒன்று தொண்டைமானுக்கு அனுப்பப்பட்டது. அவர்கள் அனைவரையும் ஒரு நாள் இரவிலேயே கண்டு பிடித்தான் தீரன் தொண்டைமான்; அவர்களைப் புரட்சி வீரர்களின் பக்கம் சேராதவாறு பாதுகாத்தான்.

"ஒரு சமயம் கர்னல் அக்கினியூவின் திட்டங்களை நிறைவேற்ற நான் ஒரு படையுடன் சிவகங்கைச் சீமைக்குள் நுழைந்து செல்ல வேண்டியிருந்தது. அப்போது எனக்குப் பெரும்படை தந்து பேருதவி அளித்தான் தொண்டைமான். தஞ்சைக் கலெக்டர் அனுப்பிய உணவுப் பொருள்களையும் திருச்சியிலிருந்து வந்த யுத்த தளவாடங்களையும் சேதமின்றி வெள்ளையர் முகாமில் சேர்க்க அவன் அரும்பாடு பட்டான். அடிக்கடி மிக முக்கியமான உளவுகள் பலவற்றைத் தொண்டைமான் எனக்குச் சொல்லி அனுப்பிய வண்ணம் இருந்தான். புரட்சி வீரர்களை வீழ்த்துவதற்குப் பெரிதும் பயன்பட்டன அவ்வுளவுகள். அது குறித்து அக்கினியூவால் பெரிதும் பாராட்டப்பட்டான் தொண்டைமான்.

"1801 ஆம் ஆண்டு கவர்னர் பிரபுவான கிளைவினிடமிருந்து தொண்டைமானுக்கு ஒரு பாராட்டுக் கடிதம் வந்தது. தொண்டைமான் கிழக்கிந்தியக் கம்பெனிக்குச் செய்த சேவைகளையெல்லாம் அதில் அவர் புகழ்ந்திருந்தார். கர்னல் அக்கினியூவும் தொண்டைமானைப் பலபடப் பாராட்டினான். புதிய ராஜாவாகிய படமாத்தூர் உடையத்தேவனுக்குத் தொண்டைமானைப் பாதுகாக்க வேண்டுமென்று கம்பெனி அரசாங்கம்

உத்தரவிட்டது. இது தொண்டைமான் எண்ணி இன்புறக் கூடிய நிகழ்ச்சி என்று கிளைவ் புகழ்ந்துரைத்தார்.

''சிவகங்கையில் நடந்த சுதந்தரப்போர் ஒருவாறு முடிவுற்றதும் தொண்டைமானின் படைகள் அவன் நாட்டிற்கே திருப்பி அனுப்பப்பட்டன. அப்பொழுது 1801 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், முதல் தேதி கவர்னர் கிளைவ் தொண்டைமானுக்கு ஒரு பாராட்டுக் கடிதம் வரைந்தார். அக்கடிதத்தில் அவன் படைவலியாலும் அவ்வப்போது அவன் கூறிவந்த உளவுகளாலும் கம்பெனி அரசாங்கம் புரட்சி வீரர்களை அடக்குவதில் வெற்றி கண்டுவிட்டது என்றும், அது குறித்துத் தாம் அடையும் மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை என்றும், வெள்ளை அரசாங்கத்திற்கும் தொண்டைமானுக்கும் இடையே இருக்கும் நட்பு மேலும் மேலும் வளர்ந்துவர ஆண்டவன் அருள் புரிய வேண்டுமென்றும் அக்கடிதத்தில் கிளைவ் பிரபு திருவுள்ளம் கனிந்து தீட்டியிருந்தார்.''

இவ்வாறு வெளி நாட்டானாகிய தொண்டைமானின் சதி ஒரு புறமும் உள் நாட்டானாகிய உடையத்தேவனின் சதி ஒரு புறமும் சேர்ந்து மருது பாண்டியர்க்குப் பெருங்கேடு சூழ்ந்தன. புதுக்கோட்டையான் படை வலி கொண்டு செய்த சதியும் நடை பெறாமல் மட்டும் இருந்திருந்தால், கர்னல் அக்கினியூ மட்டுமின்றி, அவன் பாட்டனே வந்திருந்தாலும், காளையார் கோவிலைக் கைப்பற்றுவது அவ்வளவு எளிதில் நடந்திருக்கக் கூடிய செயல் அன்று. ஆயினும், அந்தோ! துணிச்சல் பிறந்த இடத்தில் துரோகமும் கூடப் பிறந்து விட்டதே! ஆண்மை வாழ்ந்த இடத்தில் அடிமைப்புத்தியும் வளரத் தொடங்கிவிட்டதே! 1801 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் முதல் தேதி காளையார் கோவில் பிடிபட்ட பின் வெள்ளைப் படைகள் அடைந்த இறுமாப்பிற்கு ஒரு வரம்பில்லை. நாற்றிசைகளிலும் வேட்டை நாய்களைப் போன்ற கூலிப் படைகளை ஏவிவிட்டு, மருது பாண்டியரைப் பிடித்துவரக் கட்டளையிட்டான் கர்னல் அக்கினியூ. கோட்டை பிடிபட்டது; கொத்தளம் பிடிபட்டது; ஆனால், நாட்டின் தலைவர்கள் இன்னும் பிடிபடவில்லையே!' என்று எண்ணி ஆத்திரமுற்று நமட்டைக் கடித்துக் கொண்டான் நாடோடிகளின் தலைவன்; 'மருது பாண்டியர்களின் தலைகளைக் கொண்டு வாருங்கள். மலை மலையாகப் பொன் கொடுப்பேன்!' என்று சிப்பாய்களிடம் கர்ஜித்தான். காசாசை கொண்ட கயவர்கள், கருணை வள்ளல்களான மருதுபாண்டியர்களை-தியாகமே வடிவெடுத்த தேசபத்தர்களைப் பிடித்துவர எம தூதர்கள் போலக் கிளம்பினார்கள். அக்டோபர் மாதம் மூன்றாம் தேதி, எவனோ ஒரு பாவி செய்தி ஒன்று கொண்டு வந்தான். அது வாயிலாகக் காளையார் கோவிலை அடுத்த மங்கலத்தில் மருதுபாண்டியர் தங்கியிருக்கின்றனர் என்பதை அறிந்தது ஆங்கிலப் படை. அக்டோபர் மாதம் மூன்றாம் தேதி பொழுது புலர்ந்ததும்

புழுதி எழுப்பிப் புறப்பட்டது மேஜர் ஷெப்பர்டின் தலைமையில் வெள்ளைப்படை. விடியற்காலத்தில் புறப்பட்ட அப்படை காலை இரண்டு மணிக்குள் மங்கலம் போய்ச் சேர்ந்தது; ஊரை அடைந்ததும் தேசீய வீரர்களைத் தேடத் தொடங்கியது. ஆனால், மருது பாண்டியரின் முடிவு நெருங்கிவிட்டது என்று எண்ணிய அவ்வூரினர் கோழைகளாய் வந்து கும்பினியான் காலில் சரண் புகுந்தனர். காசாசை கொண்டு அக்கிராமத்தின் தலைவர்கள் காடுகளைக் குறைந்த விலைக்குக் குத்தகை கேட்பதில் போட்டியிட்டார்கள். அவர்கள் வாயிலாகத் துப்பு விசாரித்தார்கள் ஏகாதிபத்திய வெறியர்கள். மங்கலம் கிராமத் தலைவர்கள், 'இந்த இடத்தில் சிறிது நேரத்திற்கு முன்பு இரண்டாயிரம் வீரர்களுடன் வந்து இருந்த மருதுபாண்டியர்கள் இப்போது காடுகளுள் புகுந்துவிட்டார்கள்,' என்று உளவு கூறினார்கள். அக்கோழைகளின் துணை கொண்டும் கூலிப் படைகளின் உதவி கொண்டும் இரண்டே மணி நேரத்தில் மங்கலத்தைச் சுற்றியிருந்த காடுகளைக் கைக்கு வந்த வகையெல்லாம் வெறி கொண்டு வெட்டித் தள்ளின பரதேசிப் படைகள். அக்டோபர் மாதம் நான்காம் தேதி குறைந்த தொகைக்குக் காடுகள் குத்தகைக்கு விடப்படுவது அறிந்து 'கவுல்' கேட்க ஐம்பதுக்கு மேற்பட்ட கிராமங்களின் தலைவர்கள் கும்பினியான் இருக்கும் முகாம் நோக்கி விரைந்து வந்தார்கள். அந்தப் பேடிகள், 'தங்கள் உயிருக்குயிரான இருநூறே வீரர்களோடு மருது சகோதரர்கள் சங்கரப்பதிக் காட்டிலே சரண் புகுந்து விட்டார்கள்,' என்ற செய்தியைச் சொன்னார்கள். பாவிகள் கொடுத்த துப்பைப் பயன்படுத்திக் கொண்டு பாய்ந்தது பறங்கிப்படை. 'மருது பாண்டியரின் தலையைக் கொண்டு வருபவருக்குத் தக்க விலை கொடுக்கப்படும்,' என்று தண்டோரா முழங்கியது. நாடாண்ட மன்னர்களின் தலையைக் கொய்து கொண்டு வரும் துரோகிகளுக்கு நாடோடிகள் பரிசு கொடுக்கும் காலம் ஆரம்பமாகிவிட்டது! கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் காசாசை கொண்ட கூலிப்படைகள், கையில் கொலை வாளும் துப்பாக்கியும் ஏந்தி மருதுபாண்டியரைத் தேடித் திரிந்தன. வாழ்ந்த காலத்தில் மருது பாண்டியரின் பால் எவ்வளவோ உபசரிப்புகளைப் பெற்ற கர்னல் வெல்ஷ் என்பவன், கல் நெஞ்சத்தோடு தன் நூலின் இறுதியில் எழுதியுள்ள வாசகத்தைப் படிக்கும் போது கண்ணீர் மல்காத தமிழன் இருக்க இயலாது. துரோகிகள் நம் நாட்டிலேயே மலிந்து விட்ட காலத்தில் வெள்ளைத் தளபதி ஒருவன் அவ்வளவு கல் நெஞ்சோடு வாழ்ந்ததில் வியப்பொன்றும் இல்லை அல்லவா? கர்னல் வெல்ஷ் எழுதுகின்றான்:

'மருது சகோதரர்களுள் ஒருவரது தலையைக் கொய்து கொண்டு வருபவர்களுக்கு ஏராளமான பரிசுத் தொகை வழங்கப்படும் என்று விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. அந்த மனிதனது தலையைப் பறித்து

வருவதற்காக நான் அரும்பாடு பட்டுக் கொண்டிருந்த போது எங்கள் வெள்ளைப் படையைச் சார்ந்த கூலிச் சேவகர்கள் கூட்டம் அவனைக் கண்டு பிடித்துத் துப்பாக்கியால் சுட்டது; புண்ணாகிப் புழுதியில் வீழ்ந்த அவனை எங்கள் முகாமுக்குக் கொண்டு வந்தும் சேர்த்தது. அதனால், எங்களுக்குக் கிடைக்க வேண்டிய பத்தாயிரம் பகோடாக்கள் அல்லது நாலாயிரம் பவுன்கள் கிடையாமற்போயின.'

கொலையுள்ளம் கொண்ட வெள்ளைத் தளபதி சித்திரிக்கும் இந்நிகழ்ச்சி நடந்த சின்னாள்களில் மருது சகோதரர்களுள் மற்றவரும் பிடிபட்டார். இரு சகோதரர்களையும் பிடித்த ஏகாதிபத்தியக் கும்பல் ஊமைத்துரையையும் கைது செய்தது. பறங்கியரிடம் சிக்கிய சுதந்தர வீரர் அனைவரும் கொலைத் தண்டனைக்கு இரையாயினர். திருப்பத்தூர்க் கோட்டையில் மருது சகோதரர்களையும் பாஞ்சாலங்குறிச்சியில் ஊமைத்துரையையும் தூக்கிலிட்டுக் கொன்றது பேயுள்ளம் படைத்த கம்பெனி வர்க்கம். மாவீரர்களைத் தூக்கிலிட்டுக் கொன்றதும் தமிழகத்தில் தலை நிமிரலாயிற்று ஆங்கில ஏகாதிபத்தியம்.[83]

மருது பாண்டியரைச் சேர்ந்த வீரர்களும் உறவினர்களும் வேட்டையாடப்பட்டார்கள். தென்னாட்டில் ஓங்கி உயர்ந்து நின்ற கோட்டைகளெல்லாம் தரை மட்டமாக்கப்பட்டன. தொன்றுதொட்டு வாளும் வேலும் ஏந்தி வீர வாழ்வு வாழ்ந்த மறவர்களிடமிருந்து பல ஆயிரக்கணக்கான போர்க்கருவிகளும் பறிமுதல் செய்யப்பட்டன[84]. வீர சகோதரர்களின் குடும்பத்தைச் சேர்ந்த எழுபது பேர் கண்காணாத பிரின்ஸ் ஆப் வேல்ஸ் தீவிற்கு நாடு கடத்தப்பட்டனர். அவர்களுள் ஒருவரே சின்ன மருதுவின் இளைய மைந்தரான துரைசாமி என்பவர். பதினைந்தே வயதினரான அவ்விளைஞரைக் கப்பலேற்றி அனுப்பும் போதும் பதினெட்டாண்டுகள் கழித்து அவரைக் கண்ணற்றதொரு தீவினிலே தளர்ந்து போன நிலையில் கண்டபோதும் தன் உள்ளத்தில் குமுறி எழுந்த எண்ணங்களை எல்லாம் கல் நெஞ்சம் படைத்த கர்னல் வெல்ஷே தன் நூலில் கரைந்துருகி எழுதியுள்ளான். கோரமான சாவிலே வீர வாழ்வைக் கண்டனர் மருது பாண்டியர்கள். ஆனால், அவர்கள் குலத்துக்கொரு மைந்தராய் வாழ்ந்த துரை சாமிக்கோ, வாழ்வே சாவாய் முடிந்தது. கடிதத்தாலாவது கன்னித் தமிழ் நாட்டோடு உறவு கொள்ளத் துடியாய்த் துடித்த அவ்வுத்தமர் சாகாமல் செத்த வரலாற்றைக் கர்னல் வெல்ஷின் நூலால் அறியும் போது நம் அங்கமெல்லாம் வாயாகி அழும்![85]

வெள்ளைத் தளபதிகள் விட்டுச் சென்ற குறிப்புகளால் மருதுபாண்டியரின் முடிவைப் பற்றி நாம் அறியக் கூடிய செய்திகள் இவ்வளவே. ஆனால், சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும் போன்ற நூல்களாலும், தமிழ் நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் நூல்களாலும்

மருது பாண்டியர்கள் முடிவைப் பற்றி வேறு சில செய்திகளும் நமக்குத் தெரிகின்றன.[86]

''ஆங்கிலப் படைகளும் மருதிருவர் படைகளும் மிக்க உக்கிரத்துடன் போர் புரிந்தன. பெரிய மருது பாண்டியர் காட்டுக்குள் ஓடிவிட்டார். இளைய மருதுவைக் கறுத்தான்[87] என்ற அவர்கள் அந்தரங்கக் காவலனே பிடித்துக் கொடுத்துவிட்டான். சின்ன மருதுவைக் காவலில் வைத்தனர். அவர் உணவின்றி இருந்தார். பெரிய மருது காட்டில் பல இடங்களில் அலைந்து திரிந்தார். பசி, இளைப்பு முதலியவற்றால் வருந்தினார். முடிவில் மேஜர் அக்கினீஸ் என்பவர் படையோடு வந்து அவரைக் கைது செய்து அழைத்துப் போனார். இளைய மருதுவைக் கண்ட மூத்த மருதேந்திரர் கதறி அழுதார்; 'அக்கினீஸ் துரையால் நம்மிருவருக்கும் தபசு செய்யும் பாக்கியம் கிடைத்தது,' என்று கூறினார். அவர்கள் படும் துன்பத்தைக் கண்டு கௌரிவல்லபராசன் தூதுவன் ஒருவனை அனுப்பி மருது சகோதரர்களிடம் சமாதானம் பேசினான். மூத்த மருது இணங்கவில்லை. கௌரி வல்லபனும் தான் மருது சகோதரர்களுக்கு இழைத்த தீங்கை நினைத்து வருந்தினான். பின்பு அக்கினீஸ் துரை திருப்பத்தூர்க் கோட்டைத் தென் மூலைக் கொத்தளத்தில் தென்னை மரங்கள் போட்டு ஊஞ்சல் போலக் கயிறு பூட்டினான்; பின்பு மூத்த மருதேந்திரரை அழைத்துத் தூக்கில் மாட்டினான். அவரும் 'பாஞ்சாலங்குறிச்சி ஊமைத்துரையால் இந்தத் தவம் செய்யும் பாக்கியம் கிடைத்தது!' என்ற மன மகிழ்ச்சியுடன் காளையார் கோவில் ஈசன் திருவடிகளை மனத்தில் தியானித்துத் தூக்கில் தொங்கினார். மற்ற அரசர்கள் பூமாரி பொழிந்தார்கள். இரும்பினால் கிளிக் கூடு போலச் செய்து, அதனுள் இளைய மருதுவை அடைத்துத் தூக்கினர். அவரும் இறைவனைத் தியானித்துக் கொண்டே உயிர் நீத்தார். பின்பு மருது சகோதரர்களிடம் பழகி அவர்களுக்கே துரோகம் செய்த கறுத்தான் என்பவனையும் தூக்கிலிட்டனர்; பின்னர் மருதேந்திரர் உறவினர்கள் முதலானோரையும் கொல்வித்தனர்.'' இதுவே சிவகங்கைச் சரித்திரக் கும்மி தெரிவிக்கும் செய்தியாகும்.

மருது பாண்டியரின் முடிவைப் பற்றிய விளக்கங்கள் எவ்வாறாயினும், அவர்கள் கம்பெனியார் விளைத்த கொடுமையால் தூக்கிலே மாண்டார்கள் என்பதும், அவ்வாறு தூக்குமரமேறி உயிர் துறக்கும் போது தெய்வ பத்தி நிறைந்த அத்தேசபத்தர்கள் காளையார் கோவிலில் குடிகொண்ட கண்ணுதற் பெருங்கடவுளின் திருப்பெயரை முழங்கியவாறே கண் மூடினார்கள் என்பதும் மட்டும் உறுதி.[88] தாங்கள் அழியினும் தங்களால் விடப்பட்ட அறங்களுள் எதுவும் சிதையக் கூடாது என்பதே அவர்கள் கடைசியாகத் தெரிவித்த விருப்பம் என்பது விளங்குகிறது. தாங்கள் மாண்டதும் தங்கள் உடலைத் திருப்பத்தூரிலும் தலைகளைக் காளையார் கோவில் சந்நிதிக்கு எதிரிலும் சமாதி வைக்க வேண்டும் என்பதே அவர்களது

இறுதிப் பிரார்த்தனை. மருது பாண்டியர் இன்பத் தமிழகத்தை எங்கிருந்தோ வந்த பரதேசிகளுக்கு அடிமைப்படுத்தலாகாது என்று எண்ணிய எண்ணம் ஈடேறவில்லை. ஆனால், அவர்களுடைய இறுதி ஆசையும் பிரார்த்தனையும் மட்டும் குறையின்றி நிறைவேறின.

27-10-1801 தமிழகம் ஆறாத்துயரத்தில் அமிழ்ந்த நாளாகும். தமிழன்னை தன் கண்களை ஒத்த மருது சகோதரர் இருவரையும் இழந்தாள். வெள்ளை ஏகாதிபத்தியம் 'வீர சகோதரர்களைக் கொன்றுவிட்டோம்!' என்று களிப்படைந்தது. 'அடிமைப் படுகுழியில் தள்ளப்பட்டோம்; கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம் மாறும்; காரிருள் நீங்கும்; காந்தி ஒளி பிறக்கும்,' என்று நனவிலும் கனவிலும் கருதி நந்தமிழ் நாட்டினர் கண்ணீர் மல்கிக் கலங்கி நின்றனர். விண்ணவர் நாட்டிலோ, வச்சிரப்படை நெடியோன் கோவிலுள் போர்ப்புறு முரசம் எண்டிசையும் அதிர முழங்கியது. ஆம்! தமிழகத்தின் தலையாய வீரர்களைத் தனது மதிப்பிற்குரிய விருந்தினராக இந்திர உலகம் ஏற்றது.

# 7. மூன்று நிகழ்ச்சிகள்

மருது பாண்டியர் புகழை விளக்கவல்ல எத்தனையோ கர்ண பரம்பரைக் கதைகளும் கிராமியக் கவிதைகளும் நாட்டில் நடமாடி வருகின்றன. அவற்றையெல்லாம் 'வெறுங்கட்டுக்கதைகள்' என்று ஒதுக்கிவிடல் அறிவுடைமையாகாது. எத்தனையோ ஆண்டுகளாக மக்கள் வழிவழியாகக் கூறிவரும் அவ்வாய்மொழிச் செய்திகளில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகளும் அவ்வளவாக இல்லை. எனவே, அவற்றை வரலாற்றுக் கண் கொண்டு பார்த்து மகிழல் பயன் தருவதாகும்.

நாட்டின் நிருவாகத்திலும் மக்களின் நல்வாழ்விலும் பெருநாட்டம் கொண்டிருந்த மருதரசர், தம் கடைசிக் காலத்தை எவ்வளவு கடுமையான போரில் கழிக்க வேண்டியிருந்தது என்பதை விரிவாகப் பார்த்தோம். அவ்வளவு கடுமையான போரில் ஈடுபட்டிருந்த நாளிலும் அவர்கள் 'நாட்டின் நிருவாகத்தில்' பெருங்கவலை கொண்டிருந்தார்களாம்; கடமையை ஒழுங்காகச் செய்தார்களாம். இவ்வுண்மையை விளக்குவனவாக அமைந்துள்ள மூன்று கதைகளை ஈண்டுக் காண்போம்.

1. திருடன் திருந்தினான்:

எவ்வளவு நல்லாட்சியிலும் கள்வர் சிலரும் கயவர் சிலரும் இருப்பதைத் தவிர்க்க முடியாது. ஒரு சமயம் உதய பெருமாள் கவுண்டன் என்ற பெரிய திருடன் ஒருவன் தன் கைவரிசைகளால் மக்களைப் பெரிதும் அச்சுறுத்தியும் மருது பாண்டியர் கவனத்தை ஈர்த்தும் வந்தான். போர் கடுமையாய் நடந்து கொண்டிருந்த காலமாதலால், மருதரசர், 'சரி, அவனைச் சற்றே பொறுத்துக் கவனித்துக் கொள்வோம்,' என்று இருந்தார். போர் இடைவிடாது நடந்து கொண்டிருந்தது. திடீரென்று போர் முனையில் இருந்த அவருக்கு 'வைகையில் பெருவெள்ளம்; அதனால் திருப்பாச்சேத்திக்கு நான்காவது மைலில் உள்ள மாறை நாட்டுக் கண்மாய் உடைப்புக் கண்டுவிட்டது. கிராமங்கள் பாழாகிவிடும் போலிருக்கின்றது,' என்ற செய்தி வந்தது.

செய்தி கிடைத்ததும் மருதரசர் குதிரையேறிப் புறப்பட்டார்; உடைப்பெடுத்தோடும் கண்மாய்க் கரையில் விரைந்து சென்று நின்றார்; வெள்ளம் கரையை உடைத்துக் கொண்டு ஓடுவதைக் கண்டார். அணை கோலி வெள்ளத்தைத் தடுக்க ஆண்களும் பெண்களும் துடியாய் இருப்பதைக் கண்ட அரசர் உள்ளம் அடைந்த பூரிப்புப் பெரிது. தம்

படையின் ஒரு பகுதியை அணை போடும் மக்கட்குத் துணை புரிய விரைந்து வருமாறு ஆணை எழுதி ஏவலாள் வாயிலாகக் கொடுத்தனுப்பினார். சிறிது நேரத்தில் போர்க்களத்தில் அழிவு வேலையில் - தற்காப்புப் பணியில் - ஈடுபட்டிருந்த மருதுவின் படை ஆக்க வேலை புரிய விரைந்து வந்துவிட்டது. அப்படை வருவதற்குள் இருந்த சிறு இடைவேளையிலும் மருதரசரால் வாளாவிருக்க முடியவில்லை. அவ்வூர் மக்களுள் தலை சிறந்த வீரனைக் கண்டு பிடிக்க விழைந்தார். 'யார் இந்த வெள்ளத்தில் குதித்துக் கரையேறுகிறார்களோ அவருக்குச் சீமையின் படையில் சிறப்பிடம் தரப்படும்; பார் புகழப் பரிசுகள் வழங்கப்படும்,' என்று ஒளி நிறைந்த கண்களோடு மக்களைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டே கூறினார். மக்களுள் பலரும் ஒருவர் முகத்தை ஒருவர் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு இருக்கும் வேளையில் திடீரென ஒருவன் வெள்ளத்தில் பாய்ந்தான். 'திடும்' என்ற ஒலி கிளம்பிய இடத்தை அனைவரும் உற்றுப் பார்த்தவண்ணம் இருந்தனர். சிறிது நேரம் வரையிலும் ஆள் யார் என்பது விளங்கவில்லை. மீன் போல நீந்திச் சென்ற அம்மனிதன், சிறிது நேரத்திற்குள் அக்கரையேறிக் கை கூப்பி நின்றான். அவனைக் கூர்ந்து கவனித்த மக்கள், 'அரசே, அதோ! அவன்தான் உதயபெருமாள் கவுண்டன்! உதயபெருமாள் கவுண்டன்!' என்றனர். மருதுவுக்கு ஒரே வியப்பு! உதட்டில் புன்முறுவலோடு 'கூப்பிடு அவனை' என்றார். வந்தான் திருப்பாச்சேத்தி உதயபெருமாள் கவுண்டன்; வீழ்ந்தான் அரசர் தாளில். 'எழுந்திரப்பா' என்றார் மருதரசர். எழுந்து கைகட்டி நின்றான் பக்காத் திருடன். அவன் விழிகளை ஊடுருவிப் பார்த்தார் வேந்தர். 'அரசே....' என்று இழுத்தான் உதயபெருமாள் கவுண்டன். 'சரி, என்ன சொல்லுகிறாய்?' என்றார் வெள்ளை மருது. 'அரசே, அடியேன் இன்றிலிருந்து புது மனிதன்; பக்காத் திருடன் உதயபெருமாள் கவுண்டன் ஒழிந்து விட்டான். இனி நான் உங்கள் அடிமை. இந்த வெள்ளைத் துரைகளின் தலைகளைப் பனங்காய்களைச் சீவுவது போலச் சீவுவதே இனி என் தொழில். அடியேனைக் காப்பாற்ற வேண்டும்!' என்றான். மக்களும் மருதரசரும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. திருடன் திருந்தினான்; தேசபத்தனுமானான்! உதயபெருமாள் கவுண்டன் சீமையின் சுதந்தரப் போரில் அக்கணமே குதித்தான். அவன் வாளுக்கும் வளரிக்கும் விருந்தான வெள்ளைத் துரைமார்களுக்கும் கூலிப்படை வீரர்களுக்கும் வரையறை இல்லை! திருட்டுத் தொழிலை விட்டுத் தேசபத்தனான அவனுக்குத் திருப்பாச்சேத்திக் கோவிலில் மருதரசர் சிலை அடித்து வைத்துச் சிறப்புச் செய்துள்ளார் என்றால், அப்பெருமகனாரது பரந்த உள்ளத்தை என்னென்று போற்றுவது! அவரல்லரோ அரசர்! அவர் ஆட்சி அன்றோ ஆட்சி!

2. வெள்ளோலை வாசித்த வித்தகர்:

கொந்தகை என்னுமொரு திருநகரில் கணக்கராய் முத்தழகுப் பிள்ளை என்ற ஒருவர் இருந்தார். காராள வகுப்பினர் அவர். ஆண்டிலே இளைஞராகிய அவர் மீது பொறாமை கொண்ட சிலர் அவர்க்குக் கேடு சூழத் திட்டமிட்டனர். இதை அறிந்த முத்தழகுப் பிள்ளை, 'தீயோர் சிலர் வாழும் இவ்வூரைவிட்டே போய்விட வேண்டும்,' என்று கருதினார். அவ்வாறே இன்று பார்த்திபனூர் என்று குறிக்கப்படும் பார்த்திப குலசேகரபுரத்தை அடுத்து உள்ள தடுத்துப் புனைங்கனூர் போய்ச் சேர்ந்தார். அங்கு உள்ள தீர்த்தக் குளக்கரையில் படுத்துக் களைப்புத் தீரக் கண்ணயர்ந்தார். அவ்வமயம் அங்கு வந்த கவிராயர் ஒருவரின் நட்பு அவருக்குக் கிடைத்தது. 'முத்தழகுப் பிள்ளை' என்ற பெயருக்கு ஏற்ற முகப் பொலிவும், 'கணக்கர்' என்ற தொழிலுக்கு ஏற்ற கூரிய அறிவும் அவருக்கு இருப்பதை அறிந்த கவிராயர், திருச்சியை அடுத்த துவரங்குறிச்சி என்னும் ஊரில் தமக்கு வேண்டிய குடும்பம் ஒன்றில் அவருக்குத் திருமணம் முடித்து வைத்தார். திருமணம் ஆனபின் முத்தழகுப் பிள்ளை தடுத்துப் புனைங்கனூர்க்கே வந்து கணக்கப் பிள்ளையாய் அமர்ந்தார். அவ்வூர்த் தீர்த்தக்கரையில் ஸ்ரீராமநல்லூர் செல்வ விநாயகர் கோவில் என்ற பெயர் உடைய கோவில் ஒன்றையும் தமது முயற்சியால் கட்டுவித்து வழிபாடுகள் செய்து வந்தார். இப்படி இருக்கும் காலத்திலேதான் வெள்ளைக் கம்பெனிக்கும் வீரமருது சகோதரர்கட்கும் இடையே போர் மூண்டது. சிவகங்கைச் சீமைக்குள் கால் வைத்த கம்பெனிப் படையின் தலையை நொறுக்கிப் புறமுதுகு காட்டும்படி செய்தார்கள் மருது சகோதரர்கள். கம்பெனிப் படை இராமநாதபுரத்திற்கு ஓட்டம் எடுத்தது. ஓடும் கம்பெனிப் படையைத் திரும்பி வாராதபடி துரத்தி அடித்துவிட்டு அவர்கள் பார்த்திபனூருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் தடுத்துப்புனைங்கனூர்க் கணக்கப்பிள்ளையைச் சந்திக்க நேர்ந்தது. சின்ன மருது கணக்கரைப் பார்த்து, 'என்னையா, எங்கே மூன்று வருஷக் கணக்கு?' என்றார். 'இதோ' என்று பிள்ளையார் கோவிலுக்கு உள்ளே சென்ற கணக்கர் ஒரு கட்டு ஓலைச்சுவடியைக் கொண்டு வந்து சின்ன மருதுவிடம் கொடுத்தாராம். அவ்வளவும் வெள்ளோலையாய் இருப்பதை அறிந்த சின்ன மருது, 'கணக்கரே, என்ன சேதி?' என்று கேட்டாராம். உடனே கணக்கர் மூன்று வருடக் கணக்குகளையும் மனப்பாடமாக ஒப்பித்து, வசூல் செய்த பணத்தையும் சின்ன மருதுவிடம் பயபத்தியுடன் தந்து, 'எல்லாம் இங்கு எழுந்தருளியுள்ள செல்வ விநாயகர் திருவருள்,' என்றாராம். வியப்பும் மகிழ்வும் அடைந்த சின்ன மருது, 'உமக்கென்ன சன்மானம் வேண்டும்?' என்றாராம். கணக்கர், 'எனக்கு ஒன்றும் வேண்டா. அரசரே, இதோ எங்கள் செல்வ விநாயகர் கோவிலுக்கு ஏதாவது தர்மம் செய்தல் போதும்,' என்றாராம். அக்கணமே சின்ன மருது கணக்கர் கையில் இருந்த வெள்ளோலையை வாங்கி, நாலு செய் நிலங்களை மானியமாக எழுதிக்

கொடுத்தாராம். அன்று முதல் வெள்ளோலை வாசித்த வித்தகரின் புகழும் இறவா வரம் பெற்றது.

3. கர்த்தரின் சீடர் கருணை புரிந்தார்:

காளையார் கோவிலிலிருந்து சிவகங்கைக்கும் தொண்டிக்கும் செல்லும் பாதையில் சருகணி என்னும் அழகான ஊர் ஒன்று இருக்கின்றது. அவ்வூரைப் பழம்பெருமை சான்ற மாதாகோவில் ஒன்றும் அணி செய்கிறது. அக்கிறிஸ்தவ சமயக் கோவிலையும் நம் மருதரசரையும் பிணைத்து வழங்கி வரும் ஒரு வரலாறு மிக்க சுவையுடையது:

வெள்ளையரோடு கடும்போர் நடந்து கொண்டிருந்த காலம் - ஒரு நாள் மாலை நேரம் - இருள் எங்கும் சூழ்ந்து கொண்டிருந்த வேளை - 'டக், டக் டக்' என்ற சத்தம் இடைவிடாது கேட்டுக் கொண்டிருந்தது. சருகணி மாதா கோவிலின் தலைவர் 'சர்ச்சு' வாயிலில் பெரிய பெட்டியொன்றை வைத்து அதன் மேல் அமர்ந்து, விவிலிய நூலை விரித்து வைத்துப் படித்துக் கொண்டிருந்தார். விரைந்து வந்து கொண்டிருந்த குதிரைக் குளம்படிச் சத்தம் நின்றது. குனிந்து படித்துக் கொண்டிருந்த பாதிரியார் காதில் 'சாமி' என்ற சொல் விழுந்தது. நிமிர்ந்து பார்த்தார் பாதிரியார்; 'என்ன சேதி?' என்றார். 'சாமி, வெள்ளைப் படைகள் என்னை விரட்டி வருகின்றன! அடைக்கலம்!' என்றார் மருதரசர். கர்த்தரின் சீடர் உள்ளம் கனிவெய்தியது. அவர் தாம் அமர்ந்திருந்த பெரிய பெட்டியைத் திறந்து, 'உம், உள்ளே நுழைந்து கொள்!' என்றார். பெட்டி மூடியது; பாதிரியாரின் வாசிப்பும் தொடர்ந்தது. சிறிது நேரத்தில் வெள்ளைச் சிப்பாய்களுள் பலர் எமதூதர் போலத் தலை தெறிக்க ஓடி வந்தனர்; பாதிரியாரைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி, 'எங்கே மருது?' என்று அதட்டினர். பாதிரியாருக்குச் சினம் பொங்கியது. கடுகடுத்த முகத்தோடு 'ஆமாம் - மருதுவை என் மடிக்கு அடியில் பார்!' என்றார் சற்றுக் கோபமாக. பாதிரியாரின் சிடுசிடுத்த முகத்தையும், கடுகடுத்த பேச்சையும் கண்ட, கேட்ட கம்பெனிப் படை வீரர், 'இந்தப் பாதிரியார் ஓர் அப்பாவி; மருது இங்கே வரவில்லை போலிருக்கிறது!' என்று எண்ணி, ஒரே பாய்ச்சலாக வேறு திசைக்குத் திரும்பினர். கும்பெனிப்படை தொலைந்து விட்டது என்று தெரிந்ததும் பாதிரியார் பெட்டியைத் திறந்தார். மேகத்திரையை விலக்கி வரும் மதியம் போல மருதரசர் வெளியே வந்தார். 'சாமி, உங்கள் கருணையை ஒரு நாளும் மறவேன்!' என்றார் பெரிய மருது. 'நான் என்ன செய்தேன்? கர்த்தரின் சீடன் நான். 'அடைக்கலம்' என்றோரைக் காப்பது என் கடமை. அப்படியும் அதற்காக நான் பொய் கூடச் சொல்லவில்லையே! உண்மையைத்தானே சொன்னேன்! அந்த முட்டாள்கட்கு மூளை ஏது!' என்றாராம் சிரித்துக் கொண்டே.

மருதரசர் உடம்பெல்லாம் இன்ப உணர்வு பொங்கியது. ஓலை ஒன்றைக் கொண்டுவரச் செய்து, சருகணிக் கிராமத்தை மாதா கோவிலுக்கே

சர்வமானியமாக[89] எழுதித் தந்தாராம். என்னே அவர் நன்றியுள்ளமும் வள்ளன்மையும்! மாதா கோவிலுக்கு ஒரு தேரும் செய்தமைத்தார் மருதரசர் என்றும் கூறுவர். இன்றும் சருகணித்தேர் மருதரசர் குடும்பத்தார் வந்து முதலில் மரியாதை பெற்றுத் தேர்வடம் தொட்ட பின்பே நகரும் எனக் கூறுவர்.[90]

# 8. நம் கடமை

'வெள்ளை மருது வீர விளையாட்டுகளில் தலை சிறந்த வல்லாளன். நாட்டின் நிருவாகத்தைப் பற்றிய கவலை அவனுக்குச் சிறிதும் இல்லை. காலத்தையெல்லாம் வேட்டையாடுவதிலேயே அவன் செலவழித்தான். அசாதாரணமான தோற்றமும் பலமும் பொருந்திய அவனுக்கு அடர்ந்த காடுகளில் நுழைந்து கொடிய விலங்குகளை வேட்டையாடுவதில் விருப்பம் அதிகம். அவன் மிக உறுதியான ஆர்க்காட்டு ரூபாயைக் கை விரல்களாலேயே வளைத்துவிடுவானாம். அவன் நாடாளும் எவ்விதப் பொறுப்பும் கவலையுமின்றி வீர விளையாடல்களை விரும்பி எங்கும் சுற்றித் திரிந்த வண்ணம் இருந்தான். எப்போதாவது வெள்ளை மருது தன்பால் மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிற ஐரோப்பிய நண்பர்களைச் சந்திக்கத் தஞ்சைக்கும் திருச்சிக்கும் மதுரைக்கும் வருவது வழக்கம். வெள்ளை மருதுவின் நண்பர்களில் யாருக்கேனும் பெரிய வேட்டை ஒன்றுக்குப் போக விருப்பம் தோன்றினால் இவனுக்கு ஒரு செய்தி சொல்லி விடுவது போதும். களத்திலே காணலாம் வெள்ளை மருதுவை. அவ்வாறே எவ்வித வீர விளையாட்டிலும் யார் கலந்து கொள்ள நினைத்தாலும் சரி; அவர்களை முன்னின்று அழைத்துச் சென்று, வெற்றியும் புகழும் தேடிக் கொடுத்து, அவர்கள் உடம்புக்கும் உயிருக்கும் தீங்கில்லாமல் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பு நம் பெரிய மருதுவையே சார்ந்தது. பேய்வாய்ப் புலி ஒன்று எதிர்ப்பட்டால், எத்தனை வெள்ளை ஐரோப்பியர்கள் வேட்டைக்காரர்களோடு சூழ நின்றாலும், அப்புலியைப் பாய்ந்து பிடித்துக் கொன்று தீர்க்க வெள்ளை மருதே முதன் முதலில் தாவுவான். பெரிய மருதுவின் இத்தகைய வாழ்க்கை, பாதுகாப்பு நிறைந்த நகர வாழ்க்கை வாழ்பவர்களுக்குப் பொருளற்றதாகவும் சோம்பேறித்தனம் நிறைந்ததாகவும் தோன்றும். ஆனால், உண்மையில் அடர்ந்த காடுகள் செறிந்ததும் மக்களைக் கொன்று குவிக்கும் கொடிய விலங்குகள் நிறைந்ததுமான ஒரு நிலப்பகுதியில் பெரிய மருதுவின் இத்தகைய வீர வாழ்க்கை மிக்க பயன் நிறைந்து விளங்கியது. இக்கீழ்த்திசை நிம்மிராட்டிடமிருந்து நான் 1795 ஆம் ஆண்டில் மதுரையில் மிக இளைய சுபேதார்களுள் ஒருவனாய் இருந்தபோது அன்புக்கும் கவனிப்பிற்கும்

சான்றாக எத்தனையோ அடையாளங்களைப் பெற்றிருக்கிறேன். அது அவனுடைய பெருந்தன்மையை நிரூபிக்க நல்லதொரு சான்றாகும்.'



'சின்னமருது கம்பீரமும் கட்டழகும் விநயமும் நிறைந்த வியத்தகு மனிதன்; நல்ல நடத்தையும் எளிதில் எவர்க்கும் காட்சி தரக்கூடிய இயல்பும் படைத்தவன். தன் தலையின் அசைப்பே நாட்டின் சட்டமெனக் கருதும் மக்களின் தலைவனாய் அவன் விளங்கிய போதிலும், தனிக் காவலாளியின் பாதுகாப்புக் கூட இல்லாமல் திறந்த வெளியில் வாழ்ந்து வந்தான். 1795 ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் நான் அவனைக் காணச் சென்ற போது அவன் இல்லத்தின் உள்ளே நுழைய விரும்பிய எவர்க்கும் சுதந்தரமாக உள்ளே வரவும் வெளியே போகவும் எவ்விதத் தடையும் இல்லை என்பதை நேரில் கண்டறிந்தேன். அச்சமயத்தில் குடிமக்களின் தந்தையாய் விளங்கிய அந்த மாவீரனுக்குக் கடவுள் கருணைபுரிய வேண்டும் என்பதே அவன் நாட்டு மக்கள் ஒவ்வொருவருடைய பிரார்த்தனையுமாய் இருந்தது. அவன் நாடு வழியாகச் செல்லும் போது ஏற்பட்ட சாதாரணமான ஒரு சந்திப்புக் காரணமாகவே அவன் எனக்கு நண்பனாகிவிட்டான். அதிலிருந்து நான் மதுரையில் இருந்த காலமெல்லாம் அவன் எனக்கு உயர்ந்த ரக அரிசியையும் சுவை மிக்க பழங்களையும் அனுப்பத் தவறியதில்லை. சிறப்பாக, கெட்டியான தோலோடு கூடிய சுவை மிக்க பெரிய ஆரஞ்சுப் பழங்களை அவன் எனக்கு அன்போடு அனுப்பி வந்தான். அத்தகைய அருமையான பழங்களை நான் இந்தியாவின் வேறு எப்பகுதியிலும் கண்டதில்லை.

'சின்ன மருதுதான் எனக்கு முதன் முதலாக ஈட்டி எறியவும்,[91] வளரியைச் சுழற்றவும் கற்றுக் கொடுத்தவன். வளரி என்னும் இவ்வாயுதம் இந்தியாவிலேயே தமிழ்ப் பகுதியிலேதான் பயன்படுத்தப்படுகின்றது. ஆயினும், ஆற்றலும் திறமையும் படைத்த ஒருவர் முந்நூறு அடித் தூரத்தில் உள்ள ஒரு பொருள் மீது கூட வளரியை வியக்கத் தக்க வகையில் குறி பார்த்து எறிந்து வெற்றி பெறலாம். இத்தகைய வீர மனிதனையே நான் பிற்காலத்தில் யுத்தம் காரணமாகக் காட்டு விலங்கைப் போல விரட்டிப் படுகாயப்படுத்திச் சாதாரண வேலையாளர்களால் பிடிக்க நேர்ந்தது. அதன் பின் முறிந்து போன தொடையோடு சிறையில் அவன் நொந்து கிடந்ததையும், இறுதியாக வீரமிக்க தன் அண்ணனோடும், அவன் வீரத்திற்குச் சிறிதும் குறையாத மகனோடும், உயிர்த்தோழர் பலரோடும் சாதாரணத் தூக்குமரம் ஒன்றில் தொங்கிக் கொண்டிருந்ததையும் காண நேர்ந்தது.

'இதே காளையார் கோவில் வழியாகச் சில மாதங்களுக்கு முன்பு தான் நானே பயணம் செய்தேன். அப்போது என்னை வெள்ளைமருது

சிறுவயலுக்கு அழைத்துச் சென்று விருந்தளித்துப் போற்றினான். ஆனால், அவ்வமயம் இவ்வளவு குறுகிய காலத்திலேயே நான் இந்நாட்டிற்கும் அவனுக்கும் கொடிய எதிரியாக மீண்டும் காளையார் கோவிலுக்குள் புகுவேன் என்று எள்ளளவும் எண்ணவில்லை. இவ்வுண்மையை வெட்கத்தோடு ஒப்புக் கொள்கிறேன்.'

இவையெல்லாம் யாருடைய வாசகங்கள் என்று நினைக்கிறீர்கள்? இறுதி நாள்களில் தன்கையாலே மருதுபாண்டியரைப் பிடிக்க வேண்டும் - கொல்ல வேண்டும் - என்று பெருவேட்கை கொண்டிருந்த கல் நெஞ்சன் - வெள்ளைத்தளபதி கர்னல் வெல்ஷ் தன் 'இராணுவ நினைவுகள்' என்னும் நூலில் எழுதியுள்ள மொழிகளே இவை.[92] மேற்கண்ட வாக்கியங்கள் நமக்கு மருதுபாண்டியரின் அகப்பண்பையும் புறத்தோற்றத்தையும் படம் பிடித்துக் காட்டுகின்றன அல்லவா? ஆம்! கொடிய பகைவரும் தம் அடல் ஆண்மையையும் அருள் நெஞ்சத்தையும் நட்பின் சீர்மையையும் நினைந்து நினைந்து வியந்து வியந்து போற்ற வாழ்ந்த நல்வாழ்வு மருதிருவரின் பெருவாழ்வு!

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாயினர் வீரமருது சகோதரர். வீரராய்ப் பிறந்தனர்; வீரராய் வளர்ந்தனர்; வீரராய் வாழ்ந்தனர்; வீரராய் மாண்டனர்!

தாய்த் திருநாட்டின் சுதந்திரத்திற்காகத் தங்கள் இன்னுயிரையே சுதந்தர தேவியின் பலிபீடத்தில் உவகைக் கண்ணீரோடு உரிமையாக்கிய அவ்வுத்தமர்களின் வாழ்வே ஒரு வீர வரலாறு; விடுதலைக் காவியம். தலை சிறந்த தேசபத்தர் ஒருவரைப் போற்றும் போது,

'பேரன்பு செய்தார் யாரே
பெருந்துயரின் பிழைத்து நின்றார்?'

என்று பின்னாளில் பாடினார் பாரதியார். அவர் பாட்டின் உண்மையை விளக்க மருதிருவர் வரலாற்றினும் சிறந்த சான்று ஒன்றுண்டோ?

மண்மகளின் தலைமகளாகிய தமிழ்த்தாய் பெற்ற இரு மாணிக்கங்களாகிய மருது சகோதரர்கட்கு - சுதந்தரத்திற்காகப் போராடிச் சொல்லொணாத் துன்பங்கட்கு இரையாகி முடிவில் தங்கள் பொன்னுடலம் நீத்து அழியாப் புகழுடலம் பெற்ற மேலோர்கட்கு - விடுதலை இந்தியாவில் வாழும் நாம் ஆற்ற வேண்டிய கடமைகள் - அளிக்க வேண்டிய நன்றிக் காணிக்கைகள் - எத்தனையோ உண்டு. அக்கடமைகளுள் சிலவற்றையேனும் வழிபாட்டுணர்ச்சியோடு ஆற்றுவது வாயிலாகவே தமிழகம் தன் வீரப் பரம்பரையைப் பாதுகாக்க முடியும் என்பது திண்ணம். வீரர்களைப் போற்றாத ஒரு நாட்டில் - நன்றி உணர்ச்சி மங்கிப்போன ஒரு நாட்டில் மேலும் மேலும் வீரர்கள் பிறப்பது அருமை என்பது உலக அறிஞர்கள் பன் முறையும் வற்புறுத்திச் சென்ற பேருண்மை அன்றோ?

தமிழகம், கல் தோன்றி மண் தோன்றாக் காலமுதல் நாட்டின் நல்வாழ்விற்காகப் போர்க்களம் புகுந்து ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக் களிறு எறிந்து வீழ்ந்த காளைக்கு வீரக்கல் எடுத்து அதில் அவன் பீடும் பெயரும் எழுதிப் போற்றலைத் தன் உயிரினும் சிறந்த பண்பாடாகப் போற்றிய பெருமை வாய்ந்தது. அத்தகைய சிறந்த பண்பாட்டைக் கொண்ட சீரிய நாட்டின் குடிமக்களாய்ப் பிறந்த நமக்கு நம் தாயகத்தின் மானங்காக்கப் போரிட்டு மாண்ட மாவீரர்கட்குத் தக்க நினைவுச் சின்னங்களை எழுப்பியும் அவர்களின் பெரும்புகழை வையகம் எல்லாம் பரப்பியும் வீரவழிபாடு ஆற்றல் இன்றியமையாத பெருங்கடமை அன்றோ?

மருது பாண்டியரின் புகழைப் பரப்பும் நூல்கள் பல இன்னும் தமிழ் மொழியில் வெளி வரவேண்டும். அவர்களின் வீர வரலாற்றைத் தமிழனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் அறிந்து - உணர்ந்து - போற்ற வேண்டும்.

வெள்ளையர்களோடு மருது சகோதரர்கள் நடத்திய வீரப்போர் இந்திய விடுதலைப்போரில் பெருஞ்சிறப்புப் பெறத் தக்க சீர்மையை இந்நூலுள் பல இடங்களிலும் பரக்கக் கண்டுள்ளோம். எனவே, அப்போருக்கு வழி காட்டிய தளபதிகளாகிய பாஞ்சைச் சகோதரர்களின் புகழையும், அவர்களிற் சிறந்த வாழ்வு வாழ்ந்த மருது சகோதரர்களின் மாண்பையும் தமிழரல்லாதாரும் உணர்ந்து போற்றும் வகையில் இந்திய மொழிகள் பலவற்றிலும் இவ்விணையில்லா வீரர்களின் எழுச்சி மிக்க வரலாற்றைச் சிறந்த உரைநடை இலக்கியமாய் எழுதிப் பரப்பும் பணியில் தமிழக ஆட்சியும் இந்திய அரசாங்கமும் முனைய வேண்டும்: நல்லறிஞர்கள் பன்மொழிப் புலவர்கள் - அதில் ஈடுபட வேண்டும்.

இந்திய விடுதலைப் போரில் பின்னாளில் பங்கு கொண்ட எத்தனையோ பேரைப்பற்றிய வரலாறுகள் ஆங்கில மொழியில் வெளியாகி உள்ளன. ஆனால், அவ்வீரர்களின் வரிசைக்குத் தலைமை தாங்கும் மாவீரர்களாகிய மருதிருவரின் வரலாறு இன்னும் ஆங்கில மொழியில் முழு வடிவத்தில் எழுதப்படவில்லை. இக்குறையைக் களைய அறிஞர்களும் அரசாங்கமும் முன் வர வேண்டும்.

மருதிருவரின் வரலாற்றை இசைப் பாட்டாக எழுதித் தமிழ் நாட்டு நகரங்களிலும் கிராமங்களிலும் முழங்கச் செய்ய வேண்டும். கதையாய்க் கனவாய்ப் போன அவ்வீரர்களின் வரலாற்றைக் கலைச்சுவை பொருந்திய நாடகமாய் உருவாக்கி அரங்குகளில் நடிக்கச் செய்ய வேண்டும்.[93] பொன்னான வாழ்வு வாழ்ந்த அப்பெரியோர்களின் சீர் சான்ற வரலாற்றை வெள்ளித் திரையில் வாழ வைக்க வேண்டும்.[94]

சிவகங்கைச் சீமையின் தனிப்பெருந்தலைவர்களாய் இருபத்தோராண்டுகள் நல்லாட்சி நடத்திய காவலர்களாகிய மருது

சகோதரர்கள் காலமான பின்பு அவர்கள் விருப்பத்திற்கு மாறாகச் சீமை வேற்றார் கைக்குச் சென்றது என்பது மறக்க முடியாத உண்மை. இந்நிகழ்ச்சிகள் நடந்து நூற்றைம்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. இனியேனும் வேற்றார் கையில் சிக்கிய சொத்துக்களை நாட்டின் பொதுவுடைமையாக்கி மருது பாண்டியரின் புகழை நிலை நாட்டும் பயனுடைய நிலையங்களாக அவற்றை உருவாக்க வேண்டும்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து உயிர் துறந்த தியாகிகளின் பரம்பரையைத் தொடங்கிவைத்தவர்கள் மருது சகோதரர்கள். அவர்கள் கால்வழியில் தோன்றியவர்களுள் தக்கோர்க்கு வேண்டும் ஆதரவுகளை அரசாங்கம் விருப்புடன் செய்வதும் போற்றற் குரியதாகும்.

பாஞ்சாலங்குறிச்சி வீர சகோதரர்களின் திருவுருவத்தை இன்று நாம் கற்பனை ஓவியங்களிலேதான் காண முடிகிறது. ஆனால், மருது சகோதரர்களின் திருவுருவங்கள் அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே அழகு மிக்க சிலைகள் ஆக்கப்பட்டு இன்றும் காளையார் கோவிலும், குன்றக்குடியிலும், திருமோகூரிலும், நரிக்குடியிலும் காட்சி அளிக்கின்றன. இச்சிலைகளை மாதிரியாகக் கொண்டு அவ்வீர சகோதரர்களின் நினைவை நாடெங்கும் பரப்ப விடுதலை பெற்ற இந்தியா புதிய சிலைகளைச் செய்து முக்கியத் தலைநகரங்களில் - பல்லோரும் கண்டு போற்றிப் பயனடையுமாறு தக்க இடங்களில் - அமைக்க வேண்டும். சிறப்பாகத் தமிழ் நாட்டின் தலைநகரில், சென்னை அரசாங்கக் கோட்டை வாயிலில், பாஞ்சாலங்குறிச்சிச் சகோதரர்களின் உருவங்களையும் மருது சகோதரர்களின் திருவுருவங்களையும் மிகப் பெரிய சிலைகளாக வடித்தெடுத்து அழகுற அமைக்க வேண்டும்.

ஆண்டுதோறும் அக்டோபர்த் திங்களில் மருது பாண்டியரின் புகழை நினைவு கூறும் திருவிழாக்கள் தமிழகத்திலும் தமிழகத்திற்கு அப்பால் தமிழர் வாழும் பகுதிகளிலும் நடைபெற வேண்டும். சிறப்பாகச் சிவகங்கையிலும், மருது பாண்டியர் தூக்கிலிடப்பட்ட திருப்பத்தூரிலும், அவர்களுடைய சமாதிகளுள்ள காளையார் கோவிலிலும் அரசாங்க ஆதரவிலேயே ஆண்டுதோறும் நினைவு விழாக்கள் கொண்டாடப்பட வேண்டும்.

மருது பாண்டியரோடு தொடர்புடைய இடங்களாகப் போற்றப்படும் சிவகங்கை அரண்மனை, அவ்வூரை அடுத்துள்ள பொன்னாள் குளம், நரிக்குடிச் சத்திரம், சத்திரத்திற்குப் பின்னுள்ள மருது பாண்டியர் கோவில்கள், திருப்பத்தூரிலும் காளையார் கோவிலிலும் அமைந்துள்ள வீர சகோதரர்களின் சமாதிகள், காளையார் கோவிற் காட்டிலுள்ள குண்டடிபட்ட புளி - இன்னோரன்ன பிறவும் சரித்திரச் சிறப்புடைய சின்னங்களென இந்திய அரசாங்கம் கருதிப் போற்றிப் பாதுகாக்க வேண்டும். வாய்ப்புக்

கிடைக்கும்போதெல்லாம் மக்களும் தலைவர்களும் சுதந்தர வீரர்களின் நினைவை அழியாது காத்து வரும் இந்நினைவுச் சின்னங்களை நாடிச் சென்று கண்டு மகிழ்ந்து போற்றிப் பணிய வேண்டும். மறைந்த சுதந்தர வீரர்கட்கு நன்றி செலுத்தி வீர வழிபாடு ஆற்றப் பாஞ்சாலங்குறிச்சிக்கும் சிவகங்கைச் சீமைக்கும் வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் பாரத மக்கள் புனித யாத்திரை செய்து பயனடைய வேண்டும்.

ஏகாதிபத்தியத்தை - அடிமை வாழ்வை - ஆவேசம் கொண்டு எதிர்த்தவர்கள் என்ற முறையில் மருது சகோதரர்கள் - உலகமெல்லாம் போற்றத் தக்க மனித குலத்திற்கே பொதுவான சுதந்தர வீரர்கள்; இந்திய விடுதலைப் போரைத் தொடங்கி வைத்தவர்கள் என்ற முறையில் பாரத நாடு முழுவதும் சிரந்தாழ்த்திப் போற்றத்தக்க சிறப்பு வாய்ந்தவர்கள்; தமிழ்க் குடியில் பிறந்து தமிழகத்தை ஆண்ட தன்மான வீரர்கள் என்ற முறையில் தமிழ் மக்களின் நெஞ்சிலே கோவில் கொள்ளுதற்குரிய தனிச்சிறப்பு வாய்ந்த பெருமக்கள். எனவே, உலகவர் என்ற முறையிலும், இந்தியர் என்ற வகையிலும், தமிழர் என்ற உரிமையிலும், மருதிருவருக்கு - பதினெட்டாம் நூற்றாண்டு கண்ட பழுதில்லா மாணிக்கங்கட்கு - மேற்கூறியவாறெல்லாம் உள்ளம் உருகி வழிபாடாற்றல் நம் கடமை.

# பிற்சேர்க்கை

## எண் II *

An extract from the book which contains a Summary of the expenses and Income of the Inam Sarakanei village from 1st September 1865 to 30th June 1941.

Accounts of the Inam Sarakanei Village.

Position : The Inam Sarakanei Village is situated in the new district of Ramnad some 19 miles east of Sivagangha & forms part of the Zamin of that name.

Origin of the Village: Rev. Fr. Rossi, S.J. first settled at Maraneri, east of the present Sarakanei; a quarrel arose among the several castes of Maraneri and forced Rev. Fr. Rossi to leave the place. About the year 1750 he retired to the place which is now Sarakanei; built there a church and slowly the people of Maraneri came and settled round him. But the manibam granted to the church bears the name of Maraneri in the official documents.

Grant of the Manibam: The local tradition recites that towards the year 1780 a certain Marudappa Servakaran who after serving in the places of Ramnad and Sivaganga had taken hold of the Zamin of Sivaganga made to the church of Sarakanei for its maintenance the grant of the gramam of Maraneri as a manibam. Anyhow, the patayam or donation deed on a Copper sheet, signed not by him, but by the then Zamindari of Sivaganga, Peria Udayar, Tevar. It is dated 23rd December 1800 A.D.* The priest incharge at that time was Arulandarswami, who had come from Goa in 1788. Periya Udayar Tevar confirmed his donation by a letter of the same date in which he declares that he has given as a sarva manibam to the church of Sarakanei the village of Maraneri..... [95]

இக்குறிப்பினை இந்நூலுக்குப் பயன்படுத்திக் கொள்ளும் வண்ணம் உதவிய சருகணி ஆலயத் தலைவர்க்கும் அவர்க்குக் கடிதம் வாயிலாக என்னை அறிமுகம் செய்து வைத்த திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரித் தலைவர் மறைத்திரு. எராட் (Fr. Ehrhart) அவர்கட்கும் நன்றி.

- ஆசிரியர்

## எண் III

Extracts from 'Papers Relating to Poligars War of Tinnevelly District' published in 1914.

(1)

Translation of an oleh from the Mittadar of Comery and Pappangulam to the collector, dated 20th February 1801; Received 23rd.

After the usual compliments I have, since the disturbance of the rebels of Panchalamkurichi had taken place, laid the strictest injunctions on the whole of the village cawalgars in both taluks, as well as on the monigars of Makgaunaums to be always on the look out if any communication is kept between Shivaganga and Panjhalamkurchi and to secure such person or persons as may be of a suspicious character and to bring him or them immediately to me - I on my part was also day and night attentive. Whilst we were thus attentive a man having in the evening of the 19th entered the village Mulakarapatti (of Mundalamanikam Durmasenam in Comery). His appearance, having given the Cawalgar much suspicion by his enquiry of the price of dry grain and bullocks as if he wanted to purchase he was secured and brought to me. I thereupon questioned him who he was, of what country and where he eame, etc. He replied, 'I am a traveller and came to purchase some dry grain,\ but upon a private interrogation he answered as follows:-

'In the Shivaganga country I was in the service of Shevattu Tambei employed as a peon bearing musket. Soobien who was attending on Shevattur Tambei was ordered to proceed to Panchalamkurichi and I and ten of my men to accompany him and to obey his orders. On our arrival at Moolakarapatti village in Comery one of the men was stationed there as Tappal man, to the south of which I was stationed at Tappalaykarch, another a Mootuputti near Nadicaud in the road to Naglipore and with the remainder seven men Soobien proceeded to Panchalamkurichi bearing strict orders to convey to the Aramanie: (the Sherogar of Sivaganga) at Seruvayal the olehs he will send to Panchalamkurichi I accordingly remained in a seret manner at Tappalakarch. On the 19th the Tappal man from Mootupatti brought and delivered to me an oleh which I conveyed to Moolakarapatti but not finding the Tappal man at the place, I went to the village in order to enquire of him, when I was observed and secured by the Cawalgar of the village who brought me hither, the oleh from Panchnlamkurichi I have concealed.

In consequence of this discovery, I desired the prisoner to give me a declaration in writing of what he stated, which he did. I then sent for the oleh and without looking into it despatched it to the presence. The prisoner I have sent to Ramnad with fetters on his hands. I have

also sent proper persons to secure the other two Tappal men with secrecy and if secured shall report without delay.

(2)

Translation of an oleh from the Vakeel of Shivaganga named Soobier at Panchalamkurichi to the Sherogar at Siruvayal, dated 18th February 1801.

Many blessings from Subbier attends the Aramanier.

Until the 18th February I am very attentive to the orders. I arrived at Panchalamkurichi saw shavattiah and having enquired into the affairs of this place they observed to me as follows.

Considering ourselves as natural sons of the Aramanier (the sherogar) we had formerly attended his presence. By that favour as the present time had given us hopes of succeeding in our enterprises. We have, placing entire corfidence in them, thus far effected our object and wait to be responsible for whatever may hereafter happen.

(3)

Extract of letter from the Tahsildar of Naglipoor, dated 21st February 1801 received 22nd.

.......

I have this day received information that a Brahmin belonging to Mardopah Sherogar, accompanied by six persons had arrived yesterday at Mawillodah village of Ettapore situated near Caudalgoody, from whence they proceeded by the route of Velattikulam, a circar village; to Panchalamkurichi.

Extract of a letter from the same dated 26th received 28th.

In my letter of yesterday I mentioned the people belonging to Mardopah Sherogar were arrived at Caudalgoody. I now hear they have left that place for Panchalamkurichi.

* * *

(4)

Translation of an oleh from the Amildar of Commery and Pappankulam taluks to the Collector, dated 1st March but despatched the 2nd - received the 4th.

......................

"The brother of China Mardoo of Shivaganga is now removed to his chattram at Nargoody. Whatever may hereafter happen I shall not fail to report regularly.

.......

***

(5)

Translation of a letter from the Amildar of Oroor and Cottapatanam taluks to the Collector, dated 18th March - received 23rd 1801.

Reporting as follows: - Swamy Sherogar has this day reported to me for certain intelligence that his man whom he sent with instructions to mix him self secretly with the Mardoos people and to discover the news there, returned and communicated to him as follows:-

'I hat five or six days ago when the Mardoo was diverting himself with the fighting of cocks his private tappal arrived with a letter from his man acquainting him that the collector has represented against him to Madras as the instigator of the Panchalamkurichi and Milappan's rebellious disturbances in conformation of which an olai from oanchalamkurichi to him had been intercepted etc. In consequence of which the Mardoo had written to certain gentlemen at Madras who are his supporters informing as follows:- We are the children of the company and as such remain paying tribute conducting our selves in obedience to the collectors order, notwithstanding which the collector designs to divert us of our Pollam; this being his object he is unjustly representing againstus. If we have be haved so faulty let it be proved to the Dorah (or gentleman) at Trichinopoly and to the Colonel at Tanjore and if they upon proper investigation represent us as guilty of criminal conduct we shall submit to such punishment as may be pro. nounced against us. Moreover this collector has since his arrival assumed all the Pollams. So long as he remains here will doubtless also represent our Pollam. Therefore should a detachment march against us we are determined to sacrifice ourselves."

.............

* *

(6)

Letter from S. Lushington Esq., Collector of Tinnevelly, To William Petric Esq., President, and member of the Board of Revenue.

..........

"But such is the arduous nature of the work and the immence extent of jungle in the Shivaganga country, as you will judge from the accompanying sketch of it, that it will require the fullest support of Government to complete their destruction even within a considerable number of years. The jungle of Callaicoil is from 11 to 12 miles across in ever direction, with no villages or cultivation breaking the continuity of it on any side - Callaicoil itself is nearly centrieal. The other jungles are

contained and irregular from Mana Madura on the south running up by the westward and north to Shencottah and Shanagrapoy and on the north and west sides large villages stretch deep into the jungle but no correct judgment can be formed of the extent of the woods until they have been regularly surveyed. The trees which grow in them are of the hardest nature, and it often happens that after the trunks of several have been cut asunder they are still supported in an upright position by the creepers which bind them together and the thick underwood surrounding.

...... ... ... ... ... ...

"Indulgence only sevells the arrogance of the subject and no concessions can bind his attachment not even the triumphant issue of the campaign in Mysore could dispel the information from the minds of the Southern Poligars, for in the midst of our victories their licentiousness was as intolerable as at any former period."

...... ... ... ... ... ...

...................

எண் IV

Mr. Lushington's Report on Ramnad

24 December, 1800

"When Shashevarna Tevar died, he was succeeded by his son Muthu Woolaga Tevar whose refusal of Tribute to his Highness the Nabob of the Carnatic was the provocation which led to the equipment of a large army for his reduction as well as for the punishment of Ramalingam Satupattai of Ramnad who alike resisted the demand. Moottoo Woolaga Tevar was slain by a cannon ball in the Fort of Callayarcoil, and his surviving widow (the Heiress recently demised) field with her daughter to Verupatchee accompanied by the Predauni of her late husband and several of her relatives where they were also joined by two servants of the old Raja named Vella Murdoo and Chinna Murdoo the one his dogkeeper, the other his betel bearer.

"These two men upon the death of Predauni which happened about six months after their flight from Shevagangha, took the lead in the Rance's affairs, and when Hyder Ally fell upon Arcot at the commencement of the war of 1780, the younger Murdoo now Shervagar of Shevagangah having obtained from Syed Sahib, Tippoo's Killadar of Dindugal, a small force of Horse and Foot desolated and burnt the

Nobob's villages to the very gates of Madura, and entered the Shevagangha country. His Highnesse's force inadequate and badly disciplined could form no resistance against so formidable an erruption, and as his civil management had won little of the affections of the people, they crowded to the standard of Rani, whose behalf the two Shervagars professed to act and the whole country was completely brought under their subjection.

"The attact of Hyder was the signal for revolt in the Ramnad country where different Marava leaders found no difficulty in totally destroying an authority which even in peaceable times was not of energy to maintain its purposes against the struggle of a people in the rudest state of civilization, and whose unbroken spirit of independence anxiously waited for an opportunity of asserting itself.

.................

24th December, 1800. (Sd) S. Lushington"

எண் V

(1)

To

The Secretary to Government

In the Revenue Department.

Sir,

The wife of the late Rajah Peria Marudoo of Sivaganga having represented to me her distressed situation since the death of her husband, I am induced to submit her case to favourable consideration of the Right Honourable the Governor in Council from a conviction that she is fit object for charity. Adverting to the rank this woman formerly held it appears but just that some provision should be made to secure her against want and as she has no allowance from the present Zamindar, I would beg leave to recommend that a pension of 40 Pagodas per month be paid to her from the treasury in the same manner as provision has been made for the family of Sadoopathy, late Poligar of Ramnad, who received an allowance of Rs.1,200 per month.

Tirumangalam, (Sd.) George Parish,

23rd May, 1806. Collector.

# பிற்சேர்க்கை

(2)

Proccedings of the Madras Government

To

The Collector in the Zillah of Ramnad, etc

Sir,

1. I am directed by the Right Honourable the Governor in Council to acknowledge the receipt of your letter of the 23rd ultimo and to acquaint you, that His Lordship in council has been pleased in consideration of the circumstances which you have stated, to confer on the widow of the late Peria Marudoo a pension of forty Pagodas per month, during her life and to desire that you will accordingly cause that sum to be paid her monthly.

2. His Lordship in council directs me at the same time to remark that you have omitted to mention the name of the widow.

Fort Saint Geore, (Sd) E. C. Greenway,

7th June, 1806. Secretary to Government.

(3)

To

The Secretary to the Government,

Sir,

I have the honour to forward translation of a petition presented to me by Thangam and Audiveera Lakshmi, daughters of Peria Marudoo Shervaigar formerly Zamindar of Sivaganga, soliciting for the continuance of the pension of 40 Pagodas per month granted to their deceased mother under the sanction of Government, dated 7th June 1806.

The family consisting of 4 daughters, 1 & 2 wife, 5 grandsons, 1 grand daughter and 25 servant and dependants as stated in the petition are without any means of support.

Anuppanady, (S.) R. Peter,

11th May, 1821. Collector.

எண் : VI

(1)

* Colonel. Agnew's letter to the Zamindar of Sivaganga

To

Muthu Vijaya Ragunatha Peria Udaya Tevar,

Zamindar of Sivaganga.

I have received your letter. I am sorry that you are exposed to inconvenience from the litigious conduct of Shenkuli Servaigar, but I do not think the judge of the Zillah of Ramnad can or will take cognizance of any suits instituted in the name of the heirs of the Vella Marudu's or China Marudu's or of any of that family who were declared rebels and in that part, executed as such.

By their rebellion, their property was forfeited and in succeeding to the rights of your family which that of China and Vella Marudus had wrongfully assumed, you also succeeded of right to the property that had amassed during their usurpation and what they forfeited by their rebellion was assigned to you. The said Zamin will, however, be restored to the heirs of Vellai Marudu, one hundred years hence and this has been communicated to the Honourable Company's Government.

This is my opinion, but, I have now no right or title to interfere on any matter of property or administration on Sivaganga........

(Ld.) P.A. Agnew,

Madras, 28th, Dec. 1804.

(2)

* Colonel Agnew's Letter to the Chief Secretary to Government of Madras

To

The Chief Secretary to Government,

Madras.

Sir,

I have the honour to submit for the information of the Honourable Company's Government my opinion expressed in my reply to the letters received from time to time from Muthu vijaya Ragunatha Peria Udayah Tevar, Zamindar of Sivaganga, that the said the said Zamin will be restored to the heir of Vella Marudu one hundred years hence.

I have the honour to be,

Sir,

Your most obedient Servant,

(Sd.) P.A. Agnew,

Madras, 28th Dec. 1804.

## எண் VII

*An extract taken from the History of the Madras Army (Page 400)*

List of Arms collected in Tinnevelly, Shevaganga, Ramnad and Digdigul, dated 7th March, 1802.

| | | |
|---|---|---|
| Small guns | --- | 45 |
| Swivels | --- | 1,233 |
| Ginjals | --- | 82 |
| Firelocks | --- | 6,164 |
| Matchlocks | --- | 9,955 |
| Pistols | --- | 587 |
| Musket and pistol barrels | --- | 1,181 |
| Pikes and spears | --- | 35,878 |
| Pike and spear heads | --- | 2,412 |

N.B:- About 12,000 swords and daggers, 1,000 bayonets, 1,000 bows, 10,000 Collery weapons.

Palamcottah, (Sd.) P.A. Agnew, Lieut. Col,

7th March, 1802. *Commanding Detachment.*

இவ்விரு கடிதங்களையும் துணையாகக் கொண்டு சீமை உரிமை குறித்துத் தொடரப்பட்ட வழக்கில் உயர்நீதிமன்றத் தலைவர் திரு. குமாரசுவாமி சாஸ்திரியார் 1929-ஆம் ஆண்டில் வழங்கிய தீர்ப்பின் வாசகத்தின் ஒரு பகுதி வருமாறு:-

'.......... Reading these two letters, it seems to me that it was Col. Agnew's opinion as to what ought to be done..... There is however no evidence that the government accepted this opinion or acted upon it.'

# பிற்சேர்க்கை

எண் : VIII

பின் வரும் பாடல் முத்துவேலாயுத கவிராசர் என்பவர் சென்னையிலிருந்து நவாபுவின் மந்திரி இராமசாமிப் பிள்ளைக்கு எழுதிய சீட்டுக்கவி:

நாற்பத்தெண்சீர் ஆசிரிய விருத்தம்:

புனிதமிகு நாற்கவி விலாசன்மெய்த் தவஞான
பூரணன் சைவநாகமப்
பொக்கிஷம தானசங் கரலிங்க முனிவனிரு
பொற்பதந் தம்மைநிதமும்
போற்றிசெய்முத்துவே லாயுதக் கவிராச
பூபன்வர விட்டசனது
பூமண்ட லாதிபதி யசரது நபாபகம்
பூரணம தாகமெச்சும்
புரவ குபேரபாக் கியராம சாமிநற்
புண்ணிய னெதிர்ந்து காண்க:
புகழான நமதுசுய கரமெலாங் கேளுமற்
புதமான தென் குழந்தா
புரியிலகு துரைமுத்து வடுகநா தேந்த்ரன் மகிழ்
புவனமுழு தும்புரக்கும்
பூபாலன் விசுவைவளர் மருதுபாண் டியராச
போசனுயர் சமுகமதனிற்

கனதைபெறு பஞ்சலட் சணவித க்ஷணநலங்
கமழும்வே தாந்தவாரி
கரைகண்ட முகில்சுப்ர மணியவிற் பனவசீ
கரனென்று மிலகியவிலக்
கணவிலக் கியகற்ப னைச்சொக்க நாதக்க
விச்சக்ர வர்த்தியென்றுங்
கருங்குளஞ் சங்கரநாத ராயணவ தானிமரு
கன்சொக்கு பூபனென்றுங்
கல்விப்ர சங்கிசர்க் கரையுதவு சாந்துக்
கவிச்சிரோ ரத்னமென்றும்
கலைமுற்று வித்வசனர் துதிமுத்த மிழ்க்குமதி
காரியுப சாரிசகல
கலைநிபுண நாகலிங் கேந்த்ரனென் றும்மதுர
கவியனந் தகவியென்றுங்
கலைமதங் கொண்டிடு சவாதுக் கவிச்சரப
காம்பீர்ய துங்கனென்றும்

மனமது சபைக்குண்மலை யாமற் சபாசென
வழுத்தும்வெண் பாப்புலிக்கா
வலனென்று நீடுபொன் னங்காலி னாரென்றும்
வளரிலக் கணவிளக்க
மாசிலா மணியெனும் பண்டார மென்றுநல்
வாக்கியா விடைநாதநா
வலனென்று மிதிலைநல் லூரினொடு செவ்வூரில்
வருகவிஞ் ரென்றும் வாணி
மருவுகொன்றைக்குளத் தண்ணாவி யாரென்றும்
வளமிகக் கண்டுகொண்ட
மாணிக்க நாட்டினில் விளங்கிய தமிழ்ச்சிகா
மணியெனும் பெரியமுத்து
மாரியப் பக்கவிஞ னென்றுநதி குலசைவ
மணிதிருப் புத்தூர்வளர்
வாலசரஸ் வதியெனது பாட்டனென வுயர்முத்து
மாரியப் பேந்த்ரகவிஞர்

எனவுமே பெயர்பெற்று முத்தமிழ கத்தியற்
கெண்மடங் கதிகமானோர்
இப்படிக் கவிவலவர் பதினாயி ரம்பேர்க
ளிவர்கடமி லொருசிறியன்யான்
ஏதவிடம் விட்டுவெகு தூரதொலை தனில்வந்த
தென்னெனினில் வுலகமதனில்
எமதுதுரை யேராச ராசர்கள்சி ரோன்மணியெ
னத்துதித் தவர்கள்சமூகத்
திலகுபிர பரந்தகவி வலாசரஸ் வதியுநா
மெனவுநற் பெயர்செலுத்தி
யாவரும் புகழவே செயவிருது பெற்றிடவு
மியல்பாக வந்தேனலால்
இல்லாமை யால்வந்த தன்றுநீ தமிழறிந்
திரவலர்க் குதவுதாரன்
என்னலா லுனைநாடி வந்தனன் கீர்த்திநித
மிலகநிதி யருள்புரிவையே!

(மயூரகிரிக் கோவை (1908) பக். 17.18)

எண் : IX

பின் வரும் பாடல், முத்துவேலாயுதக் கவிராசரால் முற்கவிக்கு நவாபுவிடம் சிவிகை முதலான விருதுகளுடன் பரிசு பெற்று மீண்டும்

ஊர்வந்த பின்பு நான்கு வருடங்காலந் தமது சபைக்குக் கவிராயர் வரவில்லை என்று சர்வ மானியமாக அளித்திருந்த பூலாங்குண்டு என்னுங் கிராமத்தைத் தீர்வைக் கிராமமாக்கிவிட்ட மருது பூபதியை நோக்கி மீட்டும் கிராமமும் சிவிகை தாங்குபவர்கட்கு மானியமும் கொடுக்க வேண்டுமென்று பாடிய பாட்டு:

ஞாலமதி லுயர்கின்ற சிவகங்கை யரசுநிலை
நாட்டிய கிரீடியான
ராஜேந்திர ராமஜெயம் ஜெயம்விசய மேவுரகு
ராமா ஜெயஞ்ஜெயங்கன்
னாமருது பாண்டிய துரையே ஜெயஞ்ஜெயமென்
நலமகிழ்ந் தினிதுகேண்மோ;
நாலுவரு டஞ்சென்ன பட்டணத் தரசரது
நவாபுசாய் பவர்கள் சதிரில்
நதிகுலா திபன்ராம சாமிபூ பதிதயவி
னாற்சிவிகை வெகுமதிகளும்
நலமுறப் பெற்றுமவி டத்துப்பிர புகணேய
நயமுற்று மிவ்விடம்வர
நாடிமூட் டைக்காரர் சத்ரம்வந் தோமன்றி
ராத்திரிப் பெட்டியுடனே
நகைவகைவ ராகனுள தைப்பிரா மணரிருவர்
நலியாது கைக்கொண்டுமப்

பாவலர்க ளும்போயி னார்யான்வி ழித்ததைப்
பார்த்தவுடன் மனதுகவலை
பாய்ந்தவர்க ளைத்தேடி யுங்காண்கி லாமலிது
பகவசங் கற்பமென்று
பாதைகூ டிப்புதுச் சேரிதனில் வந்தியான்
பரிதபித் திடும்வேளையிற்
பசியுறு குழந்தைகட் கனையெனவும் வாடியப
யிர்க்குமழை மாரியெனவும்
பாவாண ருக்குதவு கற்பதரு புதுவையம்
பதியாதி பதிதன்செயம்
பதியமர சிம்மமக ராஜசமு கஞ்சேது
பதிமற்று முளவர்சாதம்
பரிவுறுற்று மேவதிக விருது பெறு கங்கைகுல
பாக்கிய சிலாக்ய தமிழ்விற்
பன்னன்முன் முளைவாரி யன்னவன் மேழிப்ப
தாகையன் பூமிபாலன்

வாலமத ரூபசுப னானந்த னானசெய
மாலென்னை யுனதுசமுக
வாசற்ப்ர பந்தகவி வாசரஸ் வதியென்ற
மாத்ரமே வரவழைத்து
மாதயவு செய்ததா லவன்மீதி யானுமொரு
மயிலிசைத் தூதுசொல்ல
மனமிக மகிழ்ந்ததிக வெகுமதிகள் செய்திந்த
வையமதி லுமதுதுரைபேர்
வளரவே புகழைமேன் மேலுமே துதியுமென
வண்மைமொழி கூறவேயவ்
வரிசைபெற் றவனை மிக வாழ்த்தியே தில்லைநகர்
வந்துபொன் னம்பலத்தில்
மருவுநட ராசனைத் தெரிசனஞ் செய்துநல்
வழிமார்க்க மெய்திவிரைவாய்
வளமிகுந் திரிசிரபு ரத்தில்முத் துக்கிருஷ்ண
மாலுதவி கொண்டுமிப்பாற்

கோலமிகு தென்றிருப் புத்தூரில் வந்துநங்
குலதெய்வ மாகியருளே
குடிகொண்ட காசிவயி ரவமூர்த்தி யிருபதங்
கும்பிட்டி றைஞ்சியெனது
குருவான ஞானசங் கரலிங்க மாமுனிக்
குரிசிலை மனத்துள்வைத்துக்
கோகனக மலரலரும் வாவிதனி லேபசிய
கொட்டியும லர்ந்ததெனயான்
குணமுற்ற தமிழ்வித்வ சனருற்ற வுயர்முக்ய
கொலுவுனது சமூகம்வந்து
குழவிதாய் முகநாடு மதுவெனக் கருணைபொழி
குளிர்முகம தனை நாடினேன்
குலவுசிவி கைக்கதிக விருதுமும் பளமுங்கொ
டுத்துமுன் னிலைமைபூலாங்
குண்டுவய லுந்தந்து மென்றுநின் றயவுளங்
கொண்டெனைக் காத்தருள்வையே!

மயூரகிரிக் கோவை (1908) பக். 18-19. பார்க்க: இதன் அச்சுப்பிரதியை யான் பயன்படுத்திக் கொள்ள அன்பு கூர்ந்து உதவியது டாக்டர் உ.வே.சா. அவர்களின் பேரர் உயர் திரு. க. சுப்ரமணிய ஐயர்.

எண் : X

மருதரசர் - சங்கரலிங்க முனிவர் - காடன் செட்டி ஆகியோரின் புகழ் போற்றும் மயூரகிரிக்கோவைப் பாடல்கள்:

1.பூமேவு பொற்பிடி சிங்கங் களிறம் புலிபசும்பூங் காமேவு மான்கொண் டொருதோகை யன்னத்தின் கண்ணுற்றதால் தேமேவு முல்லை மருதேந்த்ரன் போற்றுஞ்செவ் வேள்கமல் மாமே வியகுஞ்ச ராசனச் சோலை மயில்வரைக்கே. க

2. தூண்டிய வாசியும் வாழும் பதமுஞ் சொலிற்றகரார் வேண்டிய
நல்கு மயிலார் மயில்வரை மேன்மருது (கள்
பாண்டியன் பொய்கையுங் கீழ்பாற் சவுக்கையும்பைம்புயல்
ஈண்டிய காவு மினிப்பா ரினிப்பா ரிதழமுதே! கஉ

3. இந்திர ஞாலவை யம்போன சேனையை யெஃகின்வரத்
தந்திரஞ் செய்த முருகேசன் பொன்மயிற் சாரலிஃ
தந்திற் சரவண மீது மருதுந ராதிபதி
சிந்தையிற் செய்த திருக்குள மீதிவண் சேர்விடமே. சுக

4. மருது நராதிபன் றாமரைப் பொய்கையின் மற்றவனே
கருதிய வாயிரத் தூண்மண்ட பத்திற் கடம்பணிவேள்
வருதிசெய் தோகை மலையி லரச வனத்தினிதம்
பருதியை நோக்கு மலர்போற் கிளிசென்று பார்ப்ப தென்னே.
அஉ

5. சுரமெது கந்தன் மயூர கிரிக்குத் தொடர்ந்தசரி
சரவணத் திற்கெது வாரி யெதுதிருச் சன்னதிக்கே
அரச வனத்திற் கெதுபட்ட மத்தம்வை யாபுரிக்கே
துரையு மருது துரைசெய் தடாகத்துக் கோர்நெறியே. ககஅ

6. விரும்பு கவச மருது மகீபதி வேண்டியிட
அரும்பிய வோகை மயில்வேலன் றோகை யணிவரையீர்!
குரும்பை முலைப்பெண் பொருட்டாக வீசனுங் கூட்டுடனே
கரும்பனை மாய்த்தில னீர்மாய்த்த னல்ல கருத்தல்லவே கருந

7. நினைத்த மருது பகிபதி நெஞ்சி னிறைந்து தொல்லை
வினைத்திரண் மாற்றிய கந்தன் மயில்வரை மென்கொடியே
தினைப்புனத் தேபெரு மான்சாரி வந்த திறமறிந்தால்
வினைப்பிள்ளை யாக்கி யெனைக்கள்ள னாக்குவ
ளுன்ன னையே. ககூசு

8. பூ.வேந்தன் போற்றுங்குன் றக்குடி வேளருள் போற்றிப்பெற்ற
பாவேந்தர் சொல்லு மருது மகீபன் பவனியைப்போற்
றேவேந்தி ராவெச் சரிக்கையென் றார்செழு மாப்பலவார்
மாவேந்தன் சந்தனம் பார்புன்னை நிழலில் வைகுவமே.

ககூஅ

9. வள்ளி மயில்சேர் மயின்மலைக் கேமரு தையன் செய்த
வெள்ளி மயிலை விரும்புங் குகன ளுள் வேந்தன்மறந் (பொற்
தெள்ளி மயிலிலென் பொன்மயி லைப்புணர்ந் தேகினும்
புள்ளி மயிலின மேமற வீரன்பு போற்றுதலே.

உ00

10. மைப்பார் புகழு மருது துரைவேண் மயில்வரைமேற்
பாண்டிய னுந்தேர் வடந்தொட்டனன்விருப் பாகுமுன்னை
வேண்டிய மன்னர் வருவார்வை யாபுரி மென்கரைமேற்
றீண்டு திருவர சேயிட மாவந் திருவரசே. உஎந

11. தூண்டிய தேரே றினர்மயில் வெற்பர் துரைமருது
பாண்டிய னுந்தேர் வடந்தொட்டனன்விருப் பாகுமுன்னை
வேண்டிய மன்னர் வருவார்வை யாபுரி மென்கரைமேற்
றீண்டு திருவர சேயிட மாவந் திருவரசே. ந0ச

12. அருணிதிப் பாலினு மேற்பா ரினுமறி யாமையினான்
மருது துரைபணி சேந்தன் மயூர வரைத்திருவே
இருவரை யேந்தி யொருவரை யுட்கொண்டிருந்தவளோர்
வரைதலை மேற்கொண் டனளென்று வெஞ்சொல்
வழங்கினரே. ச0எ

13. வேண்டும் விருந்திட் டுறுதிகள் கூறிய வேண்மருது
பாண்டியன் பக்க மிருக்கக் குறைகள் பணத்திலுண்டோ?
தாண்டு மயிற்பரி யான்றோகை வெற்புந் தமிழ்மதுரை
ஆண்டவன் றேசமன் றோவட மேரு வகன்றிலதே. ருஉச

14. வருமுனென் கைமந்த்ர வாளாய் வரல்கண்டு மற்றவன் கைத்
தருகின்ற வாளென வாகுநின் கண்ணெனச் சாற்றுகின்ற
பரவையுண் மேக முருகன் மயில்வெற்பிற் பாவலர்க்குத்
துரைமரு தேந்த்ரன் றரல்போற்பொன் மாரி சொரிகின்றதே.
ருஙரு

15. கையன்றி மெய்யறி யான்கொடைப் பாலிற் கவிஞர் தம்பால்
மெய்யொன்று சங்கர லிங்கத் தபோநிதி வேண்டுஞ் செவ்வேள்
மையொன்று தோகை மலைமயி லே!மன் மதன்சமரில்
எய்யென்று வேலெறிந் தென்னோ பராமுக மெய்தினையே.

எ

16. சேனா பதிக்கம் விறல்வாகுக் கீந்துதன் செய்கையெல்லாம்
ஆனாத சங்கர லிங்கத் தபோநிதிக் காக்கியேவேள்
தேனார் மயில்வெற்ப ரஞ்சனம் போட்டிலர் செங்கையிலே
பானாறு முன்சொற் பொருளெடுத் தார்பொன் பல கொடுத்தே.
சஎக

17. நல்லதண் ணீரள்ளி யுண்ணா தவரில்லை நன்மலரை
எல்ல வருமுடிப் பாரத னாலென் னிரங்குதனீர்
கல்விகொள் வேண்மயில் வெற்பி விருவருங் காடன் செட்டி
செல்வ மணிமண் டபப்படி பார்த்துத் திரும்பினரே. சOஉ

# பிற்சேர்க்கை

எண் : XI

மருதுபாண்டியர் புகழ் போற்றும் முதல் நூல்களாக 1954-ல் யான் எழுதிய 'மானங்காத்த மருதுபாண்டியர்' என்ற நூலும், 1956 'மருதிருவர்' என்ற நூலும் வெளிவந்தன. இந்நூல் வெளியீடுகட்குப்பின் மருதிருவர் பற்றித் தமிழ் மொழியில் வெளி வந்துள்ள சிறந்த கட்டுரைகள், கதைகள், நாடகம் பற்றிய பட்டியல் வருமாறு:

I. கட்டுரைகள்:

(1) இராஜவேலு, கு. - வீரமருதுபாண்டியர்[96]

(2) சஞ்சீவி, ந. - சிவகங்கைச் சிங்கங்கள்[97]

(3) - பெரிய மருது சின்ன மருது[98]

(4) சுத்தானந்த பாரதியார் - மருதுபாண்டியர் வீரம்[99]

(5) பாஸ்கரத் தொண்டைமான் - காளையார் கோவில்[100]

II. கதைகள்:

(1) 'சோமு' (சோமசுந்தரம், மீ.ப.) - மருதுபாண்டியன் கோட்டை[101]

(2) பார்த்தசாரதி, ந. - காளையார் கோவில் புரட்சி [102]

III. நாடகம்:

சிதம்பர இரகுநாதன் - மருது பாண்டியன்[103]

IV. பாட நூல்:

சுப்பிரமணிய ஐயர், எம்.எஸ். - மருது சகோதரர்[104]

# பிற்சேர்க்கை

எண் : XII

'மருதிருவர்', மானங்காத்த மருது பாண்டியர்' என்னும் இரு நூல்கள் பற்றிய மதிப்புரைகளிற் சில:

I

## மருதிருவர்

(1)

கட்டபொம்மு சகோதரர்களின் உயிர்த்துணைவர்களான மருது பாண்டியரும் மக்களுடைய நினைவுக்குரியவர் ஆகிவிட்டனர். திரு. சஞ்சீவி எழுதிய 'மருதிருவர்' என்ற அரிய நூல் அம்மா வீரர்களின் புகழைப் பரப்பி வருகிறது.

- தமிழரசுக் கழகப் பொதுச் செயலாளர்கள் அறிக்கை

(செங்கோல் 29-9-57)

(இவ்வறிக்கையின் உண்மை மருது பாண்டியர் பெயரால் தோன்றும் மன்றங்களாலும் பேராசிரியர், டாக்டர் மு. ஆரோக்கியசாமி அவர்கள் எழுதியுள்ள 'நாம் இருக்கும் நாடு', 'தமிழ் நாட்டு வரலாறு' போன்ற வரலாற்று நூல்களில் மருதுபாண்டியர் பெருமை சிறப்பிடம் பெற்றுள்ளமையாலும் வேறு பல வரலாற்று ஆசிரியர்களும் தம் நூல்களில் 'மருதிருவர்' தரும் செய்திகளை ஏற்றுப் போற்றியுள்ளமையாலும் இனிது புலனாகும்).

(2)

'மருதிருவர்' என்னும் நூலில் பெரிய மருது, சின்ன மருது ஆகியோரின் வாழ்க்கைச் சிறப்புக்களைத் தக்க சான்றுகளோடு ந. சஞ்சீவி வீரம் செறிந்த நடையில் தந்திருக்கிறார்.

- வளரும் தமிழ் - சோ.ம.லெ, பக்.233

(3)

மருது பாண்டியரின் உருவச்சிலை, சமாதி முதலியவற்றின் போட்டோப் படங்களும் பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்ட ஆங்கிலக் குறிப்புகளும், இலக்கியப் பாடல்களும் ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன்படக் கூடியவை.

-தினமணி

(4)

மறைந்து போன வரலாற்றைப் பல சரித்திர ஆதாரங்களைத் திரட்டி ஆராய்ச்சிக் கண் கொண்டு இந்நூலாசிரியர் எழுதியுள்ளார்.

- வீரகேசரி (இலங்கை)

(5)

ஆசிரியர் இந்த நூலைப் பல தக்க ஆதாரங்களோடு இனிய தமிழிலே எழுதியுள்ளார்.

- ஈழகேசரி (இலங்கை)

(6)

**The book is a positive addition to our historical knowledge of a portion of our Tamil land and the author has to be congratulated on his success.**

**- The Hindu**

II

## மானங்காத்த மருது பாண்டியர்

(1)

தமிழக வரலாற்றுத் தொடர்புள்ள சமீபகால வெளியீடுகளில் இதற்கு ஒரு நல்ல ஸ்தானம் உரியது. இந்த ஆசிரியர் வாயிலாகச் சரித்திரம் தமிழருக்குச் சொல்ல வேண்டிய செய்தி எவ்வளவோ இருக்கிறது.

- ஆனந்த விகடன்

(2)

இந்தியாவின் சுதந்தரப் போரில் அமரத்துவம் பெற்ற தமிழ் நாட்டின் மானங்காத்த மருது பாண்டியர்களுக்கு இந்நூலே வெற்றிச் சின்னமாக, ஞாபகச் சின்னமாக விளங்கும் என்று சொன்னால், அது சிறிதும் மிகையாகாது.

- கல்கி

(3)

உணர்ச்சிமிக்க இவர்களின் வரலாற்றைத் திருவளர் ந. சஞ்சீவி எழுதியுதவியது காலத்திற்கு ஏற்ற நல்ல தமிழ்த் தொண்டாகும்.

- பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார்

அடிக்குறிப்புகள்

1. பெருந்தொகை, 2099.
2. **Caldwell's History of Tinnevelly, p.24**

   குறள், 957, பரிமேலழகர் உரை.
3. பெருந்தொகை, 2098.

4. செந்தமிழ் வளர்த்த தேவர்கள், பக். 1, 2.

5. Ramnad Manual - P.238.

6. க.209.

7. Nayaks of Madura, pp.89-93.

8. Nayaks of Madura, p.212.

9. Mr. K. Annaswamy Iyer's Sivaganga Zemindary-Introduction பார்க்க.

10. இவரைச் சேதுபதியின் சகோதரர் என்றும் கூறுவர்.

11. (1) Nelson;s Madura country, p.249

(2) சிவகங்கைச் சரித்திரக் கும்மி, பக். 4-10.

12. (1) Ramnad Manual, p.233 (2) சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும், பக்-106, 107.

13. 'வீரத் தலைவர் பூலித்தேவர்' - ந. சஞ்சீவி

14. கர்நாடக ராசாக்கள் - பக்கம், XVI; III-2.

15. பெரிய மருது பாண்டியர் 1748-ஆம் ஆண்டு பிறந்தார் என்பது செவிவழிச் செய்தியே. எனினும், இக்குறிப்பை வரலாற்று நிகழ்ச்சிகளோடு பொருத்திப் பார்க்கும்போது அவ்வளவு தவறுடையது எனத் தோன்றவில்லை. எனினும், அவர் பிறந்த தேதி வேறென்று கூறுவாரும் உளர்.

16. இவையும் செவிவழிச் செய்திகளே எனினும், பின்னாளில் சிவகங்கைச் சீமை பற்றி நடந்த வழக்குகள் வாயிலாக மருது பாண்டியர் பெற்றோர் பெயர் உறுதிப்படுகிறது.

17. (i) 'Marudu or Mardoo as it was written by the English, was their family title, not a personal name. Marudu is the name of a tree the Temimalia alata. How then did the name of a tree become a family title? At the temple of Nainarkovil, in the Ramnad Zamindari Siva is supposed to have appeared in the shape of a Lingam at the foot of a Marudu tree. Hence, as worshipped in that place, he is called Marudappa or Marudesvara. This being the family divinity of the Siruvayal people, each of them, in honour of their divinity, took the title of Marudu' - Caldwell's History of Tinnevelly, p.212.

(ii) சிவகங்கைக்கு அருகே ஒரு மருதப்ப சுவாமி கோவில் உள்ளது என்றும், அக்கோவிலில் உறையும் தெய்வத்தின் பெயரையே மருதுபாண்டியர்களுக்கு வைத்தனர் என்றும் கூறுவர்.

18. (i) A General History of Pudukkottai State, p.254.

(ii) போர் பற்றிய முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளக் கூடவில்லை. எனினும், பின்வரும் 'வரலாற்றுக் குறிப்புக் கவனிக்கத் தக்கது.

In March 1772, a force was assembled near Trichinopoly under Colonel Smith to reduce Ramnad.

The Ramnad country was entered in the month of May. On 20th April, Captain Pitman was appointed to proceed with the troops as engineer. Lieutenants Geils and Maule were also with the army.

Although a monthly journal of the operations was sent in, as well as a sketch of the country through which the army marched they could not be found, and so details of the movements are wanting. The army appears to have marched from Trichinopoly by Sathrum, Veeramalai and Nattum to Madura, and there, it is presumed, down the Valley of the Vygah to Ramnad, a distance of about 150 miles.

Towards the end of May, the army appeared before Ramnad, and the engineers at once commenced to make preparations for the seige.

On 1st June, a battery for two 12-pounders was finished, for enfilading the face attacked, and on the 2nd another four 18. pounders was completed to form a breach; a few days after, Ramnad was stormed.

After the capture of Ramnad, the force marched into the little Marawar country and encamped before the barrier leading to Calliacoil, (Calliacoil is about ten miles east of Shivaganga) the Raja's stronghold. A detour was made with a strong force to the enemy's rear, under Lieutenant-Colonel Bonjour; the enemy were completely surprised, and Calliacoil was entered.

The enemy were dispersed with severe loss, the Poligar being killed, and the campaign was brought to a close.

- Military History of the Madras Engineers. Vol. I pp. 120 and 121.

19. சிவகங்கைச் சீமையின் முதல் மன்னர் சசிவர்ணர் என்பதை நாம் அறிவோம். இவர் 1730 முதல் 1750 வரை இருபதாண்டுகள் ஆட்சி புரிந்தார். இவருக்குப் பின் பட்டத்திற்கு வந்தவரே முத்துவடுகநாத உடையத் தேவர். இவர் இருபத்திரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். இவர் ஆட்சிக் காலம் 1750 - 1772. இவர் காலத்திலேயே நம் மருதுபாண்டியர் பேரும் புகழும் பெற்று விளங்கினார்.

20. புதுக்கோட்டையை 1730 முதல் 1769 வரை ஆட்சி புரிந்து வந்த விஜய இரகுநாதராயத் தொண்டைமானே இவர். இவர் காலத்தில் புதுக்கோட்டைக்கும் சிவகங்கைக்கும் இடையே பூசல் இருந்ததாகப் புதுக்கோட்டை அரண்மனையில் கிடைக்கும் ஆதாரங்கள்

புலப்படுத்துகின்றனவாம். இவ்வாதாரங்களிலிருந்து விஜய இரகுநாதராயத் தொண்டைமான் அவ்வமயம் சிவகங்கையை ஆண்டு கொண்டிருந்த வீரர் முத்துவடுகநாத உடையத் தேவரோடும், அவர் அமைச்சர் தாண்டவராயப் பிள்ளையோடும் போரில் இறங்கியிருந்தார் என்பது விளங்குகிறது என்றும், அவ்வாறு அவர் போரில் குதிக்கக் காரணம் 1759 - ஆம் ஆண்டு முதல் சிவகங்கை மன்னருக்கு அவர் கொடுத்திருந்த கடனைத் திருப்பிப் பெறப் பன்முறை முயன்றும் பயனற்றுப் போகவே, முத்து வடுகர் தனக்குத் தர வேண்டிய பாக்கிக் கடன் தொகையான இரண்டு இலட்சம் சக்கரங்களையும் திருப்பி வாங்கத் தன் ஆள்களை அனுப்பியுள்ளதாக வெள்ளைக் கும்பினிக்கு 1759 நவம்பரில் தொண்டைமான் கடிதம் எழுதியதாகவும், கவர்னர் போருக்குத் தயாராயிருக்கும்படி தொண்டைமானுக்குப் பதில் கடிதம் வரைந்ததாகவும் அதன்படி பணம் வாங்க அனுப்பிய ஆள்களைத் தொண்டைமான் திரும்பி வரும்படி உத்தரவிட்டதாகவும் 'புதுக்கோட்டை மானுவல்' கூறுகிறது. மேலும், அந்நூலின் ஆசிரியர் தொண்டைமான் சென்னைக் கவர்னருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் முத்துவடுகநாதர் சிவகங்கைச் சீமையைச் சந்தா சாகிபுவின் படையெடுப்பினின்றும் காப்பாற்றும்பொருட்டுத் தன்னிடம் பத்திரம் எழுதிக் கொடுத்துவிட்டுக் கடன் வாங்கியதாகவும், அதை இன்னும் திருப்பித் தரவில்லை என்றும், ஆர்க்காட்டு நவாபு கேட்கும் போது சிவகங்கை மன்னர் அக்கடனைத் திருப்பித் தரும்படி சென்னை அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எழுதிய செய்தியையும் குறிப்பிடுகிறார். இறுதியாகச் 'சிவகங்கை மன்னர் பணத்தைக் கொடுத்திருக்க முடியாது. எனவே, தொண்டைமான் படையும் பணம் வசூலிக்கப் பாய்ந்திருக்கும்,' என்று எழுதியுள்ளார்.

**A General History of Pudukkottai State. pp : 233, 253.** பார்க்க.

21. (1) மானங்காத்த மருது பாண்டியர், பக். 57.

(2) இனவுணர்ச்சியைச் 'சற்றேவிலகி இரும்பிள்ளாய் என்று கூறிவிட்டு உண்மையைக் காணவே ஆராய்ந்து பார்க்கினும் வீரமங்கை வேலு நாச்சியைத் 'தமிழகத்தின் ஜான்சி ராணி' என்று போற்றுவதைவிட, ஜான்சி ராணியை 'வட நாட்டு வேலு நாச்சி' என்று புகழ்வதே சாலப் பொருத்த முடையதாகத் தோன்றுகிறது.

(3) வீரத் தமிழகம் - பி. ஸ்ரீ-பக்-150

22. கர்நாடக ராசாக்கள், பக்கம். **XVI**;111-2.

23. **(1) Caldwell's History of Tinnevelly, p.211.**

(2) பிற்சேர்க்கை எண் **IV.**

(3) **A General History of the Pudukkottai State, p.254.**

**24.** (i) மருது சகோதரர்கள் சிவகங்கை மன்னருக்கு வேட்டை நாய்களை வளர்த்தும், அடைப்பைக்காரத் தொழில் புரிந்தும் தொண்டூழியம் செய்து வந்தவர்கள் என்று லூஷிங்டன் கடிதமும், புதுக்கோட்டை வரலாறும், கால்டுவெல் நூலும் கூறுகின்றன. இவ்வாறு கூறும் ஆசிரியர்கள் தங்கள் கருத்துக்குரிய ஆதாரங்களை யாண்டும் காட்டாதது குறிப்பிடத்தக்கது.

(ii) லூஷிங்டன் கடிதம் - பிற்சேர்க்கை எண். IV.

**(iii) A general History of Pudukkottai State, p.252.**

**(iv) Caldwell's History of Tinnevelly, p.212.**

**25.** (i) மரண வாக்கு மூலம் - இயல், 6 பார்க்க

(ii) பெரிய மருதுவின் அழகிலும் ஆண்மையிலும் பெரிதும் தன் நெஞ்சைக் கொள்ளை கொடுத்த வேலு நாச்சி அவரைத் திருமணம் புரிந்து கொண்டாள் என்றும் கூறப்படுகிறது.

மரண வாக்குமூலம் பார்க்க.

(iii) வேலு நாச்சியோடு மருது சகோதரர்கள் நாடு திரும்பியதும் சில ஆண்டுகள் வேலு நாச்சியும் (1780-1790), அவள் மகளும் (1790-1793) நாடாட்சி புரிந்ததாகவும், வேலு நாச்சி மகள் வெள்ளைச்சிக்குப் பின் அவள் கணவன் (1793-1801) நாடாண்டதாகவும் 'புதுக்கோட்டை வரலாற்'றின் ஆசிரியர் கூறுகிறார்.

**அ general History of Pudukkottai State, p.94.**

மருது பாண்டியர்களை அநீதியாக நாட்டைக் கைப்பற்றியவர்கள் என்று கருதி இவ்வாறு கூறப்படும் கருத்துகட்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்றே தோன்றுகிறது.

26. மருது பாண்டியர் பணம் திரட்டச் செய்த முயற்சிகளின்போது நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி செவிவழிச் செய்தியாய் வழங்கி வருகிறது, பார்த்திபனூர் என்னும் ஊரில் வைரவன் செட்டி என்ற பெருஞ்செல்வன் ஒருவன் இருந்தானாம். அவன்பால் பொருள் கேட்டு மருதரசர் ஆள் அனுப்பினார். 'நவாபுவின் பிடிப்பில் அகப்பட்டிருக்கும் சிவகங்கைச் சீமையின் மன்னரோ மருதரசர்? அவருக்கு நான் எதை நம்பிப் பணம் கொடுப்பேன்? வெள்ளைக் குதிரை ஏறி வெண்கொற்றக் குடை பிடித்து வெண் சாமரம் வீசிக்கொண்டு வெள்ளை மருது வீதியில் வேந்தராய்ப் பவனி வரும் காலத்தில் பார்த்துக் கொள்ளலாம்,' என்று வேடிக்கையாகப் பேசினானாம் பார்த்திபனூர் செட்டி. இதைக் கேள்வியுற்ற மருது பாண்டியர், 'அவனை விட்டுவிடுங்கள்; அவன் நாளை வருவதை அறியான்,' என்று சொல்லிவிட்டாராம் நகைத்துக் கொண்டே,

பின்னொரு நாள் மருதுபாண்டியர் சீமையைக் கடனிலிருந்து

முற்றிலும் மீட்கப் பெருமிதத்தோடு தம் நாட்டைச் சுற்றிக் காணப் புறப்பட்டாராம். அப்போது அவர் பார்த்திபனூர் வருவது திண்ணமென அறிந்த செட்டி தன் பாலிருந்த நவமணிக் குப்பையைத் தன் வீட்டுக் கிணற்றில் கொண்டு போய்க் கொட்டினாராம். கதிரவன் ஒளிபட்டு அவை மின்னினவாம். சேதி கண்டு செட்டி மேலும் திகிலுற்று ஆற்று மணலை அள்ளிவரச் செய்து கிணற்றில் நிரப்பி அதை மூடித் தொலைத்தானாம்; தானும் தன் வாழ்வை எவ்வாறோ முடித்துக் கொண்டானாம். அன்று முதல் அவன் மனை பாழ்மனையாய்ப் போயிற்றாம்.

27. படையெடுத்த கர்னல் புல்லர்ட்டன் கூறும் வாசகம்:

(i) Colonel Fullorton says:

'With the remaining troops we marched on the 4th August to Sivagangai, about twenty miles east: from there the two Murdeens (Murdoos), who rule the Little Maravar, fled precipitutely with their young Rajah to the woods of Kalaiyarkovil and collected there a force to the amount of 10,000 men nor could they be prevailed on to return to their inhabitations and trust to any assurances. Besides the immediate discharge of their arrears of tribute, I demanded from their deputies, 90,000 rupees in compensation to the company for the ravages they had committed and conculuded with deelaring that if these conditions were not fulfilled, I should attack their woods, storm their fort, and drive them from the country. Notwithstanding the procrastinating spirit of Gentoos (Hindus) they paid nearly 40,000 rupees, and gave security for their remaining debt. I felt a cordial satisfaction in constrasting the levlty and despatch of this transaction (for it was concluded in four days with the circumstances of the expedition in 1773 against this very place. On that occasion the Rajah, trusting to the woods and barriers that surrounded the fort of Calicoil, and expecting to conclude the business by negotiation, conceived himself in security, when the place was surprised and he was killed in the attack. I rejoice to mitigate the vigorous treatment which the delinquency of the successor, or rather of his ministers, merited, in consideration of the severities which the predecessor had experienced.

Caldwell's History of Tinnevelly : pp.211-212.

(ii) In the year 1783 Colonel Fullorton was now proceeding against the poligars in the South. He first marched to Mellore, left a strong detachment, and went on the 4th August to Shivaganga twenty miles east from thence. The Raja paid 40,000 rupees and gave security for remaining debt 50,000 rupees.

- Military History of the Madras Engineers, p.199.

மேற்கண்ட குறிப்புக்களால் தொகையைக் கொடுத்தவர் மருது பாண்டியரே என்னும் உண்மை விளங்கும். மேலும், முத்துவடுகநாதருக்கு ஆண் வாரிசே இல்லை. அப்படியிருந்தும், புல்லர்ட்டன் குழந்தையாய் ஓர் 'அரசன்' இருந்ததாகக் குறிப்பிடுவது வியத்தற்குரியது!

28. குரும லையிலே கல்லெடுத்துக்

காளையார் கோவில் உண்டுபண்ணி

மதுரைக் கோபுரம் தெரியக்கட்டிய

மருந்து வாரதைப் பாருங்கடி.

29. காளையார் கோவிலுக்காக மானாமதுரையிலிருந்து செங்கற்கள் அனுப்பப்பட்டபோது ஆயிரம் செங்கற்கட்கு ஒரு கல் வீதம் அடையாளத்திற்குப் போடப்பட்ட கற்களைக் கொண்டு கட்டப்பட்டதே மானாமதுரைக் கோபுரம் என்றும் கூறுவர்.

30. பிற்சேர்க்கை - 1 - படங்கள்.

31. 'மானங்காத்த மருதுபாண்டியர்' - ந. சஞ்சீவி, அட்டைப் படங்கள்.

32. பிற்சேர்க்கை - 1 - படம் பார்க்க.

33. படங்கள் பார்க்க : - பிற்சேர்க்கை - 1.

34. படங்கள் பார்க்க : - பிற்சேர்க்கை - 1.

35. படங்கள் பார்க்க : - பிற்சேர்க்கை - 1.

36. இவ்விரண்டையும் மருதுவின் பெண்வாரிசுப் பேரர் என்று தம்மைப் பெருமிதத்துடன் கருதிவரும் திருமுத்துக் கருப்பன் சேர்வை அவர்கள் (அவ்வூர்க் கர்ணம்) செம்மையாக இன்றும் நடத்தி வருகின்றார்.

37. படங்கள் பார்க்க : - பிற்சேர்க்கை எண் - 1

38. மருதரசர் அரண்மனை கட்டி வாழ்ந்ததாக எண்ணப்படும் இந்த இடத்தில் இன்று அவர் பரம்பரையினராகிய திரு. முத்துக்கருப்பன் சேர்வை அவர்கள் இல்லம் அமைந்துள்ளது.

**39. Military Reminiscences of Welsh. chap.IV.**

40. என் சரித்திரம் - டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர், பக்கம், 947-8.

41. (i) பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் (இரண்டாம் பாகம்) - ஜெகவீர பாண்டியனார், பக்கம், 307 - 9.

(ii) மானங்காத்த மருதுபாண்டியர் (1958) - ந. சஞ்சீவி, பக்கம், 57, 58.

(iii) பெருந்தொகை, செய்யுள், 1368, 1369.

42. (i)'செந்திரு மார்பன் மருதுந ராதிபன் செப்புகென்ன

மைந்தர்செல் வத்தொடு மாஞானம் வேண்டி மயூரகிரிப்

பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரைப் பால

இந்திரன் சாந்து மகிபால வாலக வீச்சுரனே. (னெங்கள்

என்னுமிந்நூலின் பழைய சிறப்புப்பாயிரச் செய்யுளால் மருது பாண்டியர் வேண்டுகோளின் படி சர்க்கரைப் புலவர் குமாரர் சாந்துப் புலவரென்னுங் குழந்தைக் கவிராசர் இந்நூலியற்றியதாகத் தெரிகிறது' - மயூரகிரிக்கோவை - சர்க்கரை இராமசாமிப் புலவர் பதிப்பு (1908), பக்கம், 14.

(ii) பெருந்தொகை, செய். 1755.

(iii) கலைக்களஞ்சியம் - ஐங பக்கம், 568.

43. 'இவர் பிறந்த வருடம் இன்னதென்பது தெரியவில்லை. ஆனாலும், இந்தக் கோவையினேட்டுப் பிரதியினீற்றில் '(கி.பி.1775=) காலயுத்தி தைமாதம் உஎ-ஆந் தேதி சுக்கிரவார நாளில் மயூரகிரிக்கோவை பாடியரங்கேற்றியது' என்றெழுதியிருப்பதால், இற்றைக்கு 110 வருடங்கட்கு முன் இந்நூலியற்றிய காலமென்பது விளங்குகிறது' - மயூரகிரிக் கோவை - பதிப்பு (1908). பக்கம், 14

44. (i) பொருதன்பி லார்மரு மன்னிய வாகை புயத்தணிந்த

விருதனுயர்முத் தமிழ்மாலை யுங்கொள்ள வேண்டுமென்றே

ஒருதன் குடியென் றுரையாமற் றானு முயர்வுபெற

மருதன் குடிதனைத் தந்தான் மருது மகிபதியே.

-மயூரகிரிக்கோவை: பதிப்பு (1908): பக்கம், 21-22

(ii) பெருந்தொகை: செய். 1756.

45. மயூரகிரிக் கோவை, பக்கம், 14-16.

46. (i) மயூரகிரிக்கோவை (1908) பக்கம்: 16, 17.

(ii) பிற்சேர்க்கை எண் - **VIII, IX.**

47. மயூரகிரிக்கோவை, பக்கம் 19-21.

48. மயூரகிரிக்கோவை, பக்கம், 22.

49. மயூரகிரிக்கோவை, (1908) **Preface by E. Singaravelu Mudaliar;** முகவுரை: சாற்றுக்கவிகள்: நூலாசிரியர் வரலாறு.

50. 'இந்தக் காடன் செட்டியார் மரபிலுதித்தவர்கள் இப்போது அரண்மனைப்பட்டி என்னும் ஆதித்தன்குடியிலிருக்கும் செ.கா.

வகையினராவர். இவர்களது அன்ன சத்திரமும், மண்டபப்படியும் இவற்றைக்கும் குறைவின்றி நடைபெற்று வருகின்றன. இவர்கள் சத்திரத்திற்கு மருது பாண்டியரால் விடப்பட்ட கிராமங்களைந்தும் இப்பொழுதும் அதற்கேயுரியன வாயுள்ளன.'

- மயூரகிரிக்கோவை, பக்கம், 21.

51. பிற்சேர்க்கை, எண்: X,

52. 'சிவகங்கைச் சம்ஸ்தானத்தில் சர்க்கரைப்புலவர் மகமையென்றொன்றுமுளது. அது சேது சம்ஸ்தானத்தினின்றுஞ் சிவகங்கை பிரிவதற்கு முன் ஆதிநெட்டிமாலைச் சர்க்கரைப் புலவருக்குச் சேதுபதிகளாற் கொடுக்கப்பட்டதோ, அல்லது இவர் தகப்பனராகிய சர்க்கரைப் புலவருக்கு மருது பூபதியாற் கொடுக்கப்பட்டதோ நன்கு புலப்படவில்லை.' - செந்தமிழ் 6 ஆம் தொகுதி, பக்கம் 365.

53. ஒரு சமயம் குதிரைமீதேறிச் சென்ற போது கம்பீரமாக ஓடி வரும் குதிரையின் அழகைப் பார்க்கக் கவுண்டன் கோட்டை என்னும் இடத்தில் இருந்த நாயக்க மரபைச் சேர்ந்த ஓர் இளம்பெண் மிகத் துடுக்காக வீட்டிலிருந்து வீதிக்கு ஓடி வந்தாளாம். வந்த பெண் அஞ்சி ஒதுங்கிச் சாலை ஓரத்தில் நில்லாமல், மகாராசர் குதிரைக்கு முன்னே குறுகுறுத்த விழிகளில் சிறிதும் அச்சமின்றி வந்து நின்றாளாம். பகைவரை எல்லாம் புறமுதுகு காட்டி ஓடச் செய்யும் தம் முன்னே - தம் குதிரையின் முன்னே - அஞ்சாது நின்ற இளங்கிளியின் பால் மருதரசர் மையல் கொண்டாராம். குதிரையை இழுத்து நிறுத்திவிட்டுப் பெண்ணின் பெற்றோரைச் சந்தித்து 'அடியேன் அரண்மனைக்கு எடுத்துச் சென்று இப்பாவையைக் கண்போலக் கருதிக் காப்பாற்றிக் கண்ணாலமும் செய்து கொள்கிறேன்,' என்றாராம். மருது மகிபரின் ஆசையையும் தம் குழந்தைக்கு வந்த யோகத்தையும் அறிந்த பெற்றோர் பெண்ணைப் பிரியமனம் இன்றிப் பிரிந்தார்களாம். அரண்மனையில் - அன்புப் பூஞ்சோலையில் - ஆடிப்பாடி வளர்ந்த அழகு மங்கை மீனாட்சி, பருவம் வந்ததும் பாராளும் மருது வேந்தர்க்கு மாலையிட்டு மனையறமாம் நல்லறம் நடத்தினாளாம்.

படம் - பிற்சேர்கை எண் - 1.

54. பெருந்தொகை, செய். 1368.

55. செந்தமிழ், 3 ஆம் தொகுதி, பக்கம் - 294.

56. மருதரசரை விளித்துப் பாடப்பெற்ற பாடல் ஒன்று செந்தமிழ்த் தொகுதியிலும் பெருந்தொகையிலும் காணப்படுகிறது. ஆனால், அப்பாடலைத் தேடி வெளிப்படுத்திய சேற்றூர் சம்ஸ்தான வித்துவான் இராமசாமிக் கவிராயர் கூறுவது போலக் கருத்து விளங்காப் பாடலாக

அச்செய்யுள் அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு:

'ஒருபுருடன் றனக்கிரண்டு மனைவிகளி லொருத்தியக
முடையான்சிந்தை

வரகடந்து பதினாறு பிள்ளைபெற்றே யகமகிழ்ந்தாண் மற்றொ ருத்தி

இரவுபகல் புருடன்முகம் பாராமற் கற்பழியா திருந்தாள் பிள்ளை

கருதிநொந்து பெற்றவட்கோ மற்றவட்கோ மருதேந்த்ர கழறு வாயே.'

- பெருந்தொகை, செய். 1369.

57. A General History of Pudukottai State, pp.281, 291.

58. Nelson's Madura Country - Part IV: Page, 113.

59. (i) Again in March, 1789, a detachment of eighty pioneers was sent from Trichnopoly to join the field force assembled under Lieutenant-colonel Stuart, 72nd Regiment, for service in the Shivaganga country. It was present at the capture of Collaigoody on 14th May, and of Rananungalum and Colacoil on 1st and 2nd June respectively.

- Military History of the Madras Engineers, page, 210.

(ii) A General History of Pudukkottai state, pp.283-284.

(iii) Caldwell's History of Tinnevelly, page, 212.

60. History of India, Part III : C.S. Srinivasachari, Page : 99.'

61. History of India, Part III : C.S.S. pp.99, 100 & 100.

62. History of India : C.S.S. Page : 106.

63. History of India, C.S. Srinivasachari, Page, 109.

64. History of India, C.S. Srinivasachari, Page, 112.

65. Caldwell's History of Tinnevelly : pp.166-169.

66. வீரத் தலைவர் பூலித்தேவர் - ந. சஞ்சீவி.

67. (i) 'Panchalamkuricchi was captured on the 22nd of May, 1801, and on capture of the Fort, the rebels fled to Sivaganga, then ruled by the Marudus who had an army of 20,000 men armed with muskets, matchlocks or spears. Palankeens were taken in procession with the sound of music and wavings of light (Arati) to Siruvayal, when they were lodged in the house of the mother of Marudus.

- A General History of the Pudukkottai State, pp.308 - 309.

(ii) இந்நிகழ்ச்சியை நினைவிற்கொண்டே இப்போதும் சிவகங்கை மக்கள் தங்களுள் யாரேனும் ஒருவர் கவலை மிகுதியால் மனம்

குன்றியிருக்கக் கண்டால் 'மருதுவுக்குத்தான் சனி கொட்டு மேளத்தோடு வந்தது; உனக்கென்ன வந்தது?' என்று கேட்கின்றனர்.

68. இவ்வாறு கால்டுவெல் கூறும் வாசகத்தின் உண்மையை விளக்க வல்ல சில: சான்றுகளை இந்நூலின் பிற்சேர்க்கையில் காணலாம், பிற்சேர்க்கை, III; 1-5

69. பிற்சேர்க்கை எண், III, 5.

70. கட்டடத்திற்கு அடித்தளம் சமைத்தலைத் 'தச்சு, என்பது பாண்டி நாட்டு வழக்கு என்பர்.

71. மருதரசரிடம் லூஷிங்டனைத் திருத்தி செய்யக் கூடிய ஆதாரம் ஒன்றுமில்லை என்பது கால்டுவெல் கருத்து.

**- Caldwell's History of Tinnevelly, Page 215.**

**72. (i) Caldwell's History of Tinnevelly, Page 215.**

(ii) பிற்சேர்க்கை எண் : III, 5.

**73. See Caldwell's History of Tinnevelly, Page 211.**

74. சிவகங்கைச் சிங்கங்கட்கும் வெள்ளையர்க்கும் இடையே நடந்த கடும்போரில் நேரடியாகக் கலந்துகொண்டவன் வெல்ஷ் என்ற வெள்ளைத் தளபதி. அவன் எழுதியுள்ள 'ராணுவ நினைவுகள்' என்ற பயன் செறிந்த நூலே நாம் இனி ஆராய இருக்கும் பகுதிக்குப் பெருந்துணையாக அமைந்துள்ளது.

**75. (i) 'The Mardoo's palace, and that of Shevatatompy, were conspicuous for neatness more than grandeur and though small, were extremely solid and well built. The streets, one of which had an avenue in it, were broad and regular and the whole town claimed a superiority over any I had ever seen in India.'**

(ii) மானங்காத்த மருதுபாண்டியர் (58) - பக். 77

**76. 'The Marudus showed their determaination and spirit at the outset of the final struggle of 1801 by setting their handsome village on fire, to prevent it being made use of by the English force.'**

**- Caldwell's History of Tinnevelly, p.214**

77. மானங்காத்த மருது பாண்டியர், (58) - பக். 84-85.

78. (i) 'கூலிப்படைகள் அஞ்சின' என்ற குறிப்பைக் கர்னல் வெல்ஷே தம் நூலுள் தெரிவித்துள்ளார். ஆனால், அதை மறுக்க விரும்பிய புதுக்கோட்டை வரலாற்றின் ஆசிரியர் கூலிப்படைகள் அஞ்சவில்லை; தயங்கின. காரணம், தெய்வம் குடிகொண்ட பழமை சான்ற பிரான்

மலையைத் தாக்க எங்கள் வீரர்கள் மனம் துணியவில்லை,' என்று கூறும் காரணம் மிக்க சுவையானதன்றோ? கூலிப்படைக்குத்தான் எவ்வளவு தெய்வ பத்தி!

**(ii) It is needless for us to mention that it was not timidity but religious awe that kept back the Thondaiman's peons. Piranmalai temple had been held in reverance for centuries, as the God at the place is the subject of one of the hymns of Sambandar the celebrated Siva Saint of Seventh century. The peons must have considered it a dreadful sacrilege to attack the pagoda.**

**- A General History of the Pudukkottai State - p.314.**

**79. History of Madras Army, Volume III-Page 50.**

80. காளையார் கோவில் என்று இந்நாளில் வழங்கும் திருநகர், சங்க இலக்கியங்களிலேயே பலம் பொருந்திய கோட்டையாய் விளங்கியிருக்கிறது 'கானப்பேரெயில்' என்று அந்நாளில் மக்களால் போற்றப்பட்ட அவ்வூரைப்பற்றிய குறிப்புகள் சங்க நூலாகிய புறநானூற்றில் உள்ளன. புறப்பாட்டு, 21 பார்க்க. இக்கோட்டை - கோயில் - ஊரில் சிறப்புப் பற்றி அறிஞர் கால்டுவெலும் கர்னல் வெல்ஷும் தம் நூலுள் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**(i) Military Reminiscenees by Welsh chapter IV.**

**(ii) Caldwell's History of Tinnevelly, Chap. IX**

**(iii) Journal of Indian History, Vol. XXVIII, Part III, No.84.**

**81. (i)** (அ) காளையார் கோவில் போரைப் பற்றிய செவிவழிச் செய்தியாகப் பல கிராமியப் பாடல்களும் கதைகளும் வழங்கி வருகின்றன. மருதுவின் படையில் சின்னச் சிட்டான் பெரிய சிட்டான் என்னும் இரு படை வீரர் இருந்தனர். கம்பெனிப் படையைச் சேர்ந்த ஒரு கர்னலை அவர்கள் விரட்டி வருகையில் வெள்ளைத்துரை விடுதலை வீரர்களின் வேல் கம்புக் குத்தையும் வாங்கிக் கொண்டு, செங்கோட்டை என்னும் ஊருக்கு அருகிலுள்ள வைகையாற்றின் கரையில் நீண்டு வளர்த்த நாணற்புதரில் பதுங்கிக் கொண்டான். சின்னச் சிட்டானும் பெரிய சிட்டானும் பலவிடங்களிலும் தேடினர். பின்னர் நாணலினூடே பறங்கித்துரை பதுங்கிக்கிடப்பது கண்டு, வேலாலும் வாளாலும் அவனைக் கொன்று தீர்த்தனர். இந்நிகழ்ச்சியை மக்கள்,

'காளையார் கோவிலின் கர்னல் துரையவன்
காட்டைக் கடந்துசெங் கோட்டைவந்து
நீள வளர்ந்திட்ட நாணலுக் குள்ளே
நெருங்கிப் பதுங்கிக் கிடக்கிறான்பார்!'

என்று இரு சிட்டான்களும் கூறியதாக வாய்ப்பாடலாகப் பாடி வருகின்றார்கள்.

(ஆ) கம்பெனியானோடு கடும்போர் நடத்திக் கொண்டிருந்த காலத்தில் மருதுவின் படை திருப்புவனம் சேர்ந்தது. கடந்த சில தினங்களில் பெரும்போர் புரிந்திருந்தமையால் மிகவும் சோர்வுற்றிருந்தது சிவகங்கைப் படை. ஆனால், தங்கள் சோர்வினை மாற்றார் அறியக்கூடாது என எண்ணினர் மருது சகோதரர்கள்; ஒரு யோசனை செய்து, அதன்படி நடக்குமாறு தங்கள் படைகட்குக் கட்டளையிட்டார்கள் திருப்புவனக் கோட்டையின்மேல் ஆயிரம் வீரர் நள்ளிரவில் தாவி ஏறி நின்றனர்; இரு கைகளிலும் பெரிய தீப்பந்தங்களை வைத்துக் கொண்டு, அவற்றைச் சுழற்றிச் சுழற்றி வேகமாக நடப்பது போல நடித்தனர். ஆயிரம் வீரர் பல்லாயிரம் வீரராய்க் காட்சி அளித்தனர் பகைவரின் கண்களுக்கு. அஞ்சி ஓடியது ஆங்கிலப்படை.

(இ) காளையார் கோவில் காட்டில் 'குண்டடி பட்ட புளி' என்னும் மரம் ஒன்று இன்றும் இருக்கிறது (பார்க்க: பிற்சேர்க்கை 1-படம்). மருதரசர் கம்பெனியான எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கும் போது பீரங்கியால் அவர் மார்பைக் குறிபார்த்துச் சுட்டானாம் ஒரு வெள்ளைத் துரை. மருதரசர் மார்பில் படவேண்டிய குண்டு தெய்வாதீனமாகத் தப்பி விட்டது. தங்கள் நாட்டு அரசனை மாய்க்க வந்த குண்டைத் தன் மார்பிலே மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டதாம் தலை சிறந்த தமிழ் வீரனைப் போல அங்கு ஓங்கி உயர்ந்து நின்று கொண்டிருந்த ஒரு புளியமரம். பீரங்கிக் குண்டு அப்புளியமரத்தைத் துளைத்துக் கொண்டு வெளியே சென்றது. ஆயினும், மரம் சாயவில்லை. கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட 'கட்டைப் புளியமரம்' தொலைந்தே போய்விட்டது. ஆனால், தமிழகத்தின் மானங்காத்த மருதரசரைக் காப்பாற்றிய புளியமரம் இன்றும் தலை நிமிர்ந்து நின்று பழைய வரலாற்றைப் பேசாமல் பேசிக் கொண்டிருக்கிறது என்று இன்றும் கருதுகிறார்கள் சிவகங்கை மக்கள்.

(ii) வீரபாண்டியக் கட்டபொம்மன் வரலாற்றைச் சிந்து வடிவில் பாடியுள்ளார் தேசபத்தி கொண்ட பிற்காலத் தமிழ்ப் புலவர். ஆனால், தொண்டைமானின் துரோகத்தையும் வீரமாகக் கருதி அவனைத் தெலுங்கிலே போற்றிப் பாடியுள்ளார் தெலுங்கு மொழிப்புலவர் ஒருவர். 'தொண்டைமான் விஜயமு' என்ற அந்நூலில் வரும் ஒரு குறிப்பு, காளையார் கோவில் போரைப் பற்றிப் படித்த நாம் அறிய வேண்டுவதொன்றாகும். மருது பாண்டியரும் ஊமைத்துரையும் கம்பெனியானை எதிர்த்துப் போர் புரிந்து கொண்டிருக்கும் நாளில் அழிக்க முடியாத தங்கள் காட்டரணை எண்ணி எண்ணி இறுமாப்புக் கொண்டார்களாம். ஆங்காங்கே மண்ணிலே குழி பறித்துப் பாத்திரங்களில் வெடிமருந்துகளை வைத்தும், மரங்களின் மீது

ஒற்றர்களை அமரச்செய்தும் வீர சகோதரர்கள் நடத்திய போரைக் கண்டு வையகமே வியந்ததாம்!

82. (i) Journal of Indian History, Vol. XXVIII, part III, No.84-p. 163, para.5

(ii) A General History of Pudukkottai State. pp.309, 313, 315.

83. 1801 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தோடு முடிவடைந்த இப்பாளையக்காரர் போர் கம்பெனி அரசாங்கத்திற்கு எவ்விதக் கீர்த்தியையும் அளிக்கவில்லை என்று கர்னல் வெல்ஷ் கூறுகிறான். ஆனால், கால்டுவெல்லோ, இராணுவத் தளபதியின் கண்ணோட்டத்தில் கம்பெனி அரசாங்கம் அடைந்த நஷ்டத்தை அது அடைந்த வெற்றியோடு ஒப்பிடும் போது கம்பெனிக்கு ஏற்பட்ட கீர்த்தி ஏதுமில்லை என்றாலும், அரசியற்கண்ணோடு ஆராயும்போது பாளையக்காரர் போரின் முடிவு ஆங்கில அரசாங்கத்திற்குப் பெருவெற்றியே,' என்று எழுதியுள்ளான்.

(Caldwell's History of Tinnevelly, p.222)

84. பிற்சேர்க்கை எண் : VII

85. (i) Welsh's Military Reminiscences - Chap. IV

(ii) மானங்காத்த மருது பாண்டியர், பக்கம் - 100 - 5.

86. (ii) சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும் - பக்கம், 96-99.

(ii) பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் - இரண்டாம் பாகம் - பக்கம், 325-7.

87. இக்கறுத்தான் என்பவனே மருதரசரோடு நெருங்கிப் பழகிய வலையன் என்பர். பின்னாளில் தன் தலைவனுக்கே துரோகம் புரிந்த இவன்பால் மருதரசர் கொண்டிருந்த அன்பை முன்பே நாம் பார்த்திருக்கிறோம்.

88. (i) வீரமன்னர் பெரிய மருது பாண்டியர் உயிர் துறந்தபோது மரண வாக்குமூலம் ஒன்று விடுத்ததாகக் கூறப்படுகிறது. அது வருமாறு:

'கிழக்கு இந்தியாக் கம்பெனி கவர்ன்மெண்டின் சேனாதிபதியான கர்னல் அக்கினியூ துரை அவர்கள் முன்பாக, சிவகங்கை ஜமீந்தார் வெள்ளை மருது சேர்வைக்காரர் அவர்கள் சொன்ன மரண வாக்குமூலம்.

(1) என்னுடைய ஜமீன் வேலுநாச்சிக்குப் பாத்தியமாயிருந்தது. மேற்படியாளை நான் கலியாணம் செய்து கொண்டு அவள் மூலமாக ஷை சிவகங்கை ஜமீனுக்கு உரிய உயில் சாசனம் பெற்றிருக்கிறேன்.

(2) 1773ல் உயில் சாசனம் பெற்று மாத்தூர் நவாபு அவர்களால் ஷை

ஜமீனை ஜப்தி செய்து ஏலமாக்கிய பணத்தை நான் கட்டி ஏலத்தை நீக்கி அனுபவித்து வருகிறேன். என்னைத் தவிர வேறு யாரொருவருக்கும் இதில் பாத்தியம் இல்லை.

(3) தேவஸ்தானம், பண்ணை, கொள்கிரயம், சேறுதேட்டு ஆயம், சுங்கம், சாயவேல், உப்பளம், சத்திரங்கள், மடம் இவைகள் எல்லாம் என்னால் கிரயத்துக்கு வாங்கப்பட்டன. நானே அனுபவித்து வருகிறேன். இந்தச் சொத்துகளில் எல்லாம் யாருக்கும் எவ்விதமான பாத்தியமும் இல்லை. நானும் என் வாரிசுகளுமே என்றும் உரிமையான பாத்தியமுடையவர்கள்.

(4) மேலே கண்ட சொத்துகளை நான் என் சுயார்ச்சிதமாய்க் கஷ்டப்பட்டுச் சம்பாதித்திருக்கிறேன். அவைகளை என் வாரிசுகளுக்கே கொடுக்க வேண்டும். நான் பாஞ்சாலங் குறிச்சிக் கட்டபொம்மு துரைக்கும், ஊமைத்துரைக்கும் உதவி செய்யவில்லை; இடம் கொடுக்கவும் இல்லை.

(5) என்னால் கட்டப்பட்டிருக்கிற சத்திரங்களுக்கும், கோவில்களுக்கும், ஆலயங்களுக்கும் விடப்பட்டிருக்கிற தஸ்தாவேசுகளில் கண்ட சொத்துகள் யாவும் அவரவர்களே அனுபவிக்கும்படி செய்ய வேண்டும்.

(6) என் தம்பி சின்னமருது சேர்வைக்காரனுக்கும் எனக்கும் தாய் ஒருத்தி; தகப்பன்மார் இருவர். மேற்படியானுக்கு ஜமீனில் யாதொரு பாத்தியமும் இல்லை; மேற்படியானை மானேஜராக வைத்திருந்தேன்; அவன் பாஞ்சாலங்குறிச்சிக் கட்டபொம்மு ஊமைத்துரைகளுக்கு அடைக்கலம் கொடுத்துக் காத்ததாகச் சொல்கிறதைத் தவிர எனக்கு யாதொன்றும் தெரியாது.

(7) நான் கிஸ்திப் பாக்கியை நிறுத்தாமல் செலுத்தி வந்திருக்கிறேன். என் தம்பி சின்ன மருது சேர்வைக்காரனை மூன்று நாளைக்கு முன் நீங்கள் தூக்கிலிட்டதால், என்னைத் தூக்காமல் நிறுத்தி வைக்கக் கூடாது. நான் யாதொரு பாவமும் தெரியாதவனாயிருந்தும், கம்பெனியாருக்கு யாதொரு பொல்லாங்கும் செய்யாதவனாயிருந்தும், என்னை வலத் தொடையில் துப்பாக்கியினால் சுட்டுவிட்டதனால் என்னையும் தூக்கிலிட வேண்டுவது அவசியமாயிருக்கிறது.

(8) அப்படிச் செய்யாமை தரும சாஸ்திரத்திற்கும் ஏற்காது. நான் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்கிறேன். சிவபெருமானே, கேட்கவும், கம்பெனியாரவர்கள் என்னை அநியாயமாய்த் தூக்குகிறபடியால், என்னுடைய ஜமீன் பூராச் சொத்துக்களையும் வேறே யாருக்காவது கொடுத்தாலும், ஜமீனை ஆளுகிற எவர்களும் விருத்தியடையாமல் போவார்களாக! சிவபெருமானே, நீ வரம் கொடுக்க வேண்டும்.

(9) என்னுடைய வாரிசுகளைத் தருவித்து என் ஜமீனைக் கொடுக்க வேண்டும்; என்னுடைய ஜமீன் சொத்துகள் யாவும் என் சந்ததிகளுக்குக் கொடுத்துவிடுவதாகவும், நான் அமைத்து இருக்கிற தரும நிலையங்களுக்கு நான் ஏற்படுத்தியிருக்கிற பிரகாரம் யாவும் ஒழுங்காக நடத்தி வருவதாகவும் நீங்கள் இப்பொழுது எனக்கு உறுதி மொழி தர வேண்டும். அதற்கு அத்தாட்சியாக, கவர்ன்மென்டு கத்தியைப் போட்டுத் தாண்டி நீங்கள் சத்தியம் செய்து தர வேண்டும். இது சத்தியம்!

(10) என் வாரிசுகளின் விவரம்; என் மனைவியின் பெயர் ராக்காத்தாள்; அவள்தான் பட்டஸ்திரி; அவளுக்கு ஒரு மகள் உண்டு. அவள் பெயர் மருதாத்தாள்.

(11) நானும் என் மூத்த சமுசாரமும் சிறுவயலில் இருந்தோம்; அவள் பிரசவத்திற்காக அவளுடைய தகப்பனார் ஊராகிய அரசனேந்தல் அரண்மனையில் போயிருக்கிறாள். போய் மூன்று மாத காலமாகிறது.

(12) இரண்டாம் மனைவி பெயர் கருப்பாயி ஆத்தாள். மேற்படியாளுக்குக் கறுத்தையா என்ற ஒரு மகனும், கண்ணாத்தாள் என்ற ஒரு பெண்ணும் உண்டு. இரண்டு பேருக்கும் சந்ததி இல்லை. அவள் மூத்தூர் அரண்மனையில் இருக்கிறாள்.

(13) மூன்றாம் மனைவியின் பெயர் பொன்னாத்தாள். அவளுக்குச் சந்ததி இல்லை.

(14) நாலாம் மனைவியின் பெயர் ஆனந்திபாய். அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு.

(15) ஐந்தாம் மனைவியின் பெயர் மீனாட்சியாத்தாள். அவள் அந்நிய ஜாதி; அவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு; அவள் இப்பொழுது கவுண்டன் கோட்டை அரண்மனையிலிருக்கிறாள்.

(16) எனக்குச் சிவகங்கை ஜமீனை உயில் சாஸனம் செய்து கொடுத்த முதல் மனைவி வேலுநாச்சி இறந்து ஒரு வருஷம் ஆகிறது. அவளுக்குச் சந்ததி இல்லை.

(17) என்னுடைய வாரிசுகளைக் கம்பெனியார்களாவது, எனக்கு விரோதிகளாவது, யாதோர் இமிசையும் செய்யாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். முருகன் துணையாகவும் ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகவும் நான் என் கழுத்தில் கயிறு போட்டுக் கொள்கிறேன்.

மேலே சொன்னபடி நீங்கள் கத்தியைப் போட்டுச் சத்தியம் செய்து கொடுத்ததை நான் நேரில் பார்த்துக் கொண்டேன்.

(இப்படிக்கு ஒப்பம் பெரிய மருது சேர்வை)

படைத் தலைவன் கத்தியை வைத்துச் சத்தியம் செய்து கொடுத்தபடி நடக்கவில்லை. ஜமீனைக் கௌரிவல்லப உடையத் தேவனுக்கே கம்பெனியாட்சி உரிமையாக்கியது.

பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் - இரண்டாம் பாகம் - பக்கம். 328-31.

மேற்கண்ட மரண வாக்குமூலத்தில் 6-ஆம் பிரிவின் இறுதியில் அமைந்துள்ள வாசகத்தின் உண்மையை - உட்பொருளை விளங்கிக் கொள்ள இயலவில்லை.

**(ii) The Maroothoos were captured and consigned to the gallows. Thus the zamindary became an estate to Government. By a proclamation of 6th July 1801, Government installed as zamindar Gowry Vallaba Tevar, who was a collateral descendant of the progenitors of the first Zamindar Sasivarne Tevar. The Permanant settlement of the estate was made with him under a Sunnad-i-Milkeut (deed of agreement) in April 1803.**

**- Madras Manual of Administration, Vol.I, p.55.**

(iii) 1829 ஆம் ஆண்டு வெள்ளையரால் அரச பதவியில் அமர்த்தப்பட்ட உடையத்தேவன் காலமானான். இவனுக்குப் பின் சிவகங்கைச் சீமை உரிமை பற்றிச் சற்றேக்குறைய ஐம்பது ஆண்டுகட்குத் தொடர்ந்து நடந்த வழக்கின் சுருக்கத்தை 'மதறாஸ் மானுவ'லும், விரிவான விவரங்களை 650 பக்கங்களைக் கொண்ட **'Origin of Sivaganga Zamindari and its litigations'** என்ற பெருநூலும் கூறுகின்றன.

(iv) மருது பாண்டியர் ஆண்ட சிவகங்கைச் சீமையின் பரப்பு, மக்கள் தொகை, வருமானம் ஆகியவை பற்றி **Madras Manual** தரும் குறிப்பு:

**This Zamindary is in Madura District. Its area is 1,551 square miles and its population (1881) 432, 428 living in 1,485 village and 84,912 houses. The peshcush paid to Government is Rupees 25,641.**

(v) மருதுவுக்குப் பின் அவர் மனைவியர்க்கு ஓரளவு உதவி நிதி கொடுத்து அரசாங்கம் ஆதரித்ததென்பது சில ஆதாரங்களால் தெரியவருகிறது. மருதுவின் மரண வாக்குமூலத்தையும் கர்னல் அக்கினியூவால் கவுரி வல்லப தேவருக்கும் சென்னை அரசாங்கத்திற்கும் எழுதப்பட்டதாகக் கருதப்படும் இரு கடிதங்களையும் துணையாகக் கொண்டு மருதுவின் உறவினர் ஜமீன் உரிமையை நாடிப் பின்னாளில் பெரிய வழக்காடினர். ஆனால், வெற்றி பெறவில்லை. கர்னல் அக்கினியூவால் எழுதப்பட்டனவாக எண்ணப்படும் கடிதங்கள்

இரண்டையும் இந்நூலின் இறுதியில் காணலாம்.

- பிற்சேர்க்கை எண்கள்: V, VI.

89. இவ்வரலாறு சருகணி ஆலயத்தில் உள்ள பழைய வரவு செலவு கணக்குப் புத்தகம் ஒன்றின் முதற்பக்கத்தில் உள்ள முகவுரையாலும் உறுதிப்படுகிறது. பிற்சேர்க்கை எண். II பார்க்க.

90. இத்தேரை இழுக்கப் பனக்கரை என்ற ஊரை மானியமாகத் தந்தாராம் மருதுபாண்டியர்.

91. சின்ன மருதுவைப் போலவே பெரிய மருதுவும் வளரி எறிவதில் நிகரற்றவர். ஒரு முறை மதுரை மாரியம்மன் தெப்பக்குளத்திலிருந்து அவர் கால் விரல்களால் ஊன்றி விட்டெறிந்த வளரி தெப்பக் குளத்தின் மைய மண்டபத்தைத் தீண்டாமல் அக்கரையில் போய் வீழ்ந்தது என்றும், மூச்சுப் பிடித்து வளரி எறிந்த வேகத்தில் மருதரசர் கட்டியிருந்த தங்க அரைஞாண் தெறித்து வீழ்ந்தது என்றும் கூறுவர்.

**92. Welsh's Military Reminiscences - Vol. I, Chap. IV.**

93. திரு. சிதம்பர ரகுநாதன் அவர்கள் 'மருது பாண்டியன்' என்னும் நாடகத்தை எழுதி அண்மையில் வெளியிட்டார்கள்.'

94. அண்மையில் வெளி வந்த 'சிவகங்கைச் சீமை, என்னும் படம் இவ்வகையில் முதல் முயற்சி; ஒரு சிறு அளவிற்குப் பயன் தருவதாகும்.'

95. இந்நூல் முன்னுரை பார்க்க.

96. சுதந்தரச் சுடர் - சென்னை அரசாங்க வெளியீடு

97. கலைக்கதிர் (விடுதலை மலர் - ஆகஸ்டு 1957)

98. தமிழ்நாடு (விடுதலை மலர் - ஆகஸ்டு 1957)

99. சுதேசமித்திரன் (சுதந்தர தின இதழ் - ஆகஸ்டு - 1957)

100. ஆனந்தவிகடன் (தீபாவளி மலர் - 1958)

101. கல்கி

102. தினமணிக் கதிர்

103. ஸ்டார் பிரசுரம்

104. ஆசிரியர் நூற்பதிப்புக் கழக வெளியீடு

## மேற்கோளாட்சிகள்

### தமிழ்


1. இராகவையங்கார். மு. : பெருந்தொகை
2. ,, : செந்தமிழ் வளர்த்த தேவர்கள்
3. இராகவையங்கார். ரா. : சேது நாடும் தமிழும்
4. இராமச்சந்திர தீட்சிதர், வி.ரா. (பதிப்பித்தவர்) : கர்நாடக தேச ராஜாக்கள் சவிஸ்தார சரித்திரம்
5. சந்திரசேகரன், தி. (பதிப்பித்தவர்) : சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும்
6. சாந்துப் புலவர் : மயூர கிரிக்கோவை
7. சாமிநாத ஐயர், உ.வே. (பதிப்பித்தவர்) : புறநானூறு
8. ,, : என் சரித்திரம்
9. சுத்தானந்த பாரதியார் : ஆத்ம சோதனை
10. திருவள்ளுவர் : திருக்குறள்
11. கலைக்களஞ்சியம் : தொகுதி 2
12. ,, ,, 3
13. ,, ,, 4
14. செந்தமிழ் ,, 4
15. ,, ,, 6

ஆங்கிலம்

1. Annaswamy Iyer - Sivaganga Zamindary.
2. Balakrishna Mudaliar - A Pictural guide of Ramnad District.
3. Caldwell - History of Tinnevelly.
4. Nelson - Madura Country.
5. Radhakrishna Ayar - A General History of Pudukkottai State.
6. Raja Ram Row - Ramnad Manual.
7. Sathyanatha Iyer, R. - Nayaks of Madura.
8. Srinivasachari, C.S. - History of India, Part III
9. Vibart, H.M. - Military History of The Madras Engineers, Vol I
10. Welsh - Military Reminiscences, Vol. I
11. Wilson, W.J. - History of the Madras Army.
12. Papers Relating to Poligars War (1914)
13. Journal of Indian History, Vol. XXVIII, Part III.
14. Manual of Madras Information, Vol. I
15. " ... Vol.III



மருதரசர் வீற்றிருந்த
கருங்கல் சவுக்கை



சிவகங்கை
அரண்மனையின்
ஒரு பகுதி



திருமோகூர் கோவில்
கோபுரம்



முச்சக நிழற்றும் முழுமதி
முக்குடைக் கீழ் அமர்ந்த
அச்சுதன்



பொன்னாத்தாள் குளம்



காளையார்கோவில் கோட்டை



மருதரசரின் மற்ற மூன்று
மனைவியர்



வீரமரணம் அடைந்த
மருது பாண்டியரின்
திருக்குமாரர்



குன்றக்குடி மலையும் கோவிலும்



திருப்பத்தூரில் மருதுபாண்டியர் திருவுடலங்கள் புதைக்கப்பட்ட இடத்திலுள்ள நினைவுக்கல்



பெரிய மருதுவும் அவர்
காதல் மனைவி
மீனாட்சியும்



குழந்தையுடன்
பட்டத்தரசி ராக்காத்தாள்



காளையார் கோவில் கோபுரம்



சிறுவயல் அரண்மனை



காளையார் கோவிலுள்ள மட்சாடிகள்



முக்குடை உடைந்த நிலையில் விளக்கும் அருகர்



முக்குளத்தில் உள்ள மசூதி



சருகணியில் உள்ள மாதாகோவில்



திருமோகூரில்
உள்ள
பெரியமருது சிலை



திருமோகூரில்
உள்ள
சின்ன மருது சிலை



சிதைந்த நிலையில் உள்ள சிறுவயல் கோட்டை



மருதுபாண்டியர் சமாதி



வீரக்குடியில்
உள்ள
வெள்ளை மருது சிலை

காளையார்கோவில்
காட்டில்
மருதரசரைக் காத்த
புளியமரம்





காளையார்கோவிலில்
உள்ள
சின்ன மருது சிலை



காளையார்கோவிலில்
உள்ள
பெரிய மருது சிலை




சிறுவயல் காட்டைச் சிதைத்து
களையார்கோவிலுக்குப் பாதை
அமைத்தல் முதலான கடும்
முயற்சிகளைக் கம்பெனிப் பட்டாளம்
மேற்கொண்டதைக் காட்டும் படம்



பேராசிரியர் ந. சஞ்சீவி அவர்கள்
வரலாற்றில் ஆர்வம் கொண்டவர்.
விடுதலை இயக்க வரலாறு அவரது
விருப்பத்திற்குரிய விஷயம்.
பூலித்தேவர், கும்மந்தான் கான்சாகிபு,
மருதுசகோதரர்கள் ஆகியோரின்
வரலாற்றையும் வேலூர்ப் புரட்சி
பற்றியும் விரிவாக ஆராய்ந்து
எழுதியுள்ளார். இது மருது சகோதரர்களின்
வெள்ளையர்க்கு எதிரான விடுதலைப்
போராட்ட வரலாற்று நூல்.